# அமுதசுரபி

விலை
ரூ. 50
(இரு மலர்களும்
சேர்ந்து)

தீபாவளி மலர் '96



Acc. No. 10596.

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே - பாரதியார்

# அமுதசுரபி

தீபாவளி மலர் '96

மலர் 1

இரு மலர்களும் சேர்ந்து விலை ரூ. 50



## அமுதசுரபி 49ஆவது தீபாவளி மலர்

மேலட்டை வண்ண ஓவியம்: கோபுலு


ஆசிரியர்: கலைமாமணி விக்கிரமன்

பதிப்பாளர்: ஏ.வி.எஸ். ராஜா

கௌரவ ஆலோசகர்: என்.வி. சுப்பிரமணியன்

மலர் ஆப்செட் அமைப்பு: சிவகுமார்

மலரை அலங்கரித்த ஓவியர்கள்: அமரர் சில்பி, அமரர் உமாபதி, கோபுலு, ஸுபா, வினு, ஜி.கே. மூர்த்தி, ஜெயராஜ், மாயா, ராமு, ம்ணியம் செல்வன், செல்லம், அரஸ், கலைமதி; ஸி.ஏ. இராமச்சந்திரன், கரோ, ஸ்யாம், ரமா, சிவா, வேதா, சசி, ஸ்கார்பியோ, பிரபுராம், பி.எம். ரோஸ், ஜீவி, கே. பாண்டியன், முத்துக்குமார், தாமரை

மலரில் வெளிவந்துள்ள கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் கற்பனையே யாரையும் சுட்டுவன அல்ல!

முழுப் பக்க வண்ண போட்டோக்கள்

வாணிஜெயராம்
அரவிந்த்சாமி
அஜித்குமார்
மீனா
கலைஞர்
மூப்பனார்
ரஜினிகாந்த்
ஜெயலலிதா
போட்டோ: யோகா

# இந்த மலர்

இந்த மலர்

இந்த மலரைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லத்தான் வேண்டும்.

இதற்கு முன்பெல்லாம், முகப்புப் படத்துக்கு எதிரே காணிக்கை என்று ஒரு பக்கம் எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். 'சமர்ப்பணம்' என்று எழுதுவார்களே அதைத் தானே 'காணிக்கை' என்று தமிழில் எழுதுவீர்கள் என்று நீங்கள் கேட்கிறீர்கள். ஆமாம். மொழியாக்கம் செய்யவில்லை. ஒரு சொல் இருக்கும்போது வேறு சொல் எதற்கு என்பதற்காகத்தான் "எங்கும் தமிழ், எதிலும் தமிழ்" இயக்கம் வலுவடைவதற்கு முன்பே, கனி இருக்கும் போது காயைக் கொள்வது கூடாது என்ற முறைப்படி, தமிழிலே உள்ள சொற்களைத் தூக்கி எறிந்துவிட்டு, வேறு வேறு மொழிச் சொற்களைப் பயன்படுத்துவதைக் கூடியவரையில் தவிர்த்து வருவதை 'அமுதசுரபி'யின் கொள்கையாகக் கொண்டோம். "அந்த சௌந்தர்யரூபனின் புஜங்களின் மீது புஷ்பஹாரம் ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்துக் கொண்டிருந்தது' என்று சொல்வதை அழகு தமிழில் 'அந்தப் பேரழகனின் திண்தோள்கள் மீது அழகிய மாலை பேரொளி வீசித்திகழ்ந்து கொண்டிருந்தது' என்று எழுதுவதில் எந்தவித அநியாயமும் இருப்பதாகத் தெரியவில்லை. அமரர் கல்கி இப்படித்தான் சொன்னார்.

'எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே' – அமுதசுரபியின் இலட்சியக் குரல். இலட்சிய வேகத்தோடு 'அமுதசுரபி' பொன்விழா ஆண்டை நெருங்குகிறது. இந்த மலர் 49ஆவது மலர்.

ஒரு முறை இதற்கு முன்பு வெளிவந்த தீபாவளிமலர்களைப் பார்த்தால் தனி மகிழ்ச்சியும், பூரிப்பும் ஏற்படுகின்றன. திருக்கோயிலின் சிங்காரத் தேர் தான் நினைவுக்கு வருகிறது. தேரை உருவாக்கி, அலங்கரித்து இறைவனை அதில் அமரச் செய்து வீதியில் வலம் வரச் செய்யும் மகத்தான பணியை ஒரே



ஒருவரால் செய்ய முடியுமா? வறியர், செல்வர், அறிஞர், பாமரர் ஒருங்கே இணைந்து தேர் இழுப்பதைக் காணலாம். தீபாவளி மலரின் சிறப்புக்குத் தனி ஒருவரும் காரணமாவதில்லை.

இந்தத் தீபாவளிமலர் – இரட்டைமலர். ஒரே மலராக ஏறத்தாழ ஐநூறு பக்கங்களைக் கையில் வைத்துக் கொண்டு படிப்பதிலுள்ள இடர்ப்பாட்டைப் பற்றிப் பலர் கூறினார்கள். அதுவும் ஒரு காரணம். இரண்டு மலர்களாக வெளியிடுவதிலுள்ள நிர்வாகத் தொல்லைகள் ஒரு புறமிருக்க, வாசகர்களும் தாங்கள் அடையும் பல சங்கடங்களை விவரிக்கிறார்கள். பலர் கருத்தை அறிய முயல்வோம்.

இந்த மலரில் ஏறத்தாழ நூறு கவிஞர்களின் படைப்புகள். ஐம்பது எழுத்தாளர்கள் கலைப் பூங்காவை மணம் வீசச் செய்துள்ளார்கள்.

இறை தூதர்களின் அருளுரைகள், திருவுருவப் படங்கள் மனத்திற்கு அமைதியையும் நல்வாழ்க்கைக்கு மருந்தாகவும் திகழ்கின்றன.

ஓவியர் கோபுலு அவர்கள் இரண்டு மலர்களின் மேலட்டைகளையும் தம் கை வண்ணத்தால் அழகு படுத்தியுள்ளார்கள்.

தீபாவளி மலரின் விலையைப் பற்றி ஒரு வார்த்தை. ஒரு மலரின் அடக்க விலை ரூ.150/–க்கு மேலாகிறது. ஸ்ரீராம் அறக்கட்டளையின் நிர்வாக அறங்காவலர் திரு. ஏ.வி.எஸ்.ராஜா அவர்கள் இலக்கிய ஆர்வம்மிக்கவர். பொருள் செலவைப்பற்றிப் பொருட்படுத்துவதில்லை.

மலரின் மணம் நுகர நாம் தடையாக இருக்கக் கூடாது. உங்கள் கரங்களில் 49ஆவது தீபாவளி மலர் – இரட்டை மலர்கள். தமிழ்ப் பெருமக்களுக்கு நாம் வழங்கும் காணிக்கை.







திருவகீந்திரபும் ஸ்ரீராம லட்சுமண - சீதா தேவி ஸ்ரீ அநுமனுடன்

போட்டோ: டி. ஆர். சீனிவாசன்



# சாகாவரம்

பல்லவி

சாகா வர மருள்வாய், ராமா
சதுர்மறை நாதா - ஸரோஜ பாதா!

சரணங்கள்

ஆகாசந் தீ கால் நீர் மண்
அத்தனை பூதமும் ஒத்து நிறைந்தாய்
ஏகாமிர்த மாகிய நின் தாள்
இணை சரணென்றால் இது முடியாதா? (சாகா)

வாகார் தோள் வீரா, தீரா
மன்மத ரூபா, வானவர் பூபா,
பாகார் மொழி சீதையின் மென்றோள்
பழகிய மார்பா! பதமலர் சார்பாக (சாகா)

நித்யா, நிர்மலா, ராமா,
நிஷ்களங்கா, ஸர்வாதாரா
ஸத்யா, ஸநாதநா, ராமா
சரணம், சரணம், சரண முதாரா (சாகா)

மகாகவி பாரதியார்

# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஆசியுரை

உலகில் பல உயிரினங்கள் இருக்கின்றன. ஈ, எறும்பு, கொசு, முதல் மனிதர் வரை அநேக உயிர்கள் இருக்கின்றன இவற்றை நான்கு வகையாகப் பிரிக்கின்றனர்.

1. ஸ்வேதஜம்:

புழுக்கத்திலிருந்து உண்டாகக் கூடிய உயிரினங்கள், புழுக்கள், கொசுக்கள் போன்றவை.

2. அண்டஜம்:

முட்டையிலிருந்து உண்டாகக் கூடிய கோழி போன்ற உயிரினங்கள்.

3 உத்பிஜம்:

பூமியில் பிறந்து வரக்கூடியவை மரம். செடி, பயிர் போன்றவை.

4 ஜராயுஜம்

கர்ப்பத்திலிருந்து வரக்கூடியவை ஆடு, மாடு முதல் மனிதன் வரை.

இத்தனை வகை உயிரினங்கள் இருந்தாலும் ஓர் அறிவு முதல் ஐந்து அறிவு வரை எல்லா உயிரினங்களுக்கும் உண்டு. மனிதனுக்கு ஆறாவது அறிவான பகுத்தறிவு விவேகம் உண்டு.

ஒவ்வொரு பொருளின் காரியத்தின் தன்மையை முழுமையாக அறிந்து கொள்வதே பகுத்தறிவின் முக்கியமான பணி. இந்தப் பகுத்தறிவின் மூலம் சரியான முறைகளில் காரியங்களைச் செய்வதால் அதன் மூலம் எல்லா நன்மையும் கிடைக்கும். அப்படி விவேகத்தின் மூலம் காரியத்தின் தன்மையைச் சரியாக அறிந்து கொள்ளாமல் காரியங்கள் செய்தால் அதன் மூலம் துன்பம் தான் வரும். இந்த விவேகம் ஏற்படுவதற்கு அற நூல்கள் பலவிதமான உபதேசங்கள் செய்கின்றன. அந்த உபதேசங்களுள் முக்கியமானது, மனிதனுடைய ஒவ்வொரு காரியமும் அறத்தின் அடிப்படையில் தான் வாழ்க்கை அமையவேண்டும் என்பது. கண், பொருள்களைப் பார்ப்பதற்காகவே ஏற்பட்டது. ஆனால் பார்க்கக் கூடாதவற்றைப் பார்த்து, கண்ணுக்கும், உடலுக்கும், மனத்திற்கும் துன்பங்களை வரவழைத்துக் கொள்ளக்கூடாது. காது, சத்தத்தைக் கேட்கத்தான் ஏற்பட்டிருக்கிறது. அதனால் மனதுக்கும், உடலுக்கும் துன்பங்களை வரவழைத்துக் கொள்ளக் கூடாது. வாய் நல்ல ருசியுள்ள ஆகாரத்தை ருசிப்பதற்கும் நல்ல வார்த்தைகளைப் பேசுவதற்கும் ஏற்பட்டுள்ளது. நாம் கண்டதை எல்லாம் சாப்பிட்டு, குடித்து, பேசி பலருக்கும் துன்பம் வரும்படி ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது. காரியங்களைச் செய்வதற்குத் தான் கை கிடைத்திருக்கிறது. கெட்ட காரியங்களைச் செய்து கெட்ட பெயரைச் சம்பாதிக்கக் கூடாது. நடப்பதற்காகத் தான் கால்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. தவறான இடத்திற்குச் சென்றுவிட்டும், தவறானதை மிதித்துக் கொண்டும் துன்பத்தை வரவழைத்துக் கொள்ளக் கூடாது.

இப்படி ஒவ்வோர் உறுப்பின் மூலமாகவும் நல்ல காரியங்களையே செய்ய உபயோகப்படுத்தினால் நல்ல பலன் கிடைக்கும். அப்படி இல்லாமல் பேராசையினாலோ, கோபத்தாலோ, அகங்காரத்தாலோ காரியங்களைச் செய்தால் துன்பம் தான் வரும். விட்டில் பூச்சி தீபத்தின் அழகை, கண்ணால் கண்டு தீபத்திலேயே விழுந்து இறந்து விடுகின்றது. மானானது அழகான புல்லாங்குழல் சத்தத்தைக் கேட்பதற்காக பந்தப்பட்டு அதன் சுதந்திரத் தன்மையை இழந்து விடுகின்றது. மீனானது வலையில் விழுந்து ஆகாரத்தில் ஆசை கொண்டு பந்தப்பட்டு வருகிறது. யானையானது ஸ்பரிசத்தினால் பந்தப்பட்டு வருகிறது. வண்டானது வாசனையினால் தாமரைப்பூவில் உட்கார்ந்து தாமரை மூடினவுடன் அது இறந்து போய்விடுகிறது.

இப்படி ஒவ்வொன்றினாலும் பந்தப்படும் போது ஐந்து அறிவு கொண்ட மனிதன் பந்தப்படடு துன்பப்பட்டு வாழ்வது ஆச்சரியமில்லை. ஆனால் மனிதனுக்கு பகுத்தறிவான விவேகம் (ஆறாவது, அறிவு) இருப்பதனாலே, ஐந்து அறிவால் வரக்கூடிய துன்பத்தை விலக்கி, இன்பத்தை அடைய வாய்ப்புகள் இருக்கின்றன. இந்த வாய்ப்பைப் பெற்று விவேகத்தின் மூலம் நல்வழியை அடைந்து, தானும் நல்வழியில் நின்று, பிறரையும் நல்வழிப்படுத்தி, இன்பத்தைப் பெற முடியும். இப்படி விவேக சக்தி இல்லாதவர்கள் தாமும் தீய வழியில் சென்று, பிறரைத் துன்பப்படுத்தி, எல்லாரையும் துன்பத்தில் விழச் செய்வர். நரகாசுரன் ஓர் அரசன். அந்த அரசனை சிக்ஷிப்பதற்காக வந்த திருநாள் தான் தீபாவளி பண்டிகை. இந்தப் புண்ணியத்திருநாளில் எல்லாரும் எல்லா நலன்களையும் அடைந்து பரமக்ஷேமமாக இருக்க ஆசீர்வதிக்கிறோம்.

நாராயண ஸ்மிருதி





அமுதசுரபி - தீபாவளி மலர் 96 ராஜராஜன் போட்டோ: தேவமணி ரஃபேல்

(பெரியகோயிலில் உள்ள வண்ண ஓவியம்)

# தீபாவளி மாப்பிள்ளை

ஓவியர்: அமரர் உமாபதி



''டேரா' போட்ட மாப்பிள்ளை:— இன்னும் அடுத்த தீபாவளி எத்தனை நாள் இருக்கு?''

''முப்பது... முப்பத்தைஞ்சு நாள் இருக்கும்!''



''என்ன ரெண்டு தட்டுலே பட்சணம்?''

''ஒண்ணு உங்களுக்கு!... ஒண்ணு நாய்க்கு!''



''ஊருக்குப் போறேன்னு சொன்னதும் உங்கப்பா கண்ணுலே ஜலம் விட்டு அழுதுட்டார்!''

''சும்மா இருங்கோ! அவருக்கு ரெண்டு நாளா ஜலதோஷம்!''



''மாப்பிள்ளையிடம் என்ன பிரியம்! ஊருக்குப் போக அவர் டிரஸ்ஸை எல்லாம் 'பாக்' செய்து தர்றீங்களே!''

''பிரியமாவது மண்ணாவது! போகும் போது நம்ப வீட்டுத் துணிமணிகளையும் சுருட்டிக் கொண்டு போய் விடுகிருரே!''

# என் முதல் கலைப் பயணம்

கலைமாமணி விக்கிரமன்



மாமல்லபுரம். கடற்கரைக் கோயில்

50 ஆண்டுகளுக்கு முன் – முதன் முதலில் கலைப் பயணம் செய்யத் தொடங்கினேன். சிறுவயதில் (ஏழு) மைசூர், திருப்பதி போன்ற இடங்களுக்குச் சென்று வந்தது நினைவிருக்கிறது. மைசூர் அரண்மனையின் பிரம்மாண்டமும், தசரா மின் விளக்கு அலங்காரங்களும், முகபடாம் அணிந்த யானைகள் ஊர்வலமாக அசைந்து வரும் நேர்த்தியும் மறக்க முடியாமல் மனத் திரையில் நினைத்தபோது காட்சி தருகின்றன. ஆனால், கலைப் பயணமாக நான் முதன் முதல் சென்ற ஊர் மாமல்லபுரம். 1944–45 இல் பத்திரிகை அலுவலகம் எதிலும் நான் பணி செய்யவில்லை. எழுதிக் கொண்டும் படித்துக் கொண்டும் இருப்பதும் ஒரு பணிதானே?

மாமல்லபுரம் என்று சொன்னால் அரை நூற்றாண்டுக்கு முன்பு ஒருவருக்கும் தெரியாது. 'மகாபலிபுரம்' என்று சொல்ல வேண்டும் என்று திருத்துவார்கள். எப்படியோ மாமல்லபுரத்தோடு மகாபாரதக் கதையும், புராணமும் ஒட்டிக் கொண்டு விட்டன. பஞ்சபாண்டவர் ரதம், மகாபலிபுரம் என்று சொல்வது புராண மரபுக்கு ஒத்து வந்தது.

அமரர் கல்கி 'சொப்பன லோகம்' என்ற கட்டுரை ஒன்றை ஆனந்தவிகடனில் எழுதினார். பிறகு பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம் என்ற இரண்டு வரலாற்றுப் புதினங்களை எழுதினார். அந்த இரு புதினங்களும் தமிழ் நாட்டில் மாமல்லபுரத்திற்குத் தனிப் பெருமையை அளித்தன என்று உறுதியாகச் சொல்லலாம்.

என் பள்ளித் தோழரும், இலக்கியத்தில் ஆர்வமுடையவரும், 'அமுதசுரபி'யில் நான் தொண்டாற்றச் சேரக் காரணமான வருமான திரு என். சுப்ரமண்யம், 'மணியம்' என்ற பெயரில் அறிமுகமானார். மணியம் என்ற ஓவியர் பிரபலமாகத் தொடங்கியவுடன் தன் பெயரை அவர் ஸுபா என்று மாற்றி நாமகரணம் செய்து கொண்டார். இக்காலத்தில் இரண்டு இளைஞர்கள் ஒன்று சேர்ந்தால் என்ன பேசிக் கொள்வார்கள்? (அந்தரங்க உரையாடலைப் பற்றி ரகசியமாக ஆய்வு நடத்த வேண்டும் • அரசியல், சினிமா, வேலைவாய்ப்பு, அந்தரங்கக் குறிப்புகள் நடிக–நடிகைகள், ஸெக்ஸ்) அறிவியல், புதிய கலை நுட்பங்கள் ஆகியவற்றை அலசி ஆராயும் குணம் சிலருக்கே இருக்கிறது.

இரண்டாம் உலகப் போர் உச்சக் கட்டத்திலும், விடுதலைப் போர் ஜீவமரணப் போராட்டத்திலும் இருந்த காலம். நாங்கள் கலையைப் பற்றிப் பேசுவோம். எங்களை மிகவும் நெருக்கி இணைத்தது 'தமிழ்ச் சுடர்' கையெழுத்து ஏடுதான். ஏதோ, 'கல்கி' 'ஆனந்த விகடனை' நடத்துவதுபோன்று எங்கள் மனத்துள் எண்ணம். 'தமிழ்ச் சுடரி'ல் கட்டுரைகள் வெளியிட வேண்டும்.

அதற்காகக் கலைப்பயணம் தொடங்கினோம்.

அதனால்தான் 'இன்றைக்கு அரை நூற்றாண்டுக்கு முன்பு' என்று இந்தக் கட்டுரையைத் தொடங்கினேன்.

மாமல்லபுரம் செல்வது என்று முடிவு செய்தோம். இப்போதுள்ளது போல் பேருந்து, மகிழ்வுந்து, 'தள்ளுந்து' வசதிகள் இல்லாத சமயம். செங்கல்பட்டு சந்திப்பில் இறங்கி சாலை வழியே செல்ல வேண்டும் என்பதைக் கேட்டறிந்து கொண்டேன். ஆங்கிலக் கட்டுரை ஒன்றின் தட்டச்சுப்பிரதி-மிகப் பழைமையான ஒன்று கிடைத்தது. பலமுறை படித்தேன். 'விதியின் எழுத்தைக் கிழித்தாச்சு' என்ற அமரர் கல்கியின் ஆனந்த விகடன் கட்டுரையும் படித்தேன். அங்கே சென்று வந்தவர்களிடம் கேட்டறிந்தேன். 'திருக்கழுக்குன்றம் – பட்சிதீர்த்தத்திற்கு இங்கே இறங்கவும்' – என்று செங்கல்பட்டு ரயில் நிலையத்தில் பலகையில் அறிவிப்பு எழுதி வைத்திருப்பார்கள். திருக்கழுக் குன்றத்திற்கும் அப்பால் ஏழெட்டு மைல் தொலைவில் கடற்கரை ஓரம் இருக்கிறது மாமல்லபுரம் என்பதை அறிந்திருந்தோம்.

"அர்த்தோதய மகோதய புண்ணிய காலத்திற்காக மகாபலிபுரம் போவார்கள். அல்லது அமாவாசை அன்று செல்வார்கள். இப்போது ஏன் போகிறீர்கள்?" என்று உற்சாகக் குறைவை ஏற்படுத்தினாலும் என் தாயார் தயிர்சாதம் பொட்டலம் கட்டிக் கொடுத்து விட்டார்கள். 'இதெல்லாம் எதற்கம்மா, ஒரு பாரம்' என்று மறுதலிக்கும் சின்னவயது மனப்பான்மை இருந்தாலும், அம்மாவின் வற்புறுத்தலால் தயிர் சாதத்தை வாங்கிக் கொண்டது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று!

திருக்கழுக் குன்றத்தைப் பற்றி இங்கு அதிகம் வர்ணிக்கவில்லை. பகல் பன்னிரண்டு மணிக்கு 'கழுகுகள்' வருவதைக் கண்டு மகிழ்ந்தோம், செங்குத்தான படிகளில் இறங்கி (ஆகா! அந்த வயதிலேயே படிக்கட்டுகள் ஏற மிகவும் தொல்லைக் குள்ளானேன். இப்போது நினைத்துப் பார்த்தால் நடுங்குகிறது) பாறைச் சரிவில் உள்ள மகேந்திர வர்மனின் குடைவரை மண்டபத்தைக் கண்டு பிரமித்து – மலையடிவாரத்தை அடையும் போது மூன்று மணி! திருக்கழுக்குன்றம் சின்னஞ்சிறு ஊர். சாப்பிட ஒன்றும் கிடைக்காது. பெருமாள் கோயிலாயிருந்தால் கோயிற் பிரசாதமாவது


ஓவியர் ஸுபா

கிடைக்கும். மிகவும் அழகான நீர் தளும்பி நின்ற குளக் கரையில் அமர்ந்து தயிர் சாதத்தை உருட்டி உருட்டிச் சாப்பிட்ட போது 'ஆகா! அம்மா நீ வாழ்க' என்று வாழ்த்தினேன்.

"இன்னும் ஏழெட்டு மைல் இருக்குமாம் மாமல்லபுரம். இப்போது புறப்பட்டாத்தானே சரியா இருக்கும்?" என்று கூறினார் ஸுபா. வெயிலில் குளத்து நீரால் முகம் கழுவி உற்சாகத்துடன் புறப்பட்டோம்.

மண்ணும் சல்லியும் கலந்து போடப்பட்ட சாலை. இரு புறமும் அடர்ந்து வளர்ந்த மரங்கள். தண்ணீர் வயல்களின் மீது தவழ்ந்து தெம்மாங்கு பாடும் தென்றல், முதுகுப்பக்கம் மேற்கே மறையும் வட்டத் திகிரி எங்களை 'முன்னேறு, முன்னேறு', . போகுமிடம் வெகு தூரமில்லை போவாய், போவாய்' என்று வழிநடத்திச் செல்ல, நடந்தோம், நடந்தோம்.

அரை மதியோ, முக்கால் மதியோ வானத்திலிருந்து ஒளி கொடுத்துக் கொண்டிருந்தது. நீல வானில் விண்மீன்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன.

வழிநடைப் பயணத்தில் நான்தான் அதிகம் பேசுவேன். நண்பர் பொறுமையாகக் கேட்டுக் கொண்டே வருவார். எவ்வளவு கவிதைகள், எவ்வளவு கதைகள் அவரிடம் சொல்லியிருக்கிறேன்!

நடந்தோம், நடந்தோம் நடந்து கொண்டே இருந்தோம். மனித நடமாட்டம் குறைந்து, இல்லாமலே போயிற்று. இருளின் ஆட்சி. தனிமை. பாரதியின் பாட்டைக் குரல் எடுத்துப்பாடினேன். என்ன துணிவு! தனியாகப் பாடும்போது யாரும் கண்டிக்க மாட்டார்கள் என்பது மட்டுமன்றி, ஓநாய், நாய் ஆகியனவும் பயந்து ஓடிவிடுமன்றோ!

சிறு கிராமம் வந்தது. 'மாமல்லபுரம் இன்னும் எவ்வளவு தொலைவு?' என்று ஒருவரிடம் கேட்டோம். அவர் ஏற இறங்கப் பார்த்தார். "ஓ! மகாபலிபுரமா! இப்ப அங்கே ஒரு திருவிழாவும் இல்லையே. சோறு தண்ணி கிடைக்காதே. நடுராத்திரிக்குத்தான் போய்ச் சேர்வீர்கள்" என்று அன்பாகப் பயமுறுத்தினார்.

"காபி கிடைக்குமா?" என்று கேட்டேன்.

"காபியா –" என்று அவர் சிரித்தார். காபி – டீ ஆக்ரமிப்பு அணுகாத காலம்.

'ஒரு கப் காபி சாப்பிட முடியாமல் என்ன மாமல்லபுரம் வேண்டியிருக்கிறது? திரும்பிப்போய் விடுவோமா?'' என்று கவலையுடன் கேட்டேன்.

"வந்த தொலைவு திரும்ப வேண்டும். சற்றுத் துணிவுடன் நடந்துவிடுவோம்" என்று ஸுபா தைரியமூட்டினார்.

வளைந்து வளைந்து சென்றது பாதை. இருபுறமும் மரங்கள் ஏதுமற்ற மொட்டைப் பாறைகளாக சாலை சிறிது தொலைவு காட்சியளித்தது.

இரவு எட்டுக்கு மேல் இருக்கலாம். 'அதோ வந்து விட்டது மாமல்லபுரம், மாமல்லபுரம்' என்று உதடுகள் முணுமுணுத்தன.

தொலைவில் எங்கேயோ கோயில் திருவிழாவில் இசைக்கும் நாதஸ்வர இசை காற்றில் மெல்லியதாய், சன்னமாய் மிதந்துவந்து நம்பிக்கையை ஊட்டியது. தெருக்கூத்தில் மேளம் தட்டுவதும், 'அரிச்சந்திர மகாராசன் வந்தேனே' என்று எட்டுக் கட்டை சுருதியில் பாடுவதும் மிதந்து வந்தன. 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற பாரதி பாடலைப் பாடினேன். எப்போதும் வாயே திறவாத ஸுபாவும் பாடினார். வழிக்குத் துணை பாரதி கவிதை!

கையில் கடிகாரமில்லை. பசி, அருகே பெரிய கிணறு ஒன்றில் ஏற்றமிறைத்துக் கொண்டிருந்தார்கள். குளிர்நீர் வாய்க்கால் வழியாகப் பயிருக்குப் பாய்ந்து கொண்டிருந்தது. தயிர்சாதமே துணை! அம்மா – உன் சொல்லுக்கு இணையுண்டோ?

ஏற்றக்காரர்கள் பாடிக் கொண்டே கருமமே கண்ணாயிருந்தார்கள்.

"மாவலி ராசன் சபையினிலே
குள்ளச் சாமி வந்து நின்றாராம்
குள்ளச் சாமி வந்து நின்றாராம்!
மூன்றடி மண் கேட்டாராம், கேட்டாராம்
மாவலிராசன் மெய் சிலிர்த்து

இந்தா பிடியுங்கள் என்றாராம்
முறையாகக் கொடுக்க
முன்வந்தாராம்''

அவர்கள் பாட்டு மகாபலி கதையை விவரித்தது. ஒவ்வோர் அடிபாடும் போதும் ஏற்றத்தில் வேகமாக ஏறி இறங்கும் காட்சியை இனி எங்கே காண்போம்? பரம்பரை பரம்பரையாக ஊறிப்போன கதையை நாம் மாற்ற முடியுமா? மகேந்திர வர்மன் தொண்டை நாட்டைக் கலை பூமியாக்கியதும், அவர் மகன் மாமல்லன் என்ற சிறப்புப் பெயர் பெற்ற நரசிம்மன் எட்டு திக்கும் புகழுடன் வாழ்ந்ததும் (அந்தக் கலை அரசன் கதையைக் கற்றவர்களே அறியாத போது கருமமே கண்ணாயிருக்கும் குடிமகன் எங்கே அறியப் போகிறான்?) கை கழுவி, ஓடும் வாய்க்கால் தண்ணீரைப் பருகிவிட்டு நடந்தோம், நடந்தோம்.

ஏதோ புதிய பூமியைக் காணப்போவது போலும், புதையலை அடைய முயல்வது போலும், வான்மண்டலத்தை அடைய ராக்கெட்டில் செல்வது போலும் அவ்வளவு தொல்லைப் பட்டீர்களா? ஒன்றரை மணி நேரத்தில் போய் விடக் கூடிய மாமல்லபுரத்திற்கு ஏதோ அமர்நாத் யாத்திரை போன்று அவ்வளவு கஷ்டமா என்று கேட்கிறீர்களா? காதலர்களுடன் உல்லாசமாகப் போய்வரும் அந்தக் கலைக் கூடத்தின் மதிப்பு அன்றும் தெரியவில்லை இன்றும் தெரியவில்லை. வருங்காலச் சந்ததியினர் அறிந்து கொள்ள முயல்வார்களா?

மணி என்னவென்று தெரியவில்லை. பக்கிங்காம் கால்வாயின் மீது கட்டப்பட்டிருந்த முத்துரங்கம் பாலம் நில வொளியில் தென்பட்டவுடன்தான் எங்களுக்கு உயிரே வந்தது.

கரையே தெரியாத கடலில், நெடும் பயணம் செய்து வந்தபோது தாமஸ்குக்குக்கு, தொலைவில் கரை தெரிந்தவுடன் ஏற்பட்ட மகிழ்ச்சி – இந்த வார்த்தையை விட இன்னும் வேறு வார்த்தை இருந்தால் தான் நன்றா யிருக்கும். ஆனந்தக் கூத்தாடலாம் எனத் தோன்றிப்து.

பாலம் கட்டப்படுவதற்கு முன்பு வரை படகில்தான் கால்வாயைக் கடக்க வேண்டும். ஆட்சியாளர்கள் செய்த மாபெரும் பணி பாலம் கட்டியது.

பாலத்தைக் கடந்தோம். முற்றுப்பெறா மண்டபமாகக் (ஒரே பாறையில் செதுக்கப் பட்டது) கண்ணில் பட்டது. புதரும், செடிகொடி என இருபுறமும் நிறைந்த பாதை வழியே மேலும் முன்னேறினோம்.

வந்துவிட்டது மாமல்லபுரக் கிராம எல்லை. அங்கேயே அந்த மண்ணிலே விழ்ந்து புரள வேண்டும் என்ற ஆவேசம்.

அத்தகைய ஆவேசம், துடிப்பு, சிலிர்ப்பு, எதிர்பார்ப்பு, ஊக்கம் இல்லாதிருந்தால் நான் ஐம்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து 'அமுதசுரபி' ஆசிரியராகத் தொண்டாற்றி வர முடியாது. கலைச் செல்வங்கள் நிறைந்த பல ஊர்களைக் கண்டு களித்திருக்க முடியாது.

மாமல்லபுரத்தைக் காண வேண்டும் என்பது மட்டும் எங்கள் அவா அன்று. கடற்கரையில் கம்பீரமாக நிற்கும் இரட்டை விமானங்களுடன் கூடிய இராஜசிம்மன் கட்டிய அந்தக் கோயிலை, கதிரவன் உதயமாகும் வேளையில் காண வேண்டும் என்ற பேரவா. அதற்காகத்தான் இரவோடு இரவாக மாமல்லபுரத்தை அடைந்தோம்.

முன்பே அமைதியான ஊர். இரவின் அமைதி, நள்ளிரவின் ஆட்சி. ஒரு நாய் கூடக் குரல் எழுப்பவில்லை.

மங்கிய ஒளியில் உயரமான நான்கு தூண்களையுடைய மண்டபம் ஒன்று தெரிந்தது. ஒரு பிரசவத்திற்குப் பின் ஒரு பெண்ணுக்கு ஏற்படும் நிம்மதியுடன், கதை,



கங்கை கொண்ட சோழபுரம்

கவிதையை எழுதி முடித்த பிறகு ஏற்படும் நிம்மதியுடன் தரையில் படுத்தோம். சவுக்கு மரங்கள் சூழ்ந்த மாமல்லபுரத்தில் வீசும் காற்றும் அலை ஓசையை எழுப்பும்.

சிறிது நேரம் தான் உறங்கியிருப்போம். பொழுது விடிந்துவிட்டது போன்ற பிரமை. அப்போதே எழுந்து கடற்கரைக் கோயிலை நோக்கி நடந்தோம். கால்கள் கெஞ்சின. ஆனால் ஆர்வம் மருந்து பூசியது.

இருள் விலகுவதற்கு முன்பே, கடற்கரைக் கோயிலை அணுகி, பாறை ஒன்றில் அமர்ந்து விட்டோம்.

'ஓம்ஓம்' என்று கடலலைகள் முழக்கமிட்டுக் கொண்டிருந்தன.

'ஹோ ஹோ' என்றும் சிரித்துக் கெண்டிருந்தன.

கடலரசனின் உள்நோக்கம் என்ன? கலைச் செல்வங்களை விழுங்குவதா தமிழ்-தமிழ்ப்பண்பாடு தமிழ்க் கலை எல்லா வற்றையும் சுவடு தெரியாதவாறு அழித்து விடும் சதியா?

கடற்கரைக் கோயிலின் மதிற்பாறைகள் மீது அலைக்கரங்கள் உயர எழும்பித் தழுவ முயல்வதும் ஓர் அழகுதான்.

அருகே இருந்த பாறைமீது அமர்ந்து கொண்டோம். இளம் குளிருடன் கூடிய காற்று வேகமாக வீசிக் கொண்டிருந்தது.

கீழ்வானத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தோம். கதிரவன் உதிக்கும் முன்பு வானில் ஏற்படும் ரசவாதத்தை வர்ணிக்கச் சக்தி படைத்தவர்கள் முன் வரவேண்டும்.

ஓவியர்களே! கடற்கரையில் அமர்ந்து வர்ணங்களைக் குழைத்துக் கொள் ளுங்கள். கீழ்க் கோடியில் எல்லை விளிம்பில் கோடி கோடி கோடியாய் வெண்மேகங்கள், கரிய மேகங்கள் மெல்ல மெல்ல நகர்ந்து செல்லும் போது, இருளை மெல்ல நகர்த்தி, வெள்ளைக் கோடுகள், மஞ்சள் கோடுகள், தங்கக் கோடுகள், பொன்வண்ணக் கோடுகள் – சிறிது சிறிதாகப் புலப்பட –

தங்கமயமாக வட்டத் திகிரி சுழன்று கொண்டே மெல்ல மெல்ல எழுகிறது.

(ஓவியர்களின் மொழியில் வர்ணங்களுக்கு வெவ்வேறு பெயர்கள்: சிவப்பு-கருஞ்சிவப்பு-ரத்தச் சிவப்பு-அரளிப்பூச் சிவப்பு என்று மட்டுமே நாம் சொல்கிறோம். அவர்கள் வண்ண வேற்றுமையை இனம் பிரிக்க ஆயிரம் பெயரிட்டு அழைக்கிறார்கள். நீலத்திற்கு மட்டும் வித்தியாசமான பெயர்கள் எத்தனை, எத்தனை!)

மகாகவி பாரதியார் கதிரவன் மறைவதைப் பாஞ்சாலி சபதத்தில் வர்ணித்து மகிழ்கிறார். இயற்கை தேவியின் களிநடனத்தைக் கவிதையில் தீட்டுகிறார். மகாகவி மாமல்லபுரத்தைப் பார்த்திருப் பாரா தெரியவில்லை.

பார்த்து ரசித்திருந்தால் சக்தியின் அழகுத் தாண்டவத்தை வர்ணித்திருப்பார்.

(பாரதிதாசன் பார்த்திருக்கிறார். பக்கிங்காம் கால்வாய் வழியே படகில் ஓரிரவு முழுமையும் பயணம் செய்து – அழியாக் கவிதை புனைந்திருக்கிறார்.)

திருமுருகாற்றுப் படை ஆசிரியர் நக்கீரர் சூரியோதயத்தைக் கண்டு மகிழ்ந்திருக்கிறார். கதிரவன் நீலக் கடலிலிருந்து வருவது, தமிழ்க் கடவுள் முருகப் பெருமான் மயில் மீது அமர்ந்திருப்பது போலத் தோன்றியதாம். நான் திருமுருகாற்றுப்படையில் முதல் பாடலைச் சொல்லிக் கதிரவனைத் துதிக்கிறேன்.

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்

என் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் அருவியாய் முகத்தில் வழி கிறது.

அரை நூற்றாண்டுக்கு முன்பு நான் கண்ட சூரியோதயக் காட்சியை இன்றளவும் மறக்க முடியவில்லை.

அரை நூற்றாண்டுக்கு மேலான பின்னரும் அந்த அழியா ஓவியம் மறையவில்லை; மறையாது. மாமல்லபுரத் தைப் பற்றிய பயணக் கட்டுரை நூல் ஒன்றைத் தயாரித்து வெளியிடப் போகும் எண்ணம் அப்போதே பிறந்து விட்டது.

அந்த எண்ணம் 1948இல் நிறை வேறியது. ஓவியர் சிவசங்கரன், மா. முருகேசனுடன் அன்பர் ஸுபாவின் சித்திரங்களுடன், போட்டோக்களுடன் மாமல்லபுரம் பற்றிய நூலை சிறு நூலாகத் தயாரித்தேன். ஸுபா தன் செலவில் அதை வெளியிட்டார்.

பேராசிரியர் கல்கி அவர்களிடம் முதல் பிரதியைச் சமர்ப்பித்தேன். அருமையான மதிப்புரை கல்கியில் வெளிவந்தது. பேராசிரியர் டாக்டர் மு. வ. போன்ற வர்கள் பாராட்டினார்கள்.

இவ்வாறே ஒவ்வொரு மலருக்கு ஒருமாதம் முன்பு அல்லது பதினைந்து நாள்களுக்கு முன்பு, ஏதாவது கலைப் பயணம் தொடங்கிவிடுவேன், தீபாவளி விருந்து படைக்க. அப்படிச் சென்ற இடங்கள் ஐம்பது ஆண்டுகளில் பல பல. கேரளநாடு, கர்நாடகம், வாதாபி, எல்லோரா – அஜந்தா, பூரி, கோனார்க்கா, எலிபெண்டா குகை என்று பல ஊர்களுக்குச் சென்றோம். கடாரம், கண்டி, அனுராதபுரம் போன்ற கடல் கடந்த இடங்களுக்குச் சென்றேன். 1975க்குப் பிறகு என் நண்பர் ஸுபாவுக்குத் தள்ளாமை மிகுந்தது. நான் சில நண்பர்களுடன் கலைப்பயணம் செல்லத் தொடங்கினேன். மலேயா, பினாங்கு, கடாரம், பாரிஸ், ரோம், துபாய் போய் வந்தேன். இன்னும் கஜுராஹோ, துவாரகை, அமர்நாத், நேபாளம், கொங்கணம் என்ற பல ஊர்களுக்குச் செல்லவேண்டும். கடல் கடந்த நாடுகளுக்குச் சென்று பொரோபுதுர், சுமத்ரா, ஜாவா பார்க்க வேண்டும்.

சென்ற ஆண்டு சிருங்கேரி, உடுப்பி, சுப்ரமண்யா, தர்மஸ்தலா, மாகி என்று கண்டு களித்தேன். இந்த ஆண்டும் மந்த்ராலயம், மைசூர் என்று ஆன்மிக உணர்வோடு மடாதிபதிகளைக் கண்டு வந்தேன்.

தீபாவளியின் போது சென்றது தவிர வரலாற்றுச் சிறப்பும், முக்கியமும் நிறைந்த பல ஊர்களுக்குச் சென்றிருக்கிறேன்.

தஞ்சை பெருவுடையார் கோயிலுக்குப் பலமுறை சென்று பிரமித்திருக்கிறேன். கலைச்செல்வர் டாக்டர் கலைக் கோவனுடன் தஞ்சை சென்று, வண்ண ஓவியங்களைக் கண்டு அடைந்த பேரின்பத்தை மறக்கமுடியாது. இராஜ ராஜன் வண்ணச் சித்திரம் இன்றளவும் மனத்தில் அழியாமல் இருக்கிறது.

கங்கை கொண்ட சோழபுரம் சென்ற போது உதித்த கற்பனைதான் கங்காபுரிக் காவலன்.

வரலாற்றுச் சம்பவங்களைக் கற்பனை செய்து கொள்ளலாம்; ஆனால் வரலாற்றின் தொடர்புள்ள நாடு நகரங்களைக் கற்பனை செய்து கொள்ள இயலுமா? இதற்காக நான் மேற்கொண்டகலைப் பயணங்கள் மூலம் நான் அடைந்த பயனுக்கு அளவில்லை.

கலைப் பயணத்திற்கு முடிவேது? ●

# சந்திரசேகரரும் சூரிய குல சேகரரும்

ரா. கணபதி

**1984** ஆகஸ்ட் இறுதி நாள்களில் ஒன்று. பல ஆண்டுகளுக்குப் பிறகு காஞ்சி ஸ்ரீ மஹா பெரியவாளைத் தரிசிக்கிறேன். அந்நீண்ட இடைவெளிக்கு ஈடு செய்தாற் போலப் பரம ஏகாந்தத்தில் கருணா மூர்த்தியுடன் பேரின்ப உரையாடல் கிடைத்தது. அந்த இடையாண்டுகளில் நான் நெருங்கி பக்தி பூண்டிருந்த ஸ்வாமி ஸ்ரீ ஸத்ய ஸாயி பாபா பற்றிப் பேச்சுப் படர்ந்து ஹித சுகமாக முடிந்தது.

சட்டென ஸ்ரீ பெரியவாள், "இங்கே நம்ம பக்கத்துலேயே ஒத்தர் ரொம்பப் பிரக்யாதி ஆயிண்டு வராரே! நாளுக்கு நாள் நெறயப் பேர் போயிண்டு, நல்லபடியாச் சொல்லிண்டு வராளே! அதைப் பத்தி ஏதாவது தெரிஞ்சுண்டிருக்கியா?" எனக் கேட்டார்.

யாரைக் குறிப்பிடுகிறாரென்று புரியவில்லை. என்னை விசேஷமாக ஈர்த்த ஓரிரு ஆன்மிகப் பெரியார்கள் தவிர மற்றவர் குறித்து நான் தெரிந்து கொள்வது ஸ்வல்பமே.

ஆயின் பெரியவாளின் குரலிலிருந்தும் முக பாவத்திலிருந்தும் அவர் குறிப்பிட்ட அப்பெரியாரிடம் அவருக்கிருந்த ஆழ்ந்த நல்லபிப்ராயம் தெற்றெனத் தெரிந்ததால், அவரை நமக்கு அடையாளம் புரியவில்லையே என்பதில் சற்றே வருத்தத்துடன், "பெரியவா யாரைச் சொல்றா தெரியலையே!" என்றேன்.

பெரியவாள் குழந்தையாக மாறினார். தமது இரு செவிகளுக்கும் அருகாக இரு கைகளையும் தூக்கி முன்னும் பின்னுமாக அழகுற ஆட்டினார். யானை இரு காதுகளையும் ஆட்டிக் கொள்ளும் அபிநயம்!

ஸ்ரீகணநாதன் தனதிரு செவிகளையும் இப்படி விசிறி போட்டுக் கொண்டு, கன்னத்தில் பெருகும் மதநீர் அதில் குளிர 'ஜிலீர்' இன்பம் பெறுவதையும், மதநீரைப் பருகும் வண்டுகள் செவியாட்டத்தில் பறந்தோடுவதும் மீண்டும் வந்து மொய்ப்பதுமாக அல்லாடுவதையும் பெரியவாள் ரஸமாக வர்ணிப்பதுண்டு. எனவே, கணபதியுபாஸகர் எவரையோ குறிப்பிடுகிறாரென எண்ணினேன். அப்படிப்பட்ட ஒருவரை நினைவு கொண்டேன். ஆனால், உடனேயே 'பிரக்யாதி', 'நாளுக்கு நாள் நெறயப் பேர் போயிண்டு' என்பதெல்லாம் அவருக்குப் பொருந்தாது என்றும் கண்டேன். அந்த அடைமொழிகளுக்குப் பொருத்த முள்ளவராக, கணபதி என்றே பெயர் தொடங்கும் வேறொரு பெரியாரின் நினைவு வந்தது.

அவரா என்று, பெயரைச் சொல்லிக் கேட்டேன்.

"அவர் மைஸூர்னா? நான் நம்ம பக்கத்துலேயே இருக்கறவர்னு சொல்லலை?" என்றார் ஸ்ரீசரணர்.

யோசித்தேன். பயனில்லை.

"தெரியலை" என்றேன்.

"விசிறிமட்டை ஸ்வாமியார்" என்றார் அவர்.

அப்படி ஒருவரை நான் கேள்விப்பட்டதேயில்லை. என் தோற்றத்திலிருந்தே என்னுடைய தெரியாமையைப் புரிந்து புரிந்துகொண்ட ஸ்ரீசரணர், "ஒட்டிக்கு ரெட்டியா விசிறி, அதோட கொட்டாங்கச்சியும் வெச்சுண்டு திருவண்ணாமலையில்" என்று பலமாகவே 'க்ளூ' கொடுத்தார்.

"ஸூரத் ராம்குமார்" என்றேன்.

ஒப்புதலைத் தலையாட்டலால் தெரிவித்த ஸ்ரீசரணர், "அங்கே உனக்கொன்றும் 'டச்' இல்லையாக்கும்" என்றார்.

என் ரஸிப்புக்கென்றே ஏற்பட்டவர்கள் என நான் நம்புபவர்களைத் தவிர மற்றப் பெரியார்களுடன் தொடர்பு கொள்வதில்லை என்பது அவர் அறியாததில்லை.

நான் இந்த அருணாசலத்து யோகியாரிடம் 'டச்' வைத்துக் கொள்ளாவிடினும் அவர் என்னை இருமுறை 'டச்' செய்திருந்தார். என்னுடைய இரண்டு கட்டுரைகளை அவர் படித்துத் திருப்தி பெற்ற இரண்டு சமயங்களில் தமது இரண்டு சென்னை அடியார்களை என் வீட்டிற்கு அனுப்பி வைத்து தம்முடைய மகிழ்ச்சியையும், 'தந்தை' என்று தாம் கூறும் இறைவனின் ஆசியையும் தெரிவித்திருக்கிறார். நான் அவரிடம் தொடர்பு கொள்ளாதபோதிலும் உயர்ஸ்தானத்திலுள்ள அவர் மெனக்கிட்டு என் முகவரி கேட்டறிந்து மகிழ்ச்சி தெரிவித்து வர ஆளனுப்பிய உத்தமப் பண்பு அந்த இருமுறையும் என் இதயத்தை 'டச்' செய்தது. ஆயினும் என் வழக்கப்படியே அதற்காக நான் அவரிடம் தொடர்பை வலுப்படுத்திக் கொள்ளவில்லை.

இதை ஒருவாறு பெரியவாளிடம் கூறினேன்.

அதற்கு அவர், "ஒரு தரம் பாராட்டிச் சொல்லி யனுப்பினார். அப்படியும் நீ அங்கே போகலை. ஆனாலும் இரண்டாந்தரமும் சொல்லி யனுப்பினாராக்கும்!" என்றார். தம்மை மற்றவர் கௌரவிக்க வேண்டும் என்பதைக் கருதாமல் தாம் மற்றவரிடம்

நல்லதாக ஒன்று கண்டால் அதைப் பாராட்ட வேண்டும் என்று மட்டுமே கருதிய அருணாசலத்து யோகியின் உத்தமப் பாங்கில் பெரியவாளுக்கு இருந்த ரஸிப்பு அவரது குரலில் ததும்பியது.

"ஸரி, நீ அவர் பேரு என்னன்னு சொன்னே?"

"ஸுரத் ராம்குமார்" -இப்படிச் சொல்கையிலேயே ஏதோ தவறு செய்து விட்டேனோ என்று தோன்றியது.

"ஸுரத் ராம்குமாரா? ராம் ஸுரத்குமாரா?"

தவறுதான் செய்திருக்கிறேனென்று தெரிந்தது. "பெரியவா சொல்றாப்பலதான்."

மேலும் கேள்வி போட்டார். "ஸுரத்குமாரா, ஸூரத்குமாரா?"

குறில் 'ஸு'வா, நெடில் 'ஸூ'வா என்று கேள்வி.

"இரண்டு விதமாவுந்தான் சொல்றா, எழுதறா. ஸுரத் தான் ஸரின்னு நெனைச்சுண்டிருக்கேன்" என்றேன்.

"பேப்பர்க்காரா இரண்டு தினுஸாவும் போடறதைப் பாத்துத்தான் நானும் கேட்டேன். நம்ம பேப்பர் காராகிட்ட மத்த பாஷைப் பேர்கள் படற பாடு சொல்லி முடியாது" என்று சொல்லிச் சிரித்தார். பல உதாரணங்களும் கொடுத்துவிட்டு, முடிவாக ஒரேயடியாகச் சிரித்துக் கொண்டு, "Pathak" -னு இங்கிலீஷ்ல ஒரு பேரைப் பாத்துட்டு, 'பதக்' னு போட்டுண்டிருக்கா. வாஸ்தவத்துல அது பாடக். அதுல வர இரண்டாவது 'ட' வை thaன்னு போடறாளோன்னோ (1) அதைத்தான் 'த'ன்னு நெனச்சுண்டு 'பாடக்'கைப் 'பதக்' ஆக்கியிருக்கா! நல்லவேளை 'பாதக்'னு போடாம, மொதலெழுத்தையும் தப்பாப் போட்டுண்டிருக்கா! பாதக்னா பாதகன் இல்லையா?"

('பாடக்' என்ற வார்த்தை குறித்தும் பல சொன்னார். இங்கே தேவையில்லை. பிறகு நம் விஷயத்திற்கு வந்தார்).

"ஸுரத்'தான் ஸரின்னியே. அதுக்கு எப்படி அர்த்தம் பண்ணிண்டே?"

இறைவனிடம் கொள்ளும் அன்பையே 'மெய்க் காதல்' என்கிறோமல்லவா? அதுவேதான் 'ஸுரதி' எனப்படுகிறது. மீரா முதலியோரின் பாடல்களில் அது ஸுரத் என வருகிறது. எந்த ஜீவனும் இறைவனின் குழந்தை என்பதைக் கருதியோ என்னவோ, வட நாட்டினர் பல பெயர்களின் முடிவில் 'குமார்' என்று சேர்க்கிறார்கள். 'ராம்ஸுரத்குமார்' என்றால் ஸ்ரீராமபிரானிடம் மெய்க்காதல் கொண்ட குழந்தை.

இவ்வாறு நான் புரிந்து கொள்வதாக ஸ்ரீசரணரிடம் தெரிவித்தேன்.

"குமார்-ங்கிறதுக்கு ஏத்தாப்பல அவரைக் 'கொழந்தை, கொழந்தை' ன்னேதான் சொல்றா, தெரியுமோ? ராம த்ரயோதசீ (2) தான் அவருக்கு ஸகலமும். ஆனதுனால, அந்தப் பேர் அப்பா- அம்மா வைச்சதானாலும் ஸரி, அவரே வெச்சுண்டதாவோ, இல்லாட்டா (தீக்ஷா நாமமாக) குரு குடுத்ததாவோ இருந்தாலும் ஸரி, பொருத்தமாவே இருக்கு. ஸூரத்குமார்னு இருந்தா என்ன அர்த்தம் இருக்கும்?" என்றார்.

"ஸூரத்தைச் சேர்ந்த ஒரு ஜீவன்னு வெச்சுக்கலாம்."

"ஆனா இவர் ஸூரத்தைச் சேந்தவர் இல்லை" என்று சொல்லி, ஆயினும் எவ்விடத்தைச் சேர்ந்தவரென்று சொல்லாமல், "ஸூரத்துக்கு ஏன் அப்படிப் பேரு?" என்று திசை திருப்பினார்.

"தெரியலை."

அது அர்த்தபுஷ்டியான பெயராகவே இருக்கும். அதைப் பெரியவாள் சொல்லப் போகிறார் என்று எதிர்பார்த்தேன்.

அவரோ எங்கேயோ போய்விட்டார். 'பேப்பர்காரா மத்த பாஷைப் பேர்களைப் படாத பாடுபடுத்துவது' பற்றி மறுபடி கூறி, "ஸுராஜ்மல்'னு வைரநகைக் கடை சொல்றாளே, அதோட ஸரியான பேர் என்ன தெரியுமா?" என்றார்.

அவர் கேட்டு எனக்கும் ஒன்று தெரிந்த மகிழ்ச்சியுடன், "ஸூரஜ்மல்" என்றேன். உடனேயே 'ஸூரஜ்'ஜுக்கும் 'ஸூரத்'துக்கும் ஏதோ சம்பந்த மிருக்கிறதென்றும் புரிந்து கொண்டேன்.

"அப்படின்னா என்ன அர்த்தம்?"

"ஸூரஜ்னா ஸூரியன். மல்னு வடக்கே அநேகப் பேர் முடிவுல போட்டுக்கறா."

"வீரதீரத்தைக் காட்டணும்னே, 'மல்லர்கள்', 'சிங்கம் மாதிரியானவா'ன்னு அர்த்தம் குடுக்கற 'மல்', 'ஸிங்' கெல்லாம் போட்டுக்கறது அவா வழக்கம்" என்ற ஸ்ரீசரணர், நான் எதிர்பார்த்தாற்போலவே சூரியன் தான் 'ஸூரஜ்' ஆகி அப்புறம் 'ஸூரத்' ஆனது என்று விளக்கினார்.



1. ஸம்ஸ்கிருதம், ஹிந்தி, தெலுங்கு முதலான எல்லாப் பிற மொழிகளிலும் க, ச, ட, த, ப ஆகிய ஒவ்வோர் அக்ஷரத்திலும், நான்கு எழுத்துகள் இருப்பதில் இது 'ட' (ta) என்பதை அழுத்தி 'டஹ' என்பது போல் சொல்லும் இரண்டாவது எழுத்து. அழுத்தம் தெரியவே 't' க்கு 'h' சேர்த்து 'th' என்று எழுதப்படுகிறது.

2. 'ஸ்ரீராம ஜயராம ஜயஜயராம' என்ற பதின்மூன்று அக்ஷரக் கோவையே ராம த்ரயோதசீ.

"ஜ-காரம் ட-காரமாயிடறதுண்டு. ஸம்ராஜ், விராஜ் என்கிறவை ஸம்ராட், விராட்-னு ஆறதோல்லியோ? 'ட' காரமும் 'த'காரமும் ஒண்ணுக்கொண்ணு ரொம்பக் கிட்டக்க இருக்கற சப்தங்கள் - ட, த இரண்டுக்குமே ta ன்னு போடறோமே! 'பிஸ்கெட்'னு இருக்கறதை 'பிஸ்கோத்'னு சொல்றோமோல்லியோ? அப்படி, 'ஸூர்ய'-ங்கிறது 'ஸூரத்' ஆயி, ஸூரஜ் 'ஸூரட்' ஆயி, ஸூரட் ஸூரத் ஆயிருக்கு. பழைய பொஸ்தகங்கள்ல அந்த ஊருக்கு ஸூர்யபுரம்னேதான் பேர் சொல்லியிருக்கு.

"இன்னோரு அபிப்ராயம் என்னன்னா, அது ஸுராஷ்ட்ர தேசத்தோட ராஜதானி; அதனாலே அதுக்கும் ஸுராஷ்ட்ரம்-னே பேர் இருந்து, பேச்சு வழக்குல சிதைஞ்சு, சிதைஞ்சு 'ஸூரத்' ஆயிடுத்துன்னு. இப்படிச் சொல்றவா ஸுராஷ்ட்ரம்தான் ஸௌராஷ்ட்ரம்னு ஆயிருக்கறதா அபிப்ராயப்படறா. ஆனா எனக்கு என்ன தோணறதுன்னா, அந்தப் பிராந்தியத்துக்கே 'ஸௌர-ராஷ்ட்ரம்'னு பேர் இருந்து ஸௌராஷ்ட்ரமா மாறியிருக்கலாம். இப்ப ஸூரத் குஜராத்தைச் சேந்ததுன்னும், ஸௌராஷ்ட்ராங்கிறது கத்தியவார் சீமை ன்னும் இருந்தாலும், பூர்வத்துல ஸௌராஷ்ட்ராவே இன்னும் விஸ்தாரமா ஸூரத் உள்படப் பரவியிருந்திருக்கலாம். பொருத்தமாவே அந்த ராஜதானிக்கும் ஸூர்யபுரம்னு பேர் இருந்து, மாறி மாறி ஸூரத்னு ஆயிருக்கலாம்னு தோன்றது."



(ஸௌராஷ்ட்ரம் என்றால் சூரியனுக்குரிய ராஜ்யம். அதன் தலைநகர் ஸூர்யபுரமாக இருப்பது பொருத்தம் தானே?)

"ஸூரத்துக்குக் கிட்டத்தான் தபதி ஸமுத்ரத்துல ஸங்கமம் ஆறது. தபதியை ஸூர்யபுத்ரின்னு சொல்லியிருக்கு. ஸூர்யனுக்குத் 'தபனன்'னு பேர் இருக்கே! ஸூர்யபுத்ரியானாலும் சந்த்ரவம்சத்து ராஜா ஒத்தனைக் கல்யாணம் பண்ணிண்டா. 'ஸம்வரணன்'னு அவனுக்குப் பேரு. சந்த்ரவம்சத்தைக் குருவம்சம்னும் சொல்றோமே, அந்தக் குரு அவளோட பிள்ளைதான். இதுக்கு ரொம்ப முந்தி, சந்திரவம்சத்துக்கு மொதல் ராஜா புரூரவஸே ஸூர்யவம்சத்துல வந்தவளோட பிள்ளைதான். சந்த்ரன்தான் சந்தர வம்சத்துக்கு மூல புருஷன்னு சொல்லவே வேண்டாம். அவன் பிள்ளை புதன். புதனோட பத்னி யாருன்னா இளா-ங்கிறவ. இடா-ன்னும் சொல்றது. அவ யாருன்னா வைவஸ்வத மநுவோட பொண்ணு. வைவஸ்வத மநு ஸூர்யனோட பிள்ளை தானே? அதனால அவ ஸூர்யனோட பேத்தி. அவ பிள்ளைதான் புரூரவஸ். ஸூர்யனும், புதனும் தேவாள்; நவக்ரஹங்களைச் சேர்ந்தவா. அவா பூமியில ஆட்சி பண்ணினவா இல்லை. புரூரவஸ்தான் மநுஷ்யனா இருந்துண்டு பூலோகத்துல ஆட்சி பண்ணினான். அதனாலதான் அவனையே சந்த்ரவம்சத்து மொதல் ராஜான்னு சொல்றது.

"அந்த ஆதிகால சந்த்ரவம்ச ராஜாவோட அம்மா ஸூர்யனோட பேத்தி; அப்பறம் ரொம்ப காலம் கழிச்சு வந்த குருவோட அம்மா ஸூர்யனோட புத்ரி-ன்னா எப்படின்னு கேட்கப்படாது. தேவாளை அமரம், அஜரம்னு(3) சொல்லியிருக்கோன்னோ? அதனால ஸூர்யபுத்ரியே எத்தனையோ மாநுஷமான தலைமுறைக்கு அப்புறமும் யுவதியா இருந்தாள்னு புரிஞ்சுக்கணும். அவ தேவஜாதியானதுனால, மநுஷ்ய ஜாதியில வந்த ஸம்வரணன் அவளை முப்பாட்டின்னு வச்சுத்தான் ஒறவு கொண்டாடணும்னு இல்லை. நதியா ரூபம் எடுத்துக்க கூடியவள்னா, அப்படிப்பட்டவ கிட்ட நம்ம லோகத்து ஒறவு மொறைகளைத்தான் வெச்சுக்கணும்னு எப்படிச் சொல்றது?..: மொத்தத்துல ஸூர்ய சந்தர வம்சங்கள் ஒண்ணுக்கொண்ணு கலந்திருக்கு.

"குண்டலிநீ யோக ரீதியாப் பாக்கறபோதும் ஸூர்ய சந்த்ர நாடிகள் ஒண்ணு கலக்கத்தான் செய்யறது. இரண்டும் ஒண்ணு கலக்கற எடத்துலேயே அக்னி நாடியோடேயும் ஒண்ணாயிடறது. விசித்ரமா, என்ன ஆறதுன்னா, மூணும் கலந்தவொடனே பூர்ண சந்த்ரனாத்தான் உதிச்சு அம்ருதத்தைக் கொட்றது! மந்த்ர யோக ரீதியாப் பாத்தாலும், அக்னியாப் பேர்ப்படற அம்பாள் ஸூர்யனா ஆயி முடிவாச் சந்த்ரனாக் குளுந்துதான் அம்ருத வர்ஷம் பெருக்கறா."

(குண்டலிநீ யோகப்படி, முறையே வலது - இடது நாடிகளான சூரிய - சந்திர நாடிகள் ஸுஷும்னா என்ற மத்தியமான அக்னி நாடியுடன் புருவ மத்தியில் கலக்கும். பிராண சக்தி அவ்விடத்திற்கு ஏறியவுடன் பூர்ணசந்திரன் உதித்து அதன் நிலவாகச் சிரசிலிருந்து அமுதம் பெருகும். ஸ்ரீவித்யா மந்த்ர யோகப்படி, அம் மந்திரத்தின் முதற்கூறு அக்னியாகவும், நடுக்கூறு சூரியனாகவும், இறுதிக் கூறு சந்திரனாகவுமே விளங்கும். அம்பிகையேதான் அம்மந்திர ரூபமாக இருப்பவள்.)

"சந்த்ர நாடியை 'இடா' - ங்கறோம். ஆனா நாம பார்த்த இடாவோ ஸூர்யனோட பேத்தி. என்ன தெரியறது? சந்த்ரவம்சத்து ராஜாவைச் சேந்ததுல அவளும் சந்திரனாவே குளுந்துட்டா-ன்னு தானே?"

எழுத்துக்கெழுத்து உள்ளூறிய ரஸிப்புடன் தொடர்ந்தார். "ஸூர்யனாக் கொழுந்து விட்டெரியறதெல்லாமும் முடிவாச் சந்த்ரனாத்தான் குளுந்...து அம்ருதமாக் கொட்டியாகணும்."

"குளுந்...து" - எத்தனை குளுமையாகச் சொன்னார்?

ஞானப் பிரகாசம் முழுதும் பிரேமாம்ருதமாகக் குளிர்ந்து பரமாத்மாவிடம் பக்தியாகவும் ஜீவாத்மாக்களிடம் கருணையாகவும் பெருகுவதையே அதற்கு உரையும் பொருளுமாக இருந்த அந்த சந்திரசேகரேந்திரர் சொல்கிறாரென்று தெளிவாய்ப் புரிந்தது.

ஸூரத் - ஸூரத் குமாருக்குத் திரும்பினார்.

"நீ 'ஸூரத்'ன்னா மெய்க்காதல், அதாவது நிஜ பக்தின்னு சொன்னே. அந்த அர்த்தத்தை 'பேஸ்' பண்ணியே பொதுவா வடக்கத்திக்காரா அதை பகவத் ஸ்மரணை, த்யானம்னு வெச்சுண்டிருக்கா. நாம நிழலை 'நீழல்'னும் நீட்டிச் சொல்றாப்பல 'அவா 'ஸுரத்'தையே நீட்டி 'ஸூரத்'னும் சொல்றான்னு நெனைக்கறேன்...."

முகத்தில் ஒரு புது மலர்ச்சியுடன் "ஸம்ஸ்க்ருதத்துல 'ஸூரத்'ன்னேயும் வார்த்தை உண்டு. சாந்த ஸ்வபாவமா, எளகின மனஸோட இருக்கறதை அப்படிச் சொல்றது. நெஜமாவே ஜென்டில்மேன் ஆக இருக்கறது.

"ஸூரத்னா ஸூர்யன்-னு அர்த்தம் பண்ணிண்டு பாத்தா, ஸூரத்குமார்-ங்கறது ஸூர்யகுமாரன்னு ஆகும். 'குமார'சப்தம் நேர்ப் பிள்ளையைத்தான் குறிக்கும்னு இல்லாம, ஒரு வம்சத்துல வந்தவா, 'வழித்தோன்றல்' என்கிறவா எல்லாரையும் குறிக்கும்னு சொல்லலாம். அப்படிப் பார்த்தா ராமரே ஸூரத்குமார்தான்!" - பெரியவாளின் திருநகையில் அலாதிப் பொலிவு திகழ்ந்தது.

திருவாய் மலர்ந்திருந்தது போலவே திருக் கண்களும் மலரத்தான் என்னைப் பார்த்தாரெனினும் ஏதோ பேருண்மையை முற்றும் மலர்த்தாமல் மொட்டிட்டே காட்டுகிறாரென்று புரிந்தது.

அருணாசலத்து யோகியாரை சூரியவம்ச வழித்தோன்றல் என்கிறாரா? சூரிய வம்சதிலகனான ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின் மூல மந்திர ஸித்தியால் அவனது அம்சபூதமேயானவர்; அவன் போலவே சாந்தராக, மிருதுஹிருதயராக ஆனவர் என்று குறிப்பாலுணர்த்துகிறாரா?

என்னுள் கேள்விகள் எழும்பின.

கேள்விகளே விடையுமாயினவா?- இப்படி ஒரு கேள்வி!

அதாவது சர்வ நிச்சயமாகாமலே ஆழ்ந்த ஊகங்கள் கிளர்ந்தன.

சிறிய விஷயங்களைப் பெருக்க அலசி விளக்கும் ஸ்ரீசரணர், பெரிதான, அரிதான சில விஷயங்களைக் குறிப்பாலுணர்த்துவது போல லேசாகக் காட்டிவிட்டுப் பேச்சுத் தடத்தைச் சடக்கென்று மாற்றிவிடுவது சகஜம். இப்படிப்பட்ட சமயங்களில் எத்தனை ஸ்வாதீன பக்தரும் குறுக்கிட்டு அவரைப் பழைய தடத்திற்குத் திருப்ப முடியாது. அப்படியொரு தயக்கம், அச்சம் உண்டாகிவிடும். அவர்தான் உண்டாக்கிவிடுவாராக இருக்க வேண்டும்!

3. 'அமரம்' - அழிவற்றவர். 'அஜரம்' - மூப்பற்றவர்.

இப்போதும் ஏறக்குறைய அப்படித்தான் ஆயிற்று. முதலில் யோகியார் விஷயமாகவே பேசுவது போலச் ச்'யை மாற்றிப் பேசி, அப்படியும் 'ட்ராக்'கையே மாற்றிவிட்டார்.

"அவரே தம் பேரை எப்படிச் சொல்லிக்கறார்–ஸுரத்குமாரா, ஸூரத்குமாரா, என்னன்னு சொல்லிக்கறார்னு தெரியலை" என்றவர், அதோடு அவ் விஷயத்தைக் கத்தரித்து, வேறெங்கோ போய்விட்டார்.

அதன்பின் நான் பெரியவாளை ஐந்து, ஆறு முறைதான் சந்தித்திருப்பேன். பெரும்பாலும் அவை சிறிது நேரப் பேட்டிகளே. அவை எதிலும் அருணாசலத்து யோகியார் பற்றிய பிரஸ்தாவம் இல்லை.

இடையே ஒருநாள் பெரியவாளது அந்தரங்க அடியார்களில் ஒருவரும், வேதரக்ஷணநிதியின் அறங்காவலருமான ஸ்ரீ அண்ணாதுரை ஐயங்காருடன் உரையாடியபோது எவ்வாறோ இப்பிரஸ்தாவம் வந்தது. தற்காலத்தில் ஸ்வாமியார்கள், யோகியார்கள் என்று ஏராளமாக இருப்பதில் பலரைப் பற்றிக் கேள்வி எழும்புவதாகவும், அப்படி எழாத சிலரில் யோகி ஸ்ரீ ராம்ஸுரத்குமார் ஒருவர் என்றும் ஸ்ரீசரணர் கூறியதாக ஐயங்கார் சொன்னார். அவரை 'ஜெனுவின்'' என்று ஸ்ரீசரணர் சொன்னாராம். அப்படியென்றால் சத்திய மானது, போலியல்லாதது, மூலமரபுக்கு முற்றிலும் ஒவ்வியது என்று பொருள்.

வேத தர்ம ஆசரணைகளைப் பரப்புவதில் தாம் பொறுப்புத் தந்திருந்த ஐயங்காரிடம் பெரியவாள் இவ்வாறு கூறினாரென்பது தனிப்பட்ட விசேஷம் வாய்ந்தது. ஸ்ரீசங்கரசார்ய பீடமொன்றின் அதிபர் என்ற முறையில் வர்ணாச்ரமாதி வேத தர்ம ஆசரணைகளின் காவலராகவே பெரியவாள் முதற்கண் தம்மைக் காட்டிக் கொண்டார். ஏனைய பிராசீனமான ஹிந்து சமயப் பீடாதிபதிகள் தவிர, அநேகமாக மற்ற எல்லா ஸ்வாமியார்களும் இச்சாஸ்திர தர்மங்களை விசேஷமாகப் பின்பற்றாதவர்களேயாதலின், அவர்களைப் பற்றிப் பெரியவாள் விசேஷமாகச் சிலாகித்துப் பேசுவது வழக்கமில்லை. அருணாசலத்து யோகியாரும் தர்ம சாஸ்திர விதிமுறைகளில் கவனம் செலுத்தாதவர் தாம். பெரியவாள் மூன்று வேளை நீராடுபவர் எனில் இவரோ குளிப்பதுண்டா என்பதே சந்தேகமாம்! பெரியவாள் மேனி நிறையத் திருநீறாடுபவரெனில் இவரிடமோ 'செய்ன்-ஸ்மோக்கிங்'கில் நீற்று விழும் 'ஆஷ்'தான் உண்டாம்! இவ்வாறிருந்தும் வேதரக்ஷணப் பொறுப்பாளரிடம் பெரியவாள் இவரை 'ஜெனுவின்' என்று சிலாகித்துக் கூறியிருக்கிறாரென்றால், தார்மிக விதி முறைகளையும் கடந்த அதீத நிலையில் இவர் ஆரோஹணித்திருப்பதாக தர்ம சாஸ்திரத்தின் அந்தத் தனியொரு காவலரே அதிகாரபூர்வ முத்திரை இட்டதாக அல்லவா ஆகிறது? இதையெண்ணித்தான் ஐயங்காரின் கூற்றைத் தனிப்பட்ட விசேஷம் வாய்ந்ததாக எண்ணினேன்.

ஒரு மஹான் மற்றொரு மஹானிடம் அக்கறை காட்டினார், அவருக்காகக் கவலைப்பட்டார், அவரோடு அநுதபித்தார், அவர் நலனுக்காகத் தவச் சக்தியைச் செலுத்தினார் என்றெல்லாம் சொன்னால் அசம்பாவிதம் என்று தோன்றக்கூடும். ஆயினும் இப்படியும் நிகழ்வதுண்டு. மஹானை மக்கள் புரிந்து கொள்ளாமல் கொடுமை இழைப்பதும் உண்டுதானே? அச்சமயங்களில் அவர் தமது சொந்த ரக்ஷணைக்காகத் தமது தவச் சக்தியைப் பயன்படுத்திக் கொள்ள

## குற்றம்இல்லா ஏற்றம் உண்டோ?

**சொ.பொ. சொக்கலிங்கம்**

நீரின்றிக் கடல்உண்டோ?
நீதியில்லா மன்றம்ஏனோ?
ஏரின்றி உழவுஉண்டோ?
இதயமில்லா உறவுஏனோ?
பேரின்றி ஊர்உண்டோ?
பெருமையில்லாக் கல்விஏனோ?
தேரின்றி வடம்உண்டோ?
திறமையில்லா வெற்றிஏனோ?

வானின்றி நிலாஉண்டோ?
வாய்மையில்லா வாழ்க்கைஏனோ?
ஊனின்றி உருவம்உண்டோ?
ஒழுக்கமில்லா இல்லறமேனோ?
மீனின்றிக் குளம்உண்டோ?
மென்மையில்லா வார்த்தைஏனோ?
தேனின்றித் தேன்கூடு[illegible]?
சீர்மையில்லாச் செல்வம்ஏனோ?

மழையின்றி வளம்உண்டோ?
மரபில்லாக் கவிதைஏனோ?
உழைப்பின்றி உயர்வுஉண்டோ?
உண்மையில்லா நட்புஏனோ?
அழைப்பின்றி விருந்துண்டோ?
அடக்கமில்லா அறிவுஏனோ?
பழைமையின்றிப் புதுமைஉண்டோ?
பண்பில்லா அன்புஏனோ?

வண்ணமின்றிப் பூக்களுண்டோ?
வரம்பேயில்லா வாழ்க்கைஏனோ?
கண்களின்றிப் பார்வைஉண்டோ?
கனிவில்லாப் பாசம்ஏனோ?
எண்ணமின்றி நினைவுஉண்டோ?
இனிமையில்லாச் சொல்லும்ஏனோ?
அண்டமின்றி அகிலம்உண்டோ?
அன்பில்லா இல்லம் ஏனோ?

மாட்டார். கொடுமைகளையும் இனியவையாக ஏற்பார். எனினும் மானுடச் சட்டையுள் இருப்பதால் ஒரொரு சமயங்களில் வருந்தித் தவிக்கவும் செய்வார். இம்மாதிரிச் சந்தர்ப்பத்தில் பிறிதொரு மஹான் அவரிடம் அக்கறை கொண்டு கவலைப்படுவதுண்டு. இவர் தவிக்கையில் இவரோடு அவர் அநுதபிப்பார். இவருக்குக் கொடுமை தீர்ந்து, உலக வாழ்வு என்று இவருக்கும் லேசாக இருக்கும் ஒன்றில் இவர் சௌக்கியமாக நிலை கொள்ள அவர் தமது தவத்தைப் பயன்படுத்துவார்.

ஸ்ரீபெரியவாளுக்கு அணுக்கமாக இருந்து பணி புரிந்த இருவரிடம் அவர் விதேஹமுக்தி அடைந்தபின் நான் கேட்டறிந்ததிலிருந்து, அருணாசலத்து யோகியார் குறித்துப் பெரியவாளே இவ்வாறெல்லாம் செய்ததாக ஓரளவு வெளிப்படையாகவும், ஓரளவு அநுமானமாகவும் தெரியவந்தது.

திருவண்ணாமலையில் யோகியாரைத் தங்க விடாமல் ஒரு கோஷ்டி அவருக்கு மிகவும் தொல்லை கொடுத்த கால கட்டம் ஒன்று உண்டாம். அப்போது, "ஒரு நிஜ யோகியின் அருமை தெரியாமல் சிரமப் படுத்துகிறார்களே!" என்று ஸ்ரீ சரணர் வெளிப்படவே அக்கறைக் கவலையுடன் கூறியதுண்டாம். தமது வழக்கப்படியே தியானம் என்று வெளிக்காட்டாது கண்மூடியிருப்பதும் உண்டாம். எதிர்ப்புகள் நீங்கி அருணாசலமே ஸ்வஸ்தானம் என்று யோகியார் ஸ்வஸ்தமாக அமர்ந்த போது பெரியவாள் 'நிம்மதி' எனக்கூடிய மகிழ்ச்சி காட்டினாராம். இதிலிருந்து அநுமானம், எதிர்ப்பு நீங்க அவரே தமது தவச் சக்தியைப் பயன் செய்திருக்கலாமென்பது.



பெரியவாள் விதேஹ முக்தியுற்ற 1994ஆம் ஆண்டில் 'அமுதசுரபி', 'கல்கி' தீபாவளி மலர்களில் முறையே அவருக்கு வாயில்லா ஜீவன்களிடமும், சின்னஞ் சிறியவர்களிடமும் உள்ள அபரிமிதமான அன்பு குறித்துக் கட்டுரைகள் எழுதியிருந்தேன். அக்கட்டுரை ஒவ்வொன்று குறித்தும் யோகியாரின் ஆசிரமத்திலிருந்து அடியாரொருவரின் மடல் வந்தது. யோகியார் வெகுவாகச் சந்தோஷித்ததாகவும், கட்டுரைகள் ஆசிரமத்தில் திரும்பத் திரும்பப் படிக்கப் படுவதாகவும் மடல்கள் கூறின. பெரியவாளிடத்தில் இப்பெரியாருக்கு எத்துணை ஈடுபாடு என்று வியந்தேன்.

இரு மடல்களின் அடியிலும் யோகியாரே ஓரிரு வரிகள் எழுதியிருந்தார். நம்பவொண்ணா விநயப் பாங்குடன் தமது ஆசியையே வணக்கமாக உருமாற்றித் தெரிவித்திருந்ததுடன் அவற்றிலொன்றில் திருக்கை யொப்பமும் இட்டிருந்தார்- தேவநாகரி லிபியில் தெளிவாக 'ராம்ஸுரத்குமார்' என்று! குறில் 'ஸு'தான், சந்தேகமில்லை.

"அவரே தம் பேரை எப்படிச் சொல்லிக்கறார் - ஸுரத்குமாரா, ஸூரத்குமாரா, என்னன்னு சொல்லிக் கறார்னு தெரியலை" என்று பத்தாண்டுகளுக்கு முன்பு கூறிய ஸ்ரீசரணரிடம் விஷயம் தெரிவிக்க, இன்றுஅவர் ஸ்தூல உருவில் இல்லையே என்ற எண்ணம் க்ஷணகாலம் நெஞ்சை உறுத்தியது.

பிறபாடு யோகியாரது அடியார்களின் தொடர்பு ஏற்பட்ட பின், இவ்விஷயமாக மேலும் தெரிந்து கொண்டேன். அவர் பெயர் ராம் ஸுரத்குமாரே எனினும் அவர் ஸூரத்குமாரும்தான், அதாவது சூரியவம்ச வழித்தோன்றலும்தான் என்பதை ஸ்ரீமஹா பெரியவாள் வெளிப்படவே கூறியதுமுண்டாம்.

அதாவது, உத்தரப் பிரதேசத்தில் சூரியவம்சத்தின் வழி வழி வந்துள்ள குடியில் பிறந்தவர் அவர். அக்குடியினராக இன்னும் பல சூரிய குலத்தோன்றல்கள் இன்று இருக்கவே செய்வர். அவர்களில் தலைமையுற்ற சூரிய குல சேகரர் இவர் எனலாம்.

யோகியாரின் அடியார்களின் தொடர்பு எனக்கு எப்படி ஏற்பட்டதெனில் அவரேதான் அவர்களை அனுப்பி வைத்தார். குறிப்பாக, அடியேனைக் கருவியாகக் கொண்டு வெளிவரும் பெரியவாளின் அருளுரைத் தொகுப்புகளான 'தெய்வத்தின் குரல்' பகுதிகளில் தாம் பெறும் நிறைவைத் தெரிவிக்கவே யோகியார் அந்த அடியார்களை அனுப்பி வைத்தார்.

ஆன்ம நிறைவே கண்ட அவருக்கு வேறு 'சுய'நிறைவு ஒன்றில்லைதான். எனவே இது அஞ் ஞானத்தில் அவதியுறும் மக்களுக்கு ஞான ஒளி காட்டும் உபதேச நூல்கள் வெளியாகின்றன என்பதில் அவரது அருட்தாபம் தீர்ந்த நிறைவுதான்!

வந்த அடியார்கள் இது தொடர்பாகப் பல சொன்னார்கள். யோகியார் தம்மிடம் வருவோருக்கு 'தெய்வத்தின் குரலை'யே வழிகாட்டும் பிரமாண சாஸ்திரமாகப் பரிந்துரைக்கிறாராம். (முன்னாள் நீதிபதி ஸ்ரீ டி.எஸ். அருணாசலத்துக்கும், எழுத்தாள சகோதரர் ஸ்ரீ பாலகுமாரனுக்கும் தமது பிரதிகளையே படிக்கக் கொடுத்து, அதோடு நில்லாது அடுத்த முறை அவர்கள் வரும் போது இன்ன பகுதிவரை முடித்து வரவேண்டும் என்று அன்புக்கட்டளையும் இட்டிருக்கிறார்!) தம்மையே குருவாக, தெய்வமாகப் போற்றி உபதேசம் வேண்டும் சிலரிடம், "இந்தப் பிச்சைக்காரனுக்கு என்ன உபதேசிக்கத் தெரியும்? பரமாசார்யர்தான் (மஹா பெரியவாளை யோகியார் 'பரமாசார்யர்' என்றே சொல்கிறார்) இக்காலத்துக்கு உபதேசிப்பதற்கென்றே வந்தவர். அவரது அருளுரை நூல்களுக்கே போங்கள்" என்கிறாராம்.

இதிலிருந்து தம்மளவில் யோகியார் தர்மாசார விதி முறைகளைக் கருதாவிடினும், உலகினருக்கு அவற்றின் தேவையை மறுக்காமல், மதிக்கவே செய்வதை உணர்ந்தேன். (நாம உபாஸனையே அவர் அடியாருக்கு முக்கியமாகவழங்கும் சாதனை.

இன்னும் சொன்னார்கள். "பரமாசார்யர் ஒருவர் இல்லையேல் இன்று தர்மமா, பக்தியா, வேதமா, சாஸ்திரமா, புராணமா, ஸத்விஷய உபந்நியாஸங்களா, பாராயணங்களா, ஆலய உத்ஸவாதிகளா எதுவுமே உயிர் பெற்றிரா சுருங்கச்சொன்னால், "ஆன்மிகம் என்பதே அவரால் தான் நவஜீவனம் கண்டிருக்கிறது" என்றெல்லாம் யோகியார் சாற்றுகிறாராம்.

(பின்னாளில் நானே காது நிரம்பக் கேட்டேன், தன் 'தந்தை' பற்றி அவர் என்ன சொல்வாரோ, அதையே பெரியவாளைக் குறித்தும் திரும்பத் திரும்ப உணர்ச்சியுடன் கூறியதை: "பரமாசார்யர் இங்கே, அங்கே, எங்கேயும் இருக்கிறார்!")

அவரது ஆசிரமத்தில் அதிகம் ஒலிக்கும் கீதம் ஸ்ரீ பெரியவாளின் 'மைத்ரீம் பஜத' தானாம்! அதற்குப் பொருளும் விளக்கச் செய்கிறாராம். அங்கு அதிகம் படிக்கப்படும் ஸத்விஷயம் பெரியவாள் குறித்த நூல்கள் தாம். (பின்னாளில் ஆசிரமத்தின் மைய மன்றத்தில் பெரியவாளின் திருவுருவப் படமே வைக்கப்பட்டு, அதற்கு அகண்ட தீப உபசாரமும் நடந்து வருகிறது.)

பெரியவாளிடம் யோகியாரின் பெருமதிப்புப் பற்றிக் கேட்கக் கேட்க எனக்கு அவரிடமே பெருமதிப்பு

ஓங்கியது. ஆன்மவுலகில் இன்று இவரே ஒரு சுடர்த் தாரகையாக ஜ்வலிப்பவர். ஆயிரமாயிரவர்- வெளி நாட்டாருங்கூட – இவரே ரக்ஷகர், குரு, தெய்வம் என்று அநுபவபூர்வமாகக் கண்டு ஆசிரயிக்கும் உயர்வு பெற்றவர். தென்பாண்டி நாட்டில் காணிமடம் என்ற இடத்தில் இவருக்கே ஆலயம் அமைக்கப்பட்டு, இவரது விக்கிரகம் பிரதிஷ்டையாகி நம்பூதிரி அர்ச்சகரைக் கொண்டு யதோக்தமாக நித்திய பூஜை நடந்து வருகிறது. அப்படிப்பட்டவர் தம்மையே புகல் எனக் கொண்டோரிடம் பெரியவாளின் புகழ்கூறி அவர் புகன்றதையே அவர்கள் படித்துப் பயின்று பயனுற வேண்டுமெனப் பணிக்கிறாரென்றால்? ஒரு மஹான் தமக்குச் சமகாலத்தவரான இன்னொரு மஹானை இந்த அளவுக்குக் கொண்டாடியதாக நான் வேறு எடுத்துக் காட்டு கண்டதில்லை.

தமக்கு மதிப்பெண்ணே கொடுத்துக் கொள்ளாமல் அவர் பூஜ்யமாக நின்ற அந்த எளிமையாலேயே என் பெருமதிப்பிற்குரிய பூஜ்யரானார். நாம ஜபயோக ஸித்தியைவிட அவரது இந்த வினய யோகஸித்தி என் நெஞ்சைத் தொட்டதில் அதுவரை 'யோகியா'ராக இருந்தவர் 'யோகிராஜ'ராக ஏற்றம் கொண்டார்.

அவரது பணிவு எனக்கும் அவரிடம் பணிவு ஏற்படுத்தலாயிற்று. அது வளர வளரப் பணிவு மூர்த்தமான பெரியவாளிடமிருந்து அவர் பிரித்துச் சொல்ல முடியாதவர் என்ற உணர்ச்சி தோன்றலாயிற்று. அதையொட்டி, 'என் ரகஷிப்புக்கென்றே ஏற்பட்டவர்கள்' என்று முன்பு குறிப்பிட்டேனே, அவர்களில் இவரும் ஒருவர் என்ற கருத்து குருத்துவிடலாயிற்று. குருத்திலிருந்து பாளை வெடித்துப் பூவும் காயும் தோன்ற ஸ்தூல தரிசனம் அவசியமில்லைதானெனினும், பெரும்பாலும் அது நிகழவே செய்கிறது. அதற்கேற்ப, சென்ற (1995) நவம்பரிலிருந்து அவரது ஆசிரமம் என்னை இழுக்கத் தொடங்கியது. 'யோகிராஜர்' 'யோகிபகவா' னாக என்னுள்ளே உயர்ந்தார்.

பெரியவாள் சொன்னது, அதைவிட அதிகமாகச் 'சொல்லாமற் சொன்னது' யாவும் நூற்றுக்கு நூறு சத்தியமெனக் காணலானேன். அன்று நிச்சயப்படாத ஆழ்ந்த ஊகங்களாகவே நின்றவை, இன்று நிலைத்த உண்மைகளாக உறுதிப்பட்டன.

அன்று அடியாரம்பத்தில் பெரியவாள் அபி நயித்துக் காட்டினாரே, கணநாதன் கன்னத்து மதநீர் மீது செவிகளால் இரட்டை விசிறி வீசிக்கொண்டு ஜிலீர் அநுபவித்ததை! அந்த ஜிலீரை இவர் எத்தனை சத்தியமாக அடியருக்கு ஊட்டுகிறாரென்பதை அநுபவபூர்வமாக உணர்ந்தேன். ப்ரேமைமதம் பிடித்த இவர் அந்த நீரை நம்மீது சொரிந்து அதன்மீது ஒரு விசிறி போதாதென்று ஜோடியால் விசிறி ஜிலீர் செய்கிறார்! ஸுரதர் என்றால் சாந்த சுபாவி,'ஜென்டில்' என்று பெரியவாள் சொன்னதைப் பிரத்தியக்ஷமாக மெய்ப்பித்துக் காட்டுகிறார். மெய்க்காதற்பித்துப் பிடித்த ஸுரதரும்தான் இவர். 'தந்தை'யிடம் மெய்க்காதல் கொண்டு அவனுக்கு என்றும் குழந்தையாயிருக்கிறார். பெரியவாள் அபிநயித்த கணநாதனாகிய அந்தத் தெய்வக் குழந்தையாக- "குமார்-ங்கறதுக்கு ஏத்தாப்பல கொழந்தை"யாக இருக்கிறார்.

அன்று பெரியவாள் அக்னி, சூரிய, சந்திரர்களைச் சொன்னதையும் சத்தியமாக்கிக் காட்டுபவர் இவர். ராமநாம ஜபத்தில் இவரிடம் மூண்ட யோகாக்னி, ராமனையே அனைத்துமடங்கும் ஏகமாகக் காணும்

ஞான சூரியப் பிரகாசமாகிப் பின்னர் அந்த ஏகத்தையே அனைவரிடமும் கண்டு அன்பமுது (மதநீர் என்றதும் அதுதான்!) பெருக்கும் சந்திரனாகவே 'குஞ்சு-து' நிறைந்திருக்கிறது. (அச்சூரிய குலதிலகனுமே ராமசந்திரன்தானே? யாகாக்னியில்அவன் பாயஸ ரூபத்தில் உதித்தான் என்றால் அப் பாயஸம் பிரேமாம்ருதம்தானே?)

மொத்தத்தில் சூரிய குல சேகரரான யோகிராஜர் சந்திரசேகரப் பெரியவாளுடனேயே இணைந்து விட்டவராகத்தான் என் நெஞ்சில் இடம் கொண்டார். ஆசார நெறிகளை மட்டுமே வைத்து முன்பு முரண் பட்டவர்களாகக் கண்ட இருவரிடையே இப்போது உள்ளநுபவத்தையும் வெளியநுக்கிரஹத்தையும் வைத்து அற்புத ஒற்றுமை கண்டேன்.

இன்னும் சில ஒற்றுமைகள். முதலில், 'மலையினும் மாணப் பெரிதாக' இவர்களை உயர்த்தும் அந்த அடக்கம். இதில் ஓர் இனிக்கும் மாறுபாடும்! தமது அடக்கப்பாங்கையும் அடக்கமாகவே காட்டுபவர் ஸ்ரீமஹா பெரியவாள். யோகி பகவானுடைய பிரேம மதத்திலோ அடக்கம் அடங்காமலே வெளிவந்து தம்மைப் பிச்சைக்காரன் என்றே எப்போதும் சொல்லிக் கொள்ள வைக்கிறது.

அட, இங்கேகூட ஓர் ஒற்றுமை! பெரியவாளும் தம்மை ஒவ்வொரு சமயம் அப்படிச்சொல்லிக் கொள்வதுண்டுதான்! ஸ்ரீ மடத்தில் பிக்ஷை செய்வோரை பிக்ஷைக்காரர் என்பர். ஸ்ரீசரணரோ, "பிக்ஷைக்காரர்-னா கௌரவமா இருக்கு. 'பிக்ஷை'தான் 'பிச்சை' ஆயிருக்கு. அதுக்காக, அவாளைப் பிச்சைக்காரா-ன்னா கேட்டுப்பாளா? வாஸ்தவத்துலயும் பிக்ஷைபோடற அவாளா பிச்சைக்காரா? வாங்கிக்கற நான்தான் பிச்சைக்காரன்" என்பார்.

ஆக இருவரும் அன்புப் பிச்சை, அகந்தைப் பலி கேட்கும் பிக்ஷாண்டார்கள் தாம்!

யோகி பகவான் ஸ்ரீராமநாமத்தை நானிலமெங்கணும் பரப்புவதில் ஊக்கமாயிருக்கிறார். பெரியவாளுந்தான் வெள்ளிக் காசாகவும் பொற் காசாகவும் வழங்கி எத்தனை ஆயிரம் பேரை எத்தனை கோடி ராமநாமம் எழுத வைத்திருக்கிறார்?

என் உளம் கவர்ந்த இன்னோர் ஒற்றுமை, தமது தொண்டர்களுக்கு உயர்வளிப்பதில் இருவருக்குமுள்ள அதிசய நாட்டம். என்னிடம் யோகி பகவான், "இந்தப் பிச்சைக்காரனைப் பற்றி எழுத ஒன்றுமில்லை. எழுதத்தான் வேண்டுமெனில், இந்த நாலு தாயார் களைப் பற்றிச் சொல்லவும்" எனக் கூறி நான்கு மாதரசிகளைக் காட்டினார். தொண்டையடைக்கத் தொடர்ந்தார்: "இந்தத் தாயார்கள் இருக்கை தந்து பேணியிராவிட்டால் நோயுற்றிருந்த இந்தப் பிச்சைக்காரனின் உடல் நசித்தே போயிருக்கும்." தேவகி, விஜயலக்ஷ்மி, ராஜலக்ஷ்மி, விஜயாக்கா என்று அவர்கள் பெயரையும் கைகுவித்துக் கூறினார்.

தோற்றத்திலேயே தூய்மையும் பணிவுமாக உள்ள அந்நால்வரை 'ஸுதாமா சகோதரியர்' என்கிறார்கள். அவர்களில் முதலிடம் பெற்றவரான சகோதரியை மா தேவகி என்று ஆசிரம அன்னையாகவே போற்று கிறார்கள். நன்கு படித்துப் பதவிகள் வகித்த இவர்கள் அவற்றை உதறிவிட்டு நமது யோகியே சகலமும் என்று சரண் செய்து, தாஸ்ய பக்தியினால் ஆன்மிகத்தில் ஆழங்காற்பட்டிருக்கிறார்கள். அண்ணாமலையில் ஸுதாமா என்ற வீட்டில் ஒன்றுகூடி வாழும் இவர்களே, குறிப்பாக மா தேவகியே, சில ஆண்டுகட்கு முன் மிகவும் பிணியுற்றிருந்த யோகியைப் பிடிவாதமாகச் ஸுதாமாவாசியாக்கி, அரும்பாடு பட்டு அவரது உடலைக் காத்துக் கொடுத்தவர்கள். அவரது ஸ்திர வாசம் அன்றிலிருந்து இன்றுவரை (இனியும்) 'ஸுதாமா'வுக்குக் கிட்டி, அது பெயருக்கேற்ப 'உத்தம இல்ல'மாக, கோயிலாக, விளங்குகிறது.

தாம் எவர்களது உயிரை அனவரதமும் பேணிக் காக்கிறாரோ அவர்களே தமது உடலைக் காப்பதை அவர் மகத்தாக மதித்து தமது புத்திரிகளைப் போன்ற அவர்களைத் தாயாராகப் போற்றுகிறார். உலகம் தம்மை அறிவதை விட அவர்களை அறிவதையே அவசியமெனக் கருதுகிறார்.

முப்பதாண்டுகளுக்கு முன்னால், ஸ்ரீ மஹா பெரியவாளின் மஹா சரிதத்தை எழுதிப் பரப்ப நான் ஆர்வமுற்றிருந்த காலம். அப்போது அவர், "ஒனக்கு எப்படிப் பெரியவாளைப் பத்தி லோகத்துக்கெல்லாம் தெரியணும்னு இருக்கோ, அப்படியே ஒன்னோட அந்தப் பெரியவாளுக்கும் இன்னும் அநேகப் பெரியவாளைப் பத்தி லோகத்துக்குத் தெரியணும்னு இருக்கு" என்று சொல்லி, சற்றுத் தள்ளிப் போய்க் கொண்டிருந்த பாராக்கார (காவலாள்) மரக் கண்ணுவைக் காட்டினார். எதிர்புறத்திலிருந்து வந்த சந்தனம் அரைக்கும் சுப்புணியைக் காட்டினார். "இந்த ரெண்டு பேருங்கூட அந்தப் பெரியவா-லிஸ்ட்ல சேந்தவா தான். இன்னும் இப்படி ஆதி யிலேருந்து இன்னி வரை எனக்கும், இந்த மடத்துக்கும் அந்தரங்க சுத்தமாக கைங்கர்யம் பண்ணின அநேகப் பெரியவா மட்டும் இல்லைன்னா, 'நானும் ஒரு பெரியவனாக்கும்'னு பெத்தப்பேர் வாங்கிண்டே இருக்க முடியாது!" என்றார்.



இவ்விரு மஹனீயர்களின் சந்திப்பு ஒன்றை வாசகர்களுக்குச் சொல்லாது விடலாமா?

சந்திரமௌளி என்று ஸ்ரீ மஹா பெரியவாளின் அடியாரொருவர். திருவண்ணாமலைவாசியாகும் பேறு அவருக்குக் கிடைத்தது. அப்போது பெரும்பேறாக யோகி பகவானின் அணுக்கமும் வாய்த்தது. அவர் காஞ்சி செல்லும் போதெல்லாம் ஸ்ரீசரணர் 'விசிறி மட்டை சாமியார்' பற்றி அவரிடம் தவறாமல் விசாரிப் பார். உடன் சில நிமிஷம் கண்மூடித் தியானத்தி லிருப்பார்.

1985 டிசம்பர் மாதம் சந்திரமௌளி காஞ்சி சென்ற போது பெரியவாள் அவரை ஏகம்பனாலயத்தில் நடந்த ஹோமத்துக்குப் போய்ப் பிரஸாதம் பெற்றுவரச் செய்தார். அதோடு ஸ்ரீகாமாக்ஷியின் பிரஸாதத்தையும் சேர்த்துக்கொடுத்து யோகிக்கு அனுப்பி வைத்தார். அதைப் பெற்றுக் கொண்ட யோகி உணர்ச்சிவசமாகிக் கண்ணில் ஒற்றிக் கொண்டார். சிரசில் நெடுநேரம் வைத்துக்கொண்டார். பின் உடனிருந்தோருக்கு வினியோகித்தார்.

ஆச்சரியமென்னவெனில் அன்றுதான் யோகியின் - உலகமறிந்திராத - ஜயந்தி நன்னாள்.

சுமார் மூன்று மாதம் பின்னர் சந்திரமௌளி காஞ்சி சென்ற போது சந்திரசேகரேந்திரர் அவரிடம் வழக்கமான யோகி விசாரிப்புச் செய்யவில்லை. எடுத்த எடுப்பிலேயே, "நீ ஒடனே ஊருக்குத் திரும்பிப் போய் விசிறிமட்டை ஸ்வாமியாரை டாக்ஸி வெச்சு கோவிந்தபுரம் அழைச்சுண்டு போ. அவருக்கு போதேந்திராள் ஸமாதி தரிசனம் பண்ணி வெச்சுத் திரும்பத் திருவண்ணாமலையிலே கொண்டு விடு"

## அன்னையின் சொர்க்கம்!

காம.வேழவேந்தன்

பால்நிலவைக் கிள்ளிவந்து நெற்றி யாக்கி,
படுவானின் குழம்பெடுத்துக் கன்னமாக்கி,
தோல் அவிழ்ந்த மாங்கனியால் இதழை ஆக்கி,
தும்பிதந்த தங்கத்தால் கழுத்தை ஆக்கி,
சேல்விழியைப் பெயர்த்துவந்து, கண்களாக்கி,
செம்பொன்னின் வார்ப்படத்தால் உடலை ஆக்கி
ஆல்போன்ற என் வயிற்றில் உன்னை வைத்தோன்
யார் மகனே, யார் மகனே! தேடு கின்றேன்!

ஏதேதோ பட்டங்கள் உண்டாம்; எல்லாம்
எம்மூலை? நீ அளித்தாய் 'அன்னைப் பட்டம்'!
போதைதரும் செவ்வுதட்டில் 'தேனை' வைத்தாய்!
பூரிக்கும் உன் குரலில் 'குழ'லை வைத்தாய்!
சீதவிழிக் கதவில் என் உயிரோ வைத்தாய்?
சிற்றெறும்பு தொட்டாலும் துடிக்கின்றேனே!
பாதத்தால் நீ உதைத்தால் போதும், செல்வா!
பாவைஎன்றன் உடலணுக்கள் சிலிர்த்து நிற்கும்!

'கிம்பர்லி' வைரத்தைப் பரப்பி வைத்து,
கீழ்க்'கொற்கை' முத்தாலே சுவரெழுப்பி,
செம்பவளக் குவியலினால் கூரையிட்ட
செம்மாந்த அரண்மனைக்குள் போவென்றாலும்
தெம்பாங்குப் பண்ணே! உன் அணைப்பையன்றி
'சீச்சீச்சீ, தேவையில்லை', என்றே சொல்வேன்!
செம்பனைய மார்பகத்துக் கலசத்தே உன்
சீரிதழ்கள் பதிந்துவிட்டால், அதுவே சொர்க்கம்!

என்று உத்தரவிட்டார். அதுமட்டுமின்றி டாக்ஸிச் செலவுக்கானதை அடியார்களிடமிருந்து திரட்டிச் சந்திரமெளளியிடம் கொடுத்தார்.

நாம மகிமையை, குறிப்பாக ஸ்ரீராமநாம வைபவத்தை, தக்ஷிண தேசத்தில் பரப்பியோருள் முதல் ஸ்தானம் வகிப்பவர் ஸ்ரீ போதேந்திரர்கள். கும்பகோணத்துக்கு அருகான கோவிந்தபுரத்திலுள்ள அவரது ஸமாதியிலிருந்து சதாவும் ராமநாமம் ஒலித்துக் கொண்டிருப்பதை இன்றைக்கும் சித்த ஒருமை வாய்ந்த அடியார்கள் கேட்கின்றனர்.

அருணைக்குத் திரும்பிய சந்திரமெளளி காஞ்சி முனிவர் கூறியதை யோகி பகவானுக்குத் தெரிவித்தார்.

சிறிது நேரம் கண்மூடித் தியானத்திலிருந்த யோகி, "பரமாசார்யர் எங்கே இருந்தாலும் அதுவே இந்தப் பிச்சைக்காரனுக்கு கோவிந்தபுரம்" என்றார்.

சந்திரமெளளிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை.

டாக்ஸி வரவழைக்கப்பட்டது. யோகி அதில் ஏறியமர்ந்தார். சந்திரமெளளியையும் ஏற்றிக்கொண்டார்.

டிரைவரிடம், "காஞ்சீபுரம் போவோம்" என்றார்.

மாலை நாலரை மணிக்கு டாக்ஸி ஸ்ரீமடம் சேர்ந்தது.

யோகியைப் புரிந்து கொள்ளாத பணியாளர்கள் அப்போது ஸ்ரீசரணரைப் பார்ப்பதற்கில்லை என்று கூறினர்.

அவர்கள் வாய்மூடு முன்பு சாக்ஷாத் அந்த ஸ்ரீசரணர் அங்கு வந்து யோகி பகவானுக்கு நேரெதிரே நின்றார்.

யோகி விழுந்து வணங்கினார். ("பிச்சைக்காரன் அப்படியே தூங்கிப் போய்விட்டான்" என்று அவர் நமது எழுத்தாள சகோதரரிடம் சொன்னாராம். அச் சகோதரர், "அது என்ன தூக்கம்னு நமக்குத் தெரியாதா என்ன?" என்கிறார்.)

விழுந்தவர் எழுந்தார்.

எதிர்ப்புணர்ச்சியே இல்லாத இதய இசைவு கொண்ட இரு மஹாபுருஷர்கள் எதிரெதிரே நின்றனர். இருவரும் இரு கரங்களையும் உயர்த்தினர். உள்ள மொட்டிய அவ்விருவரும் உள்ளங்கைகளை விரித்து அப்படியே நின்றனர். ஒருவரது இரு கரங்களுக்கும் எதிர் எதிரே மற்றவரது இரு கரங்களுமாகச் சிலையென நின்றனர்.

கனத்த மௌனத்தில் கரங்களோடு கரங்கள் பேசிக் கொண்டனவா? அவர்களது உட்சாரம் கரங்களின் வழி பெருகிக் கங்கையும் யமுனையுமாகக் கலந்து, உரையாடினவா?

காஞ்சிக் கங்கை - அருணை யமுனைகளின் சங்கமமா அது?

சங்கரனின் சேகரத்திலுள்ள சந்திரன் பெருக்கும் அமுதுதான் கங்கை. யமுனையோ சூரிய புத்திரி - சூரிய தேஜஸிலிருந்து பெருகியவள்.

ஞானக் கதிரொளியும் கருணை நிலவொளியும் கலந்தே மக்களுக்கு அபய வரத ஹஸ்தங்களின் வழி அருள் பாலிக்கின்றன.

ஒவ்வொரு கணமும் யுக பரிமாணம் கொண்ட சில நிமிடங்கள் ஹஸ்தங்களின் உரையாடல் தொடர்ந்தது.

பெரியவாள் திரும்பி ஸ்ரீமடத்தின் உட்புறம் நடந்தார்.

யோகி திரும்பி ஸ்ரீ மடத்தின் வாயிலுக்கு நடந்தார்.

"அவர் ஸூர்ய வம்சம்" என்று சந்திரசேகரர் உடனிருந்தவரிடம் கூறுவது காதில் கேட்டது.



# எழில் பொங்கும் தமிழ்



**நீதியரசர் ச. மோகன்**

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்"

பாரதியின் இந்த வரிகளைப் படித்தபொழுது எனக்குள்ளே சிரித்துக் கொண்டேன். பலரைப் போல் தமிழில் அப்படி என்ன இருக்கிறது என்பதை நானே கேட்டுக் கொள்வேன். ஆனால் சில ஆண்டுகளாக, குறிப்பாக அண்மையில் ஆழ்ந்து படித்ததன் விளைவாக ஓர் உண்மையைக் கண்டேன். பாரதியின் கூற்று முற்றிலும் உண்மை.

உலகிலுள்ள அனைத்துத் துறைகளிலும் தமிழ் சிறந்து விளங்கும் ஒரு மொழி. இலக்கியம், இசை, இயல், நாடகம், பண்பாடு, மருத்துவம், சட்டம், கலை, ஆன்மிகம், இறைவழிபாடு போன்ற எல்லாத் துறைகளிலும் மேம்பாடு உடையது. வெறும் மேம்பாடு மட்டுமின்றி எழில் கொழிக்கும் ஒரு மொழி. எழில்தான் தமிழ்.

எழிலின் தோற்றம் எத்தனையோ! இயற்கை எழில், இலக்கிய எழில், இசையில் எழில், நாடகத்தில் எழில், நாட்டியத்தில் எழில் இப்படிப் பல எழில்கள் உண்டு. இவற்றை எல்லாம் பலரும் அறிந்திருக்கக்கூடும் என்பதால் நான் வேறு சில எழில்களை உங்கள் முன்னர் வைக்க விரும்புகிறேன். முதலில் ஓசை எழில்; (ஒலி எழில் எனவும் கூறலாம்).

ஒரு மொழியின் மேம்பாடு, அது எழுப்பும் ஒலியில், இசையில், ஒலிக்கும்பொழுது உருவம் வந்து தெரியவேண்டும். உணர்ச்சி வந்து பொங்க வேண்டும். அதுதான் அந்த மொழிக்கு ஏற்றம் எனலாம். கலிங்கத்துப்பரணியில் ஒரு காட்சியைக் காண்போம்.

**போர்க்கள எழில்:**

முதல் குலோத்துங்க சோழன், வீறுகொண்டு போர் செய்து கலிங்க நாட்டை வெற்றி கண்டதை வரலாறு நமக்கு அறிவிக்கின்றது. அந்தப் போரை இன்ப இலக்கியமாய் நமக்குத் தந்தார் கவிஞர் பெருமான் செயங்கொண்டார். போர்க்களம் என்றாலே வெறுப்புத்தான் முன் வரும். அழுகை ஒலியும், பிணக்குவியல்களும், ரத்த ஆறும், எலும்பு மலைகளும், நம் கண்முன்னே வந்து நிற்கும். அந்த வெறுக்கத்தக்க போர்க்களத்தை, அருவருக்கத்தக்க அவலக் காட்சியை இலக்கியமாய், இன்பக் காவியமாய்ப் படைத்த பெருமை செயங்கொண்டாரையே சேரும். போர்ப்படைகளின் ஆரவார வீர நடையை, பீடு நடையை எடுத்து இயம்புகின்றார் ஓசை நயத்தோடு.

*"எடு மெடு மெடு மென எடுத்ததோர்*
*இக்கொலி, கடலொலி இகக்கவே*
*விடு, விடு, விடு பரி கரிக் குழாம்*
*விடும், விடும் என ஒலி மிகைக்கவே"*

இதைக் கேட்கும் பொழுதே வீரக் கனல் நம்முள்ளத்தில் எழுவதை உணர்கிறோம். இது அன்றைய ஓசை எழில்.

ஒரு படையின் ஆற்றலைப் பற்றிச் சொல்லும்பொழுது கம்பனின் காவிய நயத்தைக் காணாமல் விட்டால், ஒரு பெரிய இழப்பிற்கு ஆளாவோம்.

*"ஒடிக்குமேல் வடமேருவை வேரோடும் ஒடிக்கும்*
*இடிக்குமேல் நெடுக வானக முகட்டையும் இடிக்கும்*
*பிடிக்குமேல் பெருங்காற்றையும் கூற்றையும் பிடிக்கும்*
*குடிக்குமேல் கடல் ஏழையும் குடங்கையும் குடிக்கும்"*

மேரு மலையைக்கூட ஒடிக்கும் பான்மையின. கைக்கு எட்டாத, கண்ணுக்கு மட்டும் எட்டும் வானத்தை இடிக்கும் தன்மையின. உணர்வால் மட்டும் அறியக்கூடிய காற்றைப் பிடித்துச் சிறை வைக்கும் பாங்கின. கடல்களைக் குடங்கையின் மொண்டு குடிக்கும் இயல்பின.

ஒடிப்பதும், இடிப்பதும், பிடிப்பதும், குடிப்பதும் நம் கண்முன்னே வந்து நிற்கின்ற அளவிற்கு ஓசை நயத்தைத் திறம்படத் தீட்டியுள்ள அவர் கவிச்சக்கரவர்த்தி என்பதில் என்ன சந்தேகம்?

மாழை நாட்டு மன்னன், கொன்றை நாட்டிற்கு விடுதலை அளிப்பதாகப் பறை சாற்றினான். அடிமைத்தளை அறுபடப் போகின்றது என்பதைக் கேட்ட மக்கள் அளவிலா மகிழ்ச்சி எய்தினர். எத்தகைய மகிழ்ச்சி? பக்குவம் பெற்ற சான்றோர் சிலர் தக்கது, தக்கது என்றனர். உணர்ச்சி மிகுந்தோர் தம் பழம் பெரும் நாட்டின் பெருமை பாடி மகிழ்ந்தனர். காதலன் ஒருவன், காதலியைக் கட்டிப் பிடித்து இறுக அணைக்கிறான். இவற்றுக்கெல்லாம் மேலாக மூதாட்டி ஒருத்தி உள்ளத்தில் நிரம்பிய உவகையைப் படம் பிடித்துக் காட்டுகிறார் பாவேந்தர் பாரதிதாசன்.

அவளோ குடுகுடுகிழவி. கல்லுரலில் மெல்லிசை இட்டு மெல்ல இடிக்கின்றாள். விடுதலைச் செய்தி விளம்பக் கேட்டதும் அவள் உள்ளத்து மகிழ்ச்சி, கைவழி இறங்கி உள்ளத்தின் வேகம், உரல் இடியில் ஒலித்ததாம், தடதடவென்று. இதுதான் பாட்டு.

*"பல்லிலாக் கிழவி கல்லுரல் இட்ட*
*மெல்லிசைக் காயினை மெல்ல இடிக்கையில்*
*விடுதலைச் செய்தி விளம்புதல் கேட்டதால்*
*தடதடவென்றே இடிபட்டது கல்"*

இது இன்றைய ஓசை நயம், ஒலி நயம்.

**வேதனை எழில்:**

அடுத்து வேதனை எழில் காட்டும் காட்சி ஒன்று.

"இடுக்கண் வருங்கால் நகுக" என்று இயம்புகிறது குறள். எத்தனை துயர் வந்தாலும், இடையூறுகள் ஏற்பட்டாலும் இன்முகத்தோடு ஏற்றுக்கொண்டு, வேதனைக் குரலே இலக்கியமாகி ஒலிப்பதைத் தமிழில்தான் காணமுடியும்.

இராமன் காட்டுக்குச் செல்கிறான் எனக் கேட்டு மக்கள் வருந்தினார்கள். ஆனால், அது பெரிதன்று. உயிரினங்கள் எல்லாம் உழன்றன, அழுதன என்பதைப் படம் பிடித்துக் காட்டும் கம்பன் சொல்கிறான்:

*"ஆவும் அழுதஅதன்கன்று அழுத அன்று அலர்ந்த*
*பூவும் அழுத புனல் புள் அழுத கள் ஒழுகும்*
*காவும் அழுத களிறு அழுத கால் வயப்போர்*
*மாவும் அழுத. அம்மன்னவனை மானவே."*

பாண்டிய மன்னனைப் பாடிப் பரிசில் பெற மதுரைக்கு வந்தார் சத்திமுற்றப்புலவர். நல்ல குளிர்காலம். ஒரு மாடத்தின் மூலையில் முடங்கிக் கிடந்தார். தன்னைக் குளிரிலிருந்து காக்கப் போர்வை ஏதும் இல்லாததால், கைகளால் உடலைப் போர்த்துக் கொண்டார். வாடைக்காற்று அவரை மிகவும் வாட்டியது. அப்பொழுது இரண்டு நாரைகள் அவ்வழியே பறந்து சென்றன. அவற்றைப் பார்த்ததும் கவிஞனின் கற்பனைச் சிறகு விரிந்து பறக்கத் தொடங்கியது:

*"நாராய் நாராய், செங்கால் நாராய்!*
*பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன*
*பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்!"*

'பனங்கிழங்கைப் பிளந்ததைப் போன்ற கூர்மையான அலகைக் கொண்ட நாராய்' என விளித்தார். முன்பே சொன்னேன், இரண்டு நாரைகள் என்று. இருந்தும் ஒன்றை மட்டும் ஏன் விளிக்கிறார் என்றால், கணவன், மனைவியாக வரும் அந்த இரண்டு பறவைகள், ஈருடலாக இருந்தாலும் ஒருயிராய் இருக்கின்றன. எனவே ஒன்றைக் குறிப்பிடுவதுதான் பண்பு, என்றெண்ணினார் போலும்!

கணவனும் மனைவியுமாகச் செல்லும் பறவைகளின் பயணக் குறிக்கோள் எது என்பதைச் சொல்கிறார்.

*"எம்மூர் சத்தி முற்ற வாவியுள் தங்கி*
*நனைசுவர் கூரை, கனை குரற் பல்லி*
*பாடு பார்த்திருக்கும் என் மனைவியைக் கண்டு*
*ஆடையின்றி வாடையின் மெலிந்து*
*கையது கொண்டு மெய்யது பொத்தி*
*பேழையுள் இருக்கும் பாம்பென உயர்த்தும்*
*ஏழையாளனைக் கண்டனம் எனுமே.*

நீங்கள் தம்பதியாக எம்பதியான சத்திமுற்றத்துக்குச் செல்லுங்கள். நிம்மதியாகத் தங்குவதற்குத் தாமரைத் தடாகம் உள்ளது. ஏழையேன் வீட்டைக் கண்டுபிடிப்பது கடினமில்லை. ஓலை வேய்ந்த கூரை. அதுவும் நனைந்த கூரை. என்னைப் பரிசோடு எதிர்பார்த்துக்

கொண்டிருப்பாள் என் மனைவி. அதற்கான சகுனம் பல்லியின் ஒலியில் பார்த்துக் கொண்டிருப்பாள். குறத்தியிடம் குறிகேட்கக் காசில்லை. காசின்றிக் குறி சொல்லப் பல்லிகளுக்கோ வீட்டில் பஞ்சமில்லை. என் மனைவியிடம் சொல்லுங்கள் "ஆடையின்றி, வாடையால்வாடுகிறேன். பெட்டிப்பாம்பாய்ச் சுருண்டு கிடக்கிறேன். ஏழை நான் என்று."

வேதனையால் பாடும் போதும், வேடிக்கைக்குக் குறைவில்லை. அது அன்றைய வேதனை எழில்.

இனி இன்றைய வேதனை எழிலைப் பார்ப்போம். புதுமைப்பித்தன் அவர்கள் காசநோயால் கடும் அவதிப் பட்டுக்கொண்டிருந்த காலம். புனாவில் தங்கியிருந்தார். தம் நெருங்கிய நண்பர் பம்பாய் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டார். அவரைப் போய்ப் பார்க்க முடியவில்லையே என ஏக்க மிகுதியாய் எழுதுகின்றார்:

*கையது கொண்டு மெய்யது பொத்தி*

*போர்வையுள் கிடக்கும் பெட்டிப் பாம்பெனச்*

*சுருண்டு மங்கி மடங்கிச் சொல்லுக்கு இருமுறை*

*லொக் லொக் கென இருமிக் கிடக்கும்*

*ஏழையாளனைக் கண்டனம் எதுமே.*

வேதனை ஒன்றுதான். இரண்டிலும் எழிலுக்குப் பஞ்சமில்லை. அன்று நாரை விடு தூது; இன்று தபால் விடு தூது.

### நகைச்சுவை எழில்:

இரட்டைப் புலவர்கள் மதுரைக்கு வந்தனர். பொற்றாமரைக் குளத்தில் குளித்தனர். அப்போது குருடராகிய புலவர் தம் உடையை நீரில் நனைத்துத் துவைத்தார் (தப்பினார்.) அலசிக் கொண்டிருந்தபோது ஆடையைத் தண்ணீர் அடித்துக் கொண்டு சென்றது. முடமாய் இருந்த புலவர் கரைமேல் வீற்றிருந்தார். இந்தக் காட்சியைப் பார்த்துப் பாடினார்.

*"அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்து நாமதனைத் தப்பினால் நம்மையது தப்பாதோ"*

*அதற்குப் பதிலாகக் குருடர் பாடினார்:*

*"இக்கலிங்கம் போனாலென், இப்புவியில் ஏகலிங்கம்*
*மாமதுரைச்*
*சொக்கலிங்கம் தானிருக்கச் சொல்."*

ஆடை போன பரிதவிப்பில்கூட நகைச்சுவையை மறக்கவில்லை.

நீதிமான்கள் கூட தமிழ் வளர்க்கத் தவறவில்லை. மேற்கோளாகச் சொல்லவேண்டுமானால், மாயூரத்தில் மாவட்ட முன்சிப்பாக இருந்த வேதநாயகம் பிள்ளை அவர்களைக் குறிப்பிடலாம்.

ஒரு வழக்கில் தீர்ப்புத் தொகையைக் கட்டமுடியாததற்கு எதிர் வழக்காளர் சொன்னது:

"மழை, மாரி இல்லாமல் என் பயிர்கள் எல்லாம் வாடிவிட்டன. நான் வறுமையில் இருக்கிறேன். எனவே தீர்ப்புப்படி பணத்தைச் செலுத்த முடியவில்லை. சிறிது சலுகை தாருங்கள்" என்று கெஞ்சினான்.

ஆனால், அடுத்த நாள் தீர்ப்பை நிறைவேற்ற மனு ஒன்று வந்தபொழுது. எதிர் வழக்காளர் சொன்னது:

"எனக்குப் பலத்த மழையினால் பெரு நட்டம். ஆகவே தீர்ப்புப்படி பணத்தைச் செலுத்த முடியவில்லை. சிறிது சலுகை தாருங்கள்" என்று கெஞ்சினான்.

மழை இல்லாதபொழுது கஷ்டம். இருந்தபொழுதும் நஷ்டம்.

இந்த வேதனை கலந்த வேடிக்கையை நினைத்து ஒரு பாட்டு இயற்றினார்.

*"வேண்டுங்கால் நீ பெய்யாய். வேண்டாதபோது*
*பெய்வாய்.*
*தாண்டு நீசெய்வதெல்லாம் தப்புகளே – நீண்டுலவும்*
*வட்ட முகிலே யுனக்கு மாசெனப் பேர் தந்தோர்க்குப்*
*பட்டமது கட்டுவேன் பார்."*

இறுதியாக ஒரே ஒரு திருமந்திரம். திருமூலரைப் போன்று ஆன்மிகக் கருத்துகளை எளிதாக, ஆனால் மிகச் சிறந்த முறையில் யாருமே கூறியதில்லை என்று அறுதியிட்டுச் சொல்லலாம்.

விளக்கு என்கின்ற ஒரே ஒரு சொல்லை வைத்துக் கொண்டு, அந்தச் சித்தர். ஆடுகிற சித்துதான் என்னே?

*விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி*

*விளக்கினுக்குள்ளே விளக்கினைத் தூண்டி*

*விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு*

*விளக்குடையான் கழல் மேவலுமாமே!*

உடம்பிலே இருக்கின்ற ஞான தீபத்தை ஏற்றி, அந்த ஞானத்தில் உள்ளிருக்கும் மெய்ஞானத்தைத் தூண்டி. மெய் ஞானத்தின் உட்கருத்தை உணர்வோர், இறை அன்பை எய்துவர் என்பதுதான் கருத்து.

இதைப் படிக்கப் படிக்க மெய் சிலிர்க்கிறது. தமிழனாய்ப் பிறந்ததற்கு, தமிழ் அறிந்து உணர்ந்ததற்கு தலைநிமிர்ந்து நிற்கத் தோன்றுகிறது. மனம் எல்லையிலா மகிழ்வு பெறுகின்றது.

சீர்மிகு சிலப்பதிகாரம் சொல்கிறது அரங்கேற்று காதையில்:

*"இமிழ் கடல் வரைப்பின் தமிழகம் அறிய*

*தமிழ் முழுதறிந்த தன்மையனாகி"*

இந்நிலை, நம் தமிழ் முழுதறிந்த நிலை. உயர்வின் சிகரம் அன்றோ?

***




போட்டோ : வி.எம். விநாயகம்

கனவில் வருவாள் முறுவலிப்பாள் - அவள்
காணா உலகில் குரல்கொடுப்பாள்
நனவில் மெல்ல நடந்திடுவாள் - சிலம்பின்
நாதம் கேட்கும் முகம்காட்டாள்!

காற்றில் பறந்து வந்திடுவாள் - இந்தக்
காசினி முற்றும் திரிந்திடுவாள்
ஆற்றில் மலையில் அருவிகளில் - அவள்
அரிய நடனம் புரிந்திடுவாள்.

கைகளை நீட்டி வான்தொடுவாள் - அவள்
கால்களை எற்றிக் கடல் கடப்பாள்
மைவிழி வீசி மாநிலத்தை - ஒரு
மாய மயக்கில் மருட்டிடுவாள்.

மணலில் வீடு கட்டிடுவாள் - அதில்
மாட மாளிகை எழுப்பிடுவாள்
தணலில் சிமிட்டும் மின்மினியை - அதில்
தங்கி யிருக்க மண்பதிப்பாள்.

கையில் புத்தகம் வைத்திருப்பாள் - அதில்
காதற் கவிதைகள் படித்திடுவாள்
மையில் மருகும் விழிகளினால் - ஏதோ
மாய வசனம் பேசிடுவாள்

மானைப் போலே குதித்திடுவாள் - பின்
மயிலைப் போலே ஒல்கிடுவாள்
வானைப் போலே இருண்டிடுவாள் - பின்
வான்மழை தேன்மழை பொழிந்திடுவாள்.

அருகில் வருவாள் அணைப்பவள்போல் - நான்
அணைக்க எழுந்தால் மறைந்திடுவாள்
செருகக் கூந்தல் மலர்பறிப்பாள் - அதைச்
செருக மாட்டாள் சிதறிடுவாள்.

சிரிப்பாள் குதிப்பாள் நடமிடுவாள் - உடன்
சிந்தனை மூழ்கி நின்றிடுவாள்.
விரிப்பாள் மூடிய கைவிரலை - ஏதோ
விண்ணை நோக்கி வீசிடுவாள்.

புத்தம் புதிய உடையணிந்தே - பனிப்
பூக்கள் மலர்ந்திடும் புன்னகையில்
சித்தம் களிக்கத் தோன்றிடுவாள் - அவள்
தீபா வளித்திரு நாளினிலே

கம்பியில் தெறிக்கும் மத்தாப்பை - இரு
கைகளில் பிடித்தே நடந்திடுவாள்
எம்பியே சுழலும் சக்கரத்தை - அவள்
எங்கணும் சுற்றி வலம்வருவாள்

அன்னை என்றிட முதுமையில்லை - என்
அன்புத் தோழியும் இல்லையவள்
முன்னைப் பிறவியில் வந்தவளோ - அல்லால்
மூளும் பிறவியில் வருபவளோ?

யாரவள் என்றே தெரிகிலனே - அவள்
யாதும் பேசி அறிகிலனே
பேரும் ஊரும் தெரியாத - எழிற்
பெண்ணவள் மாயக் கன்னியம்மா!



அமுதசுரபி – தீபாவளி மலர் '96

தாழியில் வெண்ணெய் தடங்கையார
விழுங்கிய கண்ணன்

ஓவியர்: ரமா

(இன்னும் பலலட்சம் ஆண்டுகளில், சூரியன் அணைந்து விடுமாம். அதன்பின் எப்போதும் பூமிக்கு இரவுதானாம். பூமிக்கு வாய்க்கும் அந்தக் 'கடைசிப் பகல்' பற்றிச் சிந்தித்தபோது...)

பூமிக்கு இன்றுதான்
கடைசிப் பகல்

இனி இந்தப் பூமி
சூரியனின் கல்லறை

இன்று ஏற்றப்படும் விளக்குகளை
இனி அணைக்க முடியாது மனிதனே!

இனி
கிரகத் தொகுதிக்குப் பெயர்
சூரியக் குடும்பமல்ல
சூன்யக் குடும்பம்

*

பூமிக்கு இனிமேல்
வருடங்கள் இல்லை

பூமிக்கு இனிமேல்
பருவங்கள் இல்லை

இருளின் மடியில் உலகம்
உலகின் மடியில் இருள்
நிலாவுக்கு இனிமேல்
நித்திய அமாவாசைதான்

*

விஞ்ஞானிகள்
விடிய விடிய
(மன்னிக்கவும்)

# கடைசிப் பகல்

இனி பூபாளம் இல்லை.

வாசல் தெளிக்கும்
[illegible] இல்லை.

[illegible] கம்பிகளுக்குத்
[illegible] பூசும்
[illegible] இனி இல்லை.

பூமியரங்கில்
[illegible]
ஓடிக் கொண்டிருந்த பகல்காட்சி
இன்றுதான் கடைசி.

[illegible]
[illegible]

திசைகள்
[illegible]

[illegible]
[illegible] திசைகாட்டும்.

[illegible]
[illegible]

கவிஞர்
வைரமுத்து

இருள இருளச்
சிந்திப்பார்கள்

மரணப் படுக்கையில் பூமி.
ரத்ததானம் செய்வது யார்?

இந்த பூமி ஓட்டின் மேல்
படிப்படியாய்ப் பனிப்படலம்.

கடல் இருந்த பரப்பெல்லாம்
பனிக்கட்டிப் பாலைவனம்.

மாஜி கடல்களில்
'மனைகள் வாங்க - விற்க'
அறிவிப்புப் பலகைகள்!

பூமிக்கு இனிமேல்
புயல்மழை இல்லை.

குடி தண்ணீர்?...

பரவாயில்லை
பாலித்தீன் பைகளில்
பனிக்கட்டி விற்கலாம்.

*

இலைகளுக்கு இனி
ஒளிச்சேர்க்கை இல்லை.

மரங்கள் மரிக்கும்.

கரியமில வாயுவால்
காற்று கனக்கும்.

அங்கங்கே
மொத்தமாகவும் சில்லறையாகவும்
ஆக்சிஜன் விற்கும்

மண்ணின் மனிதர்கள்
மலையேறும் மனிதர்களாய்
ஆக்சிஜன் சுமந்து
அலைந்து திரிவர்.

*

ஏது செய்வாய்
மனிதா?

தன் அடிவயிற்று நெருப்பும்
அணைந்து விட்டால்
இந்தப் பூமியும் இறந்துவிடும்.
பூமியைப் புதைக்க
அவ்வளவு பெரிய கல்லறைக்கு
எங்கே போவாய்?

கூடாது;
பூமி இறந்துவிடக் கூடாது.

கூடாது;
மனிதஇனம் மாண்டுவிடக்கூடாது

*

ஒவ்வொரு நட்சத்திரமும்
பல்மடங்கு சூரியனாமே?

மனிதா!

இந்தப் பூமியை
ஒரு
நட்சத்திரத்தை நோக்கி நகர்த்து.

அல்லது
ஒரு
செயற்கைச் சூரியனைச் சிருஷ்டி.
அல்லது
உஷ்ணம்தானே வேண்டும்?
ஏதேனும் ஒரு கிரகத்தை
எரி.

உன்னால் முடியும்.

நீ கடவுளையே படைத்தவன்
இதையா படைக்க மாட்டாய்?

*

# எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள்

தமிழ் மொழி என்று தோன்றியது, எவ்வளவு பழைமை உடையது என்பதை எவராலும் எடுத்துச் சொல்ல முடியாது என்கிற கருத்தில் –

'என்று பிறந்தவள் என்றுணராத

இயல்பினளாம் எங்கள் தாய்'

என்று தம்முடைய பாடலில் பாரதியார் குறிப்பிட்டார்.

பழைமையுடைய இத்தமிழ்மொழி பெருமையும் உடையதாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நல்ல இலக்கியச் செல்வங்களைப் பெற்ற மொழி, தமிழ்மொழி.

தொல்காப்பியம் என்னும் இலக்கியச் செல்வத்தையும் தன்னிடத்தே கொண்ட மொழி, தமிழ் மொழி.

இப்படிப்பட்ட சிறப்பும், பழைமையும் வாய்ந்த தமிழ் மொழியை அந்தந்தக் காலங்களில் தோன்றிய புலவர் பெருமக்கள் சிறப்புச் செய்து வளர்த்து வந்திருக்கிறார்கள்.

காலந்தோறும் வளர்ந்த தமிழ்மொழி, இன்னும் கன்னித் தமிழ் என்று போற்றப் படுகிறது.

காலத்தால் அழியாமல் இந்த மொழி இன்றைக்கும் ஐந்து கோடி மக்களுக்கும் மேல் பேசுகிற மொழியாக வழக்கில் வாழ்ந்து வருகிறது.

எத்தனையோ மொழிகள் காலப் போக்கில் மறைந்து போக, நாளும் நாளும் புதிய இலக்கியச் செல்வங்களைப் பெற்று தமிழ் மொழி தன்னிகரற்று விளங்கி வருகிறது. இது தமிழுக்கு வாய்த்த தனிப்பெருமை என்று கூறலாம்.

தமிழ் மொழி பழைமை மிக்கது; சிறப்புமிக்கது என்பதோடு, அந்த மொழியைப் பேசுகின்ற தமிழர்கள் வரலாற்றுச் சிறப்புடையவர்கள் என்பதும், வரலாற்று ஏடுகளைப் பார்த்தால் நன்கு தெரிய வரும்.

தமிழ்மொழி, பழைய மொழி – தமிழ்நாடு, பழைய நிலப்பரப்பு – தமிழர்கள் மிகச்சிறந்த பண்பாட்டுச் சிறப்பு மிக்கவர்கள் என்பதைப் பல்வேறு எடுத்துக்காட்டுகளால் நாம் உணரலாம்.

முதலாவதாக, ஒரு பாடலை நாம் காண்போம். அந்தப் பாடல் பின்வருமாறு:

தாமரை புரையும் காமர் சேவடி,

பவழத்து அன்னமேனி, திகழ்ஒளி

குன்றி ஏய்க்கும் உடுக்கை, குன்றின்

நெஞ்சுபக எறிந்த அம் சுடர் நெடுவேல்

சேவல்அம் கொடியோன் காப்ப,

ஏம வைகல் எய்தின்றால் உலகே.

இந்தப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார்.

எட்டுத்தொகை நூல்களில் 'நல்ல குறுந்தொகை', என்று பாராட்டப் பெறுகின்ற குறுந்தொகையிற் கடவுள் வாழ்த்துப் பாடலாக இப்பாடல் காணப்படுகின்றது.

பாரதம் பாடிய பெருந்தேவனார் வாழ்ந்த காலம் நமக்குத் தெரிய வரவில்லை என்றாலும், ஏறத்தாழப் பல்லவர் காலத்தில் இவர் வாழ்ந்திருக்கலாம் என்று வரலாற்றாசிரியர்களும், இலக்கிய அறிஞர்களும் கூறுகின்றனர்.

இவர் பாடலுக்குத் தமிழ்உலகில் ஒரு சிறப்பு இருக்கிறது. யாப்பருங்கலக் காரிகை மொழியியலில் ஒன்பதாம் நூற்பாவில் 'எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள்' என்று இந்தப் பாடல் எடுத்துக் காட்டப் பெறுகின்றது.

எத்தனையோ பாடல்களைத் தமிழ்மொழியில் வழங்கினாலும், யாப்பருங்கலக் காரிகை என்ற நூல், யாப்பைப் பற்றியே பேசுகின்ற அந்த நூல், இந்தப் பாடல்தான் 'எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள்' என்று குறிப்பிட்டிருப்பதற்குக் காரணங்கள் இருக்க வேண்டும்.

அந்தக் காரணங்கள் யாவை என்பதை நாம் சற்று சிந்தித்துப் பார்ப்போம்.

நம்முடைய ஆராய்ச்சியின் பயனாக யாப்பருங்கலக் காரிகை என்னும் நூல் 'எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள்' என்று இந்தப் பெருந்தேவனார் பாடலை மேற்கோள் காட்டியிருப்பது முற்றிலும் பொருத்தம் என்பதை, கீழ்க்காணும் ஆய்வுகளால் நாம் நிரூபிக்கமுடியும்.

முதலாவதாக, 'தாமரை புரையும் காமர் சேவடி' என்பதை எடுத்துக் கொள்வோம்.

தாமரை என்பது மருத நிலத்திற்குரிய பூ. அது மட்டுமன்று; மங்கலச் சொல் என்றும் தாமரையைக் குறிக்கலாம். 'திருக்கோவையார்' என்னும் நூலுக்கு உரை கண்ட பேராசிரியர் என்னும் பெரிய தமிழ் உரையாசிரியர் 'திருவளர்தாமரை' என்ற அந்த முதல் தொடருக்கு விளக்கமாக உரை எழுதியிருக்கிறார்.

அந்தவகையிலே தாமரைப் பூ என்பது மருத நிலத்திற்குரிய பூவாகும்.

செந்தாமரைப் பூவில் திருமகள் உறைவதாகவும் வெண்தாமரைப் பூவில் கலைமகள் உறைவதாகவும் பெரியோர் கருதுவர். அந்தவகையிலே 'தாமரை' என்ற அந்தச் சொல், இங்கே செந்தாமரைப் பூவைக் குறிப்பிட்டு, திருமகளை உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

தாமரை மலர் போன்ற செக்கச் சிவந்த பாதங்கள் என்று எடுத்த எடுப்பிலேயே இந்தப் பாடல் முருகப் பெருமானுடைய திருவடிச் சிறப்பினைப் புலப்படுத்துகிறது.

'சேயோன் மேய மைவரை உலகம்' என்ற தொல்காப்பியத்

டாக்டர் சி. பால சுப்பிரமணியன்

தொடரால் குறிஞ்சி நிலத்திற்கு, அதாவது மலையும் மலையைச் சார்ந்த இடங்களுக்கு, முருகப் பெருமான் தெய்வமாக விளங்குகின்றான் என்ற குறிப்பை, இது காட்டுகின்றது.

'பல குன்றிலும் அமர்ந்த பெருமாளே' என்று திருப்புகழ் இதனைக் குறிப்பிடும். 'குன்றுதோறும் ஆடி வரும் குமர வடிவேலன்' என்று சாதாரணப் பெண்கள் கூட அவர்கள் முருகப் பெருமானை வாழ்த்தி வணங்குகின்றபோது, இவ்வாறு குறிப்பிடுவதைக் காணலாம்.

முருகன் செக்கச் சிவந்த நிறம் உடையவன் என்பதை 'சேயோன்' என்ற சொல் கொண்டு உணரலாம். 'சேய்' என்பதற்குப் பிறிதொரு பொருளும் உண்டு. குழந்தை என்பது அதனுடைய பொருளாகும்.

பரமசிவனுக்குக் குழந்தையாக முருகன் தோன்றினான் என்ற கருத்தை உள்ளிட்டே 'சேய்' என்ற சொல் முருகனைக் குறிக்கும். இதற்குத் திரு முருகாற்றுப்படை சான்று பகர்கிறது.

முருகனுடைய நிறம் சிவப்பு. சிவப்பாக விளங்குகின்ற, பரமசிவனுடைய மகனாக விளங்குகின்ற, முருகப் பெருமான் சிவந்த நிறத்தை உடையவன் ஆதலின் அவனுடைய திருவடித் தாமரைகள் செக்கச் சிவந்து விளங்குகின்றன, என்ற கருத்தை முதல் தொடரிலேயே விளக்கிப் பாரதம் பாடிய பெருந்தேவனார் 'தாமரை புரையும் காமர் சேவடி' என்கிறார்.

செக்கச் சிவந்த திருவடி மட்டுமல்லாமல் 'காமர்' என்ற சொல்லால் அழகு வாய்ந்த என்ற குறிப்பையும் புலப்படுத்துகிறார். ஆக – இந்தத் தொடருக்கு ஒட்டு மொத்தமாக நாம் பொருள் காண்கிறபோது, செந்தாமரை மலரைப் போன்ற அழகு மிகுந்த திருவடித் தாமரைகளை உடையவன் முருகன் என்ற கருத்துப் புலப்படுகிறது.

இனி அடுத்த தொடரைக் கண்போம்.

'பவழத்து அன்னமேனி' – பவழம் – செம்பவழம்; செக்கச் சிவந்த பவழம். அது எங்கே கிடைக்கின்றது? நெய்தல் நிலத்தில், அதாவது கடல் நீரில் காணப்படுகிறது. கடல் நீர் எவ்வாறு அந்தச் செம்பவழத்தை அடக்கிக் கொண்டிருக்கிறதோ, அது போல இங்கே முருகப் பெருமான் செம்பவழ நிறத்தை உடையவனாக விளங்குகின்றான்.

'பவழத்து அன்னமேனி' மேனி என்பது . அவனது திருமேனியைக் குறிக்கும். அந்தத் திருமேனி செக்கச் சிவந்து காணப்படுகிறது; செம்பவழம் போல் காணப்படுகிறது என்று இங்கே குறிக்கிறார்.

ஆக – தாமரையைச் சொன்ன காரணத்தினால் மருத நிலம் குறிக்கப்படுவதுபோல, இங்கே பவழத்தைச் சொன்ன காரணத்தினாலே நெய்தல் நிலம் குறிக்கப்படுகிறது.

அதற்கு அப்பாலே 'திகழ் ஒளி குன்றி ஏய்க்கும் உடுக்கை'.

திருவடித் தாமரைகளைப் பார்த்தோம். அதுதான் முறை. முதலில் தெய்வத்தை வணங்குகின்றபோது – அந்தத் திருவடித் தாமரைகளிலே நம்முடைய கண்கள் நிலைக்க வேண்டும் அதனாலே முதலில் திருவடித் தாமரைகளைக் காட்டி, அதற்குப் பிறகு அவரது திரு மேனியைக் காட்டுகிறார் அதிலேதான் அவரது செம்பவழம் இருக்கிறது. அதற்கு மேலே அவர் என்ன உடையணிந்திருக்கிறார் என்று எடுத்துக் காட்டுகின்றார்.

அந்த உடை, 'குன்றிமணி போன்ற செக்கச் சிவந்த உடை' என்று சொல்கிறார். சிவந்த ஆடை உடையவன் முருகப் பெருமான் என்று நக்கீரர் பெருமான் திருமுருகாற்றுப் படையில் கூறுகிறார். இங்கே அதே கருத்திலே செக்கச் சிவந்த ஆடை 'திகழ் ஒளி குன்றி ஏய்க்கும் உடுக்கை' – குன்றிமணி போல இருக்கிற உடுக்கை – ஆடை என்று சொல்கிறார்.

அந்த ஆடை ஒளி வீசித் திகழ்கிறது என்பதைப் புலப்படுத்துகிற நோக்கில் – திகழ் ஒளி – ஒளி வீசிக் கொண்டிருக்கிறது என்ற கருத்தைச் சொல்கிறார்.

'குன்றின் நெஞ்சுபக எறிந்த அம் சுடர் நெடுவேல்' பிறகு அவன் கையிலே தாங்கியிருக்கிற – திருக்கையிலே கொண்டிருக்கிற – அந்த வேற்படை எப்படியிருக்கிறது என்று சொல்ல வருகிறபோது – 'குன்றின் நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்' என்கிறார்.

இங்கு 'குன்று' என்று சொல்லப்படுவது – முருகப் பெருமான் கிரவுஞ்ச மலையைச் சூரபத்மனைக் கொல்வதற்காக எறிந்த வேலாலே பாதிக்கப்பட்ட அந்த மலை.

ஆக – குன்று என்பது இங்கே 'கிரவுஞ்ச மலை'யைக் குறிக்கும். அந்தக் குன்றின் நடுவிடம் பிளக்கும்படி முருகனுடைய கையில் இருந்த வேல் செயலாற்றுகின்றது. இதைத்தான் 'குன்றின் நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்' என்கிறார்.

இங்கே நெஞ்சு என்பது நடுவிடம் என்று வந்திருக்கிறது. ஆக, சூரபத்மனை அழித்த முருகன் என்பது இத் தொடராலே விளக்கப்படுவதோடு, அதற்குத் துணையாக இருந்தது திருமுருகன் கையில் இருந்த திருக்கைவேல் என்று சொல்கின்றார்.

சூரபத்மனின் ரத்தத்தைக் குடித்த வேல் என்ற காரணத்தினாலே அந்த வேல் செக்கச் சிவந்து காட்சியளிக்கிறது. ஆகவே இங்கே குறிஞ்சி நிலம் சுட்டப்படுகிறது.

அதற்குப் பிறகு நாம் பார்க்கின்றபோது – 'சேவல் அம் கொடியோன் காப்ப ஏம வைகல் எய்தின்றால் – உலகே' என்று முடிக்கின்றார்.

ஏம வைகல் என்றால் பாதுகாப்பான நாள்கள். திரு முருகப் பெருமானுடைய கையிலே சேவற் கொடி விளங்குகின்றது. அந்தச் சேவற்கொடியை உடையவன் – சேவலங் கொடியோன்– முருகன். அந்த முருகன் இந்த உலகத்தைக் காக்கின்ற காரணத்தினாலே, இந்த உலக உயிர்கள் எல்லாம் துன்பங்கள் நீங்கி மகிழ்ச்சியாக – அமைதியாக – பாதுகாப்பான நாள்களைப் பெற்றுத் துலங்குகின்றன என்ற கருத்திலேதான் அவர் இப்படிக் குறிப்பிட்டிருக்கிறார். இங்கே மீண்டும் நாம் காண வேண்டும் 'ஏம் வைகல் எய்தின்றால் உலகே'

இங்கே உலகு என்பது இட வாகு பெயராக இந்த உலகத்தில் உள்ள மக்களைக் குறிக்கும். முருகப் பெருமான் துன்பத்தை நீக்கி, இன்பத்தைத் தருகின்றவன் என்ற அந்தக் குறிப்பு இந்தத் தொடராலே நமக்குப் பெறப்படுகின்றது.

சூரபத்மனால் உலக உயிர்கள் பெற்ற அந்தத் துன்பத்தை முருகனுடைய திருக்கை வேல் போக்கி இந்த உலகு மகிழ்ச்சியிலே திளைக்கும்படி செய்கின்றது என்பதே பொருளாகும்.

ஆக – மீண்டும் இங்கே பார்க்கின்றபோது, அந்தக் 'குன்றம்' என்ற அந்தக் குறிப்பாலே குறிஞ்சி நிலம், நமக்குப் பெறப்பட்டது. இதனுடைய திரண்ட பொருளாக – இந்தப் பாட்டினுடைய உள்ளீடான கருத்தாக – நாம் முதலில் கொள்ள வேண்டிய அந்தப் பொருளுரையைக் காண்போம்.

இந்தப் பொருளுரையில் நாம் என்ன காண்கிறோம் என்ற கருத்தை விட, இந்தப் பாடல் என்னென்ன நுட்பமான கருத்துகளைக் கொண்டுள்ளது என்பதை இனி விரிவாகக் காண்போம்.

முதலாவதாக இதன் உள்ளீடாக அமைந்த பொருள், "தாமரை மலரைப் போன்ற அழகிய, செம்மையாகிய திருவடித் தாமரைகளையும், பவழத்தையொத்த சிவந்த நிறத்தையும், ஒளி விடுகின்ற பிரகாசத்தையும், குன்றிமணி போன்ற சிவந்த ஆடையையும், கிரவுஞ்ச மலையினது நடுவிடம் பிளக்கும்படி வீசிய அழகிய, ஒளியையுடைய நெடிய வேற் படையையும், கோழி (சேவல்) வரைந்த கொடியையும் உடைய முருகக் கடவுள் பாதுகாத்து அருளுதலால் இந்த உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் இன்ப மயமாகிய நாள்களை உடைத்தாய் உள்ளன" என்பதாகும்.

அதாவது உலக உயிர்களுக்கு இடையூறில்லை என்பதாகும். இனி இதனுடைய சிறப்பு நிலைகளை நாம் காண்போம்.

'தாமரை புரையும் காமர் சேவடி' என்று சொல்லி விட்ட காரணத்தினால் – தாமரை மலர் மலர்கின்ற ஒரு தடாகத்தைச் சொல்லி, அந்தத் தடாகம் மருத நிலத்திற்குரியது என்றவொரு குறிப்பை அவர் புலப்படுத்துகிறார்.

மருத நிலப்பகுதிக்குரிய ஒழுக்கமாக தொல்காப்பியனார் குறிப்பிடுவது ஊடல், 'ஊடல் நிமித்தம்' என்ற இரண்டுமாகும்.

ஊடலும், ஊடல் நிமித்தமும் என்று அவர் குறிப்பிடுவார். இரண்டாவதாக நாம் பார்ப்பது பவழத்து அன்ன மேனி. பவழம் கடலில் கிடைப்பது. செம்பவழம் நெய்தல் நிலத்தில் கிடைக்கின்ற காரணத்தினால் நெய்தல் திணைக்குரிய உரிப்பொருளாகிய 'பிரிதல்' என்கிற ஒழுக்கம் அங்கே சுட்டப்படுகிறது.

அந்த நிலையை நாம் சற்றே கடந்து அடுத்த தொடருக்குப் போகின்ற போது – 'திகழ்ஒளி குன்றி ஏய்க்கும் உடுக்கை' என்று குன்றிமணி கிடைக்கின்ற 'முல்லை' நிலம் – அதாவது காடும், காடு சார்ந்த இடத்தையும் குறிப்பாகப் புலப்படுத்துகிறார் பெருந்தேவனார் என்பது பெறப்படுகிறது.

நான்காவதாக வருவதுதான் 'குறிஞ்சி' நிலம். அந்தக் குறிஞ்சி நிலத்தை, கிரவுஞ்ச மலையைக் காட்டி, அந்தக் கிரவுஞ்ச மலையையே முருகனுடைய திருவேல் பிளக்கின்றது என்ற ஒரு குறிப்பையும் அங்கே காட்டுகின்றார்.

ஆக – முதலில் 'மருத' நிலத்தைச் சொல்லி, அதனையடுத்து 'நெய்தல்' நிலத்தைச் சொல்லி, மூன்றாவதாக 'முல்லை' நிலத்தைச் சொல்லி, நான்காவதாக 'குறிஞ்சி' நிலத்தைக் குறிப்பிடுகின்றார். 'நானிலம்' என்று தமிழகத்தை வழங்குவது பழைய வழக்கு.

இந்த நானிலத்தை மருதத்திலே தொடங்கி குறிஞ்சியிலே முடிக்கின்றார். இதற்கு ஒரு தனிச் சிறப்பு இருக்கின்றது.

அது – திருக்குறளின் இறுதிக்குறள்,

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்"

என்பதாகும்.

ஆக, ஆயிரத்து முந்நூற்று முப்பதாவது குறளிலே ஓர் அருமையான வாழ்க்கை நெறியினை, திருவள்ளுவர் பெருமான் உணர்த்தியிருக்கிறார்.

தம்முடைய இறுதிக் குறளிலே இப்படி உணர்த்தியிருப்பது. மக்கள், வாழ்க்கையினுடைய தத்துவத்தை உணர வேண்டும் என்பது தான். காதலர் இருவர், அல்லது கணவன் – மனைவி சிறிது ஊட வேண்டும். சிறிது கோபப்பட்டுப் பிணக்கு ஏற்பட வேண்டும். ஆனால் இந்தச் சிறு ஊடல் பெரும் கூடலிலே முடியவேண்டும் என்பது அவருடைய கருத்து. ஊடிக்கொண்டேயும் இருக்கக்கூடாது; ஊடாமலும் இருக்கக் கூடாது. சிறு சிறு ஊடல் தோன்றினாலும், அது முடிவில் கூடலிலே சென்று சேர வேண்டும் என்கிற ஒரு கருத்துதான் வாழ்க்கைத் தத்துவம்.

கணவன் – மனைவிக்குள்ளே சிறு சிறு பிணக்கு வரலாம். அந்தச் சிறு சிறு பிணக்கு வந்தால் தான் அது பின்னாலே நடைபெறுகின்ற கூடலுக்குத் துணையாக இருக்கும். மகிழ்விக்கும் என்ற கருத்தை அங்கே புலப்படுத்துகின்றார்.

ஊடல் இல்லாமல் இருந்தாலும் அது வாழ்க்கையன்று; ஊடல் மிகுந்து விட்டாலும் அது வாழ்க்கையின் எல்லைக்கே போய்விடும். எனவே சிறு சிறு ஊடல்கள் காதலர்களுடைய இன்பத்தை அதிகமாக்கும், பின்னாலே அது கூடலிலே முடியுமானால் – என்ற ஒரு விழுமிய கருத்தை – சிறந்த ஒரு வாழ்க்கைத் தத்துவத்தைத் – திருவள்ளுவர் பெருமான் குறிப்பிட்டிருக்கின்றார்.

இங்கே பாரதம் பாடிய பெருந்தேவனாரும் குறுந்தொகைக்கு எழுதியிருக்கிற இந்தக் காப்புச் செய்யுளில் முதன் முதலிலே மருத நிலத்தைச் சொல்லி, இறுதியில் குறிஞ்சி நிலத்தைச் சொல்வதற்குக் காரணம் ஊடலில் தோன்றி அது கூடலிலே முடிகிறது என்பதாகும்.

இதற்கும் மேலே இப்பாடலில் அமைந்திருக்கின்ற நுண் பொருள்களை நாம் காணுதல் வேண்டும்.

'தாமரை புரையும் காமர் சேவடி' என்று சொல்லியதனாலே ஒரு மங்கலச் சொல்லை முதலிலே வைத்து, தம்முடைய பாடலைத் தொடங்கியிருக்கிற பாரதம் பாடிய பெருந் தேவனாருடைய தமிழ் நுட்பம், தமிழ்ப் பண்பாட்டுச் சிறப்பை நாம் காண முடிகிறது.

அதற்குப் பிறகு 'பவழத்து அன்னமேனி' என்று குறிப்பிடுகின்ற போது திரு முருகப்பெருமானுடைய செக்கச் சிவந்த திருமேனி அழகிலே நாம் ஈடுபட்டு நின்று விடுகிறோம்.

மூன்றாவது அவரது உடை செக்கச் சிவந்து குன்றிமணி போல் இருக்கிறது என்ற காரணத்தால், அந்த ஆடையினுடைய அழகிலே, அதுவும் பட்டொளி வீசிப் பறக்கின்ற அந்த ஆடையினுடைய அழகிலே, நாம் தோய்ந்துவிடுகிறோம்.

இறுதியில் குறிப்பிடுகின்ற அந்தக் குறிஞ்சியின் சிறப்பு, தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். ஏனென்றால் கிர ஞ்ச மலையை அப்படியே பிளந்து – சூரபத்மனை அழித் கந்தபுராணக் கதை நமக்கு நினைவிலே வருகின்ற வகையிலே – 'குன்றின் நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்' என்று குறிப்பிடுகின்றார்.

இந்த வேலைக் குறிப்பிடுகின்றபோது அவர் காட்டுகின்ற அடைச் சொற்களை நாம் காண வேண்டும். 'வேல் – நெடுவேல் – சுடர் நெடுவேல் – அஞ்சுடர் நெடுவேல்' என்று அந்த வேலுக்குப் பல சிறப்புகளை அவர் காட்டுகின்றார்; மேன்மேலும் சிறப்புகளைக் கூட்டுகின்றார்.

அழகான வேல், நீண்ட வேல், கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேல் என்கிற சிறப்பையெல்லாம் நாம் பார்க்கின்ற போது முருகனுடைய வேலின் சிறப்பு நமக்கு விளங்குகின்றது.

மேலும், இந்தத் திருவேலின் சிறப்பைப் பல்வேறு இலக்கியங்கள் பாங்காகப் பகர்ந்திருக்கின்றன. திருமுருகாற்றுப் படை தொடங்கி, பின்னாலே கந்த புராணம் வரை நாம் வருகிற போது, முருகனுடைய திருக்கைவேல் சிறப்பு நமக்குத் தெரிகிறது. ஆக முருகனுடைய திருக்கை வேல் நமக்குத் துணை நின்றால் எப்படிப்பட்ட இடையூறுகளும் அகன்றுவிடும் என்கிற வகையிலே ஓர் அழகான பிற்காலத்துப் பாடலும் நமக்குத் தெரியவருகிறது.

நக்கீரர் உரைத்த திருமுருகாற்றுப்படை இறுதியிலே இவ்வாறு முடிகிறது.

'பழமுதிர் சோலை மலை கிழவோனே'

ஆக – குறிஞ்சி நிலத்திற்குத் தலைவன் முருகன் என்பது இதனாலும் பெறப்படுகிறது. 'குறிஞ்சிக் கிழவன்' என்றும் நக்கீரர் திருமுருகாற்றுப் படையில் குறிப்பிடுகின்றார்.

நாம் ஆழ்ந்து நோக்கினால் மற்றொரு சிறப்பினையும் இங்குக் காண முடியும். முதலிலே 'தாமரை புரையும் காமர் சேவடி' என்று சொன்ன காரணத்தினாலே முருகப் பெருமானுடைய அழகு, இளமை முதலியன நன்றாகப் புலப்படும்.

செந்தாமரை 'தளதள' வென்று இருப்பது போல, அந்தத் திருவடித் தாமரைகள் புது மலர்ச்சியோடு பொலிகின்றன என்கிற கருத்தை முதல் தொடர் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. அதுமட்டுமன்று – முருகப் பெருமான் வீரமுள்ளவன் என்பதைப் புலப்படுத்துவதற்காக, 'குன்றின் நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்' என்ற தொடர் விளக்குகிறது.

ஆக – உலக உயிர்களுக்குத் துன்பம் தந்து வந்த சூரபத்மன், முருகனுடைய திருக்கை வேலால் அழிக்கப்படுகின்றான் என்ற சிறப்பைக் காட்டுகின்ற காரணத்தினாலே முருகனுடைய வீரம் அங்கே விளங்க உரைக்கப்படுகின்றது.

இறுதியில் 'ஏம வைகல் எய்தின்றால் உலகே' என்ற தொடர் கொண்டு நாம் பார்க்கின்ற போது அவனுடைய, கொடைப் பெருமை – இந்த உலகத்தைக் காப்பாற்றுகின்ற பெருமை – இந்த உலகத்தை அருளுகின்ற பாங்கு நன்கு விளங்குகின்றது.

இந்த வகையில் ஐந்திணை ஒழுக்கத்தை அழகுற அமைத்திருக்கிற அந்தப் பாங்கிலும் குறிஞ்சி நிலக் கடவுளாக விளங்குகின்ற முருகப் பெருமானின் அழகு, இளமை, வீரம், காப்பு முதலிய பண்புகளைச் சொல்லுகின்ற பாங்கிலும் இந்தப் பாட தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

அதனாலேயே இந்தப் பாடல் ஒரு மிகச்சிறந்த பாடல். தமிழ் க்கியத்திலே இடம் பெற்றிருக்கின்ற இந்தப் பாடல் எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுளாக யாப்பருங்கலக் காரிகையால் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது என்பதனாலும் இந்தப் பாடலின் ஒரு தனிச்சிறப்பு விளங்குகிறது.

மேலும் 'நல்ல குறுந்தொகை' என்று பாராட்டப் பெற்றிருக்கின்ற அகப்பொருள் நூலுக்குக் காப்புச் செய்யுளாக வந்திருக்கின்ற இந்தப் பெருந்தேவனாரின் பாட்டு நம்முடைய மனத்தை மகிழ்விப்பதோடு, மனத்தூய்மையைச் செய்வதோடு, நமக்கு முருகன் பாதுகாப்பு அளிப்பான் என்கிற பெரும் செய்தியினையும் குறிப்பிடுகின்றது என்பதையும் நாம் காணுகின்ற போது, நம் முடைய முன்னோர் பெற்ற இலக்கியச் சிறப்பை நாம் துய்த்து மகிழத் தோன்றுகிறது. ●

# குன்றக்குடி ஆதீனம்
# தவத்திரு பொன்னம்பல அடிகளார்

## 'எழுத்துச் செம்மல்'



உலகம் கண்டுள்ள சமயங்களில், மிகு பழைமை கொண்டது சைவ சமயம். சங்க இலக்கியங்களின் சான்றாதாரங்களை, புதைபொருள் ஆராய்ச்சி முடிவுகளை அடிப்படைகளாகக் கொண்டு மதிப்பிட்ட ஆய்வாளர்கள், சைவம் ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதெனக் கருதுகின்றனர். நிலவுலகில் கடவுட் கொள்கை தோன்றி நிலவுவதற்கு வெகு காலத்திற்கு முன்னரே, தமிழ் நாட்டில் சைவம் நிலை பெற்றிருந்ததாகக் கொள்ளப் பெறுகின்றது; சொல்லப் படுகின்றது!

சிவநெறி செழுமையாக வளர்ந்திருந்த தமிழ்நாட்டில், 'களப்பிரர்' என்னும் ஒரு கூட்டத்தார் உட்புகுந்தனர். தமிழரல்லாத அக்கூட்டத்தார் சமண சமயத்தைச் சார்ந்தவர்கள். அதன் பின்னே, தமிழ் நாட்டின் வட பகுதியில் தமிழரல்லாத பல்லவர் ஆட்சி உருவாகியது. பல்லவர் ஆட்சியில் வடமொழி, மிக்க செல்வாக்குப் பெற்றது. சமயத் துறையில் சமணமும், ஆட்சி முறையில் வட மொழியும் மேலோங்கிய நிலையில், செந்தமிழும் - சிவநெறியும் நலிவடைந்து, தமிழ் வாழ்வு சீர்குலைந்தது.

பல்லவர் ஆட்சியில் பௌத்தத் துறவிகளும், சமணத் துறவிகளும் மடங்களையும், பள்ளிகளையும் உருவாக்கித் தத்தமது சமயக் கருத்துகளைப் பரப்பத் தொடங்கினர். சிவநெறிக்கு மக்களின் ஆதரவு நாளும் குன்றி வருவதை உணர்ந்த சைவ சமயச் சான்றோர், ஞான நிலையங்களாகத் திருமடங்களை நிறுவி, மக்களின் அறிவூட்டத்திற்குக் கல்வியும், உடல் ஊட்டத்திற்கு உணவும், மருத்துவமும் அளித்தனர். என்றாலும் பழைய சிவநெறி நாட்டம் பரவலாக மக்களிடையே இல்லாது போய் விட்டது.

'தேவார மூவர்' எனக் கூறப்பெறும் ஞானச் செல்வர்கள் ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் ஆகிய அருளாளர்கள், கி.பி. ஏழாம் நூற்றாண்டு தொடங்கி, சைவ சமயம் எழுச்சியும், மலர்ச்சியும் பெறுதற்கு, உரிய தொண்டாற்றினர்; சிவநெறியில் அரியதோர் உயர்வு, வடிவாக்கம் பெற அடிக்கல் நாட்டினர். இப் பேரருளாளர்கள் காலத்திற்கு முன்னரே, சைவத் திருமடங்கள் தமிழகத்தில் நிலவியிருந்தன; எனினும் தேவார காலத்திற்குப் பின்னர் அமைந்த பதினெட்டுத் திருமடங்களின் தலைமைப் பொறுப்பினைத் தமிழர் கைக்கொண்டதால், செந்தமிழும் சிவநெறியும் மீண்டும் ஒளிபெறத் தொடங்கின.

'மடம்' என்ற சொல் - துறவு நெறியுடைய ஞானாசிரியர்களும் - சீடர்களும் ஆகிய சான்றோர் இணைந்து வாழும் இடம் எனக் கொள்ளப் பெற்றது. 'ஆதீனம்' என்ற சொல்லால் சில திருமடங்கள் அழைக்கப் பெற்றன. 'அதினம்' என்ற வட சொல்லுக்கு உரிமை என்பது பொருள். சிவ ஞானோபதேசத்தை வழிவழியாக உரிமையோடு போற்றி வளர்த்த காரணத்தால் திரு மடங்கள், சைவ ஆதீனங்கள் என அழைக்கப்பெற்றன.

புகழார்ந்த சைவ ஆதீனங்கள் பதினெட்டில், குன்றக் குடியிலுள்ள திருவண்ணாமலை ஆதீனம், ஞான முனிவரும், அருட் சித்தருமாகிய திருவருள்திரு தெய்வ சிகாமணி தேசிக சுவாமிகளால் 680 ஆண்டுகளுக்கு முன், திருவண்ணாமலைத் திருத்தலத்தில் நிறுவப் பெற்றது. வீரவல்லாள தேவன், திருவண்ணாமலையைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி செய்தபோது, சுவாமிகள், ஞானச் செல்வராக விளங்கி அருளாற்றல் கொண்டு பல அற்புதங்களை நிகழ்த்தி உள்ளார். ஞான முனிவர் தெய்வசிகாமணி தேசிக சுவாமிகளுக்குப் பின்னர், வழிவழியாக ஆதீன அருளாட்சி ஏற்று வந்த குருமூர்த்திகளில், பதினான்காவது பட்டம் நாகலிங்க சுவாமிகள், இராமநாதபுரம் சேதுபதிகளின் வேண்டுதலுக்கு ஏற்ப, ஆதீனத் தலைமை இடத்தைத் 'திருக்கொடுங்குன்றம்' என்னும் பிரான்மலைக்குக் கொண்டுவர நேர்ந்தது. முப்பத்தோராவது பட்டம் மருதநாயக தேசிக சுவாமிகள் 1860 ஆம் ஆண்டு திருவண்ணாமலை ஆதீனத் தலைமைத் திருமடத்தை, முருகப் பெருமான் திருத் தலமாகிய குன்றக்குடியில் அமைத்தார்.

திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடியை மடாலயத் தலைமைப் பதியாகக் கொண்டு அருளாட்சி மேற்கொண்ட பின்னர், வாழையடி வாழையென பதினான்கு சந்நிதானங்கள் வீற்றிருந்து, செந்தமிழையும் சிவநெறியையும் செழுமைபெறச் செய்தனர். ஆதீனத்தின் நாற்பத்து ஐந்தாவது சந்நிதானமாக - திருவருள் தெய்வ சிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் என்ற தவத்திரு அடிகளார் எழுந்தருளினார்.

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன வரலாற்றில், தவத்திரு அடிகளார், ஆதீன அருளாட்சி மேற்கொண்டிருந்த நாற்பத்து மூன்று ஆண்டுகள், (1952 முதல் 1995 வரை) வைரமணி வார்த்தைகளால் வடிக்கத் தக்கவை! சின்னஞ் சிறிய குன்றக்குடிக் கிராமத்திற்குப் பென்னம் பெரிய வரலாற்றுச் சிறப்பைப் பெற்றுத் தந்தவர் பெருமான் அடிகளார் ஆவார். உழைப்பே தவம், உண்மைச் சைவ நெறியே சமயம்; உள்ளார்ந்த மனித நேயமே சைவம், சமுதாயத் தொண்டே சமயத்தின் குறிக்கோள், அறிவியல் சார்ந்ததே ஆன்மிகக் கோட்பாடு. உலகப் பார்வை அமையப் பெற்றதே உயர் தமிழ். வேறுபாடற்ற மனக் கனிவே மானுட மேன்மைக்கு அடிப்படை எனப் புதிய புதிய வழித்தடங்களை அமைத்து, மனித குலத்திற்கு வழிகாட்டிய மாமேதை. மாமுனிவர் அடிகளார், ஆதீனச் சம்பிரதாயங்களைக் கடந்து, அருள்நெறியை ஓங்கி ஒளிரச் செய்த உன்னதச் சந்நிதானமாகத் திகழ்ந்து, குன்றக்குடி ஆதீனத்தைக் குன்றின் திருவிளக்காய் உலகறியச் செய்தார். தமிழ் மக்களின் நலத்திற்கும், உலக அமைதிக்கும், உவந்து அர்ப்பணித்து உழைத்து வந்த தமிழ்மா முனிவர் அடிகளார்! தாம் வாழ்ந்த காலத்திலேயே, ஆதீன அறப்பணிகள் தொய்வின்றித் தொடர, தமக்கொரு வாரிசை நியமித்து மகிழ்ந்தார்.

மூன்று தலைமுறைகளாக, குன்றக்குடி ஆதீனத்துடன் தொடர்பு கொண்டிருந்த மதுரைச் சைவ வேளாளர் குடும்பத்தைச் சார்ந்த சங்கர குமாரக் குருக்களின் புதல்வர் 'மணி' என்ற சுப்பிரமணியனும், முத்துலட்சுமியும் ஏற்ற இல்லறப் பயனாய், இரண்டாவது மகனாக 1964 ஆம் ஆண்டு, கணேசன் பிறந்தார். பள்ளியிலும், கல்லூரியிலும் பயின்று கொண்டிருந்த போதே, கணேசன் தவத்திரு அடிகளாருடன், நெஞ்சார்ந்து நெருங்கிப் பழகுவதில் மட்டற்ற மகிழ்ச்சி கொண்டிருந்தார். கல்லூரியின் பி.எஸ்ஸி. பட்டம் பெற்ற கணேசனின் கனிந்த அன்பும், அறிவறிந்த நோக்கும், ஈடுபாட்டுணர்வுடன் பொது நன்மைகளுக்காக ஆர்வத்துடன் ஆட்படுத்திக் கொள்ளும் ஆர்வமும், ஆன்மிக நாட்டமும் அடிகளாரைப் பெரிதும் ஈர்த்து விட்டன. கணேசனைக் காணும்போதெல்லாம், ''என்ன குன்றக் குடிக்கு வருகிறாயா?'' என வாஞ்சையுடன் அடிகளார், முகமலர்ச்சியுடன் வினவுகிறபோதெல்லாம், கணேசன் மௌனமாகப் புன்னகை புரிவார்.

'இது ஓர் அரிய ஆன்மா! நமக்குப் பின்னே, உரிய பணிகளை உவந்தாற்றத் தகுதி படைத்த உயர் ஆன்மா!' என அடிகளார் தீர்மானித்திருக்க வேண்டும். ஒருமுறை 'பேண்ட் சர்ட்'டுடன் தம்மைத் தரிசிக்கக் குன்றக்குடி வந்த கணேசனிடம் உள்ளார்ந்த உடன்பாடு கண்டு மகிழ்ந்த அடிகளார், உடனடியாகச் சமயச் சடங்குகளாற்றித் துவராடை அளித்து, திருவண்ணாமலை ஆதீன மரபு தழைக்க, 'கந்தசாமித் தம்பிரான்' என்னும் திருநாமம் சூட்டி, ஆட்கொண்டருளினார். அடுத்து வந்த மங்கல நாளாகிய 3-7-94 அன்று, ஞானாபிஷேகம் செய்து, தம்பிரான் சுவாமிகளை இளைய சந்நிதானம் ஆக்கி, 'பொன்னம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்' என்னும் திருநாமம் வழங்கி அருளாற்றலைப் பெய்து, தமக்கு வாரிசாகக் கொண்டார் தமிழ்மா முனிவர் அடிகளார்.

அபூர்வ ஞானச் செல்வராகவும், அற்புதப் பேருளாளராகவும், அதிசய மடாதிபதியாகவும் விளங்கிய பெருமான் அடிகளாரின் அருள்ஞானக் கதிரொளி, 15-4-95 இரவு 11.45 மணிக்கு இளைய சந்நிதானம் பொன்னம்பல தேசிக உள்ளக் கோயிலினுள் சென்று நின்று நிலைத்து விட்டது. அந்த அருள்ஞானக் கதிரொளியை சுவாமிகளின் உள்ளக் கமலத்தில் ஏந்திய இளைய சந்நிதானம், 24-4-95 பகல் 12 மணியளவில், ஆதீன மரபுக்கேற்ப, 46ஆவது திருவண்ணாமலை ஆதீனத் திருமடத்து மகா சந்நிதானமாக எழுந்தருளி, ஞானச் செங்கோலோச்சி வரும் மாட்சிமையை, தமிழுலகும், சைவ உலகும் பெற்றுள்ளது. ஆதீன அருளாட்சி மேற்கொண்ட நாளில், தவத்திரு பொன்னம் பல சுவாமிகள், ரத்தினச் சுருக்கமாகத் தமது இதயத்தாகத்தையும், ஏற்றிருக்கும் பொறுப்பின் புனிதத் தன்மையையும், புகழார்ந்த பெருமான் அடிகளார் போட்டு வைத்திருக்கும் பணிகளின் வரைபடத்தையும், கவிதை நடையில் காட்டிய கற்பூரத் திறத்தைக் கூடியிருந்த பெருமக்கள் குதூகலத்துடன் வியந்து போற்றினர்.

''தமிழ்நாட்டுத் திருமடங்களிலேயே அரிய, பெரிய சொத்து உள்ளது குன்றக்குடி ஆதீனம்தான்'' எனச் சுவாமிகள் கூறியபோது, ஆச்சரியத்துடன் நோக்கிய மக்கள், ''எல்லா ஆதீனங்களுக்கும் நிலச் சொத்து உண்டு; பணச் சொத்து உண்டு. குரு மகா சந்நிதானம் இந்த ஆதீனத்திற்குச் சேர்த்து வைத்துள்ள வித்தியாசமான சொத்து 'மக்கள் சொத்து!' அதைத்தான் நாம் அரியதாகவும், பெரியதாகவும் போற்றுகிறோம். அந்தச் சொத்தைப் பாதுகாப்பதை எமது உயிர்க்கடமையாகக் கருதுகிறோம்'' எனக் குறிப்பிட்ட போது, சுவாமிகளின் அறிவார்ந்த ஆழமான மதிப்பீட்டை மகிழ்ந்து வரவேற்றனர்.

தமிழ் மக்களுக்கு தவத்திரு அடிகளார் வழங்கியுள்ள அரிய சொத்துகளான 'அருள்நெறித் திருக்கூட்டம்,' 'திருக்குறள் பேரவை,' 'திருவருள் பேரவை,' ஆகிய அமைப்புகளின் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ள குன்றக்குடி ஆதீன கர்த்தர் பொன்னம்பல சுவாமிகள், தமிழகமெங்கும் மாதத்தில் இருபது நாள்களுக்கு மேல் பயணம் செய்து அறிவார்ந்த அருளுரைகள் ஆற்றி வருகின்றார்.

தவத்திரு அடிகளார், குன்றக்குடி ஆதீனத்திற்கு வித்தியாசமான 'மக்கள் சொத்தைச்' சேர்த்து வைத்துள்ளதாக பொன்னம்பல அடிகளார் குறிப்புணர்த்தியது போலவே, வித்தகமான 'மரபுச் சொத்து' ஒன்றையும் நிறுவிச் சென்றுள்ளாரெனக் கூறி மகிழலாம்தானே? ●






புத்திரர் நயினாரும், பிரம்மானந்தா சுவாமிகளும் வேதாந்த தேசிகரின் சொல்படி திருப்பதி திருமலைக்குச் சென்று திருமலையிலும் பரகால மடத்தை நிறுவினர். சந்நியாசிகள் யாரும் ஒரே இடத்தில் இருக்க மாட்டார்கள்.

அப்போதுதான் மைசூர் மகாராஜா விற்கு மடத்துடன் தொடர்பு ஏற்பட்டது. மைசூர் மகாராஜாவின் மகளுக்கு ஏற்பட்ட ஓர் இக்கட்டான நிலையை நிவர்த்தித் ததால், மைசூர் மகாராஜாவிற்கு மடத்தின் மீது மேலும் மரியாதை யுடன் கலந்த பக்தி ஏற்பட்டது, இப்படி மைசூரில் கி.பி.1378 ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டதுதான், ஸ்ரீ பிரம்மதந்த்ர சுதந்தர பரகால மடம்!

பெரிய பரகால மட சுவாமிகள் யாத்திரை மேற்கொண்ட நேரத்தில் யமுனை நதிக்கரையில் ஔரங்கசீப் அழைப்பு விடுத்தாராம். இவர் போகவில்லை. ஔரங்கசீப்பே நேரில் யமுனை நதிக் கரைக்கு வந்து, ''என்ன வேண்டுமானாலும் கேளுங்கள்'' என்றாராம். பெரிய பரகால மட சுவாமிகளுக்கு வேதாந்த தேசிகரிடம் பக்தி அதிகம். ஔரங்கசீப் மூலமாக நாட்டில் பல இடங்களில் பரகால மடங்களை நிறுவிடச் செய்து தேசிகரின் புகழைப் பரப்பச் செய்தாராம். திப்பு சுல்தானுக்குப் பரகால மடத்திடம் ஈடுபாடு இருந்தது. பரகால மடம் மைசூருக்கு வந்ததற்கு இப்படியும் ஒரு வரலாறு இருக்கிறது.

மைசூர் தர்பாருக்கு பரகால மட சுவாமிகள்தான் ராஜகுரு. இன்றைக்கும் இந்த வழக்கம் தொடர்கிறது. ஆனால் கால மாற்றத்தினால் மைசூர் மகாராஜாவின் ராஜ்ய உரிமை போன பிறகு எல்லாமே மாறி விட்டது.

1951 ஆம் ஆண்டு வரை, மகாராஜா அளித்த 32 முதல் 42 வரை கிராமங்கள் மடத்திற்குச் சொந்தமாக இருந்தன. கிட்டத்தட்ட 2000 பேர் தினமும் விருந்துண்டனர். வேத பாடசாலையில் ஏராளமானவர் பயிற்சி பெற்றனர். வருடத்திற்கு, 6000 குவிண்டால் நெல் வந்தது. ஜாதி பேதமில்லை.

ஆனால் இன்றைக்கு ? எட்டு பேர் மட்டும் மடத்தில் பணியாற்றுகின்றனர். வருமானம் மிக மிகக் குறைந்து விட்டது. இப்படிப்பட்ட நேரத்தில் மடத்தின் 36 ஆவது தலைவராக 6.3.1992 இல் பொறுப்பேற்றவர், ஸ்ரீமத் அபிநவ வாகீஸ பிரம்மேந்திர சுதந்தர பரகால சுவாமிகள், மிகச் சிறந்த கல்வியாளர், பக்திமான். மடத்தின்

உலகத்தில் உள்ள ஜீவராசிகளைப் படைக்கிற பொறுப்பை பிரம்மதேவனிடம் ஒப்படைத்தார், பகவான் ஸ்ரீமந் நாராயணன். வேதங்கள் அனைத்தையும் பிரம்மனிடம் அளித்தார். அந்த வேதங் களைக் கொண்டு பிரம்மா சிருஷ்டியைத் தொடங்குகிறார். அந்தப் போதில் பிரம்மா தன் படைப்புகளைப் பார்த்து ஆச்சர்யப் பட்டாராம். பிரம்மாவிற்குத் தலைக்கனம் ஏற்பட்டு கர்வம் மிகுந்து விடுகிறது. பிரம்மனுக்குப் பாடம் புகட்ட நினைத்து உருவாக்கப்பட்டவர்தான் ஹயக்கிரீவர். லக்ஷ்மி நாராயணரின், ஹயக்கிரீவர் அவதாரம் கல்விக்கு அதிபதி; கல்விக் கடவுள். இது ஒருபுறம் இருக்க –

ஸ்ரீ இராமானுஜர் பிரம்ம சூத்திரத்திற்கு விளக்கம் (பாஷ்யம்) எழுதினார். அந்தக் காலத்தின் வழக்கப்படி புதிதாக எதை எழுதினாலும் – காஷ்மீரத்தில் இருக்கும் சரஸ்வதி பீடத்தில் அங்கீகாரம் பெறவேண்டும் என்பது முறை. ஸ்ரீ இராமானுஜர், தாம் எழுதிய பாஷ்யத்தை சரஸ்வதி பீட வித்வான்கள் முன்னிலையில அங்கீகாரத்திற்கு வைத்தார். அப்போது சரஸ்வதி தேவியே ஸ்ரீ இராமானுஜரின் பாஷ்யத்தை அசரீரியாக அங்கீகரித்து 'ஸ்ரீ பாஷ்யம்' என்று பெயர் சூட்டினார். கூடவே சரஸ்வதி தேவி ஆராதனை செய்து வந்த ஹயக்கிரீவர் விக்கிரகத்தை ஸ்ரீ இராமானுஜரிடம் கொடுத்தார். அந்த ஹயக்கிரீவர் விக்கிரகத்தை ஸ்ரீ இராமானுஜரைத் தொடர்ந்து மூன்று தலைமுறையினர் வழிவழியாக ஆராதனை செய்து வந்த நேரத்தில் வேதாந்த தேசிகர் ஹயக்கிரீவர் விக்கிரகத்திற்குத் தன் னுடைய ஆராதனையைத் தொடர்ந்தார்.

வேதாந்த தேசிகருடைய சிஷ்யர் பிரம்மானந்தா சுவாமி. வேதாந்த தேசிகரால் தொடங்கப்பட்ட மடம்தான், ஸ்ரீபிரம்மதந்த்ர சுதந்தர பரகால மடம்! வேதாந்த தேசிகருடன் இருந்த பிரம்மானந்தா சுவாமிதான் இந்த மடத்திற்கு மூல புருஷர். அவர் காஞ்சி புரத்தில் இருந்தார். வேதாந்த தேசிகரின்

முன்னேற்றத்திற்கு அயராமல் உழைப்பவர். முகத்தில் அருள் ஒளி வீசுகிறது. அடக்கம் அவரது ஞானத்தைப் புலப்படுத்துகிறது. பிரபல ஓவியர் ஜி.கே. மூர்த்தி அவர்கள் வரைந்துள்ள இவர் திருஉருவ ஓவியத்தை இந்த மலரில் பிரசுரிப்பதில் பெருமையடைகிறோம்.

திருப்பதி திருமலையில் தேவஸ்தான விஸ்தரிப்பிற்காக முன்பு இருந்த பரகால மடத்திற்குச் சொந்தமான இடம், வேறு இடத்திற்கு மாற்றப்பட்டது. மடத்திற்காக தேவஸ்தானம் தனி இடத்தை ஒதுக்கியிருக்கிறது. ஆனால் கட்டடம் இன்னும் முழுமை பெறவில்லை.

அதேபோல் மைசூர் நகரத்தின் மையத்தில் மடத்திற்குச் சொந்தமான இடம் இருக்கிறது. அந்த இடத்தில் ஒரு திருமண மண்டபத்தைக் கட்டி முடித்தால் மடத்திற்கு நிரந்தர வருமானம் கிட்டும். இந்தப் பணியும் பாதியிலே நிற்கிறது.

வேத பாடசாலை தொடங்கி மதத்தை வளர்க்கவும், வேதசாஸ்திரப் பயிற்சியை மாணவர்களுக்கு அளிக்கவும், யோகாசனத்தை விஞ்ஞானப் பூர்வமாக விரிவாக்கவும், சிறந்த பக்தி நூல்களை வெளியிடவும் எனப்பலப்பல திட்டங்கள் இருந்தாலும் அத்தனையும் அந்தரத்தில் மிதக்கின்றன. அதற்காக மடத்தின் வளர்ச்சிக்காக – சரஸ்வதிதேவி அளித்த ஸ்ரீலக்ஷ்மி ஹயக்ரீவர் விக்கிரகத்தை நாள் தவறாமல் பூஜித்து வரும் ஸ்ரீமத் அபிநவ வாகீஸ பிரம்மேந்த்ர சுதந்தர பரகால சுவாமிகள், பொது மக்களிடம் 'SRI BRAHMATANTRA SWATANTRA PARAKALA SWAMY TRUST MYSORE' என்ற பெயரில் நன்கொடைகளை வரவேற்கிறார். மேலும் விவரங்களுக்கு 'Sri Brahmatantrtra Swatantra Parakala Mutt, Krishna Vilasa Agrahar Dewaraja Mohalla, Mysore - 570 024.' என்ற முகவரியில் தொடர்பு கொள்ள வேண்டுகிறார்.



சித்திரங்கள் : ஜி.கே. மூர்த்தி

இறைபணியுடன் பொது நலத்திலும் அக்கறையுடன் செயலாற்றும் பரகால சுவாமிகள், "பகவான், 'யார் என்னிடம் வந்து சரணாகதியாகிறார்களோ அவர்களுக்கு நான் பரிபூரணமாக என்னையே சமர்ப்பிக்கிறேன்' என்றார். பகவான் அருளால்தான் நாம் அனைவரும் நன்றாக இருக்கிறோம். சரணாகதி தத்துவத்தை ஹயக்கிரீவர் மூலமாக அறிகிறோம். அப்படிப்பட்ட ஹயகிரீவர் அருளால் எல்லாரும் நன்றாக நலமும் வளமும் பெற்று சிறப்பாக வாழ வேண்டும் என்று பரிபூரணமாக ஆசீர்வதிக்கிறோம்" என்று அருளாசி வழங்கினார்

**கலைமாமணி விக்கிரமன்**

போட்டோ : யோகா

மலரை அலங்கரிக்கும் மந்த்ராலய மஹா க்ஷேத்திர பீடாதிபதி ஸ்ரீ 1008 சுஷமீந்திர தீர்த்த ஸ்ரீ பாதங்களவரு ஸ்வாமிகள், ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் அருளாட்சி செய்த பீடத்தை அலங்கரிப்பவர். 'மந்த்ராலய மகிமை' – விளக்கக் கட்டுரை மலரின் 89ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ளது.





# மறக்க முடியாத மாபெரும் தலைவர்

இந்திய விடுதலைப் போராட்டப் பெருந்தலைவர் சத்தியமூர்த்தி அவர்களுக்கும், மக்கள் தலைவர் காமராஜ் அவர்களுக்கும் இடையே குரு-சீடர் என்ற வகையில் தொடர்பு அமைந்திருந்தது என்று சிலரும், தலைவர்-தொண்டர் என்ற அளவில் நெருக்கம் காணப்பட்டது என்று வேறு சிலரும், குறிப்பிட்டிருக்கிறார்கள்.

உண்மையில், அவர்கள் இருவரும் எத்தகைய உணர்வுடன் ஒருவரோடு ஒருவர் இணைந்திருந்தார்கள்?

சத்தியமூர்த்தி தமிழ்நாட்டுக்கு வழங்கிய பரிசு காமராஜ்.

அவர்கள் இருவரும் விடுதலை இயக்கமான காங்கிரஸ் மகாசபையில் இயங்கினார்கள். சென்னை திருவல்லிக்கேணி தேரடித் தெருவில் சத்தியமூர்த்தி வாழ்ந்த காலத்தில், காமராஜ் அவரைச் சந்திப்பதற்காக அங்கு அடிக்கடி செல்வார். அரசியல் தொடர்பான எல்லா விஷயங்கள் பற்றியும் அவர்கள் கலந்து பேசுவார்கள்

அரசியல் வாழ்க்கைக்குரிய ஒரு சீரிய தலைவராகக் காமராஜ் சத்திய மூர்த்தியின் அன்பான அரவணைப் பிலும், ஆதரவிலும் உருவானார்.

சென்னையில் காங்கிரஸ் மகாசபையின் பொன்விழா, அகில இந்திய சுதேசிக் கண்காட்சிக் கலை விழா ஆகியவை நடந்தபோது சத்தியமூர்த்திக்கு உறுதுணையாகச் செயல்பட்டவர் காமராஜ்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் தலைவராகச் சத்தியமூர்த்தி இருந்தபோது, அதன் பொதுச் செயலாளராகக் காமராஜ் பணிபுரிந்தார். மத்திய மாகாணத் தேர்தல்களின் போது சத்தியமூர்த்தியும், காமராஜும் தமிழகம் முழுதும் தீவிரமாகச் சுற்றுப்பயணம் செய்து காங்கிரசுக்குப் பெரும் வெற்றி கிடைக்குமாறு செய்தார்கள்.

ஒரு சமயம், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தேர்தலில் பூசல் உண்டாயிற்று. அப்போது சத்தியமூர்த்தி காமராஜைத் தலைவர் பதவிக்குப் போட்டியிடச் செய்து வெற்றி கண்டார்

தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகக் காமராஜும், பொதுச் செயலாளராகச் சத்தியமூர்த்தியும் இருந்தார்கள்.

அவர்களுக்கிடையே எத்தகைய மன ஒற்றுமை நிலவியது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

1943-ஆம் ஆண்டில் சத்தியமூர்த்தி மறைந்து விட்டார். காமராஜ் அவர்கள் படிப்படியாக வளர்ந்து அகில இந்தியக் காங்கிரஸ் தலைவராகவே உயர்ந்தார்.

காமராஜ் அவர்களின் பெருமைக்கும், வெற்றிகளுக்கும், சிறப்புக்கும் சத்தியமூர்த்தியே முதற்காரணர்.

எனவே, சத்தியமூர்த்தியைக் காமராஜ் ஒருபோதும் மறக்கவில்லை.

சென்னை மாநகராட்சியின் மூலம் சென்னை மாநகரத்திற்குச் சத்தியமூர்த்தி பல அரிய பணிகளை ஆற்றியிருந்தார்.

அதனை நினைவில் கொண்ட காமராஜ், சென்னை மாநகராட்சி வளாகத்தில் சத்தியமூர்த்தி சிலையை அமைக்க ஏற்பாடு செய்தார்.

அந்தச் சிலையைத் திறந்துவைக்க அன்றைய பிரதமர் ஜவஹர்லால் நேருவைக் காமராஜ் அழைத்தார்.

சென்னை மாநகருக்குக் குடிநீர் வசதிக்காக அமைந்துள்ள பூண்டி நீர்த்தேக்கம் சத்தியமூர்த்தியின் சாதனைகளில் ஒன்று.

அந்த நீர்த்தேக்கத்திற்குச் "சத்தியமூர்த்தி சாகரம்" என்று பெயரிடக் காமராஜ் விரும்பினார்.

சென்னை மாநகராட்சி அவரது விருப்பத்தை முதலில் ஏற்கவில்லை.

பிறகு, காமராஜுக்கு வரவேற்பு அளிக்கச் சென்னை மாநகராட்சி முடிவு செய்தபோது, காமராஜ் அந்த வரவேற்பை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். பின்னர், பூண்டி நீர்த்தேக்கத் திற்குச் "சத்தியமூர்த்தி சாகரம்" என்ற

கே.சி. லட்சுமிநாராயணன்



'மனோகரா' நாடகத்தில் கதாநாயகனாக சத்தியமூர்த்தி.



சத்தியமூர்த்தி கல்லூரி மாணவராக இருந்தபோது எடுத்த படம். தோளில் அங்கவஸ்திரத்துடன் அவர் அமர்ந்திருக்கிறார்.

பெயர் காமராஜின் விருப்பப்படி வைக்கப்பட்டது. அந்த முடிவுக்குப் பிறகுதான் சென்னை மாநகராட்சியின் வரவேற்பைக் காமராஜ் ஏற்றுக் கொண்டார்.

1954 ஆம் ஆண்டில் காமராஜ் அவர்கள் முதலமைச்சராகப் பதவி ஏற்றவுடன் முதல் வேலையாகச் சத்தியமூர்த்தியின இல்லத்திற்குச் சென்று, சத்தியமூர்த்தியின் மனைவியாரின் வாழ்த்துகளைப் பெற்றார் அங்கிருந்த சத்தியமூர்த்தியின் படத்தை அவர் உணர்ச்சியுடன் வணங்கினார்.

1955 ஆம் வருடத்தில் காமராஜின் சீரிய தலைமையில் ஆவடி அகில இந்திய காங்கிரஸ் மாநாடு நடந்தது. அந்த மாநாடு தான் அகில இந்தியத் தலைவராகக் காமராஜ் அவர்களை அடையாளம் காட்டியது.

ஆவடி காங்கிரஸ் மாநாடு நடத்தப்பட்ட இடத்திற்குச் "சத்தியமூர்த்தி நகர்" என்று காமராஜ் பெயர் சூட்டிடச் செய்தார்.

ஆவடி காங்கிரஸ் மாநாட்டுப் பந்தலின் நுழைவு வாயிலில் சத்தியமூர்த்தியின் சிலையையும் காமராஜ் நிறுவினார்.

சத்தியமூர்த்தியின் அன்புப் புதல்வி லட்சுமி கிருஷ்ணமூர்த்தியை தமிழ்நாடு மேலவை உறுப்பினராகக் காமராஜ் நியமித்தார்.

சென்னை இராயப்பேட்டை பகுதியில் ஜெனரல் பேட்டர்ஸ் சாலையில் தமிழ்நாடு காங்கிரஸ் அறக்கட்டளையின் ஒரு பெரிய கட்டடம் 1961 ஆம் ஆண்டு இறுதியில் கட்டப்பட்டது.

காமராஜ் அவர்கள் அந்தக் கட்டடத்திற்குச் "சத்தியமூர்த்தி பவன்" என்று பெயரிடுமாறு செய்தார்.

இராசிபுரம் கே.செங்கோடக் கவுண்டர் என்பவர் உறுதியான



1937 ஆம் ஆண்டில் அன்றைய சென்னை மாகாணத்தில் ராஜாஜி தலைமையில் முதன்முறையாக காங்கிரஸ் மந்திரி சபை அமைந்ததும், ஹரிஜனங்களுக்கு ஆலயப்பிரவேச உரிமையை வழங்கும் சட்டம் அமல் செய்யப்பட்டது. அதைத்தொடர்ந்து மதுரை மீனாட்சி கோயிலுக்குத் தலைவர் காமராஜ் அவர்களைச் சத்தியமூர்த்தி அழைத்துச் சென்றார். சட்டையில்லாமல் இருப்பவர் சத்தியமூர்த்தி. அவருக்கு வலப்புறத்தில் காமராஜ், அன்றைய மாகாண அமைச்சர் முனுசாமிப்பிள்ளை ஆகியோர் உள்ளனர். ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர் முனுசாமிப்பிள்ளை.






சென்னையில் ஓர் ஊழியர் கூட்டத்தில், வலக் கோடியில் ஜவஹர்லால் நேருவும், இடக்கோடியில் சத்தியமூர்த்தியும் உள்ளனர்.

தேசியவாதி. அவரது புதல்வரான எம்.எஸ்.முத்துசாமி, காமராஜ் அவர்கள் காலத்தில் தமிழ்நாடு மாணவர் காங்கிரஸ் தலைவராக இருந்து பணியாற்றியவர்.

காமராஜ் அவர்களின் வாழ்க்கை, பணிகள் பற்றிய ஓர் ஆய்வை முத்துசாமி பின்னர் மேற்கொண்டார்.

தார்வார் கர்நாடகப் பல்கலைக் கழகத்தில் முத்துசாமியின் அந்த ஆய்வேடு சமர்ப்பிக்கப்பட்டது. அந்தப் பல்கலைக்கழகம், முத்துசாமியின் அந்த ஆய்வுக்காக அவருக்கு "டாக்டர்" பட்டம் வழங்கியிருந்தது.

அந்த ஆய்வு, ஆங்கிலத்திலும், தமிழிலும் நூல்களாக வெளி வந்திருக்கிறது.

சத்தியமூர்த்தி-காமராஜ் உறவு குறித்து அந்த ஆய்வேட்டில் முத்துசாமி ஓரளவு சுட்டிக்காட்டியிருக்கிறார்.

"சத்தியமூர்த்தியின் ஆதரவில் வளர்ந்தவர் காமராஜ். சத்தியமூர்த்தி இவரை அரசியல் வாழ்க்கைக்கு உரிய முன் எச்சரிக்கையோடும் அன்போடும் பேணி உருவாக்கினார்" என்று அந்த ஆய்வேடு குறிப்பிடுகிறது.

"சத்தியமூர்த்தி காமராஜை ஒரு பகுத்தறிவுள்ள தலைவராக உருவாக்கி வழங்கினார். சத்தியமூர்த்தி இல்லா திருந்தால், தலைமைப்பண்புக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்த காமராஜை நாம் பார்த்திருக்க முடியாது" என்றும் முத்துசாமி அந்த ஆய்வேட்டில் கூறியிருக்கிறார்.

சத்தியமூர்த்தி மீது காமராஜுக்கு உள்ளார்ந்த - ஆழமான பக்தி இருந்தது என்பதும், அதைக் குறுகிய அரசியல் நோக்கத்துடன் காமராஜ் ஒருபோதும் விளம்பரப்படுத்திக் கொள்ளவில்லை என்பதும், எனினும் தமக்குக் கிடைத்த



சென்னையில் கதர்க் கண்காட்சியை எம்.விசுவேசுவரய்யா திறந்து வைத்தபோது எடுத்த படம். அவருக்கு வலப்புறத்தில் சத்தியமூர்த்தி நிற்கிறார்.

ஒவ்வொரு வாய்ப்பின்போதும் அந்த பக்தியைக் காமராஜ் மவுனமாக வெளிப்படுத்தினார் என்பதும் உண்மைகளாகும்.

மார்க் அன்டோனி, எட்மண்ட் பர்க் முதலியவர்களைப் போல உலகின் மிகச் சிறந்த பேச்சாளர்களில் சத்தியமூர்த்தி குறிப்பிடத்தக்க ஒருவர்.

"நாவலர்" என்றே அவர் புகழாரம் சூட்டப்பெற்றார்.

இங்கிலாந்து சென்று ஆங்கிலத்தில் சத்தியமூர்த்தி நிகழ்த்திய அரிய சொற்பொழிவுகள் ஆங்கிலேயர்களையே பெரும் வியப்படையச்செய்தன.

ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்ட எங்களால் இவ்வளவு அற்புதமாக ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்று அவர்கள் மயங்கினார்கள்.

பிரிட்டிஷ் எம்.பிக்கள் பலரும் ஒன்று சேர்ந்து, இங்கிலாந்தில் சத்தியமூர்த்தியின் பேச்சாற்றலைப் பாராட்ட ஒரு நிகழ்ச்சியை நடத்தி, அதில் அவருக்குத் தங்கச் சங்கிலி ஒன்றையும் அளித்து மகிழ்ந்தார்கள்.

தேர்தல் பிரசாரத்திலும் சத்தியமூர்த்திக்கு இணையானவர்கள் எவரும் இருந்ததில்லை. "தேர்தல் மன்னர்" என்று பலரும் அவரை வியந்து பாராட்டினார்கள்.

மத்திய, மாநில சட்டமன்றங்களில் அவரது உரைகள் வரலாறு படைத்தன.

சட்டமன்றத்தில் அமைச்சர்களிடம் கேள்விகளையும், துணைக்கேள்விகளையும் எழுப்புவதில் அவர் நிகரற்றவராக விளங்கினார்.

குறிப்பாகத் துணைக்கேள்விகளை எழுப்பி, ஆளும் கட்சியினரையும், அரசினரையும் அவர் நடுங்க வைப்பார். எதிரிகளை மடக்கிப் பேசுவதிலும் அவர் ஈடிணையற்றவர்.

"காங்கிரஸ் சார்பில் சத்தியமூர்த்தி ஒருவர் மட்டும் சட்டமன்றத்திற்குச் சென்றால் போதுமானது" என்று ஒருமுறை அண்ணல் காந்தியடிகள் சத்தியமூர்த்தியின் பேச்சாற்றலில் மிகுந்த நம்பிக்கையுடன் கூறினார்.

1928 ஆம் ஆண்டில், அப்போது இந்தியாவின் ஒரு மாகாணமாக இருந்த பர்மாவில் (இப்போது அது மியான்மர் என்று அழைக்கப்படும் ஒரு தனி நாடு) மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.

பர்மாவின் எல்லைகளுக்குள் பாரதியாரின் பாடல்கள் எந்த வடிவிலும் நுழையக்கூடாது என்பது தடை.

அதே ஆண்டு செப்டம்பர் மாதம் 11ஆம் தேதியன்று அன்றைய சென்னை மாகாண ஆளுநர் தமது மாகாணத்தினுள் பாரதியாரின் நூல்களுக்கும், பாடல்களுக்கும் தடை விதித்தார்.

பாரதியாரின் நூல்கள் பறிமுதல் செய்யப்பட்டன. சென்னை திருவல்லிக்கேணியில் பாரதி ஆசிரமம் சோதனை செய்யப்பட்டு, அங்கிருந்த பாரதியாரின் நூல்கள் யாவும் கைப்பற்றப்பட்டன.

பாரதியாரின் நூல்களை அச்சிட்ட சென்னை ஹிந்திப்பிரசார சபையின் அச்சகம் சோதனைக்கு உள்ளாகியது. பாரதியாரின் நூல்களை விற்ற கடைகளையெல்லாம் போலீஸார் அடித்து நொறுக்கினார்கள்.

பாரதியார் பாடல்களுக்குத் தடை விதித்ததைக் கண்டிக்கும் ஓர் ஒத்திவைப்புத் தீர்மானம் அன்றைய சென்னை மேலவையில் வந்தது.

அந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்தவர் சத்தியமூர்த்தி.

பாரதியார் பாடல்களின் சிறப்பை விளக்கியும், அவற்றைத் தடை செய்ததைக் கண்டித்தும் சத்தியமூர்த்தி ஓர் ஈடிணையற்ற உரையை நிகழ்த்தினார்.

பாரதியார் பாடல்களுக்கு விதிக்கப்பட்ட தடை, தேசபக்திக்குப் போடப்பட்ட தடை என்று சத்தியமூர்த்தி முழங்கினார்.

ஆங்கிலேய அரசினரின் அந்தத் தடை விதிப்பு, தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்களுக்கும், தமிழ் இலக்கியத்திற்கும் விடப்பட்ட ஒரு சவால் என்று சத்தியமூர்த்தி குறிப்பிட்டார்.

அந்த உரையின்போது, பாரதியாரின் சில அற்புதமான பாடல்களையும் சத்தியமூர்த்தி பாடினார். "துணிவு இருந்தால், தடையை மீறிப் பாடியதற்காக என்மீது நடவடிக்கை எடுங்கள்" என்றும் அவர் வீரம் கொப்பளிக்கக் கூறினார்.

சத்தியமூர்த்தியின் உரைகள் எத்தகைய ஆற்றல் வாய்ந்தவை என்பதற்கு, அந்த உரை ஓர் எடுத்துக்காட்டு என்று, முன்னாள் மத்திய அமைச்சரும், சுதந்தரப் போராட்ட வீரருமான சி.சுப்பிரமணியம் குறிப்பிட்டிருக்கிறார்.

அப்போது சுப்பிரமணியம் கல்லூரி மாணவராக இருந்தார்.

"சத்தியமூர்த்தியின் அந்த உரையை எல்லாப் பத்திரிகைகளும் மிக விரிவாகப் பிரசுரித்தன. அதுவரையில் பாரதியாரைப் பற்றி அதிக அளவில் அறிந்திராத மாணவர்கள் கூட, சத்தியமூர்த்தியின் அந்த உரையைப் படித்த பிறகு, பாரதியாரை முழுமையாக நன்கு அறிந்து கொண்டார்கள். மாணவர்களிடையே பாரதியாரின் பாடல்கள் மிகவும் பிரபலம் ஆயின" என்று சி.எஸ். எழுதியிருக்கிறார்.

சத்தியமூர்த்தி அவர்கள் பெரும் கலைஞராகவும் திகழ்ந்தார்.

பல தமிழ், ஆங்கில, சம்ஸ்கிருத நாடகங்களில் சத்தியமூர்த்தி நடித்திருக்கிறார்.

அந்தக் காலத்தில் சென்னையில் பம்மல் சம்பந்த முதலியார் அவர்களின் ஆதரவில் சுகுண விலாச சபை என்ற நாடக மன்றம் இயங்கியது. அதில் ஒரு நடிகராக சத்தியமூர்த்தி இருந்தார்.

சத்தியமூர்த்தி ஒரு தைரியமான நடிகர் என்றும், சத்தியமூர்த்தி இயக்குநராக (டைரக்டராக) இருந்து பல நாடகங்களை நடத்தியிருக்கிறார் என்றும் பம்மல் சம்பந்த முதலியார் கூறியிருக்கிறார்.

நாடக மன்றத்தில் நாடகங்களில் நடித்ததன் விளைவாகவே தமிழில் மிகச் சிறந்த சொற்பொழிவாளராகத் தம்மால் மிளிர முடிந்தது என்று சத்தியமூர்த்தியே குறிப்பிட்டிருக்கிறார்.

இசை, நாட்டியம் ஆகியவற்றிலும் சத்தியமூர்த்தி பெரும் ஈடுபாடு கொண்டிருந்தார்.

சென்னை மாநகராட்சி மன்றத்தில் மேயர் சத்தியமூர்த்தி (வலது ஓரத்தில் தலையில் குல்லாவுடன் அமர்ந்திருப்பவர்) உறுப்பினர்கள் கூட்டத்தில் பேசுகிறார்.



திரைப்படத் துறையிலும் அவர் தொடர்பு கொண்டிருந்தார். தென்னிந்திய திரைப்பட வர்த்தகக் கழகத்திற்கு அவர் தலைவராக இருந்திருக்கிறார்.

சென்னையில் முன்பு ஒவ்வோர் ஆண்டும் காங்கிரஸ் கண்காட்சி நடத்தப்படுவது வழக்கம். காங்கிரஸ் கண்காட்சியில் கலைப்பகுதியை நடத்தும் பொறுப்பு ஒவ்வொரு முறையும் சத்தியமூர்த்தி அவர்கள் வசம் ஒப்படைக்கப்படும்.

தமிழிசை வளர வேண்டும் என்று பணி புரிந்தவர்களிலும் சத்தியமூர்த்தி முதன்மையான ஒருவர்.

நாடகம், திரை உலகம் ஆகியவற்றில் சீர்திருத்தம் ஏற்பட வேண்டும் என்று சத்தியமூர்த்தி பெரிதும் வற்புறுத்தினார்

சத்தியமூர்த்தி சிறந்த கலாரசிகர். வாழ்க்கையை நன்றாக ரசித்து அனுபவிக்க வேண்டும் என்பது அவரது கருத்து.

மணம் மிக்க சந்தனத்தை அரைத்து உடலில் பூசிக்கொள்ளுவது. ஊது வத்திகளை ஏற்றிவைத்து அவற்றின் வாசனையை அமைதியாக நுகருவது. அழகிய மலர்களை ரசிப்பது - ஆகியவையெல்லாம் சத்திய மூர்த்திக்கு மிகவும் பிடித்தமானவை.

இயற்கையை அவர் மிகவும் நேசித்தார். இந்த வகையில் அவர் நேருஜியைப் போன்றவர்.

அலைகள் வீசுகின்ற கடல், பசுமையான தோட்டங்கள், ஓங்கி உயர்ந்த மலைகள், மகிழ்ச்சியுடன் அங்கும் இங்கும் ஓடுகின்ற விலங்குகள் - ஆகியனவெல்லாம் சத்தியமூர்த்திக்கு மிகவும் பிடித்தமானவை.

குழந்தைகளிடம் அவருக்குக் கொள்ளை ஆசை.

"நன்றாகச் சாப்பிட வேண்டும்: சுவையான உணவு வகைகளை நிதானமாக அனுபவித்து உண்ண வேண்டும்" என்றும் சத்தியமூர்த்தி கூறுவார்.

சென்னையில் பூக்கடை காவல் நிலையம் அருகில் தீபாவளி கதர் விற்பனையைச் சத்தியமூர்த்தி தொடங்கி வைத்தபோது




"வாழ்க்கையில் அவ்வப்போது துன்பங்கள் ஏற்படும்: கவலைகள் தோன்றும்: இழப்புகள் உண்டாகும். இவற்றைச் சந்திக்கும்போது அழாதீர்கள்: சோர்ந்து போகாதீர்கள். கலைகளில் மனத்தை ஈடுபடுத்துங்கள். இயற்கையின் வனப்பை ரசியுங்கள். என்ன நேர்ந்தாலும், மகிழ்ச்சியுடன் வாழலாம் என்று நம்பிக்கையைக் கைவிடாதீர்கள்" என்று சத்தியமூர்த்தி அடிக்கடி கூறுவார்.

ஒரு வித்தியாசமான மாபெரும் தலைவராக அவர் விளங்கினார்.

* * *

போட்டோக்களை அளித்து உதவியவர்:
சத்தியமூர்த்தியின் புதல்வி
திருமதி. லட்சுமி கிருஷ்ணமூர்த்தி.

௰

பவர்கட்



மின்சாரத்துக்கு பவர்கட் உண்டு சம்சாரத்துக்குக் கிடையாது!




பவர்கட்.. ஒரே புழுக்கம்! தோட்டத்துலே எல்லாரும் சீட்டுக் கச்சேரி போட்டிருக்கோம்.. ஒரு கை குறையுது. நீங்களும் வாங்க சார்!




பொறந்தா ஸ்டெனோவா பொறக்கணும்!.. பாரு பவர் கட்லு நம்ம ஜி.எம் ஸ்டெனோவுக்கு ஊசிறுகிறார்!




கட்பவர் புழுக்கத்துலே இங்கே யாரும் வேலை செய்ய மாட்டாங்களாம்!... ஆபீஸை கொடைக்கானல், ஊட்டிக்கு மாத்தச் சொல்றாங்க, யூனியன்லே! இந்தாங்க நோட்டீஸ்!




பவர்கட் இருட்டுலே பெண் பார்க்க வந்த மாப்ளே ஓடிப் போயிட்டார்!




# பூமத்திய ரேகை

## ஜெயரதன்

எலியட்ஸ் கடற்கரை.

நிதானமான வேகத்துடன் நடந்தார் ரகுநாதன்.

காலைக்காற்று சொர்க்க சுகத்தை மேனியெங்கும் பூசிற்று. கீழ்வானம் ஒளிச் சிதறல்களை ரசித்துக் கொண்டு, சூரியப் பிரசவத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது. கருநீலக்கடல், அமைதியாய் ஒளிக் கிரணை உடலில் வாங்கிக் கரைக்கு அனுப்பிக் கொண்டிருந்தது. கடற்கரையில் ஒரு மண்டபம் — யாரோ ஆங்கிலேயரின் சமாதியாம் — தன்னந்தனியாய் நின்று கடலை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது.

'காலை நேரத்துக் கடற்கரை தான் சொர்க்கம். வேறு சொர்க்கம் அது இதுங்கறதெல்லாம் பொய்' என்று நினைத்துக் கொண்டே நடந்தார் ரகுநாதன்.

எதிரில் வந்தவர்களில் பலர் ரகுநாதனைப் பார்த்துக் காலை வணக்கம் சொல்லிவிட்டுப் போனார்கள். கடற்கரையோரத்து மேடைச் சுவரில் முதியவர்கள் ஏழெட்டு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அன்றாட வாடிக்கை அது. ஐந்தரை மணிக்கு வருவார்கள். ஏழு மணி வரை உட்கார்ந்திருந்துவிட்டு, வெயில் உறைக்கத் தொடங்கியதும் திரும்புவார்கள். அன்றாடம் காலை அந்த ஒரு மணி நேர உரையாடலுக் காகவே, மற்ற இருபத்தி மூன்று மணி நேரமும் வாழ்கிற மாதிரி ஓர் ஆர்வத்துடன் காலையில் கூடுவார்கள்.

'பார்த்தால் பார்த்துக் கொள்ளேன். ஐ டோன்ட் கேர்' என்கிற தினுசில், உடலை ஒட்டிச் 'சிக்' கென்று பனியன் அணிந்து மேனி குலுங்க நடந்து போகிற இளம் பெண்களை ஒருவித ரசனையுடன் பார்ப்பார் ரகுநாதன். இவர்களுக்கு நடப்பதன் தேவையை விட, வேறு ஏதோ ஆர்வம் இருப்பதாக அவருக்குத் தோன்றும்.

புடைவைகள் குறைந்து சல்வார் கமீஸ்கள் மிகுந்துவிட்டிருந்தன.

சமுதாயத்தின் முகம் அடிப்படையிலேயே மாறிக் 'கொண்டு வருவதாக அவருக்குப் பட்டது. மதிப்பீடுகள் மாறி, ஆண் பெண் பாகுபாடுகள் குறைந்து மாறுபட்ட ஒரு சமுதாய அமைப்பு உருவாகிக் கொண்டு வருவதாக அவருக்குத் தோன்றிற்று. உறவுகளின் முரண்பாடு, வாழ்க்கை முறைகளின் மறு பரிசீலிப்பு, புதிய அணுகுமுறை ஆகியவை வாழ்க்கையின் போக்கை, மதிப்பைப் பெருமளவு மாற்றிக் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது.

படித்து வேலைக்குப் போக முயலாத பெண்களே இன்று இல்லை என்று சொல்லலாம். வேலை பார்க்கிற மனைவிதான் வேண்டும் என்று சொல்லாத ஆண்களே இல்லை என்றும் ஆகிவிட்டது. பொதுவாழ்வில் ஆணும் பெண்ணும் இணைந்து பணியாற்றும் போது, தொன்று தொட்டுப் பேணி வரும் மதிப்பீடுகளும் கட்டுப்பாடுகளும் மாறத்தானே வேண்டும்? கதவிடுக்கின் பின் நின்று பதில் சொன்ன பெண்கள், காலத்தின் பழைய சம்பிரதாயங்களையும், சடங்குகளையும் பேணிக் கொண்டிருப்பதில் அர்த்தமென்ன இருக்கிறது? சடங்குகள் அர்த்தமற்றவை. ஒரு காலகட்டத்தில், ஒரு சமுதாய அமைப்பில், தேவைகளுக்கேற்ப உருவாக்கப்பட்டவைதாம் அவை. காலம் மாற மாற, அவையும் மாறித் தானே ஆகவேண்டும்? மாறமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தால், காலவெள்ளம் கரையோரத்தில் ஒதுக்கித் தள்ளிவிட்டுப் போய் விடாதோ? பின்தங்கிப் போய்விட மாட்டோமோ?

வியர்வை பொங்கப் பொங்க நடந்தார் ரகுநாதன்.

காலைச் சூரியனின் கனிவு மறைந்து, கடுமை ஆட்சி செய்யத் தொடங்கிவிட்டது.

கடற்கரையில் நடைபயிலுவோர் கூட்டம் குறைந்து, வெறுமை சூழத் தொடங்கிற்று, அவர் மனத்தைப் போல.

தயங்கித் தயங்கி ரகுநாதன் வீடு திரும்பினார்.

ஆயிற்று. வீட்டுக்குப் போய் என்ன செய்வது?

வீட்டில் அவரும் மனைவியும் தான்.

மனைவியின் உலகம் தனி. அதிகாலையில் எழுந்து குளியலை முடித்துவிட்டு, பூஜை, பாராயணம் என்று உட்கார்ந்தால், எட்டு மணி வரை எழுந்திருக்க மாட்டாள். குளித்த பிறகு அதை இதைத் தொட மாட்டாள்.

பிறகு சமையல். சமையல் செய்யும்போதே சுலோகங்களைச் சொல்வாள். பிறகு சுவாமிக்கு நிவேதனம். ரகுநாதன் குளித்து விட்டு வந்ததும் சாப்பாடு பரிமாறி விட்டுத் தானும் சாப்பிடுவாள். அதன் பிறகு மாதர் சங்கம், நண்பகல் உறக்கம், மாலை கோயிலுக்குப் போவது, உபந்நியாசங்கள் கேட்பது என்று ஓர் இயல்பான வட்டத்திற்குள் சுழலும் வாழ்க்கை. கண்ணுக்குப் புலப்படாத ஓர் ஆதாரத்தைச் சுற்றுகிற வாழ்க்கை. அதிலேயே மகிழ்ச்சியாய் இருந்தாள்.

ரகுநாதன்தான் தவித்துப் போனார்.

பிள்ளைகளுக்குத் திருமணமாகி அமெரிக்காவில் குடித்தனம் நடத்துகிறார்கள். வேலையிலிருந்து ஓய்வு பெற்ற பின்பு என்ன செய்வது என்று தெரியாத நிலை. வேலைக்குப் போய் வந்து கொண்டிருந்தவரை சரியாக இருந்தது. ஓய்வு பெற்ற பின்னர், வீட்டிலிருந்த போதுதான் அலுப்பாய் இருந்தது.

எவ்வளவு நேரம் செய்தித்தாள்களைப் படிப்பது? புத்தகங்களைத் தான் எவ்வளவு நேரம் வாசிப்பது? குளித்துவிட்டுச் சாப்பிட்டதும் சிறிது நேரம் ஏதேனும் புத்தகங்

களைப் படிப்பார். தூக்கம் சில நாள்களில் வருவதுண்டு. சில நாள்களில் அதுவும் வருவதில்லை. நண்பகலெல்லாம் என்ன செய்வது? கொளுத்துகிற வெயிலில் எங்கே வெளியே செல்வது? வெளியே போனாலும்தான் எதை வேடிக்கை பார்ப்பது? வேடிக்கை பார்ப்பதில் தான் என்ன இருக்கிறது?

சிறுவயதில் வேடிக்கை பார்ப்பதில் சொல்ல முடியாத ஆர்வம் அவருக்கு. சைனா பஜார், ரட்டன் பஜார், ஈவினிங் பஜார், பாண்டி பஜார், ஜாம் பஜார் என்று எத்தனை இடங்களில் சுற்றியிருக்கிறார்! ஒவ்வொரு கடையிலும் இருந்த விளம்பர ஜன்னல்களை எவ்வளவு ஆர்வத்துடன் பார்த்திருக்கிறார்! 'ஷோ கேஸ்'களை எவ்வளவு உற்சாக எழுச்சியுடன் பார்த்திருக்கிறார்! கடற்கரையை அலசு அலசு என்று அலசிய விடுமுறை நாள்கள் தாம் எத்தனை? அந்த ஆர்வங்களும் எழுச்சியும் எங்கே போயின? இப்போதெல்லாம் வெளியே செல்வதென்றால், அதனால் ஏதாவது பயன் இருக்குமா என்றல்லவா முதலில் சிந்தனை செல்கிறது?

ஏதாவது கூட்டங்களுக்குச் செல்லலாமென்றால், இன்று பெரும்பாலான கூட்டங்கள் வெறும் வார்த்தைப் பந்தல்களாக ஆகிவிட்டதைக் காண நேர்ந்தது. அநாவசியமாய்ப் புகழுகிறார்கள் அல்லது அர்த்தமில்லாது ஏசுகிறார்கள். ஒரு விஷயத்தில் ஊன்றி, அழுத்தமாய்த் தொலைநோக்குடன் நேர்மையாய்ப் பேசுகிறவர்கள் எங்கே இருக்கிறார்கள்? வெற்று வார்த்தைகளும், சொல் அலங்கார ஜாலங்களும் வயிற்றைப் புரட்டும் புகழுரைகளுமாய்க் கூட்டங்களெல்லாம் சப்தக் கிருமிகளின் சங்கமமாக அல்லவா ஆகிவிட்டன!

நண்பர்களுடன் பேசலாமென்றால் பேச்சில்கூட இப்போதெல்லாம் உயர் ரசனைகள் குறைந்து போய்விட்டதாக அவருக்குத் தோன்றிற்று. ஒருவரோடு பேசினால் ஏதாவது பயன் இருக்குமா என்ற எதிர்பார்ப்போடு பேசுகிறவர்கள் அதிகமாகிவிட்டதாகத் தென்பட்டது. வயதில் குறைந்தவர்கள் இயல்பாய்ப் பேசுவதில்லை. வயதொத்தவர்களில் பெரும்பாலோர் பணத்தைப் பற்றிப் பேசுகிறார்கள்; அல்லது பிற பெண்களைப் பற்றிப் பேசுகிறார்கள். இல்லாவிட்டால் சொந்தப் பிரச்னைச் சுமைகளை இறக்கி வைக்கும் சுமைதாங்கியாய்ப் பயன்படுத்துகிறார்கள். உண்மையான மனித நேயத்துடன் பேசுகிறவர்களைக் காண முடியவில்லை. போலியான சம்பிரதாயங்களைச் செயற்கைச் சடங்கு முகமாய்ப் பேணும் ஆஷாடபூதித் தனத்துடன் பேசுகிறார்கள். பிறர் மது அருந்துவதைக் கண்டித்துப் பேசுகிறவர்கள், தனிமையில் பிறர் செலவில் மது அருந்தும் அவலத்தைப் பார்த்துக் கொதித்துப் போயிருக்கிறார் ரகுநாதன்.

நினைக்க நினைக்க ஆதங்கங்கள் மனத்தில் மண்டின.

ஏதோ வெறுமை சூழ்ந்தாற் போல் இருந்தது.

வீட்டிற்குள் நுழைகையிலேயே, மனைவியின் சுலோகங்கள் காதில் விழுந்தன. அப்படி ஏதாவது இருந்தாலாவது பொழுது போய்விடும். சிறுவயது முதலே, இதுபோன்ற பூஜை புனஸ்காரங்களில் அவரது மனம் ஏனோ லயித்ததில்லை. கோயிலுக்குத் தினம் போவதில்கூட ஆர்வம் இருந்ததில்லை.

"கடவுள் எல்லா இடத்திலும் இருக்கிறார் என்றால், கோயிலுக்குப் போவானேன்? இதெல்லாம் வெற்று வேலை" என்று மனத்திற்குள், கோயில் குளம் என்று போய்க் கொண்டிருப்பவர்களை உதாசீனப் படுத்தியிருக்கிறார்.

"மனசு சுத்தமா இருக்கணும். மனசிலே நல்ல எண்ணம் இருந்தாப் போதும். 'உள்ளத்தில் உள்ளானடி அது நீ உணரவேண்டுமடி'ன்னு பாட்டு எழுதினாப் போதுமா? அதைக் கடைப்பிடிக்க வேண்டாமா? சும்மா கோயில்லே போய் ஊர்வம்பு அளந்தா பக்தின்னு அர்த்தமா? இந்தச் சம்பிரதாய பக்தியிலே எனக்கு நம்பிக்கையில்லை" என்று அடித்துப் பேசுகிற அவருடன், நண்பர்கள் வாதிடவே தயங்குவார்கள்.

"இதனாலே என்னை நாஸ்திகன்னு நினைக்கக்கூட வேண்டாம். உங்களைவிட அதிகமான பக்தி உணர்ச்சி உள்ளவன்தான் நானும். விபூதி, ருத்ராட்சம், கோயில், பிரதட்சிணம், உபந்நியாசம்ங்கற சடங்குகள்தான் பக்தி, ஆஸ்திகம் அப்படின்னா நான் நாஸ்திகனாகவே இருந்துட்டுப் போறேன். அதுலே எனக்கு எந்த வருத்தமும் இல்லை. மதம்ங்கறது ஓர் எஸ்கேப்பிஸமா இருக்கு. அதுலே எனக்கு உடன்பாடில்லை" என்பார்.

அடித்துப் பேசுகிற அவரைச் சுற்றி, பகுத்தறிவுவாதிகளாய்த் தம்மைப் பிரகடனப்படுத்திக் கொள்பவர்கள் சிலர் சூழ்ந்திருப்பார்கள்.

வீட்டில் மனைவி நடத்துகிற பூஜைகளில் அந்நியனைப் போல் பங்கேற்பார். பங்கேற்காவிட்டால் மனைவி வருத்தப்படுவாளே என்கிற பச்சாதாபம்தான் அவர் நடத்தையில் பிரதானமாய்த் தென்படும்.

"எதையும் அறிவுபூர்வமாப் பாரு. அறிவுக்குப் பொருந்துகிற காரணங்களாச் சொல்லு. நான் ஒத்துக்கறேன். இதுதான் வழக்கம். பெரியவர்கள் சொன்னது அப்படி இப்படின்னு எங்கிட்ட வராதே... உன்னோட நம்பிக்கையிலே நான் தலையிடலை. என்னை உன் வழிக்கு இழுக்காதே" என்று கூறிவிட்டு, மிடுக்காய் நடைபயிலும் கணவனைக் கண்ணில் நீர் ததும்பப் பார்த்துக் கொண்டிருப்பாள் சாந்தா.

காலம் இப்படியேதான் போயிற்று.

நல்லவேலை. அடுத்தடுத்துப் பதவி உயர்வு, பெரிய பங்களா, கார், ஏர்கண்டிஷனர் என்று வாழ்க்கை வசந்த ராகம் பாடிற்று. மணி மணியாய்ப் பிள்ளைகள் பிறந்தார்கள். படிப்பில் அசகாய சூரர்களாய் முதல் மதிப்பெண்ணைத் தவிர எதையும் பெறத் தெரியாதவர்களாய் நன்றாகப் படித்துவிட்டு, அயல்நாட்டுக்குப் போனார்கள். தொட்டது துலங்கிய வாழ்க்கை. தொடர்ந்து பிரகாசித்த நாள்கள்.

ஓய்வு பெறுகிற வரை வாழ்க்கை ஓட்டமாய் ஓடிற்று. ஐம்பத்தெட்டு வருஷங்கள், ஐம்பத்தெட்டு மாதங்களாய்ப் பறந்து போயிற்று.

அப்படி ஓட்டமாய் ஓடிய வாழ்க்கை, ஓய்வு பெற்றதும்தான் தேங்கிப் போயிற்று. ஒருநாள் ஒரு மாதமாய் நீண்டது.

என்ன செய்வதென்று தெரியாமல் காலம் சண்டித்தனம் செய்யத் தொடங்கிற்று.



சாப்பிட்டுவிட்டு வெளித் திண்ணையில் ஆடும் நாற்காலியில் அமர்ந்து வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் ரகுநாதன்.

"சரி... நான் வரேன். கோயில்லே சுவாமிகள் வந்து பூஜை பண்றாராம். நான் பாத்துட்டு வரேன். பிளாஸ்கிலே காபி இருக்கு..." என்று சொல்லிக் கொண்டே விரைந்தாள் சாந்தா.

எப்படி இவளால் பூஜை, தீபாராதனை என்று பொழுதைப் போக்க முடிகிறது என்று ஆச்சரியமாக இருந்தது அவருக்கு.

ஆன்மிக எழுச்சி பெறுவதுதான் வாழ்க்கையின் லட்சியம் என்பதை அவரும் ஏற்றுக் கொண்டாலும், அதற்கு இதுபோன்ற செயல்பாடுகள் எப்படிப் போதுமானவையாக இருக்கும் என்பது அவருக்குப் புரியவில்லை. எங்கும் பரந்திருக்கும் பரமாத்மாவின் அணுக்கள் தாம் மற்ற உயிரினங்கள் என்பது புரிந்திருந்தும் ஏன் இப்படிச் சம்பிரதாயங்களில் சிக்கி உழன்று கொண்டிருக்கிறார்கள் என்று வியப்படைந்தார் ரகுநாதன். உண்மையில் உட்கருத்துகள் புரியாமலேயே இவர்கள் வெளிவட்டத்திலேயே சுற்றிச் சுற்றிச் செக்குமாடுகளாய்த் திரிகிறார்களோ என்று தோன்றிற்று. மையக்கருத்தை விட்டுவிட்டு ஓரங்களிலேயே அலைந்து திரிந்து ஓய்ந்து போகிற இவர்கள், வாழ்க்கையில் தன்னைவிட அதிகச் சந்தோஷத்துடன் ஆனந்தமாய் இருப்பது போலத் தோன்றிற்று. தனக்குப் பொழுதே போகாமல் தவிப்பாய் இருக்கிறபோது, இவர்கள் பொழுதே இல்லாமல் இயங்கிக் கொண்டிருப்பது அவருக்கு விசித்திரமாய் இருந்தது.

ஆடும் நாற்காலியில் சாய்ந்து, மெலிதாய்க் காலை உந்தி ஆடத் தொடங்கினார் ரகுநாதன்.

''சின்னக் குழந்தைகளுக்குக் குதிரை மாதிரி, உங்களுக்கு ஆடும் நாற்காலியா?'' என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தார் சதாசிவம்.

"அடடே... சிவம்! வாருமயா... எங்கே ரொம்ப நாளா ஆளையே காணோம்?"

"அதுக்குள்ளே மறந்து போச்சா? வட இந்தியா டூர் போறதாச் சொல்லிட்டுப் போனேனே, நினைவில்லையா? ஜோதிர்லிங்கங்களைத் தரிசனம் செய்துட்டு வந்தேன். அற்புதம்... ஆனந்தம்... உம்மைத்தான் நெனைச்சிண்டேன். இப்படி எதிலேயுமே நம்பிக்கை

யில்லாமெ இருக்கிறேன்னு நிலைச் சிண்டேதான் சுவாமி தரிசனம் செய்தேன்."

கண்களில் உற்சாகம் பளபளக்க, சொற்களில் சந்தோஷம் கொப்பளிக்க சந்தோஷமே கைகால் முளைத்து வந்தது மாதிரி ஆர்வம் குமிழியிடப் பேசிய சதாசிவத்தையே கண் இமைக்காது பார்த்துக் கொண்டிருந்தார் ரகுநாதன்.

சதாசிவம் அவரைவிட ஓரிரு வயது பெரியவராயிருக்கலாம். பிள்ளை, பெண்கள் டில்லியிலும் பம்பாயிலும் இருக்கிறார்கள். மனைவி காலமாகிச் சில வருடங்களாகி விட்டன. தனியாய்ச் சென்னையில் இருக்கிறார். காலையிலிருந்து இரவு படுக்கப் போகும் வரை ஏதாவது பரபரப்பாய்ச் செய்து கொண்டே இருப்பவர். காலத்தை மகிழ்ச்சிகரமாய்ச் செலவிடும் வித்தை தெரிந்தவர்.

'இன்னிக்கு அமாவாசை சமுத்திர ஸ்நானம்' என்பார் ஒருநாள். 'இன்னிக்குப் பௌர்ணமியாச்சே? அம்பாள் கோயில்லே பிரம்மானந்தம்... ஆஹா' என்று உருகிப் போவார் இன்னொருநாள். 'இன்று சதுர்த்தி அய்யா! விநாயகரைத் தரிசனம் பண்ணாமல் தண்ணீர் கூடக் குடிக்க மாட்டேன்' என்று கோயிலுக்கு ஓடுவார். 'சஷ்டியும் அதுவுமா முருகனைத் தரிசனம் பண்ணாமெ வேறெங்கேயும் போகமாட்டேன்... வள்ளி தேவானையோட முருகன் தரிசனம் அற்புதம்...' என்று சொல்லிச் சொல்லி மாய்ந்து போவார். ஒருநாள் 'கிருத்திகை' என்பார்; இன்னொரு நாள் 'பூரம் இன்னிக்கு..' என்பார். 'சோம வாரம் சிவ தரிசனம் முக்தி அய்யா' என்பார். மாதம் முப்பது நாளும் ஏதாவது உற்சாகமாய்ச் சொல்லிக் கொண்டு ஆனந்தமாய் இருப்பார்.

எப்படி இவரால் இப்படி இருக்க முடிகிறது?

"சதாசிவம்.. மெய்யாச சொல்லும். இந்தமாதிரி கோயில், குளம், சதுர்த்தி, பஞ்சமின்னு அலையறீரே? ஏதாவது ஆன்மிக மேம்பாடு உமக்கு ஏற்பட்டிருக்கா? இந்தச் சம்பிரதாயமும் சடங்கும் விலங்கில்லையா? பந்தமில்லையா? உண்மையைச் சொல்லப்போனா, ஒருத்தரோட ஞானத்தேர்ச்சிக்கும் முதிர்ச்சிக்கும் இதெல்லாம் தடையில்லையோ? கால விரயம் கூட. உண்மையைச் சொல்லும்... எப்படி இதையெல்லாம் உம்மாலே சலிக்காமே செய்ய முடியறது? உங்களை நீங்களே ஏமாத்திக்கற மாதிரி தானே? தெளிவுங்கற நிலையைத் தொடாமெ, நழுவி நழுவி ஓடறீங்க நீங்களெல்லாம்?"

நேரடியாகவே கேட்ட ரகுநாதனைக் கூர்மையாகப் பார்த்தார் சதாசிவம்.

"எனக்குப் பதில் சொல்லத் தெரியாது. ஆனா இதுலெல்லாம் ஒரு சுகமும், ஆனந்தமும் இருக்குன்னு அனுபவிச்சாத்தான் தெரியும். விவாதம் கிளப்பித் தெரிஞ்சுக்கற விஷயமே இல்லை இது. சடங்கும் சம்பிரதாயமும் வேணுமா, வேண்டாமான்னு எனக்குத் தெரியலை. ஆனா அதெல்லாம் இல்லாமெ முடியாதுன்னு மட்டும் தெரியும். ஒன்னு செய்யுங்களேன். இன்னிக்குச் சாயங்காலம் கோயிலிலே ஒரு துறவியார் உபந்நியாசம் செய்யப் போறார். அதிலே கேள்வி பதில் பகுதியும் உண்டு. உம்ம கேள்வியை எழுதிக் கொடுத்துடறேன். பதில் சொல்றாரா பார்ப்போம்..." என்று சதாசிவம் கூறியது, ரகுநாதனுக்குச் சரியென்று பட்டது.

அன்று மாலை சதாசிவத்துடன் சேர்ந்து, கோயிலுக்குப் போனார் ரகுநாதன்.

முகத்தில் அலாதிப் பிரகாசமும் சாந்தமும் நிறைந்த அந்தத் துறவியைப் பார்த்ததுமே மனத்தில் ஒரு தெளிவு பிறந்தது ரகுநாதனுக்கு. யாரைப் பார்த்தாலும் புன்முறுவலுடன் தலையசைத்து அழைத்துக் கொண்டிருந்தார் அவர்.

கடைசி வரிசையில் அமர்ந்து கொண்டார் ரகுநாதன். துறவி அவரையே பார்த்துச் சிரிப்பது மாதிரி இருந்தது.

அவர் பேசத் தொடங்கியதும் மூச்சைப் பிடித்துக் கொண்டு கேட்கலானார் ரகுநாதன்.

"சம்பிரதாயங்களும் சடங்குகளும் தேவைதானா? தெய்வத்தை உணர்வதும், தெய்வத்தின் அம்சம் தான் நாம் என்று புரிந்து கொள்வதும் தான் ஜன்மம் எடுத்ததன் நோக்கம். அப்படியிருக்கையில் கோயிலுக்குப் போவதும், பூஜை புனஸ்காரங்கள் செய்வதுமான சடங்குகள் தேவைதானா என்ற சந்தேகம் சிலருக்கு ஏற்படும். அது நியாயமான சந்தேகமே. அது சரி என்றுகூட தான் சொல்வேன். தெய்வத்தை உணரச் சடங்குகள் தேவை இல்லைதான். சம்பிரதாயங்கள் வேண்டாம்தான்..."

துறவி ஒரு கணம் நிறுத்தினார். கூட்டத்தில் சிறிது மௌனம் நிலவிற்று. ரகுநாதன் நிமிர்ந்து உட்கார்ந்து ஆர்வத்துடன் கவனிக்கலானார்.

"நாம் சாப்பிடும் அரிசி இருக்கிறதே, அதைச் சுற்றி உமி மூடியிருக்கிறது. உமியைச் சாப்பிட முடிகிறதா? உமியால் என்ன உபயோகம்? உமியை நீக்கி, அரிசியை மட்டும் சாப்பிடுகிறோம். உமியைத் தூக்கி எறிந்து விடுகிறோம் இல்லையா? உபயோகமே இல்லாத உமி எதற்கு? உமி இல்லாத அரிசியை நிலத்தில் ஊன்றினால் முளைக்குமோ? முளைக்காது. உமியுடன் கூடிய நெல்லை ஊன்றினால்தான் முளைக்கிறது. உமியில்லாத அரிசி விரைவில் கெட்டுவிடும். உமி மூடிய அரிசி - அதுதான் நெல் - நெடுநாள் வரை கெடாமல் இருக்கும். சம்பிரதாயங்களும் சடங்குகளும் உமி மாதிரிதான். தெய்வத்தை உணரும் தத்துவம் தான் அரிசி. சம்பிரதாயங்களால் சடங்குகளால் தத்துவம் காப்பாற்றப்படுகிறது. எனவே தத்துவத்தைக் காப்பாற்றவும் மேலும் பராமரித்து வளர்க்கவும் சடங்குகள் தேவைப் படுகின்றன. சடங்குகள் மூலமாகவே தத்துவத்தை உணர முடியும்; உய்ய முடியும்; உய்விக்க முடியும் . இதை நான் சொல்லவில்லை. பெரிய மகான் கூறியிருக்கிறார். எனவே சந்தேகத்தை விட்டு விட்டுச் சடங்குகளைப் பேணுங்கள். தன்னாலேயே சாந்தி கிட்டும். தத்துவம் புரியும். தண்ணீரில் இறங்கினால்தான் நீந்த முடியும். கரையில் அமர்ந்து விவாதித்து விமர்சிக்கிற விஷயமில்லை இது".

கூட்டம் மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தது.

ரகுநாதன் வெகு நேரம் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தார்.

துறவி அவரையே புன்சிரிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்.

→

## சோகம் ஏன் எனைத் தொடர்கிறது?

**குலோத்துங்கன்**

சோகம் ஏன்எனைத் தொடர்கிறது - வழித்
துணைபோல் என்னொடு வருகிறது.
தாகம் தீர்ந்துளம் மகிழ்கின்றேன் - சிறு
சஞ்சலம் அங்கும் தவழ்கிறது.

வெற்றியின் அலைகளில் மிதந்தாலும் - விரி
விண்ணொடும் மீனொடும் கலந்தாலும்
முற்றும் மலர்ந்த காட்டினிலே - சிறு
முள்ளெனச் சோகம் முகிழ்க்கிறது.

மழலையர் துணைவியர் மகிழ்கின்றார் - அவர்
மடியிலும் தோளிலும் சாய்கின்றார்.
கழனியின் கதிர்வள நிறைவிடையே - சிறு
களைபோல் சோகம் கலக்கிறது.

நெஞ்சம் இழந்ததை நினைக்கிறதோ - அதன்
நிழலெனச் சோகம் தொடர்கிறதோ?
கொஞ்சமும் முகவரி தெரியவிலை - சிறு
குறைபோல் எதுவோ கனக்கிறது.

தினமும் தொடரும் யாத்திரையின் - நெடுஞ்
சிகரம் தேடும் வேள்விகளின்,
கனவின் தோல்விகள் இனந்தெரியாச் - சிறு
கவலையின் வடிவம் காண்கிறதோ?



போட்டோ : ஜீ. ஸ்ரீபாகர்

எலியட்ஸ் கடற்கரையில் வழக்கம் போல இயக்கம் துள்ளுகிறது.

அதிகாலையின் காட்சிகள் ஒவ்வொன்றாய்ப் புலனாகின்றன.

நடைபயிலுவோர் வழக்கம் போல் நடக்கிறார்கள். ஓடுகிறவர்கள் ஓடிக்கொண்டிருக்கிறார்கள்.

கீழ்வானம் நாண, சூரியன் மேலெழுகிறான்.

வேக வேகமாய் நடக்கிறார் ரகுநாதன்.

வீடு திரும்பிக் குளித்துவிட்டுப் பூஜையில் உட்கார வேண்டும். அதன் பின்னர் பாராயணம் செய்ய வேண்டும். கோயிலுக்குப் போயாக வேண்டும். சரியாய் இருக்கும்.

'இன்று சஷ்டி' என்று முருகனைத் தரிசிக்கிறார். 'ஏகாதசி' என்று ஒருவேளை உணவைத் தவிர்க்கிறார். சதுர்த்தியன்று விநாயகர் வீதி வலம் வரும்போது, பல்லக்குத் தூக்குகிறார். பௌர்ணமியன்று அம்மன் சந்நிதியில் கண் மூடி நிற்கிறார்.

பொழுது விரைவாய்ப் போகிறது. மனத்தின் வெறுமை மறைந்துவிட்டிருக்கிறது. இனம் புரியாத ஆனந்தம், இதமாய்ப் பரவுகிறது.

சம்பிரதாயங்களும் சடங்குகளும் ஒவ்வொருவர் வாழ்விலும், ஒவ்வொரு காலகட்டத்திலும், ஒவ்வொரு விதமாய்ப் பங்கேற்கத்தான் ஏற்கின்றன. அரிசியைக் காக்கும் உமியாய்க் கலாசாரத்தைப் பாதுகாக்கத்தான் செய்கின்றன. ஒரு பந்தம்தான் இன்னொரு பந்தத்தை விடுவிக்கிறது. பூமத்திய ரேகை என்பது கற்பனையான கோடுதான். ஆனால் அந்தக் கற்பனை ரேகையை வைத்து உருவாக்கப்பட்ட பூகோளக் கொள்கைகள் என்றென்றும் மெய்யானவை. அறிவு பூர்வமானவை. நிலையானவை.

தியானத்தில் அமர்கிறார் ரகுநாதன். அவர் முகத்திலே பூரணப் பொலிவின் ஒளி சிந்துகிறது.

## தீபாவளியாய் மலரட்டும்!

தீபம் எரிவதைப் பாருங்கள்
தீஞ்சுவை கீதத்தைக் கேளுங்கள்
எண்ணெய் எரிந்து ஒளியாகும்
எழும் கதிரேநல் பயனாகும்..

அறிவு தீபம் எரிந்திட்டால்
ஆக்கம் வந்து ஒளியாகும்
அகவிருள் தன்னை எரித்திடுவோம்
ஆன்ம தீபம் ஏற்றிடுவோம்!

விடுதலை தீபம் தேசத்தின்
விதியை மாற்றி எழுதியது;
உழைப்பு தீபம் எரிந்திட்டால்
உன்னத நிலையை எய்திடலாம்!

சுயநல இருளைப் போக்கிடவே
பொதுநல தீபம் எரியட்டும்!
சுதந்தர தீபம் எரிந்திடவே
சூளுரை கீதம் மலரட்டும்!

தீப வழிபாடு நடக்கட்டும்.
தீபா வளியாய் மலரட்டும்!
திசைகள் எல்லாம் ஒன்றாகி
தீதின்றி உலகம் மகிழட்டும்

'இதயகீதம்' இராமானுஜம்

## பாதம் என்றும் போதும்

கங்கையில் காளிங்கன் தலைமீது
களிப்புடன் ஆடியது உனதுபாதமே!
வாமனனாய் அவதாரம் எடுத்துபின்
மாவலியை அழித்ததும் உனதுபாதமே!

கல்லாகச் சாபமுற்ற அகலிகையைப்
பெண்ணாக மாற்றியது உனதுபாதமே!
அர்ச்சுனனின் தேரினை அழுத்தியே
அவனுயிரைக் காத்ததும் உனதுபாதமே!

உலகத்தைச் சுருட்டிய இரணியனை
நசுக்கித்தான் கொன்றது உனதுபாதமே!
பாதுகைகள் தனைக்கொண்டு வந்தேயந்த
பரதனன்று வணங்கியதும் உனதுபாதமே!

வேண்டுமெனும் வரமதனைப் பெற்றிடவே
மீண்டுமுனது பாதத்தைப் பதித்திடுவாய்!
உன்பாதம் எமக்கிங்கு வேதமே
பாதத்தின் தரிசனமே போதுமே!

எஸ். குமாரகிருஷ்ணன்

## நட்புக்கு இல்லை நலிவு

இருண்ட மனித
இதயத்துக்கு
இறைவன் தந்த
இறவா விளக்கு நட்பு!
உண்மை நட்புக்கு
என்றும் உயிர் போவதில்லை!

●

பறம்பு மலை-
கபிலர்-பாரியின்
காதல் உயரத்தைக் காட்டும்!

நெல்லிக்கனி-
அவ்வை-அதியனின்
அழியா நட்பைச் சொல்லும்!

'வடக்கிருத்தல்' வழக்கம்-
பிசிராந்தை-சோழன்
பிசிறிலா அன்பின் பெருமை பேசும்!

அவலோ
குசேலன்-கண்ணன்
அப்பழுக்கில்லா அன்பு கூறும்!

தங்க சிவராசன்

## கந்தல் ராணி

கந்தல் ராணிஅவள்! - ஆம்,
கந்தல் ராணிஅவள்!
அவளைப் பற்றியதாய் அளக்கும் கதைகள்பல:
அவற்றுள் உண்மையேதோ? அறிந்தால் கூறிடுவீர்!
பட்டுப் புடைவையிலே - நீ
பட்டுப் பரவியதாம்:
மட்டிலா மகிழ்ச்சிதரும் - தன்
மணநாள் அன்றைக்கு;
அன்று முதலாக அவள்தன் நிலையிதுவாம்;
என்றும் கிறுக்கச்சி! என்னே பரிதாபம்!
காதல் வாழ்க்கையிலே -அவள்
கண்ட தோல்வியினால்
சாதல் வரும்வரையில் - அவள்
சற்றும் தெளியாளாம்!
எந்தக் கொடுமையினால் இந்த நிலைமைக்கு
வந்து தொலைத்தாளோ? வாழ்வே மாயந்தான்;
புதுமைக் கோலத்தில் -அந்தப்
பூவை தென்படுவாள்!
எதுவோ உண்மைநிலை? - நான்
எதையும் நம்பவிலை.

அபிதா

# மகாத்மா காந்தியின் அமெரிக்க வாரிசு

நா. மகாலிங்கம்



மகாத்மா காந்தியின் தத்துவங்கள் எல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக்காய்கள் அல்ல. அவை உயிர்த்துடிப்புடன் வாழும் தத்துவங்கள். இவற்றை நிரூபிக்கும் சம்பவங்கள் ஆங்காங்கே நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

ஒன்றிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு சோவியத் ரஷ்யாவிலும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் கம்யூனிஸ்டு சர்வாதிகாரத்துக்கு எதிராக மக்கள் கிளர்ந்தெழுந்தார்கள்.

இந்தக் கிளர்ச்சிகள் எல்லாம் பெரும்பாலும் அமைதியான முறையில் நடந்தன. பெருத்த உயிர்ச்சேதங்கள் ஏற்படவில்லை.

மகாத்மா காந்தி காட்டிய அகிம்சை வழியில் மக்கள் சக்தியை ஒன்று திரட்டி இந்தப் போராட்டங்கள் நடந்தன, என்றுகூட அரசியல் விமர்சகர்கள் குறிப்பிட்டார்கள்.

கம்யூனிச சர்வாதிகார அமைப்பை உடைத்தெறிந்த அந்தப் போராட்டங்களில் காணப்பட்ட அகிம்சை வழிக் கிளர்ச்சியானது - சில கம்யூனிஸ்ட் நாடுகளின் உள்கட்சிச் சண்டைகளிலும், மொழி, மத அடிப்படையில் நடந்த மோதல்களிலும் காணப்படவில்லை. அவை இராணுவ மோதல்களாக உருவெடுத்தன.

அது வேறு விஷயம்.

மனித இனம் இன்றும் மகாத்மாவின் வழியை மறக்கவில்லை. ஐரோப்பா, அமெரிக்கா போன்ற மேற்கு நாடுகளிலும் மகாத்மாவின் வழிக்கு ஆழமான அடிப்படை இடப்பட்டுள்ளது.

அவ்வாறு மகாத்மாவின் தத்துவங்களுக்கு அடித்தளம் அமைத்தவர்களில் மிகச் சிறப்பானவர், மார்டின் லூதர் கிங் என்கின்ற கறுப்பரின மக்கள் தலைவர் ஆவார்.

ஜனநாயகம், சுதந்தரம், மனித உரிமைகள் ஆகியவற்றுக்காகவே உதயமான தேசம் அமெரிக்கா.

மத சுதந்தரத்துக்காகப் போராடிய இங்கிலாந்து நாட்டு மக்கள், தங்கள் நாட்டை விட்டு ஓடி வந்து அமெரிக்காவில் குடியேறினார்கள்.

உள்நாட்டு, வெளிநாட்டு ஆபத்துகளை எதிர்த்துப் போரிட்டார்கள்.

தங்கள் உழைப்பால் ஒரு புதிய தேசத்தை, ஒரு புதிய சமுதாயத்தை, ஒரு புதிய வாழ்க்கை முறையை ஏற்படுத்தினார்கள்.

தொழிற் புரட்சிக்கு வித்திட்டார்கள்.

புதிய அரசியல் முறையைக் கண்டுபிடித்தார்கள்.

மார்ட்டின் லூதர் கிங்



செல்வத்திலும், வலிமையிலும் உலக நாடுகளின் உச்சியை எட்டிப் பிடித்தார்கள்.

இவ்வளவு சிறப்புகள் இருந்தும் கறுப்பின மக்களை அடிமைகளாக நடத்திய ஒன்றில் மட்டும், அமெரிக்கா மீது பெரும் களங்கம் இருந்தது. இன்றும்கூட இருந்து வருகிறது.

ஆபிரகாம் லிங்கன் காலத்தில் இந்த அடிமை முறை காரணமாக உள்நாட்டு யுத்தம் நடந்தது.

கறுப்பின மக்களும் அமெரிக்கக் குடி மக்கள்தான்.

வெள்ளை நிற அமெரிக்கர்களுக்கு இருக்கிற எல்லா உரிமைகளும் கறுப்புநிற மக்களுக்கும் உண்டு என்று லிங்கன் முழங்கினார்.

அடிமை முறையை ஒழித்தார். ஆனாலும் நிறப்பாகுபாடு, நிறவெறி அமெரிக்காவில் தாண்டவமாடியது.

வெள்ளைநிற அமெரிக்கர்கள் பயணம் செய்யும் ரயில், பஸ்களில் கறுப்பர்களுக்குத் தனி இடம். பொதுப்பள்ளிக்கூடங்களில் கறுப்பரினச் சிறுவர் சிறுமியர் படிக்க முடியாது.

அமெரிக்க சமுதாயம் கடைப்பிடித்த இந்த நிறவெறிக்கு, இந்தத் தீண்டாமைக்கு பலியான கறுப்பின மக்களின் எண்ணிக்கை ஏராளம், ஏராளம்.

அவ்வப்போது நிறவெறிக்கு எதிராக தனிப்பட்ட சில கறுப்பர்கள் ஆயுதங்களைக் கொண்டு பரிகாரம் காண முற்பட்டனர்.

அவையெல்லாம் அடக்கி ஒடுக்கப்பட்டன; நசுக்கப்பட்டன. அமெரிக்க அரசியல் சட்டத்தின்படி மாநிலங்களுக்குச் சில விசேட அதிகாரங்கள் இருந்தன. அதனால் பெடரல் சட்டங்கள் பயன்தரவில்லை.

இந்த நிலையில்தான் அமெரிக்காவில் ஒரு புதிய ஒளி; காந்திய ஒளி; கிறிஸ்துவின் உண்மை ஒளி உதயமாயிற்று. அவர்தான் மார்ட்டின் லூதர் கிங்.

சாதாரண வசதியுடைய கறுப்பினக் குடும்பத்தில் பிறந்தவர் கிங். மார்டின் லூதர் என்கின்ற பெயரைச் சூட்டிக் கொள்வதிலே அவருக்கு விருப்பம் அதிகம்.

''நானும் என் தந்தையும் வாழ்க்கை முழுவதும் சீர்திருத்தத்திற்காகவே போராடி வந்தவர்கள். எனவே மார்டின் லூதரின் பெயரைச் சூட்டிக்கொள்வதற்கான தகுதி எங்களுக்கு உண்டு'' என்கிறார் கிங்.

மார்டின் லூதர்கிங் தலைமை ஏற்கும் ஒரு நிகழ்ச்சி 1955ஆம் ஆண்டில் நடந்தது.

அமெரிக்காவின் தெற்குப் பகுதியில் அலபாமா ராஜ்யத்தில் மாண்ட்கோமரி என்றொரு நகரம். அங்கே வெள்ளையர்களின் எண்ணிக்கை 80,000 ஆகும். கறுப்பர்களின் எண்ணிக்கை 50,000. கறுப்பின மக்கள் அனைவரும் கூலி வேலை செய்து பிழைப்பவர்கள்.

கறுப்பினமக்கள் மத்தியில் வழக்கம்போல் ஒற்றுமையின்மை; பிளவு; ஆயிரம் ஆயிரம் மாச்சரியங்கள்.

ஒருநாள்...

1955 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முதல்தேதி வியாழக்கிழமை மாலை எம்பயர் தியேட்டர் என்னுமிடத்தை நோக்கி பஸ் ஒன்று சென்றது. அதில் 24 கறுப்பின பிரயாணிகள் அமர்ந்திருந்தனர்.

இடையில் ஓர் இடத்தில் பஸ் நின்றது. ஆறு வெள்ளையர்கள் ஏறிக் கொண்டனர்.

டிரைவர் தமது ஆசனத்தை விட்டு எழுந்து வந்தார். கறுப்பின மக்களைப் பார்த்து ''எழுந்து இடங்கொடுங்கள்'' என்றார். அனைவரும் எழுந்துவிட்டனர்.

அப்போதுதான் யாரும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்தது.

ரோஸா பார்க் என்னும் கறுப்பினப் பெண்மணி தனது இடத்தைவிட்டு எழுந்திருக்கமுடியாது என்று பதிலளித்தாள்.

அந்த பதில் கறுப்பர் சமுதாயம் விழித்துக் கொண்டது என்பதை அறிவிக்கும் பதில் என்பது அப்போது அமெரிக்காவிற்குத் தெரியவில்லை.

ரோஸாபார்க் கைது செய்யப்பட்டார். அப்பெண்மணிக்கு பத்து டாலர் அபராதம் விதிக்கப்பட்டது.

மாண்ட்கோமரி சட்டப்படி பஸ்ஸுக்குள் டிரைவரின் உத்தரவுப்படிதான் உட்கார வேண்டும். இடவசதி அவர் ஆணைக்குட்பட்டதுதான்.

ரோஸா பார்க் நிகழ்ச்சி காட்டுத் தீ போல் பரவியது. இதைவிட கொடுமைகள் அதிகம் புரியப்பட்டபோதும் விழிக்காத நீக்ரோ சமுதாயம் இப்போது விழித்துக் கொண்டது.

மாண்ட் கோமரி நகரத்து பஸ் போக்குவரத்தின் வருமானத்தில் எழுபது சதவீதம் கறுப்பின மக்கள் மூலம் கிடைப்பதாகும்.

பஸ்ஸில் முன்பக்கம் வந்து டிக்கெட் கட்டணத்தைக் கொடுத்துவிட்டு, பிறகு பின்பக்கம் வந்து பஸ் ஏறவேண்டும் கறுப்பர்கள்.

வெள்ளையர்கள் பஸ்ஸில் ஏறிய பின்பு டிக்கெட் கட்டணத்தைக் கொடுக்கலாம்.

டிரைவரிடம் கறுப்பின மக்கள் கட்டணம் கொடுத்து விட்டுத் திரும்புவதற்குள் பலமுறை பஸ் போய்விடும்.

இத்தகைய அநீதிகளுக்கு ஆளாகி வாயில்லாப் பூச்சிகளாகக் கிடந்தவர்களுக்கு இப்போது விழிப்பா? என்று வியந்தது அமெரிக்கா!

கறுப்பின மக்கள் வாழ்கிற பகுதிகளுக்குச் செய்திகள் பறந்தன.

''ரோஸா பார்க்கை ஆதரியுங்கள்! பஸ்ஸில் ஏறாதீர்!'' என்று எங்கும் செய்திகள் பறந்தன.

ஆயிரக்கணக்கில் துண்டு விளம்பரத் தாள்கள் பரவின.

மறுநாள் மாண்ட் கோமரி நகரத்துப் பஸ்களில் ஒரு கறுப்பர்கூட ஏறவில்லை.

அந்த நகரக் கறுப்பின மக்கள் தன்மான உணர்வுடன் நடந்து சென்றனர். சிலர் குதிரை வண்டிகளிலும், சிலர் கார்களிலும் சென்றனர்.

கறுப்பர்களின் இந்தப் புறக்கணிப்புக் கிளர்ச்சி வெற்றியடைந்ததைக் கண்டு அகில அமெரிக்காவே விழிகளைத் திறந்து நோக்கியது.

கறுப்பினப் பாதிரிமார்கள் பன்னிரண்டு பேர் கூடி மூன்று சாதாரணமான கோரிக்கைகளை வெளியிட்டனர்.

1. கறுப்பர்கள் பஸ்ஸின் பிற்பகுதியில் அமருவார்கள். ஆனால் முதலில் அமர்ந்தவர்களை எழுப்பக்கூடாது.

2. கறுப்பின மக்கள் அதிகமாகப் பயணம் செய்யும் பாதையில் கறுப்பின டிரைவர்களை நியமிக்க வேண்டும்.

3. கறுப்பர்களை வெள்ளைநிற டிரைவர்கள் மரியாதையாக நடத்துமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

இவைதான் அந்த சாதாரணமான கோரிக்கைகள்.

இக்கோரிக்கைகளை வற்புறுத்திப் பெறுவதற்கு என 'மாண்ட் கோமரி அபிவிருத்தி சங்கம்'' என ஒரு நிறுவனத்தையும் அவர்கள் தொடங்கினார்கள்.

அந்தச் சங்கத்திற்குத் தலைவராக மார்டின் லூதர்கிங் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது அவருக்கு வயது 26 தான்.

அன்றிரவு ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. கூட்டத்திற்கு சுமார் 5,000 கறுப்பின மக்கள் வந்திருந்தனர். அந்த மக்களின் வரலாற்றில் இப்படி ஒரு நிகழ்ச்சி நடைபெற்றதில்லை. அவர்கள் அனைவரும் தங்கள் தலைவர்கள் எடுக்கும் நடவடிக்கைக்கு ஒப்புதல் அளித்தனர்.

கறுப்பர்கள் நடத்திய அறப்போர் நிரந்தர விஷயமாகிவிட்டது. இருநூறு பேர், கறுப்பர்களை ஏற்றிச் செல்ல தங்களிடம் கார்களை அளித்தனர்.

நகரெங்கும் நூறு இடங்களில் கறுப்பின மக்களை ஏற்றிச் செல்ல வசதிகள் செய்யப்பட்டன.

நாடெங்கிலும் இருந்தும், தூரதேசமான ஜப்பானிலிருந்தும்

நன்கொடைகள் வந்து குவியத் தொடங்கின; சுமார் இரண்டரை லட்சம் டாலர்கள் சேர்ந்தது.

இடையில் மாண்ட் கோமரி நிர்வாகம் சில குறுக்கு வழிகளைக் கையாண்டது.

கறுப்பினப் பாதிரிகள் இரண்டொருவரைப் பிடித்து ஒரு சமரச ஒப்பந்தத்தில் கையெழுத்து வாங்கி, அதன் மூலம் அறப்போரை நிறுத்த வழி செய்தனர் வெள்ளையர்.

நடக்கின்ற ஒவ்வொரு செயலையும் விழிப்போடு கவனித்து வந்த மார்டின் லூதர் கிங் இதை அறிந்தார்.

இரவோடிரவாக எல்லாக் கறுப்பின மக்களுக்கும் எச்சரிக்கை அனுப்பப்பட்டது.

''போலி ஒப்பந்தம் வருகிறது. ஏமாந்து போகாதீர்கள்!'' என்று எச்சரிக்கை கிடைத்தவுடன் கறுப்பின மக்கள் ஏமாறவில்லை.

இதைக் கண்ட வெள்ளையர்கள் இனி கறுப்பர்களை ஏமாற்றிவிட முடியாது என்பதை உணர்ந்தார். அடக்கு முறையில் ஈடுபடத் தொடங்கினர்.

ஒரு புறம் வெள்ளையர்கள் கூட்டமாகச் சென்று கறுப்பர்களைப் பயமுறுத்தினர்.

மறுபுறம் ஆட்சியானது சில்லறைக் காரணங்களுக்காக கறுப்பின மக்கள் தலைவர்களைக் கைது செய்தது. மார்டின் லூதர் கிங் வேகமாகக் காரோட்டினார் என்று பொய்க் குற்றம் சாட்டப்பட்டுக் கைதானார். மற்ற கறுப்பின மக்கள் தலைவர்களுக்கும் இவ்வாறே நிகழ்ந்தது.

''உனது உயிருக்கு ஆபத்து'' என்று தினமும் 25க்குக் குறையாத மிரட்டல் கடிதங்கள் மார்டின் லூதர்க்கு வந்தன. டெலிபோனில் பயங்கரமான எச்சரிக்கைகள் பிறந்தன.

பலாத்கார நிகழ்ச்சிகள் நடைபெறுவதை அறவே வெறுத்தார் மார்டின் லூதர் கிங். ஆனால் அவரை அறியாமல், அவர் விரும்பாத பலாத்கார நிகழ்ச்சிகளுக்குக் களம் உருவாகி வந்தது.

''அன்பு! அன்பு!'' என்று அலறிய கிங், தனக்குச் சோதனை நேர்ந்ததாக உணர்ந்தார்.

தன்னுடைய வீடு எந்த நேரத்திலும் தாக்கப்படும் ஒரு நிலைமை.

கைப்பிடித்த மனைவியும், கண்ணென வளர்த்த குழந்தையும் கூட நிறவெறிக்கு இலக்காகிவிடுவர் என்கிற கவலை.

மற்றொரு புறம் ''தாக்கப்பட்டால் திருப்பிக் தாக்குவோம்! மானத்தோடு வாழ முடியவில்லை என்றால் ஏன் சாகக்கூடாது? சாவதென்றால் ஒரு வெள்ளையனைக் கொன்ற பின் செத்தால் என்ன? என்ற நிலையில் கறுப்பின மக்களின் உள்ளங்கள் கொலை வழியை நாடிச் சென்ற வண்ணமிருந்தன.

இன்னொருபுறம், கறுப்பர்களை அழித்துவிட்டுத்தான் மறுவேலை என்று நிறத்தால் உயர்ந்தவர்கள் கொக்கரித்துக் கொண்டிருந்தனர்.

இந்தச் சூழ்நிலையின் நெடியை, கிங் உணர்ந்தார். அவருக்கு முன் ஒருவழி - ஒரே வழிதான் - தென்பட்டது.

சமையலறைக்குச் சென்றார். முழந்தாளிட்டார்.

கருணையே உருவான கடவுளே! என்று அந்தக் கருணைநிதியை நோக்கி இரு கையேந்தி இறைஞ்சினார்.

''பலாத்காரத்தை எதிர்த்து நிற்கவும், அன்பு வழியை நிலைநாட்டவும் எனக்கும் எம் இனத்து மக்களுக்கும் வலிமையை வழங்குவாயாக'' என இறைவனை வேண்டினார்.

1960ஆம் ஆண்டில் நாகரிக உலகின் உச்சாணிக் கொம்பில் வீற்றிருக்கும் அமெரிக்க மண்ணில் - கிறித்துவ மதம் என்பது வெறும் சடங்காகிப் போய்விட்ட நிலையில், ஆண்டவனைத் தனது கேள்விக்குப் பதில் கூறு என்று கேட்கும் ஒரு பிறவியை - அதிலும் ஒரு கறுப்பரைக் காண ஆச்சரியமாக இல்லையா?

அந்த ஒரு சூழ்நிலையில் காந்தியடிகள் என்ன செய்திருப்பாரோ அதையேதான் மார்டின் லூதர் கிங் செய்தார்.

இறைவனை நோக்கி அவர் தவங்கிடந்தது கூடப் பெரிதன்று. எனக்கு அவன் விடை கொடுத்தான் என்று அவர் கூறுகிறார். எங்கிருந்தோ வந்தது அந்த பதில்!

''உண்மைக்காகப் போராடுவதிலிருந்து ஒரு துளியும் பின் வாங்காதே! நேர்மைப்பாதையிலிருந்து சிறிதும் வழுவாதே! கடவுள் உன் பக்கமிருப்பார்'' என்று அசரீரி ஒலித்தது.

''அந்த ஒலியை எனது உள்ளம் கேட்டதிலிருந்து நான் பயத்திலிருந்து விடுபட்டேன். பயம் என்னும் பேய் என்னை அணுகவில்லை'' என்கிறார் கிங்.

இதைத் தொடர்ந்து மார்டின்லூதர் கிங் வசித்த வீட்டின் முன்பு குண்டு வெடித்தது. வீட்டிற்கு பலத்த சேதம் ஏற்பட்டது.

தங்கள் தலைவருடைய வீட்டுக்கு வெடி வைக்கப்பட்ட செய்தி கேட்டவுடனேயே கொதித்தெழுந்து ஒன்று திரண்டனர் கறுப்பின மக்கள்.

அந்த நகர மேயரும் போலீஸ் கமிஷனரும், (இருவரும் வெள்ளையர்கள்) ஓடி வந்தனர்.

அவர்களைக் கறுப்பர்கள் சூழ்ந்து கொண்டனர். பலாத்காரம் கறுப்பின மக்கள் பகுதியிலிருந்து தலைதூக்குவது நிச்சயம் என்ற நிலை ஏற்பட்டது. மேயரைச் சுற்றியிருந்த போலீஸ்காரர்களில் பலருக்கு நடுக்கம் எடுத்துவிட்டது.

பொதுக்கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்த கிங்கிடம் இச் செய்தி அறிவிக்கப்பட்டது. அவர் ஓடி வந்தார்.

''அனைவரும் அமைதியாயிருங்கள்! சட்டத்திலும் ஒழுங்கிலும் நமக்கு நம்பிக்கை இருக்கிறது. நாம் பலாத்காரத்திற்காக வாதாடவில்லை.

''நீங்கள் உங்கள் எதிரிகளைக்கூட நேசிக்க வேண்டும் என்றே நான் கூறுவேன். அவர்களுக்கு இனியவர்களாக இருங்கள்.

''நீங்கள் வெள்ளையர்களை நேசிக்கிறீர்கள் என்பது வெள்ளையர்களுக்குத் தெரியவேண்டும்''

''நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோமோ அது நியாயமானதாகும். எனவே கடவுள் நமது பக்கம் இருக்கிறார்'' என்று இடிந்து விழுந்த வீட்டின் முன்பு கூடியிருந்த ஆயிரக்கணக்கான கறுப்பின மக்களின் முன்னால் நின்று கொண்டு மார்டின்லூதர் கிங் சத்தியத்தைக் காக்க கம்பீரமாக முழங்கினார். வெள்ளைக்கார அதிகாரிகளின் உயிர் காப்பாற்றப்பட்டது.

இடையில் பலரும் பல யோசனைகள் சொன்னார்கள். மார்டின் தன் கைவசம் பாதுகாப்பிற்காகத் துப்பாக்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறினார்கள்.

முதலில் இதற்குச் சம்மதித்தார் கிங். இறுதியில் ''ஓர் அகிம்சாவாதி ஆயுதம் ஏந்தக்கூடாது'' என்று மறுத்துவிட்டார்.

வேறு எத்தனையோ சட்டங்களின்படி மார்டின்லூதரையும் அவருடைய சீடர்களையும் தண்டித்தார்கள்.

மாண்ட்கோமரி நகர பஸ் போக்குவரத்து நிர்வாகம் கடுமையான நஷ்டத்திற்கு ஆளாகியது.

வழக்கு மன்றங்களில் வழக்குகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.

கறுப்பின மக்களும் அமெரிக்கர்கள். பஸ்ஸில் வெள்ளை இனத்தவர் பிரயாணம் செய்வது போல் கறுப்பின மக்களும் பிரயாணம் செய்யும் உரிமை உள்ளவர்கள். அவர்களை அதிலிருந்து

தடை செய்ய ஜனநாயகத்தில் விதி இல்லை என்று அமெரிக்க நாட்டின் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு சொல்லியது.

''மாண்ட்கோமரியில் இருக்கும் முறை - கறுப்பின அமெரிக்க மக்களை அனுமதிக்காத முறை சட்டப்படி தவறு'' என்று தீர்ப்பு வந்தது.

''ஆண்டவன் வாஷிங்டன் நகரிலிருந்து பேசினார்'' என்று இந்தத் தீர்ப்பைப் பற்றி கிங் குறிப்பிட்டார்.

அன்று நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் பேசுகையில் அவர் கூறினார்: ''இங்குள்ள கறுப்பின மக்கள் யாராவது 'வெள்ளையர்களை எதிர்த்து நாம் வெற்றி கண்டுவிட்டோம்' என்று நினைத்துக்கொண்டு போனால் நான் மிகவும் வருத்தமடைவேன்'' என்றார்.

இவ்வகையில், எத்தனையோ இன்னல்களுக்காளாகியும், பாரதத்தின் விடுதலைக்கு அகிம்சை வழியையே மேற்கொண்ட காந்தியடிகளின் வழியையே பின்பற்றிய மார்டின் லூதர் கிங்கை காந்தியடிகளின் அமெரிக்க வாரிசு என்றழைப்பதில் தவறில்லையே!

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு வெள்ளையர்களின் நிறவெறியை அடக்கவில்லை.

கறுப்பின மக்கள் செல்லும் பஸ்கள் தீக்கிரையாக்கப்பட்டன. கறுப்பின மக்களின் பாதிரிமார்களின் வீடுகள் வெடி வைத்துத் தகர்க்கப்பட்டன.

வெள்ளையர்களும் கிறித்துவர்கள்தான். ஆனால் கறுப்பர்கள் வணங்கும் கிறித்துவ தேவாலயங்களும் கூட வெள்ளையர்களின் தாக்குதலுக்குத் தப்பவில்லை. ●

## பாயிரம் ஆனாய்!

**கடவூர் மணிமாறன்**

வரவென வந்தாய்! வாழ்வில்
வைகறைத் துயில்க ளைந்தாய்!
உறவினில் இணைந்தாய்! ஈர
உணர்வினில் நிறைந்தாய்! நாளும்
சிறகினை விரித்தாய்! என்றன்
சிலிர்ப்புகள் அனைத்தி லுள்ளும்
விரவியே கலந்தாய்! காதல்
வெந்தழல் மூட்டி விட்டாய்!

அன்பெனும் வலையில் வீழ்த்தி
ஆளுமை புரியும் நீயோ
என்னவள் என்னும் போதில்
இமயமும் குறுகிப் போகும்!
சின்னவாய் இதழ்கள் சிந்தும்
சிரிப்பினில் சிறைப்ப டுத்தும்
நன்னயம் எங்கே கற்றாய்?
நாடகம் மெய்யா சொல்வாய்?

நீயிலா என்றன் வாழ்வில்
நிம்மதி என்ப தேது?
தாயிலாச் சேயாய் நாளும்
தவிப்பதில் இன்பங் கொல்லோ?
பாயிரம் ஆனாய்! துன்பப்
பரிசுகள் பலவும் தந்தாய்!
ஆயினும் நெஞ்சை விட்டே
அகன்றிடாப் புதுமை சேர்த்தாய்!



## அடுத்த அவதாரம்



**ஜி.எஸ். பாலகிருஷ்ணன்**

பிடி அவலைப் பரமனுக்குப்
படையலாகத் தந்தவுடன்
மடி நிறைய மாணிக்கம்
மலையருவியெனக் கொட்டும்.

தூர்த்தன் துச்சாதனன்
துகிலுரிய முயலுகையில்
துயர் துடைக்க மாயனவன்
துடிப்புடனே தோன்றுவனே!

அரி எங்கே என்று
அப்பன் அதட்டுகையில்,
எரிமலையாய்த் தூணிலிருந்து
எம்பெருமான் வருவானே!

காளிங்கன் விஷம் பட்டுக்
காடெல்லாம் கருகிவிட,
இதமான பார்வையினால்
இன்பம் சேர்த்தது யார்?

மண்ணைத் தின்றுவிட்டு,
மாதா கேட்டவுடன்,
வண்ண உலகையெல்லாம்
வாய்க்குள் காட்டியவனே.

போருக்குத் தயங்கியவனை
போதனையால் வழிகாட்டி,
பாருக்குள் வாழ்வோருக்கு
அருமறை அருளிய அமரா!

வழி தவறிய கன்றுகள்
விழி பிதுங்கி நிற்கையிலே,
குழலோசை கேட்கும்,
குதூகலம் பிறக்கும்!

காதல் வசப்பட்டு
கோபியர்கள் வாடுகையில்
காலின் சலங்கை ஒலி
காற்றில் மிதந்து வரும்.

நாளைக்குப் பலனென்ற
நைப்பாசையுடன் உழைக்காது,
வேலைக்காய் வேலையென்ற
வேதத்தைத் தந்தவனே!

அறநெறியில் முறிவென்றால்
அவதாரம் என்றாயே!
வெறிச் செயலும், வன்முறையும்
வளருவது தெரியலையா?

# காலனை வென்ற பொன்னொளி

'கர்மயோகி'

மகாபாரத சாவித்திரி கதையில் சத்தியவானை மனைவி மீட்டு வருகிறாள். ஸ்ரீ அரவிந்தர் காவியமான சாவித்திரியில் காரிருள் தேவனை இருளிலிருந்து மீட்டு ஒளிமயமாக மாற்றி **சாவித்திரி காலனை அழித்துவிடுகிறாள்.**

காலனை அழிக்க முடியும் என்றே மனிதனால் நினைக்க முடியாது. காவியத் தலைவி சாவித்திரி அதைச் செய்கிறாள். எளிய மனிதனுக்கு காலன் வறுமை என்ற உருவத்திலும், நோய் என்றும், கவலை என்றும் தோன்றுகிறான். அன்னை பக்தி , காலனின் இந்த ரூபங்களை அறவே அழிக்கிறது என்பது அன்பர் அனுபவம்.

தாம் செய்த யோகத்தில் படிப்படியாக முன்னேற 'சாவித்திரி' காவியத்தைக் கருவியாகப் பயன்படுத்தினேன் என்கிறார் ஸ்ரீ அரவிந்தர். காவியம் யோகத்திற்குண்டான கருவியாக அமையுமா?

சாவித்திரி காவியம், செய்யுள் உருவானது. அவரது மற்ற நூல்கள் தத்துவம், யோகம் பற்றியது, அவற்றைப்படித்து யோகத்தை அறியலாம், பயிலலாம், சாவித்திரியைப் பயின்றால், **நம்மையறியாமல் யோகம் நம்முள்ளே பலிக்கும்.**

யோகிக்கு யோகம் பலிக்க வேண்டும். மனிதனுக்கு 'யோகமடிக்கிறது' என்றால் வறுமை நீங்கி, செல்வம் பெருக வேண்டும், நோய் நீங்கி ஆரோக்கியம் எழ வேண்டும், சோகம் மறைந்து மகிழ்ச்சி பொங்க வேண்டும். இதைச் செய்யும் சக்தி சாவித்திரியிலுள்ளது.

உடல் நலம் குன்றியவர், மனநலம் சிதைக்கப் பெற்றவர், வறுமையில் வாடுபவர் போன்ற ஒருவர் சாவித்திரி காவியத்தைத் தினமும் படிக்க முடிவு செய்து, மனத்தை ஒரு நிலைப்படுத்தி, தன் முதுமைகளிலிருந்து மனத்தளவில் விலகி, நம்பிக்கையை முன் வைத்து 30 நாள் தினமும் 15 நிமிஷம் மனம் ஒன்றி, தினமும் குறிப்பிட்ட அதே நேரத்தில் அமைதியாய்ப் படித்தால், 30ஆம் நாள் சோகம் துளிக்கூட இருக்காது. இருந்த நோய் விலகும். வறுமை நம்மைவிட்டு நிரந்தரமாகப் போய்விடும் என மனம் நம்பும் அளவுக்கு வருமானம் அதிகமாகியிருப்பதைக் காணலாம்.

வருமானம் அதிகமாவதும், உடல்நலம் பெருகுவதும், சோகம் அழிவதும், மழை பெய்வதும், பிரச்னை தீர்வதும் ஒரே சக்தியால். அந்த சக்தியை சாவித்திரி வெளிப்படுத்துகிறது. அந்த சக்தியின் அதிகபட்ச ஒளியைத் தாங்கி சாவித்திரி உலவுகிறாள்.

காவியத்தின் கருத்து இதுவரை வேதம், இதிகாசம், இலக்கியம், உபநிஷதங்களில் கூறாதவை என்பதால் அதன் சக்தியும் வேகமும் அதிகம்.

பகவான் ஸ்ரீ அரவிந்தருடைய பொன்னொளி உலகில் 1956இல் வந்து பின்னணியில் உலகை மாற்றிவருகிறது. இப்பொன்னொளி காலனை அழித்து ஒளிமயமாக்கியது காவியத்தின் சிறப்பு அதிகம். அதைப் பயின்று அத முறைகளைப் பின்பற்றிப் பெறும் பலன் முழுமையானது பயின்றாலும் செய்யுள் வடிவில் சக்தி நம்முள் சென்று ஜீவனி அடித்தளத்தில் சேர்ந்து யோகப் பலனைத் தருமாறு செய்யு சக்தியை வெளிப்படுத்துகிறது. அந்தச் சக்தி, ஓடும் ரெயிலை நிறுத்தியதைக் கண்டவர், காலில் குத்திய ஊசி, தானே மறைந்ததைக் கண்டு அதிசயித்தவர், கான்சர் மறைந்ததை கண்ட டாக்டர் உண்டு. அது மழை பெய்வித்ததும் உண்டு.

தமிழ்நாட்டில் ஜூன் முதல் டிசம்பர் வரை மழை பெய்யும். அக்டோபர், நவம்பர், டிசம்பரே தமிழ்நாட்டு மழை மாதங்கள். ஜூன், ஜூலை, ஆகஸ்ட்டில் சரியா வருஷங்களில் 12'' மழை பெய்யும். கேரளத்தில் பெய்யு மழைச்சாரல் தரும் பலன் இது. லட்சக்கணக்கான ஏக்க மரங்கள் அழிக்கப்பட்டதால் வரும் நாளில் மழை குறையு என்பது விஞ்ஞானிகளின் எச்சரிக்கை.

வேலுச்சாமி என்ற அன்பர் பிப்ரவரி மாதம் புதுவை வந்து அவர்கள் பகுதியில் - திருநெல்வேலியில் மழையில்லாமல் கால்நடைகள் குடி நீருக்குச் சிரமப் படுவதாகச் சொன்னார். ஏரி, குளம் ஆகியவை மே, ஜூ னில் வற்றினாலும் சிரமம். மழை வர சில மாதம் ஆகும் என்பதால் வறட்சி ஏற்படும். பிப்ரவரியில் நிலை இதுவானால் இனி எத்தனை மாதம் காத்திருக்க முடியும்?

அன்னை சக்தியின் சிறப்பை அவருக்கு எடுத்துக் கூறி, அன்னை கூறியுள்ளது போல் மழையை அழைத்தால் மழை தவறாது பெய்யும் எனச் சொல்லி அனுப்பினோம். சமாதியில் பிரார்த்தனை செய்தார். தொடர்ந்து வீட்டுக்குப் போய் பிரார்த்தித்தார். உடனே மழை பொழியத் தொடங்கியது. இடைவெளிவிட்டு மழை பெய்வது உதவியாயிற்று தொடர்ந்தும் பிரார்த்தனை செய்தார். மழை அதிகமாகப் பெய்த சிறிய குளம், குட்டைகள் நிறைந்து தண்ணீர்ப் பஞ்சம் விலகியது. மே மாதத்தில் மழை கொட்டு கொட்டு என்று கொட்டிய பொழுது எனக்குக் கடிதம் எழுதினார். அதைப் பிரத எடுத்து எல்லா மையங்களுக்கும் அனுப்பினேன். இது சென்னை தியான மைய அறிவிப்புப் பலகையில் போடப்பட்ட அன்று இந்த நூற்றாண்டிலேயே அதிக ஜூன் மாத 24 மணிநே ரிக்கார்டாக சென்னையில் மழை பெய்தது.

காலனை அழித்த சாவித்திரியின் ஒளி,
மனித வறுமையை அறவே ஒழிக்கிறது,
மழை இறையருள், பருவமில்லாத நேரத்தில்
பிரார்த்தனை செய்யாத ஊரிலும் மழையைப்
பொழியும சக்தி, மனிதனுடைய எமனை அழிக்கிறது.



# நரகாசுரன் நாயகி

கோவி. மணிசேகரன்

அருமை தேவியான விரோசனையின் அவலம் கண்டு ஆழ்ந்த யோசனையில் மூழ்கிப்போனான் துவஷ்டாராஜன்.

தேவையற்ற அவலம். இப்படி நடந்துவிடுமோ என்கிற எதிர்பார்ப்பு.

அரண்மனையை விளக்குகள் ஒளியால் தாலாட்டி மகிழும் இந்த வேளையில் ராணி விரோசனை இப்படி துன்பவயப்பட்டுத் துவளுகிறாளே?

தோழிமார்கள் காரணம் புரியாமல் தயங்கித்தயங்கிச் செயலாற்றுகின்றனர்.

ஏன்?

அரண்மனையில் எவருக்குமே இதன் காரணம் புரியவில்லை. காரணம் புரிந்த ஒரே ஒருவன் துவஷ்டாராஜன்.

எங்கோ ஆந்தை இருமுறை அலறி ஓய்கிறது.

தொலைவில் நரிகள் ஊளையிடும் பயங்கரச் சத்தம்.

அரண்மனையின் தனியறையில், ராணி விரோசனை, நரகாசுரப் பயத்துடன் உணவுகூடக் கொள்ளாமல் மனக் கவலையுடன் அமர்ந்து காணப்பட்டாள்.

"தேவி.."

குரல் கேட்டுத் திரும்பிப் பார்க்கிறாள்.

அருமைக்கணவர் துவஷ்டாராஜன் அருகே வந்து தோளினைப் பற்றுகிறான். தொடுவுணர்வால் ஏற்பட்ட ஒருவித மெய்ச்சிலிர்ப்பு.

அவள் எழுந்து கொள்கிறாள்.

"தேவி! நடக்க முடியாத ஒன்றை எண்ணி நீ வருத்தப்படுவது என்ன நியாயம்? நமது குமாரி கசேருவை பகதத்தனாகிய நரகாசுரன் சிறையெடுப்பான் என்று எவ்விதத்தில் நீ நம்புகிறாய்?"

துவஷ்டாராஜன் பொறுமையாகவே கேட்கிறான்.

ராணி விரோசனை சொன்னாள் : "பிரபோ...! தேசங்கள் முழுவதும் பகதத்தன் அட்டகாசம் பொறுக்காமல் அலறிப் புடைக்கின்றன. நரகாசுரனுடைய அந்தப்புரத்தை அலங்கரிக்காத அழகிகளே இல்லை. ஒரு முறை அவன், தனது மந்திரிகளுள் ஒருவனான அயக்கிரீவனிடம் சொல்லி இருந்ததாக ஒரு செய்தி காற்றில் மிதந்து வந்தது. அதாவது, நமது குமாரி கசேருவின் அழகைக் கேள்விப்பட்டு அவளைச் சிறையெடுக்க வேண்டும் என்று ஆசை கொண்டிருக்கிறானாம்."

"காற்றில் மிதந்து வந்த செய்திதானே விரோசனை?"

"காரணமின்றிக் காற்றில் செய்தி வராது. நரகாசுரன் ஆசைப்பட்டதை பகிரங்கமாகப் பேச, அது பலர் வாய் மூலம் தத்தித்தத்தி அரண்மனையுள் நுழைந்திருக்கிறது."

"தேவி...! அப்படித்தான் கசேருவின் தலையில் எழுதியிருந்தால் நாம் என்ன செய்யமுடியும்? அந்தப் பரந்தாமன் தான் காக்க வேண்டும்."

"சிறை ஏன் எடுக்க வேண்டும்?"

" நேர்முகமாகத் தூது அனுப்பினால் நீ சம்மதித்து விடுவாயா?"

"இதுவரை யார் அப்படிச் சம்மதித்திருக்கிறார்கள்?"

"பின்..? இதுவரை நரகாசுரனுக்கு சிறையெடுத்துத்தானே பழக்கம்? நாம் தான் கவனமாக இருக்கவேண்டும். நமது குமாரியை இனி அரண்மனையைவிட்டு வெளியே செல்லாதவாறு கவனித்துக் கொள்ள வேண்டும். ஆமாம்; கசேரு எங்கே போய் இருக்கிறாள்?"

"மலையடிவாரக் கோயிலுக்குச் சென்றிருக்கிறாள்."

"இனிமேல் அரண்மனையை விட்டு எங்கும் வெளியில் செல்லக்கூடாது. அவளுக்கு உடனடியாகத் திருமண ஏற்பாட்டைக் கவனிக்க வேண்டும்."

துவஷ்டாராஜன் இவ்வாறு கூறி கொண்டிருக்கிற இதே வேளையில்...

மலைக்காட்டுக் கோயிலுக்குச் சென்ற ராஜகுமாரி கசேரு, பிராக்சோதிஷ பட்டினத்து அசுரராஜனான நரகாசுரனிடம் விவாதம் செய்து கொண்டிருந்தாள்.

பகதத்தன் என்ற பெயர் கொண்ட நரகாசுனுக்கும், கசேருவுக்கும் சிறிது காலமாகவே காதல் மலர்ந்து வந்தது.



நரகாசுரன், கசேருவின் அழகைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவளை நேரில் சந்திக்கப் பல வழிகளைத் தேடினான். தன்னைப் பலர் அசுரன் என்று அழைத்தாலும் ஒரு மானுடனாகவே அவளைச் சந்திக்க விரும்பினான். அந்தச் சந்திப்பு ஒரு சமயம் இதே மலையடிவாரத்தில் தான் நிகழ்ந்தது.

தன்னை பிராக் சோதிஷ்ப்பட்டினத்து அரசன் நரகாசுரன் என்று காட்டிக் கொள்ளாமல், வேட்டையாட வந்த ஒரு ராஜகுமாரனாகவே கசேருவை வேட்டையாடினான்.

ஆஜானுபாகுவான தோற்றமுடன் வீர பௌரஷத்துடன் விளங்கிய நரகாசுரனைக் கண்டு அவளும் மோகிக்கத்தான் செய்தாள்.

அரக்கன் என்பது ஒரு முத்திரையே யன்றி அந்த முத்திரையை நீக்கியோ, அல்லது முத்திரையை அறியாமலோ நரகாசுரனை ஒரு தனியான மானுடக் கோலத்தில் பார்ப்பார்களேயானால், வீரார்ந்த அழகனாகவே விளங்கிப் புன்முறுவல் பூப்பான். உலகை அளந்த மகாவிஷ்ணுவுக்கும், பூமாதேவிக்கும் பிறந்த பேறு பெற்றவன், பேரழகனாக இல்லாமல் அசுரப் போர்வையே யானாலும் அசிங்கமாகவா இருக்க முடியும்?

உடன் வந்த தோழிகளைக் கோயிலிலேயே இருக்கச் செய்துவிட்டு, மலையடிவாரம் நோக்கி நடந்து வந்தாள் துவஷ்டாராஜ புத்திரியான கசேரு

அதுவரையும் கசேருவுக்குத் தன்னைக் காதலிப்பவன் பிராக்சோதிஷப் பட்டினத்து அசுர ராஜனான நரகாசுரன் என்பது தெரியாது.

இருவரும் வெகுநேரம் எதை யெதையோ பேசி மகிழ்ந்தபிறகு கசேரு கேட்டாள். ''நாம் இப்படி சந்தித்துக் கொண்டே இருப்பது நலம் பயககாது சுவாமி! என் தந்தையாருக்குத் தூது போக்கிப் பெண் கேட்க வேண்டியது தானே?''

பகதத்தன் 'பகபக'வென்று சிரிக்கிறான்.

''ஏனிந்தச் சிரிப்பு?''



"எனக்கு உன் தந்தை முறைப்படிப் பெண்தரமாட்டார்"

"ஏன்?"

"எனக்குக் பெண்களைச் சிறையெடுத்தே பழக்கம்"

"ஐயய்யோ!"

"எனக்கு குத்தப்பட்ட முத்திரை அப்படியானது".

"என்ன முத்திரை?"

"சொன்னால் பயப்படமாட்டாயே!"

"பயப்படும்படி நீங்களில்லை."

மீண்டும் அதே பகபகத்த பகதத்தன் சிரிப்பு.

"கசேரு! நீ நரகாசுரனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?"

"ஐயய்யோ!"

"நான்.."

"நீங்கள்?"

"நானே நரகாசுரன்!"

இப்போது கசேரு கலகலவென்று சிரிக்கிறாள்.

"நீ ஏன் சிரிக்கிறாய்? நம்ப மறுக்கிறாயா?"

"பின், ஏனிந்த விளையாட்டு பிரபோ! அந்தப் பயங்கர ராட்சஸன் எங்கே? இந்தப் பளிங்கனைய அழகர் எங்கே?"

"கசேரு! ஏதோ விதியின் சந்தர்ப்பத்தால் நான் உன்னைச் சந்திக்க நேர்ந்தது. எனது அரண்மனையில் சிறையெடுக்கப்பட்ட அழகுப் பதுமைகள்தாம் இருக்கின்றன. ஆனால் எவளை நான் சிறை எடுக்காமல் மணக்கிறேனோ, அவளை எனது நாயகியாக்கிக் கொள்ளத் தவம் செய்து வருகிறேன். உன் விஷயத்தில் ஒன்றே ஒன்று பொருத்தமுடையது. அதாவது, இதுவரை என்னை விரும்பாதவர்களை நான் சிறையெடுத்தேன். ஆனால் நீ என்னை விரும்புகிறாய். மனப்பூர்வமாக விரும்புகிறாய். காரணம் மற்றவர்களுக்கு நான் நரகாசுரன் என்பது, தெரியவரவே எனது அசுரத்தன்மைதான் விசுவரூபமாகத் தெரிந்ததேயன்றி, எனது அழகு அவர்கள் கண்முன்னே பஸ்பமாகிப் போய் விட்டது."

"நீங்கள் நரகாசுரன் என்றே என்னிடம் மெய்ப்பிக்க வாதிடுகிறீர்களா பிரபோ!"

"பயந்துவிடாதே! உனக்குள் எனது அழகு பஸ்பமாகிவிடப்போகிறது. சத்தியமாக நான் பிராக்சோதிஷப்பட்டினத்து அரசன் நரகாசுரன்தான்".

"பிரபோ! நீங்களா?"

கசேரு பயந்து போகவில்லை; மாறாக வியந்து போனாள்.

"சத்தியமாகவே சொல்லுகிறீர்களா பிரபோ?"

"என் தந்தை அந்த மகாவிஷ்ணுவின் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன்."

"நீங்களா ராட்சஸன்?"

"ராட்சஸர்களுக்கு ராட்சஸன்!"

அவள் கொஞ்சமும் அஞ்சாது அவனது தோளில் தலைபுதைத்து, "உங்களை நல்லவர் என்பதை நான் நிரூபிப்பேன் பிரபோ!"

"நிரூபிப்பாய். எனக்கு நம்பிக்கை இருக்கிறது. ஆனால் உன்னைச் சிறை எடுக்காமல் மணக்கிற வழி?"

"அதுதான் புரியவில்லை பிரபோ! எனது தந்தை உங்களுக்கென்றால், என்னைக் கொன்று போடுவாரேயன்றி, மன்றல் அமைத்து மாங்கல்ய தாரணம் செய்யமாட்டார் "

"சிறையெடுப்பதென்றால் இப்போதே உன்னைத் தூக்கிக் கொண்டு சென்றுவிடுவேனே!"

"இப்போது வேறு வழியே இல்லை. நீங்கள் விரும்பினால் நான் உங்களுடனேயே வந்துவிடுகிறேன்."

"அது சிறையெடுத்ததற்குச் சமானம். ஒருவழி கூறுவேன். நான் எனது பட்டத்து யானைக்கு மந்திரம் உபதேசித்து அனுப்புவேன். அதன் மீது நானும் இருப்பேன். ஆனால் நான் மற்றவர் கண்களுக்குப் புலப்படமாட்டேன். அதுதான் நான் பெற்ற வரங்களுள் ஒன்று. எனவே, அந்த யானைக்கு அரசகுமாரியாகிய நீ மாலையிட வேண்டும். எனது படைகள் முழங்கும். உனது தந்தை துவஷ்டாராஜன் நிச்சயம் மறுப்பார். ஆனால் போரிட்டு உன்னை மணப்பதும் சிறையெடுப்பதற்குச் சமானமானதே! அதனால் நீ என்ன செய்யவேண்டும் தெரியுமா? எப்படியாவது முயன்று எனது யானைக்கு மாலையிட்டு விடவேண்டும். உடனே எனது யானை உன்னைத் தூக்கி மேலே அமர்த்திக் கொள்ளும். நீ எனது பக்கத்தில் முறைப்படி அமர்ந்து கொள்வாய்!"

"நல்ல யோசனை பிரபோ! என் கண்களுக்காவது நீங்கள் தெரிவீர்கள் அல்லவா?"

"நிச்சயம் தெரிவேன். உன்னை என் பக்கத்தில் அமர்த்திக் கொண்டதும் மற்றவர்களுக்கும் காட்சியளிப்பேன். நீ மற்றவர்கள் காண யானை மீதிருந்தே எனக்கும் மாலையிடுகிறாய்! இதன் மூலம் நீ விரும்பி என்னை ஏற்றாய் என்கிற உண்மை உலகிற்குப் பிரகடனமாகும்."

"அப்படியே செய்வேன் பிரபோ! ஒரு முகூர்த்த நாளில் இந்த ஏற்பாட்டினைச் செய்யுங்கள். எதிர்பார்க்கிறேன்."

"அடுத்த முகூர்த்தத்திலேயே இது நடந்து முடியும்!"

பகதத்தனாகிய நரகாசுரன், அன்புக் காதலி கசேருவை உச்சி முகர்கிறான்.

இருவரும் சற்றுநேரம் உற்று நோக்கிய பிறகு விடை பெற்றுப் பிரிந்தனர்.

ஒரு நல்ல முகூர்த்த நாளில்...

* பிராக் சோதிஷப்பட்டினமே மகிழ, படைகளுடன் பட்டத்து யானையில் அமர்ந்து உவகை பூக்கப் புறப்படுகிறான் நரகாசுரன்.

அமைச்சர்களான அயக்கிரீவன், பஞ்சகன், நிகம்பன், பிராபணன், முரன் ஆகியோர் முன்னிருந்து வழிகூட்டி வைக்கின்றனர்.

அதிதியிடமிருந்து பறித்த காதணிகள் செவிகளில் ஒளி உமிழ்கின்றன. வருணனிடமிருந்து பறித்த குடை நிழல் தருகிறது.

மார்பில் மந்திரம் தோய்ந்த மணிமாலை.

பலகாவத தூரம் கடந்து துவஷ்டாராஜ பட்டினத்தை அடைகிறார்கள். பிராக் சோதிஷப்பட்டினத்துப் படைகள் என்றாலே அந்நாளைய எல்லா தேசங்களுக்கும் அலர் கண்டுவிடுமே! துவஷ்டாராஜ பட்டினம் எம்மாத்திரம்?

தலைநகரின் புறப்புறத்தில் நரகாசுரப் படைகள் தண்டு இறங்குகின்றன.

செய்தி கேள்விப்பட்டு செயல்மறந்து போனான் துவஷ்டாராஜன்.

ராணி விரோசனையோ விதிர்ந்து வியசனித்துப் போனாள்.

ராஜ்ய பரிவாரங்களோ தொலைந்தோம் என்று துவண்டு போயின.

ஆனால் ராஜகுமாரி கசேரு?

கற்கண்டுச் செய்தி கேட்டு, கனி இதழில் தேன் சிந்தினாள்.

எப்படி எதிர்ப்பது? எவ்வாறு வெற்றி கொள்வதென்றே புரியவில்லை. வீணில் கோட்டைக் கதவங்களை அடைத்து வைப்பதில் பயனில்லை. மாயஜாலம் தெரிந்த அரக்கர்களான நரகாசுர பரிவாரங்கள் கோட்டையைத் திறந்து துவம்சம் செய்வதைவிட, அதனைத் திறந்தே வைத்துவிடுவது என்று தீர்மானிக்கிறான் அரசன் துவஷ்டாராஜன்.

* அஸ்ஸாமில் உள்ள 'காமருபம்' தான் இந்தப் பட்டினம் என்கிறது அபிதான சிந்தாமணி.

"என்ன பிரபோ இது?"

விரோசனையின் வேதனைக்குரல்.

"என்ன செய்வது? எதிர்ப்பதைவிட சமாதானம் மேல்!"

"என்ன நோக்கோடு இந்த யுத்தம்?"

"யாருக்குத் தெரியும்?"

"என்னைக் கேட்டால் இந்த யுத்தம் நமது மகள் கசேருவை முன்னிட்டுத் தானிருக்க வேண்டும்."

"எனக்கு அப்படித் தோன்றவில்லை"

"ஒரு வேளை அப்படியிருக்கு மானால்?"

"நான் பரந்தாமன் கொடுக்கிற யோசனைப்படி செய்திட வேண்டியது தான். வா மஞ்சத்துக்குச் செல்வோம். ஒருவேளை நமக்கு இது கடைசி மஞ்சமாகவும் இருக்கலாம்."

"பிரபோ!"

"பேச்சுக்குச் சொன்னாலும் உண்மை யாகவும் இருக்கலாம். வா விரோசனை!"

துவஷ்டாராஜன் மட்டுமா இவ்வாறு சிந்தித்துச் செயல்பட்டான்? அன்றிரவு அந்தத் தலைநகர் வாழ்மக்கள், நாளை விடியுமோ, விடியாதோ என்பது போல வரும் பயணத்தை எல்லாம் அனுபவிக்க வேண்டும் என்கிற வேட்கையில் மூழ்கினர்.

பொழுது பலபலவென்று விடிந்து கொண்டிருக்கிறது.

நகரமே அஞ்சியஞ்சிச் செத்துக் கொண்டிருக்கிறது.

வந்திருப்பவன் அசகாய சூரனான நரகாசுரனாயிற்றே!

பகதத்தனான நரகாசுரன் குளித்து முடித்து, மந்திரங்களை உச்சாடனம் செய்து கொண்டு யானை மீது அம்பரிக்கிறான்.

பிராக்சோதிஷ நகர வீரர்கள் தங்கள் அரசனுக்கு வாழ்த்துக்கூறிப் புறப்படு கிறார்கள். படைகள் கோட்டை வாசலை நெருங்குகின்றன.

என்ன ஆச்சரியம்! யானை மீது இருந்த அரக்க அரசன் நரகாசுரனைக் காணவில்லையே!

படைகள் வியந்தாலும் தங்கள் அரசனின் மாயஜாலம் பற்றி அறிந்தவர் களாதலால் ஏதும் அஞ்சவில்லை.

கோட்டையை நெருங்கியதும் அதன் கதவங்கள் திறந்து கிடப்பதைக் கண்டு நரகாசுர வீரர்கள் மேலும் வியந்தனர்.

துவஷ்டாராஜன் பயந்து திறந்து விட்டுவிட்டானா? அல்லது அரசர் நரகாசுரனின் மாயவித்தையாக இருக்குமோ?

கோட்டைக்குள் நரகாசுரன் படைகள் நுழைகின்றன.

ஆ! ஒருவரும் எதிர்க்கவில்லையே! அனைவரும் நிராயுதபாணியாகவே நின்றிருக்கிறார்களே!

யானை, அரண்மனை முகப்புக்குச் சென்று நின்றது.

அரசன் துவஷ்டாராஜன் வணங்கியே வரவேற்கிறான்.

யானை மீது ஒருவரையும் காண வில்லை. நரகாசுர அரசன் வந்திருப் பதாகச் சொன்னார்கள். ஆனால் யானை மீது வெறும் அம்பாரமிருந்ததேயன்றி ஒருவரையும் காணவிலலையே! - துவஷ்டாராஜன் சேனைநாயகத்தை நோக்கிக் கேட்டான்.

"சேனை நாயகரே! எங்கள் மீது படை திரட்டி வரக்காரணமே இல்லை. நாங்கள் எந்தப் பிழையையும் செய்யவில்லை. எந்த வன்மமும் இல்லை. நாங்கள் என்ன செய்தோம் என்று இந்தப் படை?"

சேனை நாயகம் உற்றுக் கவனிக் கிறான். நேற்றிரவே அவனிடம் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லியிருந்தான் அரசன் நரகாசுரன். எனவே சேனை நாயகம் சொன்னான்.

"ராஜன்! எந்த வன்மமும் இல்லை. எங்கள் அரசர் உங்கள் மகளை முறைப்படி மணந்து கொள்ள விரும்புகிறார். வீணில் சிறையெடுத்து அவர்களைப் பட்டத்தரசி யாக்கிக் கொள்ள விரும்பவில்லை. உங்கள் மகளைப் பட்டத்தரசியாக்கிக் கொள்ள விரும்பியது உங்கள் பாக்கியம். எனவே உங்கள் மகள் யானைக்கு மாலை அணிவித்துவிட்டால் ஒரு துரும்பு சேதமின்றிப் படைகள் திரும்பும், மறுத்தால், நகரம் துவம்சம்!"





வௌவால் : நம்மைத்தவிர மத்த எல்லாருமே ஏன்தான் தலைகீழாக இருக்கிறார்களோ?

கணீரென்று துவஷ்டாராஜன் சொன்னான்:

"சேனை நாயகரே! எனது நகரம் துவம்சமாகட்டும், கவலையில்லை. எனது மகள் ஓர் அரக்கனை மணப்பதை விட இந்த நகரம் பெரிதன்று."

துவஷ்டாராஜன் இவ்விதம் சொன்ன மறுகணம், நரகாசுர வீரர்கள் 'ஒ' வென்று குரல் கொடுத்து எழுச்சி கண்டனர்.

அவர்களை அமைதியாக இருக்கு மாறு கையமர்த்திய சேனைநாயகம், "ராஜன்! மீண்டும் சந்தர்ப்பம் தருகிறேன். யோசித்து விடை கூறுங்கள். உங்கள் மகளை யானைக்கு மாலையிடச் செய்யுங்கள்."

"அது முடியாது"

துவஷ்டாராஜன் இவ்வாறு கூறி முடித்த அடுத்த கணம்...

இளவரசி கசேரு, கையில் மாலை யுடன் ஓடிவந்து எவரும் தடுத்து நிறுத்துவதற்கு முன், யானைக்கு அணிவித்துவிட்டாள்.

யானையும் கொஞ்சமும் தாமதி யாமல், கசேருவைத் தூக்கி அம்பாரியில் இருத்திக் கொண்டது.

கசேரு சொன்னாள் :

"தந்தையே! ஒரு மகளுக்காக தேசத்தை துவம்சம் செய்யும் நீங்கள் அரசராக முடியாது. நான் எனது தேச நலனுக்காக பிராக்சோதிஷ அரசரை மணக்கச் சம்மதித்து இச்செயலைச் செய்தேன்!"

கசேரு சொல்லி முடித்த மறுகணமே, பகபகவென்ற சிரிப்பொலி...

யானை மீது நரகாசுரன் அனை வருக்கும் காட்சி தருகிறான்.

"கசேரு! உனது மனத்திடத்தை மெச்சுகிறேன்!" என்றான் நரகாசுரன்.

கசேருவும் மனமகிழ்வுடன் நரகா சுரனுக்கு மாலையணிவித்ததைக் கண்டு இரு தரப்பு வீரர்களும் கோஷமிட்டு வாழ்த்தத் தொடங்கினர்.

துவஷ்டாராஜன் என்ன செய்ய முடியும்?

மகளின் விருப்பத்தை ஏற்று வாழ்த்து வதைத் தவிர வேறு வழி?

கசேருவைப் பட்டத்தரசியாகக் கொண்டு, தலைநகர் நோக்கித் திரும்பினான் நரகாசுரன்.

பிராக் சோதிஷப் பட்டினமே கோலா கலமாக விளங்குகிறது.

அன்றிரவு...

நகரம் முழுவதும் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன.

தீபங்களை ஏற்றி வழிபட உத்தரவு பணித்திருந்தான் நரகாசுரன்.

வீட்டுக்கு வீடு, திண்ணைக்குத் திண்ணை அகல் விளக்குகள். அனைவரும் புத்தாடை பூண்டு புளகக் கூத்தாடுகிறார்கள்.

அரண்மனை மேன்மாடத்திலிருந்து கவனிக்கிறான் நரகாசுரன். அன்றைக்கு அவர்களுக்கு முதலிரவு.

இருவரும் மஞ்சம் நாடிச் செல்கிறார்கள்.

"பிரபோ! இப்படி ஏன் தீப வழிபாடு அலங்காரம்?" என்றாள் கசேரு.

"கசேரு! எனக்குப் பிடித்தது தீப வழி! *எனக்குப் பிறகு மக்கள் என்னை இப்படியே நினைவு கூர நான் விரும்புகிறேன்."

"பிரபோ!"

"எனது ஆசையைச் சொன்னேன்"

"பிரபோ! நீங்களோ மகாவிஷ்ணுவின் புத்திரர். அந்த மகாவிஷ்ணுவின் அவதாரமான கண்ணபரமாத்மாவை ஏன் ஜன்மப் பகைவனாகக் கொண்டு அடிக்கடி தூஷித்து வருகிறீர்கள்? அவரது பகை நமக்குத் தேவைதானா?"

"என்னை வெல்லக் கண்ணனால் தான் முடியும்."

"தெரிந்துமா பகைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"தெரிந்தே பகைக்கிறேன்."

"காரணம்!"

"கண்ணே! எனது இறப்பு ஒரு கேவலமான ஜன்மத்து மூலமாக இருக்கக் கூடாது. எனவே கண்ணனைப் பகைக்கிறேன். அந்தக் கிருஷ்ண பரமாத்மாவின் மூலம் எனது ஆயுள் கெடுக என்ற தவத்தின் விளைவே இந்தப் பகை. அது இப்போது நேரப் போவதில்லை. நீ பயப்படாதே! நன்கு ஆண்டு அனுபவித்த பிறகே இது நிகழும். வா! மஞ்சம் காத்திருக்கிறது".

இருவரும் மஞ்சத்தில் அமர்கிறார்கள்.

இன்பம் அவர்களைத் தாலாட்டத் தொடங்கியது.

* தீப வழியே தீபாவளியானது.

## முத்து எத்திராசன்



# திரும்பிச் செல்ல முயல்கின்றேன்

காற்றில் இலைகள் நறுமணத்தைக்
கலந்து வீசும் தயிலமரக்
காட்டில் நானும் நண்பனுமாய்க்
காலால் நடந்து செல்கையிலே
மேட்டூர் - ஊட்டி வரும்வழியில்
மக்க ளில்லா அவ்விடத்தில்
பூத்தும் பூக்கா வயதுடைய
பெண்கள் இருவரைக் கண்டோமே!

போட்டி போட்டு அப்பெண்கள்
பரல்போல் கிடக்கும் காய்களையே
கூட்டித் துடைப்பம் கொண்டெடுக்கக்
கண்டோம். 'எதற்கு, ஏன்?' என்று,
கேட்க அவர்கள் சொன்னார்கள்;
'கஞ்சி காய்ச்ச விறகில்லை
தீக்கு நல்ல விறகெனினும்
துட்டு இல்லாப் பொரு'ளென்றார்.

மண்ணின் மைந்தர் வாழ்வதற்கு
மரங்கள் தந்த தயிலக்காய்
சென்னைத் தெருவில் மருந்தென்று
சிலபேர் விற்கக் கண்டேன் நான்.
நண்பன் சொன்னான் : "எப்பொருளும்
நிறையக் கிடைப்பின் மலிவாகும்.
பொன்னைப் போன்று அரிதாகப்
பெறுவோ மானால் விலை மிகுமே."

காற்றில் தயில மரமெல்லாம்
கற்பூ ரம்போல் இனிதாகக்
காட்டிய அன்றைய நினைவினிலும்
கன்னிப் பெண்கள் தயிலமரக்
காய்கள் பொறுக்கும் அழகினிலும்
காலங் கடந்த சில நாளில்
சென்னைத் தெருவில் அக்காய்கள்
சில்லறை யான கதையினிலும்

ஒன்றன் பின்பு ஒன்றாக
உள்ளத் துலாவிய சிந்தனையில்
நின்ற இந்த வரிகளைத்தான்
நீங்கள் கண்டீர்! நான் மட்டும்
தின்ற ருசியைக் கண்டவன்போல்
திரும்பிச் செல்ல முயல்கின்றேன்
இன்றும் அதற்கு வழியில்லை
இயற்கைக் கென்மேல் அன்பில்லை.




# 'மாடர்ன் ஆர்ட்' மஹாகணபதி

'நவீன பாணி' கலைக்கு 'மாடர்ன் ஆர்ட்' கலை என்று பெயர். பழைய மரபை ஒட்டிய கலைகளுக்குப் புறம்பாக நம் காலத்தில் தோன்றிய 'புதுக்கலை' மரபாகும்.

மொகஞ்சதாரோ காலத்திலிருந்து இன்றுவரை பாரதத்தின் கலை வளர்ச்சியைப் பார்த்தோமானால் பல மாறுதல்களுடன் புதுமையையும் பெற்று வந்துள்ளது. புதுப்புது மாறுதல்கள் ஏற்பட்டாலும், பழைய மரபை மக்கள் மறந்துவிடவில்லை; புறக்கணிக்கவும் இல்லை. 'நவீன பாணி' (மாடர்ன் ஆர்ட்) மரபு வெளிநாட்டிலிருந்து நம் நாட்டிற்குள் புகுந்ததொரு கலையாகும். இன்று நம் பாரத 'நவீன பாணி' கலைஞர்கள்கூட பாரத மரபை ஒட்டி தங்கள் கலைப் படைப்புகளை உருவாக்குகிறார்கள்.

அன்று மதமும், தத்துவமும் இணைந்த நிலையில் கலைப் படைப்புகளைப் படைத்து வந்தார்கள். இன்று ஓவியமாகட்டும், நடனம், சிற்பம் மற்றும் கவிதை, கதை, நாவல்கள் ஆகட்டும், புதுப்பாணியைப் புகுத்தி வருகிறார்கள். பழைய மரபுக் கலைகள் எதுவாயினும், ஒரு பொருள் இருக்கும்; தத்துவம் இருக்கும்.

நடராஜப் பெருமான் கைகளில் ஏந்தியுள்ள மான், மழு, அனல், அவரைச் சுற்றியுள்ள பிரபை எல்லாம் தத்துவ அர்த்தங்களுடன் அமைந்துள்ளன. இப்படியாக பழைய மரபுக் கலைகள் தத்துவங்களுடன் இருக்கும். அக்கலைகளுக்கு இலக்கண விதிகள் உண்டு.

இன்று பழைய மரபுகளின்று தடம் புரண்டு, முறைகள் மாறி புதுப்புதுப் படைப்புகள் வருகின்றன, 'நவீன பாணி' என்ற பெயரில்.

'நவீன பாணி' முறையில் படைக்கப்பட்ட கலைகள் எந்த வடிவம், எந்தக் கருத்தைத் தெரிவிக்கின்றன என்று கூறமுடியாத நிலை. அருவத்தை (Aestralt) உருவாக்க 'நவீன பாணி' மரபு உதவும் என்று பல பிரபல 'நவீன பாணி' கலைஞர்கள் கூறுகிறார்கள்.

நவீன மரபுக்கு எந்த வரைமுறையும் இல்லை; சுதந்தரம் அதிகம்; எந்த இலக்கணத்திற்கும் உட்படாததுமான கலை. எவ்வித உணர்ச்சியும் ஏற்படாது, மாறாக குழப்பந்தான் ஏற்படும். இவ்வகைக் கலைஞர்களைக் கேட்டால் அவர்கள் தரும் விளக்கம் நமக்குப் புரியாது. நாமும் புரிந்த மாதிரி தலையை அசைத்துவிட்டு 'அப்படியா!' என்று சொல்லுவோம்; அவ்வளவுதான்.

'நவீன பாணி' கலைப் படைப்புகள் மக்களின் மதிப்பைப் பெறாவிட்டாலும், விமர்சனங்களுக்குட் பட்டதாக இருக்கின்றன.

இன்று பழைய மரபுக் கலைகளுடன் 'நவீன பாணி'யைப் புகுத்தி, பாரதப் பண்புடன் படைத்து வருகிறார்கள். இது சற்று ஆறுதல் தரும் விஷயமாகும்.

இனி 'நவீன பாணி' முறையில் உருவாக்கப்பட்டு வரும் மஹாகணபதியைத் தரிசிப்போம்.

நாம் வணங்கும் விநாயகப் பெருமான் கருணை காட்டி அருளும் தெய்வம். அவரை முன்னிலைப்

சாந்தினி

படுத்திய பிறகுதான் எச்செயலையும் தொடங்குவோம். அவர் எந்த உருவிலும் வந்து அமர்ந்து கொண்டு மக்களுக்கு அருள்பாலிப்பார்.

பிள்ளையாரைப் பற்றி இரண்டு பழமொழிகள் உண்டு. ஒன்று 'பிடித்து வைத்தால் பிள்ளையார்' என்பது. இப்பழமொழியின் வாயிலாக, பின்வரும் பொருள்களில் ஆவாஹனம் ஆகி மக்களுக்கு அருள்புரிகிறார்.

அவையாவன: கல், மரம், செம்பு, வெள்ளி, தங்கம், மஞ்சள், மண், பசுஞ்சாணி, மாக்கல், வெள்ளைச் சலவைக்கல், பளிங்கு (ஸ்படிகம்), முத்து, பவழம், யானைத்தந்தம், வெள்ளெருக்கு வேர், அத்தி மரம், பசு வெண்ணெய், அரைத்த சந்தனம் - சந்தனக் கட்டை, வெண்ணீறு - சர்க்கரை - தர்ப்பைப் புல் மற்றும் ஹோமத்தீ போன்றவற்றால் அவரைப் பிடித்து வைத்து வழிபடுவதுண்டு. இம்முறை தொன்று தொட்டு, இன்று வரை தொடர்ந்து வரும் வழிபாட்டு முறை யாகும். சாஸ்திர, ஆகம முறைப்படி உருவமைத்து விநாயகரை மக்கள் வழிபடுவார்கள்.

இரண்டாவது பழமொழி: 'பிள்ளையார் பிடிக்கப் போய் குரங்காய் முடிந்த மாதிரி' என்பதாகும். இன்றைக்கும் பொருத்தமான பழமொழி. 'நவீன பாணி'







முறையில் உருவாக்கும் பிள்ளையார் உருவம் விந்தையாக இருக்கும். இவ்வுருவம் பிள்ளையார்தானா? அழகான விநாயகரை இப்படி அலங்கோலமாகப் படைத்திருக்கிறார்களே! என்று நாமும் நினைப்போம்; பாமர மக்களும் நினைப்பார்கள்.

இவையெல்லாம் பூஜைக்கும், வழிபாட்டிற்கும் உதவுமா? வீட்டின் கூடத்தில் அலங்காரப் பொருள்களாக வைக்கலாம். 'நவீன பாணி' விநாயகர் மக்கள் மனத்தில், மரபு விநாயகரைப்போல் இடம் பெறுவாரா?

ஆனால் 19 ஆம் நூற்றாண்டின் விநோத விநாயக சிற்பங்களை வடநாட்டு ஆலயங்களில் காணலாம். இன்றும் வழிபாட்டில் இருந்து வருகின்றன. 'நவீன பாணி' கலை மரபைச் சார்ந்ததாகத் தோன்றும். அந்தக் காலகட்டத்தில் வடநாட்டின் சிற்ப வளர்ச்சி அந்த அளவில்தான் அமைந்துள்ளது.

சோழ, பாண்டிய, விஜய நகர மற்றும் சாளுக்ய, ஹொய்சாள காலத்து கணபதியின் உருவமைப்பு மிகவும் சிறப்பாக இருக்கின்றன. மதுரை மீனாட்சி ஆலயத்திலுள்ள 'முக்குறுணி' பிள்ளையாரின் திருவுருவம் கம்பீரமாகவும், அழகாகவும், பெரிய அளவில் இருக்கிறது.

பிள்ளையாரின் உருவமைப்பு தமிழர்க்கே உரியதாகும். அழகான விநாயக உருவங்களைத் தமிழகத்தில் தான் அதிகமாகக் காண முடிகிறது.

இன்று விநாயக சதுர்த்தியன்று பெரிய அளவுகளில் விநாயக உருவங்கள் வீதியில் உலா வருவதைக் காண்கிறோம். பார்ப்பதற்கு மகிழ்ச்சியும், பரவசமும் ஏற்படும்.

விநாயகர் உருவமைப்புக்கு சிற்ப, ஆகம விதிகள் உண்டு. இன்றும் இவ்விதிகளைக் கடைப்பிடித்து உருவங்களை மரபுக் கலைஞர்கள் உருவாக்குகிறார்கள்.

இக்கட்டுரையில் 'நவீன பாணி' மரபை ஒட்டி சில பிள்ளையார் உருவங்களைக் காணலாம். விநோத வடிவங்கள், அசாதாரணக் கற்பனைகள் எல்லாம் நமக்கு வியப்பைத் தருவதில் அதிசயமில்லை.

'உ' என்ற எழுத்தை, பிள்ளையார் சுழி என்று கூறுகிறோம். பிள்ளையார் சுழியை எழுதிவிட்டுத்தான் பிறகு விஷயங்களை எழுதத் தொடங்குகிறோம். அதேபோல் ஒரு வெற்றிலை மீது கூர மஞ்சள் தூளைக் கொண்டு முக்கோண வடிவில் அமைத்து பூஜை செய்கிறோம். பூஜைக்குத் தொடக்கமாக மஞ்சள் பிள்ளையாரை வணங்கி, பிறகு விரிவான பூஜைகளுக்கு ஏற்பாடு செய்கிறோம். இப் பழக்கம் எல்லாம் தொன்றுதொட்டு வரும் வழக்கமான வழிபாடாகும்.

வித்தியாசமான கணபதி வடிவம் ஒன்றை, புதுக்கோட்டை அருகிலுள்ள திருக்கோகர்ண ஆலயத்தில் காணலாம்.

காசியில் 'துண்டி விநாயகர்' மிகவும் பிரசித்தமானவர். சிவப்பு வர்ணத்தில் மக்கள் நீண்ட காலமாகவே வழிபட்டு வருகிறார்கள். சிற்பம் 'நவீன பாணி'யை நினைவுபடுத்தும்.

வடநாட்டுக் கோயில்களில் காணப்படும் விநாயகரின் திருமேனிகள் நூதன உருவமைப்புடன் காணப்படுகின்றன. சிற்பத்திலும், உலோக வடிவத்திலும் விநோதமான பிள்ளையார் வடிவங்களைக் காணலாம். இவையெல்லாம் புது மரபு வடிவங்கள் போல் உள்ளன.

மத்தியப் பிரதேசத்தில் 19 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வெண்கல விநாயகத் திருமேனிகள் உள்ளன. இவற்றை நோக்கும்போது 'நவீன பாணி' கலையை நினைக்கும்படி இருக்கின்றன.

இன்று 'நவீன பாணி' மரபுக் கலைஞர்கள் விநாயகப் பெருமானின் உருவங்களை ஓவியங்களிலும், உலோகத்தைப் பயன்படுத்தியும் படைத்து வருகிறார்கள். இக் கலைஞர்களின் கற்பனையே தனித் தன்மையுடைதாக இருக்கும். விநாயகப் பெருமானின் ஏதாவது ஓர் அம்சம் இவர்களுடைய படைப்புகளில் தெரியும்.

'நவீன பாணி' கலைஞர்களுக்கு மக்களிடையே போதிய வரவேற்பு கிட்டாவிட்டாலும், அவர்களது படைப்புகள் நம்மிடையே நிலைத்து வளர்ந்து வருகின்றன என்பதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.









'மாடர்ன் ஆர்ட்' ஓவிய முறையில் மஹா கணபதி

1

19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மத்தியப் பிரதேசத்தில் உள்ள கணபதி படிமம். 'பஸ்தார்' எனும் ஊரில் உள்ளது. →



3

யானை மீது கணபதி அமர்ந்துள்ள காட்சி புதுமையானது. 'நவீன பாணி' மரபுக் கலையில் உருவானதைப் போன்ற இவை, 19-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை ↓



2

நன்றி: 'ஹிந்து' ‹1,2,3›



காசியில் உள்ள துண்டி விநாயகர் புதுமரபை ஒட்டிய கலையைப் போன்று உள்ளது - பழமையான உருவம்.





'மாடர்ன் ஆர்ட்' கணபதி



பழைய மரபைச் சார்ந்த விநாயகர்.



'நவீன பாணி' மஹா கணபதி ஓவியம்

ஸைபா

# வடநாட்டு கணபதி மூர்த்திகள்



ஸ்ரீ மதுகைடப வரதர்
(ஸித்தடேக்)

வட நாட்டில் சில கோயில்களில் பழமையான சில கணபதி வடிவங்கள் நூதனமான வடி வில் உள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்கே காணலாம். 'புது மரபு' பாணியைச் சார்ந்ததாகக் காணப்பட்டாலும், இவையெல்லாம் காலத்தால் பழமையானவையே. அந்தக் காலக் கட்டத்தில் உள்ள சிற்ப அமைதியைக் காண முடிகிறது.



ஸ்ரீ திரிபுராரி வரதர்
(ரஞ்சண்காம்)













மயூரேசம் கணேசர்

ஸ்ரீ பிரும்மவரதர் தேவூர்

ஸ்ரீ விக்னராஜர் (விஜய்பூர்)

சுதந்தர பாரதத்தில் வெளிநாட்டுக் கலை அம்சங்கள் பாரதப் பண்பாட்டுடன் கலந்துவிட்டன. இன்று இக் கலைகள் தனித்து நிற்கவில்லை. ஒரு குறை - பழைய மரபைக் கொண்டு படைக்கும் கலைஞர்களை 'நவீன பாணி' கலைஞர்கள் மதிப்பதில்லை என்கிறார்கள் சிலர்; வருந்தத்தக்க விஷயந்தான்.

காந்தி மகான் நம் கலாசாரத்தைப் பற்றி சில வார்த்தைகள் சொன்னார். அதை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். அவர் சொன்னார்: 'என் வீட்டைச் சுற்றி (நாடு)எல்லாப் பக்கங்களிலும் சுவர் கட்டி, ஜன்னல்களை அடைத்து வைக்க நான் விரும்பவில்லை. இயன்ற அளவு எல்லா நாட்டுக் கலாசாரங்களும் என் வீட்டைச் சுற்றி வரவேண்டும். ஆனால் என் கால்களைப் பெயர்க்கும்படி யாரையும் விட மாட்டேன்' என்று.

காந்தி மகான் சொன்ன சொற்படி 'நம் நாட்டில் பல நாட்டுக் கலாசாரங்கள் புகுந்துள்ளன. அது தவறில்லை. ஆனால் நம் நாட்டுக் கலைப் பண்பாடுகள் அழிந்துவிடக் கூடாது; காப்பாற்ற வேண்டும்' என்ற பொருளில்தான் கூறினார்.

'மாடர்ன் ஆர்ட்' மஹாகணபதி எந்தக் கலாசாரமாயினும், அவற்றில் வந்து அமர்ந்து கொண்டு அருள் புரிவார். சந்தேகமில்லை. ஏனெனில் அவருடைய அருட்கருணை அவ்வளவு பெரிது.









# சுந்தரர்...சுந்தரி

## நா.ராமச்சந்திரன்

"அதோ போகிறாரே பார்த்தீர்களா?" என்று இரைந்து கத்தினார் என்னுடன் நடந்து வந்து கொண்டிருந்த நண்பர் கந்தசாமி. நாங்கள் இருவரும் நடந்து கொண்டிரு, து இடம் திருநள்ளாறு. அவர் கை காட்டிய திசையை நோக்கி என் பார்வையைத் திருப்பினேன். நாங்கள் போய்க் கொண்டிருந்த திசையிலேயே வலப் பக்கம் ஓரமாக, கையில் ஒரு தடியுடன் சென்று கொண்டிருந்தார் அவர். அவருடைய தலையின் பின்பக்கமுள்ள ஜடாமுடியிலிருந்து அவர் சோமுப் பண்டாரம் தான் என்று எனக்கு நன்கு தெரிந்துவிட்டது. அவரைப் பார்த்துத் தான் எவ்வளவு காலமாகிவிட்டது! நிச்சயம் ஐந்து வருடங்களாவது கடந்திருக்கும்.

"ஆமாம் சோமுப் பண்டாரம்தான். வேகமாக வாருங்கள். அவரைப் போய்ப் பிடித்துவிடலாம்" என்று நண்பரிடம் பேசிக் கொண்டே நடையைத் துரிதப் படுத்தினேன்.

"வணக்கம்..." என்று குரல் கொடுத்தவுடன், சோமுப்பண்டாரம் என்னைப் பார்த்துத் திகைத்துப் போனார்.

"யாரு சந்துரு சாரா? என்ன சாமி சௌக்கியமா? உங்களைப் பார்த்துத்தான் எவ்வளவு காலமாகிவிட்டது? இந்தப் பண்டாரம் ஓர் ஊர் என்று இருந்தால் தானே?' சொல்லிவிட்டுச் சிரித்தார் சோமு.

"கந்தசாமிதான் உங்களை அடையாளம் காட்டினார்..." என்று இழுத்தேன்.

"அது சரி. ஏது இவ்வளவு தூரம்? சனிபகவான் தரிசனத்திற்கா?"

"பிறகு எதற்குத் திருநள்ளாறு வரப் போகிறேன்? கந்தசாமிக்கு மேஷ ராசியாம். ஏழரை நாட்டுச் சனி அதன் வேலையைக் காட்டக்கூடாது என்று தரிசிக்கக் கிளம்பினார். அவருடன் கிளம்பி விட்டேன்".

நாங்கள் மூவரும் நடந்த வண்ணம் நளதீர்த்தக் கரையை அடைந்து விட்டோம்.

"நல்ல காரியம்தான். கோயில் திறக்க இன்னும் ஒரு மணி நேரம் ஆகும். இங்கு சற்று உட்காருவோமா?" என்று கேட்டார் சோமுப்பண்டாரம். எனக்கு ஒரே குஷி. இன்னும் ஒரு மணி நேரம் இருக்கிறது. பண்டாரத்திடம் எப்படியும் ஒரு நல்ல கதையை வாங்கிவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டேன்.

"உங்கள் ஊர் சிதம்பரம் இப்போது எப்படியிருக்கிறது? ஏதோ கோயில் நகை திருட்டு என்று பேப்பரில் படித்தேன். ஒரு தீட்சதர் பெயர் கூட அதில் அடிபட்டது" என்று மெதுவாகப் பேச்சை எடுத்துப் பண்டாரத்தின் வாயைக் கிளறினேன்.

"ஆமாம். ஆமாம்! நன்றாக ஞாபகம் வைத்திருக்கிறீர்களே. அம்மனின் வைர மாலை காணாமல் போய்விட்டது. அன்று காவல் காத்திருந்த தீட்சதர் மேல் கேஸ் போட்டார்கள்" என்றார் பண்டாரம்.

"அப்புறம் என்ன ஆனது. நெக்லெஸ் கிடைத்ததா?" எனப் பரபரப்புடன் கேட்டேன்.

பண்டாரம், "நீங்க பேப்பர் படிக்கலையா? அந்தக் கேஸ் அஞ்சு வருஷம் நடந்தது. கடைசியிலே உச்ச நீதிமன்றத்தில் தீட்சதர் நிரபராதி என்று தீர்ப்புக் கூறி, அவருக்கு விடுதலை அளித்து விட்டார்கள்" என்றார் சாந்தமாக.

"அப்படியானால் வைரமாலை போனது போனதுதானா? தீட்சதர்தானே காவலாளியாக இருந்தார்? அவருக்கு தண்டனை அளிக்க வேண்டாமா?" என்று கேட்டேன் நான்.

சோமுப்பண்டாரம் கொஞ்சநேரம் மௌனமாகக் கண்களை மூடிக் கொண்டார். பிறகு பார்வையை என் பக்கம் திருப்பிச் சொன்னார். "சாமி! தீட்சதருக்குத் தண்டனை கொடுக்கத் தில்லை அம்பலவன் சம்மதிப்பானா? தீட்சதர் நல்ல சாத்வீகி. தில்லை நடராஜனை இருபது வருடங்கள் பூஜித்தவர். ஆண்டவனைப் பக்தி



சிரத்தையோடு தீண்டி, அவருக்கு அபிஷேகம் செய்தவர்; அலங்காரம் செய்தவர். அந்தப் பக்தருக்கு ஓர் ஆபத்து, அபவாதம் என்றால் குஞ்சித பாதன் சும்மா பார்த்துக்கொண்டு இருப்பாரா? சிறிது காலம் சோதனை செய்துவிட்டு அவரைக்காப்பாற்றி விட்டார்."

"பின்பு திருடன் எங்கு போனான் வைரமாலை போன இடம்தான் எங்கே?" என்று பரபரப்புடன் கேட்டேன் நான்.

"ஏன் சாமி டென்ஷனாகறீங்க? அவனுக்கு அது தெரியாதா? அந்தக் கயவனுக்குக் கட்டாயம் தில்லை நடராஜன் தண்டனை அளித்திருப்பான். இந்த மாதிரி ஒரு சம்பவம் தேவூரில் நடந்தது எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது" என்று கண்களை மறுபடியும் மூடிக் கொண்டார் பண்டாரம்.

சோமுப்பண்டாரம் கதை சொல்ல வந்து விட்டார் என்று எனக்குத் தெரிந்துவிட்டது.

"தேவூரில் நடந்தது என்ன? அது எங்கள் ஊர் ராதாமங்கலத்துக்குப் பக்கத்தில்தான் இருக்கிறது" சொல்லிக் கொண்டே நான் பண்டாரத்தின் அருகே வந்து அமர்ந்து கொண்டேன். அவரும் தேவூரில் நடந்த விஷயத்தைச் சொல்ல முனைந்தார்.

✤ ✤ ✤

சுந்தர குருக்கள், பெயருக்கு ஏற்றபடி சுந்தரமாகவே இருப்பார். தலையில் கட்டுக்குடுமி ஆஜானுபாகுவான சரீரம். சிவந்த அவர் மேனியின் கழுத்தில் அவர் அணிந்திருந்த பொன் பூணோடு விளங்கிய உத்திராட்சக் கொட்டை எடுப்பாக இருக்கும். உத்திராட்சத்தைச் சுற்றியோடிய சிவப்பு நிறக் கயிறு அவர் கழுத்துக்கு அழகு செய்யும். நெற்றியில் துலாம்பரமாக விளங்கிய திருநீறும், சதா சிரித்த வண்ணம் இருக்கும் அவர் முகவிலாசமும் அவரையே தெய்வமாக எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கும். சிக்கென்று அணிந்திருக்கும் பஞ்சகச்ச வேட்டியோடு அவர் நடமாடுவதைப் பார்த்தால், தேவ லோகத்துக் கந்தர்வ புருஷன் பூலோகத்திற்கு வந்து விட்டதைப் போன்ற பிரமிப்பே எல்லாருக்கும் ஏற்படும். நிச்சயம் சுந்தர குருக்கள் சுந்தர புருஷர் என்று தான் சொல்ல வேண்டும்.

அவர் அந்தத் தேவூர் கோயிலுக்கு அர்ச்சகர். பரம்பரை பரம்பரையாக அவர்களுக்கு அந்தக் கைங்கர்யம். அவர் பாட்டனார், முப்பாட்டனார் அதற்கு முந்தியவர்கள் எல்லாரும் கூட இந்தக் கோயிலுக்குப் பூஜை செய்தவர்கள்தாம். அந்தக் கோயிலிலுள்ள பரமேஸ்வரனை விட, தேவிக்கு மவுசு கொஞ்சம் அதிகம். கேட்கும் வரங்களையெல்லாம் அளிக்க வல்ல அந்தப் பர்வதவர்த்தினியை ஆராதிப்பதில் சுந்தர குருக்கள் எல்லையில்லா மகிழ்ச்சியடைவார். அம்மனுக்கு அபிஷேகம் செய்வதிலும், அலங்காரம் செய்வதிலும் அலாதியான நிஷ்காம்ய பக்தி அவருக்கு. வெள்ளிக்கிழமைகளில் அவர் அர்ச்சனை செய்யும் காட்சியைப் பார்த்தவர்கள், பரவசமடைந்து போவார்கள். தெய்வமில்லை என்று வாதிக்கும் நாத்திகன் கூட சுந்தர குருக்கள் அம்பாளை அர்ச்சிக்கும் போது கொஞ்சம் நின்று மெய்மறந்த நிலையில் ஆன்மாவோடு ஒன்றிப் போவான்.

ஐம்பது வயதைத் தாண்டியிருக்கும் சுந்தர குருக்களுக்கு ஒரு சோதனை வந்தது!

அன்று நவராத்திரி வெள்ளிக்கிழமை. பர்வதவர்த்தினி அம்மனுக்குப் பூப் பாவாடை அலங்காரம். அம்மன் ஜகஜ் ஜோதியாய் ஜொலித்துக் கொண்டிருந்தாள். பக்தர்களின் கூட்டமும் அதிகமாக இருந்தது. சுந்தர குருக்கள் பக்தர்களின் அர்ச்சனைத் தட்டுகளை வாங்குவதும், அம்பாளுக்கு அர்ச்சனை செய்துவிட்டு அவர்களுக்குப் பிரசாதங்களைக்கொடுப்பதுமாக இருந்தார். அவர் உடல் முழுதும் வியர்வை வழிந்து அதுவே மின்சாரக் குழல் விளக்குகளில் மின்னிக் கொண்டிருந்தது. பக்தர்கள் கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து இனி ஒருவரும் இல்லை என்ற நிலை வந்தபோது, சுந்தர குருக்கள் சந்நிதியின் வெளிப்புறத்திலிருந்த கடிகாரத்தின் மீது தன் பார்வையைச் செலுத்தினார்.

பளீரென்று மின்னலடிப்பது போல் ஒரு வெளிச்சம் தெரிந்தது. கையில் அர்ச்சனைத் தட்டுடனும், ஒரு பெரிய ரோஜா மாலையுடனும் சுந்தரி,அம்மன் சந்நிதிக்குள் நுழைந்து கொண்டிருந்தாள். அவளுடன் கூட அவள் தாயாரும் வந்திருந்தாள்.

சுந்தரி சுந்தரமாகவே இருந்தாள். அவளுக்காக அந்தப் பெயரா, அல்லது அந்தப் பெயருக்காக அவளா? என்ற ஆராய்ச்சியில் இறங்குவது வீண்வேலை. இரவு மறைந்து, காலை பிறக்குமே அப்போது வானில் தோன்றுமே ஓர் அழகு அப்படி ஓர் அழகு சுந்தரியின் முகத்தில் மிளிரும். நிமிர்ந்த நடையும், நேர் கொண்ட பார்வையும் அவளுடைய முகவிலாசத்தில் நிரம்பி வழிந்தன. நடுத்தர வயதை எட்டிப்பிடிக்கும் நிலையிலிருந்த அவள் உடற் கூட்டில், தொய்வே தெரியவில்லை. அகலமான அவள் கருவிழிகளும் முத்துக் கோத்தாற்போல் இருந்த பல் வரிசையும், தலைக்கேசத்தை அவள் அள்ளி முடிந்து இருந்த லாவண்யமும், அதன் மேல் பல்லக்குப் போல வளைந்து நெளிந்து வைக்கப்பட்டிருந்த மல்லிகைச் சரமும் அவள் அழகுக்கு அழகு செய்து கொண்டிருந்தன என்று தான் சொல்ல வேண்டும்.

சுந்தரி சந்நிதியில் நுழைந்தவுடன் சுந்தர குருக்கள் பரபரப்பு அடைந்தார். அவர் முகமெல்லாம் ஒரே குதூகலம் தான். சுந்தரியை ஏற்கெனவே அவர் அறிவார். தேவூருக்கு அவள் வந்து இரண்டொரு மாதங்கள்தாம் ஆகியிருந்தன. நல்ல பெரியதொரு வீட்டில் அவளும் அவள் தாயாரும் குடியிருந்தார்கள். அதற்குமேல் எந்த விவரமும் குருக்களுக்கு அவர்களைப் பற்றித் தெரியாது. அவ்வப்போது அவள் தனியாகவும், தாயுடனும் கோயிலுக்கு வந்து போவதுண்டு. அப்போதெல்லாம் சுந்தரியுடன் பேச வேண்டும் என்று குருக்கள் நினைப்பார். பக்தர்கள் கூட்டம் இருப்பதால் அவரால் அவளுடன் அதிகம் பேச முடிவதில்லை. ஆனால் சுந்தரியின்பால் தனக்கு, சொல்ல முடியாத இனம் புரியாத ஒரு மோகம் இருப்பதை அவர் அறிவார். அதற்கு என்ன பெயரிட்டு அழைப்பது என்றுதான் அவருக்குத் தெரியவில்லை.

பளீரென்று மின்னல் அடித்து மறைந்து விடுவதுதானே வழக்கம்? ஆனால் சுந்தரி சந்நிதிக்கு வந்து நின்றவுடன் அந்த மின்னல் தோன்றியது தான். மறையவே இல்லை என்பதை சுந்தரர் உணர்ந்தார்.

"வாம்மா... இன்றைக்கு ஏன் லேட்..." என்று கேட்டுவிட்டுச் சுந்தரியின் பதிலுக்காக ஆவலாகக் காத்திருந்தார் குருக்கள்.

"கூட்டம் அதிகமில்லாத நேரமாகப் பார்த்து வரவேண்டும் என்று இந்த நேரத்தை 'சூஸ்' பண்ணினேன்" என்றாள் சுந்தரி. சொல்லிவிட்டு குருக்களை அன்பு ததும்பப் பார்த்துப் புன்னகை பூத்தாள்.

சுந்தர குருக்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. நாம் இருக்குமிடம் பூலோகம்தானா என்று புரியக் கொஞ்சம் நேரம் பிடித்தது. தான் தினமும் வணங்கும் பர்வதவர்த்தினி அம்மன் தான் முன்னே வந்து நிற்கிறாளா? என்று ஒரு கணம் நினைத்துவிட்டார்.

"நானும் கிளம்பலாமா என்று தான் பார்த்தேன். நல்ல வேளை நீங்கள்

வந்தீர்கள். அர்ச்சனை செய்யட்டுமா?'' என்று கேட்டுக் கொண்டே கர்ப்பக் கிருகத்திற்குள் நுழைந்தார் குருக்கள். காம்போதியிலிருந்து ஆரம்பித்து மோகனம், பிலஹரி, கல்யாணி, சங்கரா பரணம் ஆகிய ராகங்களில் அவர் மந்திரங்களைச் சொல்லி அர்ச்சித்த போது, எதிரிலுள்ள அம்பாள் அவரைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருப்பதுபோல அவருக்கு இருந்தது. என்னவோ உற்சாகம், ஒரு குதூகலம், சமுத்திர அலைபோல் அவர் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்ததை அவரால் அறிய முடிந்தது. ஆனால் இதற்கெல்லாம் என்ன காரணம் என்று தான் கண்டு பிடிக்க முடியவில்லை.

கற்பூர ஆர்த்தியை வெளியே எடுத்து வந்து சுந்தரியின் எதிரே நீட்டினார். கற்பூரஜோதியைக் கண்களில் ஒற்றிக் கொண்டு அந்த ஜோதிக்கு இடையே ஒரு தடவை... ஒரேயொரு தடவை சுந்தர குருக்களைப் பார்த்தாள் சுந்தரி. சுந்தரர் அந்தப் பார்வையைச் சந்திக்க முடியாமல் திணறினார். ஒரு புன்னகை! மத்தாப்பு கொளுத்தியவுடன் குபுக்கென்று ஒரு வெளிச்சம் கிளம்புமே, அப்படியொரு புன்னகையை சுந்தரி வீசியது சுந்தரருக்கு மயக்கத்தைக் கொடுத்துவிட்டது. அமுதம் உண்ட தேவனைப் போல ஆகிவிட்டார்.

''எங்கள் வீட்டிற்கு நீங்கள் வந்ததே இல்லை. நல்ல நாளாக இருக்கிறது. இன்று வாருங்களேன்'' என்று சொல்லி விட்டு சுந்தரி, சுந்தரரிடம் விடை பெற்றுக் கொண்டு சந்நிதியை விட்டுக் கிளம்பினாள்.

அம்மன் சந்நிதியில் மின்சார விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டு தான் இருந்தன. அப்படியும் சுந்தரி அந்த இடத்தைவிட்டுச் சென்றவுடன் காரிருள் சூழ்ந்து கொண்டது போலத்தான் குருக்களுக்கு இருந்தது. ஆனால் அவள் தன்னை வீட்டிற்கு அழைத்துவிட்டுப் போனாளே... அது எதற்காக இருக்கும்? அவர் உள்ளம் குதிபோட்டது. ''இன்று நல்லநாளாய் இருக்கிறது. நீங்கள் என் வீட்டிற்கு வாருங்கள்'' என்று அவள் தன்னை அழைத்தது அவருக்குத் தேனாய் இனித்தது.

தட்டு நிறையப் பிரசாதங்களை எடுத்துக் கொண்டார் சுந்தர குருக்கள். சுந்தரியின் வீட்டுக்குள் நுழையும்போது அவள் வீணையை மீட்டிப் பாடிக் கொண்டிருந்தாள். அவள் பேசுவதே பாடுவது மாதிரி இனிக்கும். அவள் பாடவே செய்கிறாள்... அதுவும் வீணை யுடன் என்றால் அதைக் கேட்பதற்குத் தானே ஆண்டவன் தனக்குக் காதுகளை அளித்திருக்கிறார்'' என்று நினைத்துக் கொண்டார் சுந்தர குருக்கள்.

குருக்கள் உள்ளே நுழைந்தவுடன் சுந்தரி மடியிலிருந்த வீணையைக் கீழே வைத்துவிட்டு அகமும் முகமும் மலர அவரை வரவேற்றாள்.

''வாங்கோ..வாங்கோ எங்கே வராமல் இருந்து விடுவீர்களோ என்று நினைத்து விட்டேன்'' சொல்லிவிட்டு புன்னகை செய்தாள் சுந்தரி.

குருக்கள் பாகாய் உருகிப் போனார். ''நீ ஒவ்வொரு சமயம் கோயிலுக்குவரும் போதும் உன்னுடன் பேசவேண்டும் என்று நினைப்பேன். ஆனால் முடிவதில்லை. எதற்கும் வேளை வரவேண்டாமா?...'' என்று சொல்லிக் கொண்டே '' இந்தப் பிரசாதம் இந்தக் குங்குமத்தை எடுத்து இட்டுக் கொள். இந்தப் பூவை ஜடையில் வைத்துக் கொண்டுவா. உன்னிடம் நிறையப் பேச வேண்டும்'' என்று பிரசாதத் தட்டை அவள் கரங்களில் வைத்தார்.

''வேணும் என்கிற அளவுக்குப் பேசலாம். நிறைய நேரமிருக்கிறது''

## சிந்து பாடிய செந்தமிழ்க் காவலர்



மதுரத் தமிழின்சுவை முதிரத் தெரித்த அண்ணா
  மலையார் கா வடிச்சிந்தை ஒப்பவே - பாட
  இலரே புலவர்எனச் செப்பவே, - அருள்
  வாய்க்குமேல் அதன் மேலும்நன்குநாம் ஆக்கலாமென ஊக்கமாகவே
  நினைத்து நினைத்துச் சொன்ன வாயினர்! - சிந்து
  மணக்க மணக்கச் சொன்ன நாயகர்!
மதியைச் சடைக்கணிந்தோன் நுதற்கண் இடைப்பிறந்து
  வளர்சிவ ஞானபுரம் மேவினான் - அடி
  மலரைத் தமிழெடுத்துத் தூவினார் - தே
மாங்கனிச் சுவை தேங்கிடச்செயும் தீங்கவிக்குயில் பாண்டித்தேவரும்
  மாணிக்கச் செந்தமிழ்ப்பா பாடினார்; - புகழ்
  காணிக்கை யாய்வரவே சூடினார்!
முருகன் எனப்படுமோர் பெருமான் திருப்புயங்கள்
  முறையில்பன் னிருசிந்து பாடினார்; - பாண்டித்
  துரைத்தேவர் என்னும் நாமம் சூடினார்! - தமிழ்
  மோகமே உயிர் நாதமாய், அருள் தாகமாய்ச்சிந்து, ராகமாய், ஒலி
  முழங்கும் அமுதக் கடல் போன்றது; - தமிழ்
  வழங்கும் அகத்துறைகள் சான்றது:
உரையைக் கடந்தநயம் பெருகிப் பொதிந்திருக்கும்
  உயர்சிவ ஞானபுரிச் சிந்தது; - மன
  மயலினைத் தீர்க்குமா ருந்தது!- உல(கு)
ஓங்குசெந்தமிழ்ப் பாங்கறிந்திடப் பாண்டித்தேவரின் தீங்கவித்திறத்(து)
  உன்னதம் மேவிய பாக்களே! - தமிழ்ச்
  சந்நிதி தூவிய பூக்களே!



மரு. பரமகுரு

என்று சொன்ன சுந்தரி, தட்டிலிருந்த குங்குமத்தை எடுத்து நெற்றியில் தரித்துக் கொண்டு, பூவை எடுக்கப் போனாள். எடுக்கும் போது பூச்சரமே கீழே தவறி விழுந்துவிட்டது. குருக்கள் குனிந்து அதை எடுக்கும் போது சுந்தரியும் அதே பூவை எடுக்கக் கீழே குனிந்தாள். அப்போது இருவர் தலைகளும் லேசாக மோதிக் கொள்ள பூக்களும் இருவர் கைகளாலும் எடுக்கப்பட்டன. குருக்கள் பூக்களை விடுவதாக இல்லை. சுந்தரியும் தன் கைகளைத் தளர்த்திக் கொண்டாள். சுந்தரர் பூக்களை எடுத்து. "சுந்தரி! நல்ல சகுனம் தான். கொஞ்சம் திரும்பு. நானே வைத்துவிடுகிறேன்" என்றார்.

அம்பாளுக்குப் பூச்சூட்டி மகிழ்ந்த சுந்தர குருக்கள், சுந்தரிக்கும் பூச்சூட்டி மகிழ்ந்தார். நேர்த்தியாக பிறை வடிவில் பூவை சுந்தரியின் பின் உச்சியில் வைத்தது, மூன்றாம் பிறைச் சந்திரனின் வளைவை சுந்தரிக்கு நினைவூட்டியது.

"சுந்தரி! நான் ஒன்று சொல்வேன் அதை நீ தட்டாமல் கேட்கவேண்டும். கேட்பாயா?" என்று அவள் கரங்கள் இரண்டையும் பிடித்துக் கொண்டார் குருக்கள். அவர் குரல் கெஞ்சுவது போலவும், கொஞ்சுவது போலவும் இருந்தது.



கைகளை மெதுவாய் விலக்கிக் கொண்டு"தாங்கள் சொன்னால் கேட்காமல் இருப்பேனா. சொல்லுங்கள்...'' என்று கொஞ்சினாள் சுந்தரியும்.

தன் இடுப்பில் செருகியிருந்த விபூதிப் பையின் சுருக்கைப் பிரித்தார் குருக்கள். அதில் மின்னிக் கொண்டிருந்த இரண்டு வைரத் தோடுகளை மெதுவாக எடுத்துச் சுந்தரியின் கைகளில் வைத்து 'இந்தத் தோடுகளை உன் காதுகளில் போட்டுக் கொண்டுவா... அப்போது உன் அழகு எப்படி இருக்கிறதென்று என்று நான் பார்க்க வேண்டும்'' என்று கண்களை மூடிக் கொண்டார் சுந்தரர்.

தோடுகளைப் பெற்றுக் கொண்ட சுந்தரி திகைத்துப் போனாள். அவளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. உயர்ந்த வைரக்கற்களைக் கொண்டு அமைந்த தோடுகள் தம் பிரகாசத்தை வீடு முழுவதும் உமிழ்ந்தன.

சுந்தரி, குருக்களிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அப்போது வீட்டு அழைப்பு மணி ஒலித்தது. அதைத் தொடர்ந்து இரண்டு பெரியவர்கள் உள்ளே நுழைந்து கொண்டிருந்தார்கள்.

உள்ளே வந்தவர்களில் ஒருவர் ''என்னம்மா சுந்தரி சௌக்கியமா? நீ தேவூருக்கு வந்ததை எங்களிடம் சொல்லக் கூடாதா..?'' என்று பேச்சைத் தொடங்கினார்.

''இவர் இந்த ஊர் குருக்கள்'' என்று சுந்தரரை அறிமுகம் செய்து விட்டு, ''இவர் என் மாமா. பட்டணத்தில் இருக்கிறார்'' என்று சொன்ன சுந்தரி மாமாவுடன் பேசத் தொடங்கி விட்டாள்.

பூஜை வேளையில் நிஜமாகவே கரடி புகுந்துவிட்டது என்று அறிந்த சுந்தர குருக்கள், சுந்தரியிடம் விடை பெற்றுக் கொண்டு மெதுவாக வெளியே கிளம்பி வந்துவிட்டார்.

வாசற்பக்கம் வந்தவுடன் தான் அவர் மகிழ்ச்சியும், குதூகலமும் போன இடம் தெரியாமல் போய்விட்டன. சிலுசிலு வென்று குளிர் காற்று வீசிக் கொண்டிருந்த போதும், அவர் உடல் முழுதும் வியர்த்தது.

அவர் என்ன காரியம் செய்து விட்டார்? ஆசை வெட்கம் அறியாது. அதுவும் நடுத்தர வயதில் உதிக்கும் காமத்திற்கு எதுவுமே தெரியாது போலும்!



சுந்தரி மீது அவர்கொண்ட மோகத்தில் பெரிய தவறு ஒன்றையல்லவோ செய்துவிட்டார்?

பர்வதவர்த்தினி அம்மனின் தாடங்கத்தை (தோடு)யன்றோ சுந்தரியின் காதுகளில் அணிவிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுவிட்டார்! அம்மனின் செவிகளில் பிரகாசித்துக் கொண்டிருந்த தோடுகள் இரண்டையும் கழற்றி சுந்தரியிடமல்லவா கொடுத்துவிட்டார்!

சுந்தரர் புலம்பிக் கொண்டே "தப்புக் காரியம் செய்துவிட்டேனே; தப்புக் காரியம் செய்துவிட்டேனே" என்று வீடு வந்து சேர்ந்தார். இரவு நேர சுவர்க் குருவிகளும் 'குருக்களே தவறு செய்து விட்டீர்களே, தவறு செய்துவிட்டீர்களே' என்று கூவுவது போல அவருக்கு இருந்தது.

குருக்களுக்கு இரவு முழுவதும் தூக்கமே இல்லை. புரண்டு புரண்டு படுத்தார். அம்பாள் சூலத்தால் அவர் நெஞ்சைப் பிளப்பது போல இருந்தது.

மெல்லப் பொழுது விடிந்தது. விடிந்தவுடன் ஒரு பேரிடி அவருக்குக் காத்துக் கிடந்தது.

அறநிலைய அதிகாரிகள் கோயிலைப் பார்வையிடுவதற்கும், நகைகளைச் சரிபார்ப்பதற்கும் கோயில் வாசலில் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற செய்திதான் அது.

குருக்கள் செய்வதறியாது தத்தளித்தார். தண்ணீரிலிருந்து தரையில் போடப்பட்ட மீனைப் போல அவர் உள்ளம் துடித்தது. "அம்பிகே, பர்வதவர்த்தினி தாயே..! உன் பக்தன் நான் அறியாமல் சபலப்பட்டு விட்டேன். என்னைத் தண்டிக்காதே தாயே..." என்று மனத்திற்குள் புலம்பிக் கொண்டே கோயிலை நோக்கி ஓடினார் குருக்கள், சாவியுடன்.

கிங்கரர்கள் போல நின்று கொண்டிருந்தார்கள் அறநிலைய அதிகாரிகள். தான் செய்த தவறு தெரியவந்தால் எவ்வளவு அவமானம்! சிறைக்குள் அல்லவோ போகவேண்டியிருக்கும். இப்போது வெளிவந்து கொண்டிருக்கும் செய்திகள் போல தன் பெயரும் பேப்பரில் வருமே. நம் பரம்பரைக்கே இழுக்குத் தேடிவிட்டேனே...." உள்ளூரப் புலம்பிய வண்ணம் நடுங்கும் கைகளுடன் கோயிலைத் திறந்தார் குருக்கள்.

சொல்லி வைத்ததைப் போல் நேராக அம்மன் சந்நிதிக்குள்தான் முதலில் நுழைந்தார்கள் அதிகாரிகள். சுந்தர குருக்களுக்கு உடம்பெல்லாம் நடுங்கியது. வாய் உலர்ந்து விட்டது. மயங்கி கீழே விழுந்து விடுபவர் போல தள்ளாடிக் கொண்டே கருவறைக் கதவுகளைத் திறந்தார் குருக்கள். இரவு ஏற்றிய விளக்குகள், அணையவே இல்லை. பர்வதவர்த்தினி அம்பாள் சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் என்ன ஆச்சரியம்! அம்பாளின் செவிகள் இரண்டிலும் தோடுகள் மின்னிக் கொண்டிருந்தன! சுந்தர குருக்கள், தன் கண்களைக் கசக்கிக் கொண்டு மீண்டும் மீண்டும் அம்பாளின் கருணை தோய்ந்த முகவிலாசத்தைப் பார்த்தார். தோடுகள் அவள் செவிகளை அலங்கரித்த வண்ணமே இருந்தன.

"அம்பிகே உன் மகிமைதான் என்ன? இந்த அற்பனைக் காப்பாற்ற வேண்டும் என்று நீ செய்த திருவிளையாடலா?" என்று மெய்யுருகி ஆண்டவனின் லீலா விநோதத்தை நினைந்து நினைந்து அதில் ஒன்றிப் போனார் குருக்கள்.

அறநிலைய அதிகாரிகள் தங்களுடைய ஆய்வை முடித்துக் கொண்டு அடுத்த ஊருக்குக் கிளம்பி விட்டனர். சுந்தர குருக்களும் 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டுவிட்டு நிம்மதியடைந்தார். "சுந்தரியிடம் தான் அளித்த தோடுகள், மறுபடியும் அம்பாளின் செவிகளுக்கு எப்படி வந்தன?" என்ற கேள்விக்கு மட்டும் அவரால் விடை காண முடியவில்லை.

வீட்டிற்கு வந்தவுடன் தன் மகனைக் கூப்பிட்டார். அவன் பி.காம்., கடைசி வருடம் படித்துக் கொண்டிருந்தான். கல்லூரிக்குச் செல்ல ஆயத்தப் படுத்திக் கொண்டிருந்தான். கல்லூரி திருவாரூரில் இருந்தது.

"தியாகு! இன்றைக்கு என்னை அம்பாள் காப்பாற்றினாள்" சொல்லி விட்டு அவனைத் தழுவிக் கொண்டார் குருக்கள். மேலும் பேச வாயெடுக்குமுன் தியாகு இடைமறித்துச் சொன்னான்.

"அப்பா! நேற்று இரவு நீங்கள் சுந்தரி மாமி வீட்டிற்குப் போனீர்களா? அங்கு அம்பாளின் தோடுகளை விட்டுவிட்டு வந்துவிட்டீர்களாம். அந்த மாமி நேற்று இரவு நம் வீட்டிற்கு வந்து 'அப்பாவை எழுப்பாதே. சாவியை எடுத்துக்கொண்டு என்னுடன் கோயிலுக்கு வா. ஏன் எதற்கு என்று கேட்காமல் உடனே வா' என்று கட்டளை இட்டாள். அம்மன் சந்நிதி திறந்தவுடன் தோடுகள் இரண்டையும் என்னிடம் கொடுத்து, 'இதை அம்பாளுக்குச் சாத்திவிட்டு வா. உங்கப்பா இதை என் வீட்டில் தவறி வைத்து விட்டுப் போய்விட்டார்' என்று சொன்னாள்."

தியாகு மூச்சுவிடாமல் பேசினான். அவன் பேச்சில் கலவரமில்லை. குருக்கள் ஏதோ பேச எண்ணினார். ஆனால் தியாகு அங்கு நின்றால் தானே? 'காலேஜிற்கு நாழிகையாகிவிட்டது' என்று அவன் சைக்கிளில் கிளம்பி விட்டான்.

ஓடினார் சுந்தரி வீட்டை நோக்கி சுந்தரர். அவள் வீட்டு வாசலில் ஒரு பெரிய கார் நின்று கொண்டிருந்தது. சுந்தரி காருக்குள் ஏறுவதற்கும் சுந்தர குருக்கள் கார் சமீபம் வருவதற்கும் சரியாக இருந்தது. குருக்களைப் பார்த்தவுடன் சுந்தரி கீழே இறங்கி அவரை உள்ளே அழைத்துக் கொண்டு போனாள். போனவள் குருக்களுக்கு வணக்கம் செய்துவிட்டு, "குருக்களே! என்னை ஆசீர்வதியுங்கள். ஒரு பெரிய ஆபத்திலிருந்து நான் காப்பாற்றப்பட்டு இருக்கிறேன். இனி இந்த ஊரில் இருக்க எனக்கு விருப்பமில்லை. உங்கள் நல்ல மனசை நான் சஞ்சலப்படுத்திவிட்டேன். அந்தப் பாபத்தை நான் செய்ய விரும்பவில்லை. உங்கள் மீது விழும் பழிக்கு நான் ஆளாக விரும்பவில்லை. ஏதோ பாபம் செய்து விட்டுத்தான் நான் இப்படி அபலையாக நிற்கிறேன். நான் ரொம்ப ரொம்பச் சிறியவள். உங்கள் மனத்தைச் சபலத்திற்கு உள்ளாக்கி விட்டுப் பெரிய பாபத்தைச் செய்யத் தூண்டி விட்டிருக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்" என்று கூறிவிட்டு மறுபடியும் குருக்களை வணங்கி விட்டு விடு விடென்று வெளியே நடந்து காருக்குள் ஏறிக் கொண்டாள்.

✤ ✤ ✤

**க**தையை முடித்துவிட்டு நிறுத்தினார் சோமுப் பண்டாரம்.

"இறைவனின் விளையாட்டை யார் அறிவார்?" என்றேன் நான்.

"சந்துரு சார்! இதிலே முக்கியமா கவனிக்க வேண்டியது சுந்தர குருக்கள் தான். முப்பது வருஷமா அவர் அந்த அம்பாளோட பக்தியிலே ஒன்றிப் போயிருக்கிறார். அந்த அம்பாளைத் தொட்டு அபிஷேகம் செய்து அர்ச்சனை செய்திருக்கிறார். அப்படி இருக்கும் போது அந்த பக்தனை அவள் காப்பாற்றாமல் என்ன செய்வாள்? சோதனையில் அகப்பட்டுக்கொண்டு வேதனையடையும்படி செய்து சுந்தர குருக்களைக் காப்பாற்றிவிட்டாள்".

சொல்லி நிறுத்தினார் சோமுப் பண்டாரம். நேரம் ஆகிவிட்டது என்று நாங்கள் மூவரும் திருநள்ளாறு கோயிலை நோக்கி நடக்க முனைந்தோம். என் மனத்தில் விவரிக்க முடியாத சாந்தி ஏற்பட்டது.

✤ ✤ ✤



# மந்த்ராலய மகிமை

மலருக்காக இவ்வாண்டு மந்த்ராலயம் செல்கிறோம் என்று ஆசிரியர் சொன்னதும் சட்டென்று-

''பூஜ்யாய இராகவேந்த்ராய
ஸத்ய தர்ம ரதாயச
பஜதாம் கல்பவிரு க்ஷாய நமதாம்
காமதேனவே''

என்ற ஸ்லோகம் மனத்திற்குள் ஒலித்தது. பிரயாணத்திற்குத் தயாரானோம். மும்பை மெயிலில் இரவு 10.20க்குக் கிளம்பினோம், சென்னையிலிருந்து!

மொத்தம் 542 கிலோ மீட்டர் தூரப் பயணம். மறுநாள் காலை 11.05க்கு 'மந்த்ராலயம் ரோடு' என்கிற ரயில் நிலையத்தில் இறங்கினோம். ரயில் நிலையத்திலிருந்து எப்படிப் போகப் போகிறோம் என்ற கேள்விக் குறி எழுந்தது. அத்துடன் அன்று பேருந்து வேலை நிறுத்தம் என்று சொல்லிவிட்டார்கள். இலேசாகக் கவலை சூழ்ந்தது. கவலையுடன் வெளியே வந்தோம்.



துங்கபத்ராவில் நித்திய குளியல்

''யோகா என்பவர் நீங்களா?'' என்றார், வெள்ளைத் தாடி வைத்த குள்ள மனிதர் ஒருவர்.

நம்முடன் வந்த புகைப்படக் கலைஞர் யோகா அவர்களை அவர்முன் நிறுத்தினோம்.

''ஸார்! உங்களுக்காக மடத்திலிருந்து 'வேன்' கொண்டு வந்துள்ளேன்'' என்றார் அடக்கமாக. 'ஆஹா, இராகவேந்திரர் அருள் பொழியத் தொடங்கிவிட்டார். அந்த வேன் யோகாவின் நண்பர் திரு லட்சுமணனின் ஏற்பாடு' என்பதறிந்தோம். மகிழ்ச்சியுடன் வேனில் ஏறி அமர்ந்தோம்.

ரயில் நிலையத்திலிருந்து 30 நிமிடப் பயணம். 15 கிலோ மீட்டர் தூரம்.

சென்னை - மும்பை ரயில் மார்க்கத்தைத் தவிர, மந்த்ராலயத்திற்குப் பல்வேறு இடங்களிலிருந்தும் பஸ் வசதிகள் இருக்கின்றன.

பெங்களூர், பெல்காம், ஹுப்ளி, பெல்லாரி, கூட்லிடு, ரெய்ச்சூர், கர்நூல், விஜயவாடா, தெனாலி, அதோனி, ஐதராபாத் போன்ற பெரிய நகரங்களிலிருந்து வந்து போக போக்குவரத்து ஏற்பாடுகள் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளன.

மந்த்ராலயத்திற்குச் சென்ற பிறகு தேவஸ்தானத்தின் வாயிலில் இருக்கும் ஆந்திரப் பிரதேசப் போக்குவரத்துக் கழக அலுவலகத்தில் திரும்பிச் செல்ல முன்பதிவு செய்து கொள்ளவும் வசதி செய்யப் பட்டுள்ளது.

போட்டோகிராபர் யோகா தன் நண்பர் லக்ஷ்மணன் மூலம் வேனுக்கு ஏற்பாடு செய்திருந்ததால், மடத்திலிருந்து வேன் வந்து காத்திருந்தது. சலனமில்லாமல் மந்த்ராலயத்தை வந்தடைந்தோம்.

பகல் 11.35 மணி.

பெங்களூரிலிருந்து வந்திருந்த லக்ஷ்மணனை நமக்கு அறிமுகப் படுத்தி வைத்தார் யோகா. லக்ஷ்மணன், பெங்களூரில் ஜுவெல்லரிக் கடை அதிபர். மந்த்ராலய மகான் ஸ்ரீ இராகவேந்திரரின் மீது கொண்டுள்ள அளவற்ற பக்தியின் காரணத்தால், மடத்திற்குத்

அலங்கரிக்கும் பீடாதிபதி ஸ்ரீ 1008 சுஷ்மீந்திர தீர்த்த ஸ்ரீ பாதங்களவரு ஸ்வாமிகள், அந்த மகா பூஜையை நடத்தியதைக் கண்டு அடைந்த ஆனந்தத்தை அனுபவிக்க இந்தப் பிறவி மட்டும் போதாது.

விஸ்வ கர்மாவினால் வடித்தெடுக்கப்பட்டு பிரம்ம தேவனால் பூஜிக்கப்பட்ட மூல இராமர், தசரதனால் பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமர், வழி வழியாகப் பல்லாண்டுகளாக த்வைத மத பீடாதிபதிகளால் பூஜிக்கப்பட்டு வருகிற ஜெயராமர் ஆகிய விக்கிரகங்கள் பூஜையில் இருந்த விக்கிரகங்களில் குறிப்பிடத் தக்கவை.

இந்தப் பூஜையை ஸ்ரீராகவேந்திரருக்குப் பின்னால் - அதற்கும்



அரசமரமும் நாகர் சிலைகளும்



பாண்டவர்கள் ஆயுதத்தை மறைத்த வன்னிமரம்



தன் சொந்தப் பணத்தில் குட்டி யானை வாங்கிக் கொடுத்தவர். லக்ஷ்மணனைப் பற்றி இன்னும் சொல்லிக் கொண்டே போனால் இக்கட்டுரை 'லக்ஷ்மண புராணம்' ஆகிவிடும். மடத்தில் திரு.லக்ஷ்மணனுக்குத் தனி மரியாதை இருந்தது.

''குளித்து விட்டுக் கிளம்புங்கள், இராமர் பூஜை 12 மணிக்குத் தொடங்கி விடும்'' என்று நம்மை அவசரப் படுத்தினார் லக்ஷ்மணன்.

''துங்க பத்ரா நதியில் குளித்து விட்டுச் செல்வதுதானே முக்கியம்?'' என்றோம்.

''இல்லை. அதைவிட இராமர் பூஜை மிக முக்கியம்'' என்றார்.

''குளிக்காமலா?'' நகைச் சுவைக் கேள்வி எழாமலில்லை.

''இல்லை, இங்கே தங்கும் அறையிலேயே குளித்துவிடலாம்'' என்று சமாதானம் ஆயிற்று.

ஆளாளுக்கு அவசரக் குளியல்.

வேட்டி, மைனஸ் சட்டை - பனியனுடன் கோயிலுக்குள் செல்கிறோம். 12.30 மணிக்கு மகா பூஜை தொடங்கியது. இப்போது பீடத்தை



ஆஞ்சநேயரும் ஸ்ரீராகவேந்திர மகானின் பிருந்தாவனமும்.

முன்னால் மடத்து பீடாதிபதிகள் நாள் தவறாமல் செய்து வருகின்றனர். அன்றைய பூஜையை இன்றைய பீடாதிபதி ஸ்வாமிகள் செய்த விதம் இருக்கிறதே, அடடா! அற்புதம்; ஆனந்தம்!

மகா பூஜை (இராமர் பூஜை) யைத் தவிர, தினமும் காலை 5.30 மணிக்கு நிர்மால்ய விசேஷார்ச்சனை, 8.30 மணிக்கு பிரகலாதனின் மறு அவதாரம், ஸ்ரீ இராகவேந்திர ஸ்வாமிகளின் பாத பூஜை, 9.00 மணிக்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன் த்வைத மதத்தின் பீடாதிபதியான தவத்திரு ஸ்ரீ இராகவேந்திர ஸ்வாமிகள் பூத உடலுடன் (உயிருடன்) பிரவேசித்த பிருந் தாவனத்திற்குப் பஞ்சாமிர்த அபிஷேகம், 11.00 மணிக்கு துளசி அர்ச்சனை, 1 மணிக்கு நாம் பார்த்துக் கொண்டிருக்கும் இராமர் பூஜை, இரவு 8.00 மணிக்கு ரதோற்சவம், 9.00 மணிக்கு ஊஞ்சல் சேவை, 9.30 மணிக்கு மகா மங்கள ஆரத்தி என அன்றாட பூஜைகள் முடிவடை கின்றன.

1.30 மணிக்கு மகா பூஜை முடிந்தது. தீர்த்தம் வழங்கினார்கள். அட்சதையைச் சிரசில் போட்டுக் கொண்டோம். வெளியே வரு கிறோம்.

ஒரு மணி நேரம் அந்த மகா பூஜையில் அனுபவித்த பேரானந்தப் பரவசம் உடல் முழுக்கப் பரவி யிருக்கிறது. ஸ்ரீ இராகவேந்திர ஸ்வாமி கள் சமாதியான பிருந் தாவனத்தை யும் அதற்கு நேர் எதிரே இருக்கும் ஆஞ்சநேயரையும் தரி சிக்கிறோம்.

ஸ்ரீ குரு இராகவேந்திர ஸ்வாமி களின் பிருந்தாவனத்தின் வலப் புறத்தில் ஸ்ரீ வாதீந்திர தீர்த்தர்களின் பிருந்தாவனம் உள்ளது. இடப் புறத்தில் பிராகாரத்தையடுத்து சிறிது தூரத்தில் வரிசையாக ஸ்ரீ சுவரதீந்தர, ஸ்ரீ சுதர்மேந்த்ர, ஸ்ரீ சுயமீந்த்ர தீர்த்தர்களின் பிருந்தாவனங்கள் அமைந்துள்ளன. இவற்றின் எதிரில் இருக்கும் மேட்டில் அரச மரமும் அதன் சுற்றில் நாகர் சிலைகளும் குவிந்துள்ளன. அதற்கு அடுத்து பஞ்ச பாண்டவர்கள் ஆயுதங்களை ஒளித்து வைத்ததாகக் கூறப்படும் வன்னிமரம்(இதைக் கன்னடத்தில் பன்னிமரம் என்கிறார்கள்) இருக் கிறது.

பகல் 2.00 மணிக்கு அன்னதான அரங்கில் நுழைகிறோம். தினமும் மந்த்ராலயம் வரும் பக்தர்கள் அனை வருக்கும் இவ்வரங்கில் 'போதும்' என்கிற அளவிற்கு அன்னமிடப் படுகிறது. (ஏகாதசி திதி அன்று மட்டும் அனைவரும் விரதமிருக்கிறார்கள்)

3.00 மணிக்கு லக்ஷ்மணன், நமக்காக ஸ்ரீ சுஷ்மீந்திர தீர்த்த சுவாமி களைச் சந்திக்க அனுமதி கேட்டு வைத்திருந்தார்.

ஆந்திரப் பிரதேசம், கர்நூல் மாவட்டம் எம்மிதாலுகாவில் துங்க பத்ரா நதிக்கரையின் மந்த்ராலய மஹா க்ஷேத்திர பீடாதிபதி ஸ்ரீ சுஷ்மீந்திர தீர்த்த சுவாமிகள் நம்மை அன்புடன் வரவேற்கிறார்.

கருணை முகம், குழந்தைச் சிரிப்பு, தீட்சண்யமான கண்கள்.

சென்ற ஆண்டு தீபாவளி மலரை அவரிடம் தருகிறோம். ஒரு பச்சைக் குழந்தையை அள்ளிக் கொள்கிற வாஞ்சையுடன் பெற்றுக் கொள்கிறார்.

பேசத் தொடங்கினார். பேச்சில் ஸ்ரீ இராகவேந்திரரை 'ராயர்' என்றே அழைக்கிறார். 'ராயர் செய்த அற்புதங்கள் சொல்லி மாளாது' என்று சொல்லிக் கொண்டே இருந்தார். (ஸ்ரீ ராகவேந்திரரின் அற்புதங்களை அறியாதவர் இவ்வுலகில் யாரும் இருக்கிறார்களா என்ன?)

இவருக்கு முன்பிருந்த பீடாதிபதி ஸ்ரீ சுஜயீந்த்ர தீர்த்தர், தம் காலம் முடிகிற தருணம் அறிந்ததும், மைசூருக்கு அருகிலிருந்த இவரை (ஸ்ரீ சுஷ்மீந்திர தீர்த்தரை) அழைத்து மடாதிபதி பொறுப்பை அளித்த நிகழ்ச்சியைச் சொன்னார்.

''பக்திப் பரவசத்துடன் அதனுடன் ஒன்றி குரு இராகவேந்திர சுவாமிகளிடம் சென்று வழி படவேண்டும் என்கிற பேச்சுக்கே இடமில்லை. பக்தி என்று கடவுளை நினைத்தாலே போதும். கடவுள் நிச்சயம் நம் அனைவருக்கும் அருள் பாலிப்பார். இதுவே 'அமுதசுரபி' வாசகர்களுக்கு நான் வழங்குகிற அருளாசி'' என்றார்.



கஜ யாத்திரை

பிரசாதமாக கல்கண்டு வழங்கப் பட்டது. சுவாமிகள் அறைக்கு வெளியே, பக்தர்களின் தொடர்பு அலுவலகம் (Devotees Relation Office) என்ற பெயர்ப்பலகை நம் கவனத்தைக் கவர்கிறது.

நம்முடன் வந்த ஆசிரியர் கலைமாமணி விக்கிரமன் அவர்கள் நூலகத்தின் உள்ளே நுழைய - நாங்கள் துங்கபத்திரா நதியைப் பார்க்கக் கிளம்பினோம்.

பார்த்தால் குளிக்காமல் இருக்க முடிகிறதா? நதியில் கரடு முரடான பாறைகள். நீர் ஓடுகிற ஆழத்திலும் பாறைகள் கால்களைக் காயப் படுத்தின. மாலை 5.30 மணிவரை (கோயில் யானைகள் வந்து நதியைக் கலங்கடிப்பது வரை) ஆனந்தக் குளியல்!

இதே குளியலை மறுநாள் விடியற்காலையில் ஆசிரியருடன் வைத்துக் கொண்டபோது பேரானந்த மாக இருந்தது. (நதிக் குளியலைப் பற்றி ஆசிரியர் தனிக் கட்டுரை எழுதலாம்)

ஸ்ரீ சாலிவாஹன ஆண்டு 1545 ருத்ரோத்காரி வருடம் பால்குண பஹுளெ விதிய திதியன்று ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் சாஸ்திர முறைப்படி 'ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர்' எனப் பெயரிடப்பட்ட, ஸ்ரீ மந்த்ராலய மகான் ஸ்ரீ இராகவேந்திரரின் பிருந் தாவனம், ஏகாதசி தினத்தன்று - துளசியால் ஜோடனை செய்யப் பட்டு ஏக சுகந்தமாய்க் காட்சி யளித்தது.

இந்த ஏக சுகந்தத்திற்குள் வீற்றிருக்கும் மகானின் அற்புதங்கள் எண்ணிலடங்கா. ஒரு சமயம்,



வெள்ளி ரத யாத்திரை

மலையாள நாட்டிலிருந்து மூன்று ஜோதிடர்கள் இராகவேந்திர தீர்த் தரிடம் வந்தனர். வணக்கம் செலுத்தி விட்டுத் தமக்கு ஜோதிட சாஸ்திரத்தில் புலமை உள்ளதாகச் சொல்லிக் கொண்டனர். சுவாமிகள் தம் ஜாதகத்தை அளித்து, மூவரையும் வெவ்வேறு அறைகளில் அமர்ந்து ஜாதகத்தை நன்றாகப் பார்த்துச் சொல்லும்படி அனுப்பினார்.

வந்த ஜோதிடர்கள் மூவரும் தனித்தனி இருக்கைகளில் அமர்ந்து சுவாமிகளின் ஜாதகத்தைப் பரிசீலித்துப் பார்த்துப் பலன்களை எழுதத் தொடங்கினார்கள். மூவரும் ஜோதிடத்தில் மிகவும் கற்றறிந்த வல்லுநர்கள். ஆகவே, மூவரும் பலன்களை ஒரே விதமாகவே எழுதினார்கள். ஆனால் ஆயுளைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது மூவரும் வெவ்வேறான குறிப்புகளை எழுதினர். அக்குறிப்புகளை சுவாமிகளின் முன்னால் வைத்தனர்.

சுவாமிகள், தம் ஆஸ்தானப் புலவர்களை அழைத்து, அந்த மூவருடைய குறிப்புகளையும், பார்க்கச் சொன்னார். அவர்கள் அக்குறிப்புகளைப் பார்த்து, 'ஸ்வாமி! மூன்று ஜோதிடர்களும் செவ்வையாகவே பலன்களை எழுதியுள்ளனர். ஆனால் ஆயுள் விஷயத்தில் மட்டும் முரண்பாடாக எழுதி இருக்கிறார்கள். ஒருவர் 100 ஆண்டுகள் என்றும், மற்றொருவர் 300 ஆண்டுகள் என்றும், மூன்றாமவர் 700 ஆண்டுகள் என்றும் தாங்கள் உயிர் வாழும் காலத்தைக் கணித்துக் குறிப்பிட்டுள்ளார்கள். ஒருவர் எழுதிய 100 ஆண்டுகள் என்பது நம்பத் தகுந்ததாக உள்ளது. மற்ற இருவரும் எழுதியவை நம்பத் தகுந்தனவாக இல்லை'' என்று சொன்னார்.

எல்லாவற்றையும் அறிந்த ஸ்ரீ இராகவேந்திரர் ''மூன்று ஜோதிடர்கள் கூறிய விஷயங்கள் அனைத்தும் உண்மையானவைதாம். என் பூதவுடல் 100 ஆண்டுகள் மட்டும் இருக்கும். என்னால் இயற்றப்பட்ட நூல்கள் 300 ஆண்டுகள் இருக்கக் கூடியவை. நான் பிருந்தாவனத்தில் சமாதி நிலையில் இருக்கக் கூடியது 700 ஆண்டுகளாகும்.

''நான் 700 ஆண்டுகள் பிருந்தாவனத்தினுள் யோக நிஷ்டையில் இருந்து கொண்டு பக்தர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொண்டிருப்பேன். இதுதான் இந்த மூன்று ஜோதிடர்களும் எழுதிய குறிப்புக்குப் பொருள்'' என்றாராம்.

ஸ்ரீ இராகவேந்திர ஸ்வாமிகள் மிருந்தாவனத்தில் 700 சாலக் கிராமங்கள் வைக்கப்பட்டுள்ளன என்றும் சொல்லப்படுகிறது. பிருந்

ஸ்ரீசுஷமீந்திர தீர்த்த சுவாமிகளின் ஸ்ரீராமர் பூஜை





பீடாதிபதி ஸ்ரீ 1008 சுஷமீந்திர தீர்த்த ஸ்ரீ பாதங்களவரு ஸ்வாமிகள் ஸ்ரீ ராம பூஜையை நடத்தியதைக் கண்டு அடைந்த ஆனந்தத்தை அனுபவிக்க இந்தப் பிறவி மட்டும் போதாது



தாவனத்தைச் சுற்றி 'சங்கல்யம்' செய்து கொண்டு சுற்றிவரும் பக்தர்கள் கூட்டம், மந்திரத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் போல் பிராகாரத்தை வலம் வருகிறார்கள். திடமான தூய பக்திக்கு ஈடேது? இணையேது?

'கலியுகத்தின் காமதேனு,' 'கலியுகக் கல்பதரு' என்னும் விருதுகளுடன் விளங்கும் ஸ்ரீ இராகவேந்திர ஸ்வாமிகளைத் தரிசிக்க, தேசத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் திரள்திரளாக மந்த்ராலய க்ஷேத்திரத்திற்கு வந்து கொண்டிருக்கின்றனர்.

மந்த்ராலய மகிமை நம்முள் சுடர்விட, பிரியமனமின்றி அந்த மண்ணை விட்டுப் புறப்படுகிறோம். மனம் முழுக்க அமைதி. சஞ்சலமில்லாத பேரானந்தம். மறுநாள் மாலை 4.40 மணிக்கு 'மந்த்ராலய ரோடு' ரயில் நிலையத்திற்கு வந்து விட்டோம். ஆனால் மனம் முழுக்க மந்த்ராலய மண்ணின் - அந்த மகானின் மகோன்னதத்தின் - மீது லயித்து இருக்கிறது,

"ஸ்ரீ மூல ம்ருத்திகா' என்று சொல்லப்படும் மந்த்ராலய மண்ணினை உட்கொண்டால் எல்லா வித வியாதிகளும் நீங்கிவிடும் என்று நாம் அறிந்திருந்தோம். துங்கபத்ரா நதியில் நீராடும்போது பளபளப்பான கூழாங்கல் ஒன்றை எடுத்து வரவும் திட்டம். அங்கு சென்று திரும்பும் பலரும் இப்படி எடுத்து வருகிறார்கள். 'அங்கிருந்து மகானின் மகோன்னதத்தைத் தவிர எங்களுக்கு வேறு ஏதும் அறிய முடியாத பரவசத்தில், அதை மறந்து பயணப் பட்டுக் கொண்டிருந்தபோது விரலை விரித்தால், மோதிரத்தில் ஏற்கெனவே சிவப்புக்கல் விழுந்து வெற்றிடமாயிருந்த இடத்தில் மந்த்ராலய மண்!

- நாகராஜகுமார்

போட்டோ: யோகா.

ஸர்வ பீஷ்டார்த்த ஸித்யார்த்தம்
நமஸ்காரம் கரோம்யஹம்
தவஸங்கீர்த்தனம் வேத
சாஸ்த்ரார்த்த ஞான ஸித்தயே:

# பரீட்சை

## அசோகமித்திரன்

''பையன்கள் சொல்றது நிஜந் தானா?''

''எதைச்சொல்றிங்க?''

''நீ முதல் தேதிலேருந்து வரமாட் டேன்றது''

''ஆமாம்''

''ஏன் என்ன கஷ்டம்?''

''கஷ்டமெல்லாம் ஒண்ணுமில்லை. ஊரை விட்டுப் போறேன். அதுதான்.''

''நிஜமாவா?''

''ஆமாம். வர்றமாசம் பத்துப், பன்னி ரண்டு தேதியிலே போயிடலாம்னு இருக்கேன்.''

''ஏன்?''

''வேறே வேலைக்குப் போறேன்.''

அகர்வால் அவனைப் பார்த்த பார்வையில் அவநம்பிக்கை சிறிதும் குறையவில்லை.

''பெரிய பரீட்சைக்கு இன்னும் இரண்டு மாசந்தான் இருக்கு. இப்போ போறேன்றியே?''

அவன் பதில் சொல்லவில்லை.

ஏன், உனக்கு இங்கே என்ன கஷ்டம்? பையன்கள் தொந்தரவு கொடுக்கறாங்களா?''

''அதெல்லாம் இல்லை. ஊரை விட்டுப் போறேன். அவ்வளவுதான்.''

''பிரின்ஸிபாலுக்குத் தெரியுமா?''

''ரொம்ப நாள் முன்னாடியே சொல்லிட்டேன்.''

''எங்கிட்டே அவர் சொல்லலையே?''

அகர்வால் இன்னமும் அவநம்பிக்கை தோன்றத்தான் அவனைப் பார்த்தார். அவருடைய இரு மகன்களும் விவாதத்தை உற்றுக் கவனித்தபடி இருந்தார்கள். அவன் அவர்களிடம் ''49ஆம் தேற்றத்தின் கராலரி முடிச் சுட்டீங் களா'' என்று கேட்டான்.

''ஆச்சு, சார்'' இருவரும் அவர் களுடைய நோட்டுப் புத்தகத்தைக் காட்டினார்கள்.

''வெரி குட். நாளைக்கு அந்தப் பாடத்தோட பிராப்ளம்ஸ் எல்லாத்தையும் முடிச்சுடலாம்.''

பையனகள இருவரும் எழுந்து நின்றார்கள்.

''சார், அம்மா டீ போட்டிருக்காங்க.'' மூத்தவன் சொன்னான்.

''அவங்க ஏன் கஷ்டப்படறாங்க? நான் காலையிலேயே காபி குடிச் சுட்டுத்தான் வரேன்.''

''குளிர்லே இவ்வளவு தூரம் சைக்கிள்லே வந்ததுக்கு நாங்க என்ன தரோம்? இந்த டீ தானே?'' அகர்வால் சொன்னார்.

உண்மையில் தினமும் அவன் பாடம் கற்றுக் கொடுக்கத் தொடங்கிய பத்து நிமிடங்களுக்குள் அகர்வாலின் மனைவி பீங்கான் கப் சாஸரில் டீ கொண்டு வந்து வைத்து விடுவாள். அன்று அது தவறியிருக்கிறது. அதாவது தாமதம் ஆகியிருக்கிறது.

அவன் தகப்பனை இழந்து வேலை யும் இல்லாமல் சிரமப்படுவதைப் பார்த்து. அவன் பள்ளிப் படிப்பு படிக்க பிரின்ஸிபால்தான் இந்த டியூஷனை ஏற்பாடு செய்திருந்தார். அதிகாலை ஐந்தரை மணிக்குக் கிளம்பி ஐந்தாறு கி.மீ. சைக்கிளில் போவது முதலில் மிகவும் கஷ்டமாகியிருந்தது. அது அக்டோபர் மாதம். பத்தடி தூரம் கண்ணுக்குத் தெரியாதபடி பனி பெய்து கொண்டிருக்கையில் மாதம் அறுபது ருபாய்க்காக அரை மணி நேரம் சைக்கிள் மிதித்து அதன் பிறகு ஒன்றரை மணிநேரம் உயர்கணக்கை மாறுபட்ட கிரகிப்பு உடைய இரு பையன்களுக்கு சொல்லிக் கொடுக்க நேர்ந்ததை நினைத்து அவன் சைக்கிளிலேயே ஒரு முறை அழுதிருக் கிறான்.

ஆனால் அதே பனியும், குளிரும் அதிகாலைப் பயணமும் அவனுக்கு மனோகரமான அனுபவமாக மாறிப் போயின. ஐந்தாறு கி.மீ. தூரத்தில் குறைந்தது நான்கு கி.மீ. கரடு முரடில்லாத சிமெண்ட் சாலை. வழியில் ஒரு பாலம். ஒரு பெரிய ஏரியிலிருந்து பிரிந்து போகும் ஒரு கால்வாய் மீது வெறும் பத்தடி அகலமே உள்ள நீளமான பாலம். எப்போதோ ஒரு நவாபு கட்டியது. அவர்கள் அப் பாலத்தின் மீது போக முடியாது. பாலத்துக்குக் கைப்பிடிச் சுவருக்குப் பதில் வார்ப்பு இரும்பால் அலங்காரமான தடுப்பு. அதில் பத்தடி இடைவெளிக்கு இரும்புத் தூண்கள் அமைத்து அதன் மீது விளக்குகள். பாலத்தில் சைக்கிளில் போகும்போது இருபுறமும் அந்த விளக்குகள் வரவேற்பு அணிவகுப்பு போலத் தோன்றும். கீழே கால்வாய் மீதும் இடப்புறம் வெகு தூரத்துக்குப் பரவியிருக்கும் ஏரி மீதும் பனி மிதக்கும்.

காலை ஆறு மணிக்குப் பாலத்து விளக்குகளை அணைத்து விடுவார்கள். அந்தப் பாலம் என்றோ அந்த நவாப் பிரத்யேகமாகத் தன் உபயோகத்துக் காகக் கட்டியது. பாலத்து விளக்கை அணைப்பதற்குள் அங்கு போய்விட வேண்டும் என்று வீட்டை விட்டு ஐந்தரை மணிக்கே அவன் கிளம்பி விடுவான். அவன் சைக்கிளின் பின் சக்கரத்துக்குத் தினமும் காற்றடிக்க வேண்டும். சுவாசத்தையும் இதயத் துடிப்பையும் துரிதப்படுத்த சைக் கிளுக்குக் கைப்பம்பால் காற்றடிப்பதை விடச் சிறந்த முறை இருக்க முடியாது. காற்றடித்த பிறகு அவ்வளவு குளிரிலும் வியர்க்கும். ஆனால் பாலத்துக்கு ஆறு மணிக்கு முன்பு போயாக வேண்டும்.

அந்த அதிகாலைப் பயணத்தில் இன்னொரு காட்சியும் அவனைக் கவர்ந் திழுத்தது. பாலத்தைத் தாண்டிய சிறிது தூரத்திலேயே அந்த சிமெண்ட் சாலை

ஒரு குன்றின் அடிவாரத்தில் வளைந்து செல்லும். குன்றின் மீது நவாபின் மாளிகை. சாலைக்கு மறுபுறம் பெரிய பள்ளம். பள்ளத்தில் ரயில் பாதை. ஆறேகால் மணியளவில் அங்கு ஒரு ரயில் போகும். இஞ்சின் மற்றும் பெட்டிகளின் மேற்புறம் தான் சாலையிலிருந்து தெரியும். ஆனால் பெட்டிகளின் உள்ளேயுள்ள விளக்குகளின் ஒளி பெட்டிகளின் ஜன்னல் வழியாக இருப்புப் பாதையின் இருபுறமும் சிறு சிறு சதுரங்களாக விழுந்து விழுந்து மறையும். இந்தக் காட்சியும் குளிர்காலம் முடிந்துவிட்டால் காணக் கிடைக்காது. இப்போது அவனுக்கு அழுகை வருவதில்லை.

அகர்வாலின் பையன்களுக்கு அவன் கணக்கு சொல்லிக் கொடுக்க ஒப்புக் கொண்டிராவிட்டால் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட பாலம், ஒருபுறம் உயரே மாளிகை, மறுபுறம் பள்ளத்தில் ரயில்பாதை என இருந்த சிமெண்ட் சாலை இரண்டும் அவனுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

அகர்வால் வீட்டிலிருந்து திரும்பி வரும்போது இந்த மாயக்காட்சிகள் மாயமிழந்து காணப்படும். நவாப் பங்களா பராமரிப்பு போதாது. வெளிச்சுவர் பல இடங்களில் காரை உதிர்ந்திருக்கும். ரயில் பாதை இருந்த பள்ளத்தில் நிறையக் குப்பையும் சாக்கடை நீரும் இருக்கும். ஒரு முறை ரயில்பாதையில் பன்றி ஒன்று இறந்து கிடந்தது.

❄ ❄ ❄

முதல் தேதிக்கு இன்னும் பதிமூன்று நாள்கள் இருந்தன. பதிமூன்று நாள்களில் பத்தாம் வகுப்புக் கணக்குப் பாடங்கள் அனைத்தையும் முடித்து ஓரிரு நாள்களுக்குப் பழைய பாடங்களைக் கூட மறுபரிசீலனை செய்ய நேரமிருக்கும். அகர்வாலின் பையன்கள் பெரிய பரீட்சையில் எளிதில் தொண்ணூறு மார்க் வாங்கி விடுவார்கள். சின்னவன் நூற்றுக்கு நூறு கூட எடுக்கக்கூடும். பெரியவனுக்குத் திரும்பத் திரும்ப டைபாய்டு சுரம் வந்து இரண்டு வருடம் படிப்பு போய்விட்டது என்றார்கள். பையன்கள் பரீட்சை முடியும் வரை இருந்து பரீட்சை முடிவுகளையும் பார்த்துச் செல்வதுதான் முறை. ஆனால் வேறு வேலைக்கு ஒப்புக் கொண்டாகிவிட்டது. அதுவும் வெளியூரில்.

அகர்வாலின் ஒரு கேள்வி அவனை மிகவும் துன்புறுத்தியது. அவன் பிரின்ஸிபாலிடம் இன்னும் சொல்லவில்லை.

பிரின்ஸிபால்தானே அவனை அகர்வால் வீட்டுக்கு அனுப்பினார்? "அந்த இரண்டு பையன்களும் ரொம்பத் திண்டாடறாங்கப்பா. அவங்களுக்கு ஜம்பு வாத்தியார் பேசறதே புரியலையாம்." அந்த வாத்தியாரை பிரின்ஸிபால் ஒருவர் தான் ஜம்பு என்று அழைத்தார். ஊர் முழுதிலும் அவருக்குப் பெயர் ஜாடி. அவருக்கு ஜாடி போன்ற உருவம் கிடையாது. ஆனால் யாரோ எக்காரணத்துக்கோ வைத்த பெயர் நிலைத்துவிட்டது. ஜாடி வாத்தியார் எண்களைச் சொல்லும்போது கூட ஏதோ தெலுங்கில் திட்டுவது போலிருக்கும். அந்தப் பள்ளியிலேயே தொடர்ந்து படித்து வந்தவர்களுக்கு ஜாடி வாத்தியார் பெரிய புதிரில்லையெனினும் வடக்கே ஆக்ராவிலிருந்து வந்து பத்தாவது வகுப்பில் சேர்ந்த அகர்வாலின் பையன்களுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டமாதிரி இருந்தது. அகர்வால் பிரின்ஸிபாலிடமே விஷயத்தைக் கூறியிருக்கிறார். அதுவரை எந்த மாணவனுடைய பெற்றோரும் இது மாதிரிச் சங்கடங்களுக்கு பிரின்ஸிபாலை அணுகியதில்லை. அடுத்த நாள் பிரின்ஸிபாலே ஜாடி வாத்தியார் வகுப்பில் அமர்ந்து பாடத்தைக் கவனித்தார். அடுத்த நாள் அகர்வாலிடம் "உங்களால் மாதம் ஐம்பது, அறுபது ரூபாய் பையன்களுக்காகச் செலவிட முடியுமா?" என்று கேட்டிருக்கிறார். அந்த நாளில் வீட்டுக்குப் போய்ப் பாடம் கற்றுக் கொடுத்தால், ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் விகிதம் சம்பளம். இரண்டு பையன்களுக்கு அறுபது ரூபாய்.

❄ ❄ ❄

அவன் வரையில் முதல் மாதம் அறுபது ரூபாய் வாங்கிக் கொள்ளும்போது சங்கடமாயிருந்தது. பத்து, இருபது ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள் என்று சொன்னான். உடனே அகர்வால் பிரின்ஸிபாலிடம் போய்விட்டார். அன்று மாலை அவனை பிரின்ஸிபால் அழைத்து வரச் சொல்லிக் கோபித்துக் கொண்டார். "உனக்கு என்ன பணம் தானும்னு உனக்குத் தெரியுமா, எனக்குத் தெரியுமா? நீயாரு அந்த மனுஷனோட பணம் பத்திப் பேசறதுக்கு? நீ இன்னும் அதிகப்படியாப் பணம் கேக்கறேன்னு நினைச்சுண்டு அவர் எங்கிட்ட இன்னும் இருபது ரூபாய் கொடுத்தார்."

அப்போதுதான் அவன் சொன்னான், "வேலைக்கும் பாத்துண்டிருக்கேன், சார்."

"உன்னை யாருடா வேலைக்குப் போக வேண்டாம்னு சொன்னது? வேலை கிடைக்கறவரைக்கும் இப்படிப் பையன்களுக்குப் சொல்லித் தரலாமே. அந்தப் பையன்கள் ஆயுசு முழுக்க உன்னை நன்றியோட நினைச்சுட்டிருப்பாங்க."

அவர் மிகைப்படுத்திக் கூறுகிறார் என்று, அவருடைய வயதில் பாதி கூட எட்டாத அவனுக்குத் தெரிந்தது. படிப்பு, அகர்வாலின் மகன்களின் பெயர்கள், நாற்பத்தொன்பதாவது தேற்றத்தின் தீர்வு எல்லாம் மறந்து விடும். மறக்காமல் நினைக்கக்கூடியது டிசம்பர் மாதத்தில் பனிமூட்டத்தின் நடுவில் நவாப் பாலமும் பள்ளத்தில் ஓடும் ரயிலும்தான்.

அவன் பிரின்ஸிபாலைப் பார்க்கப் போனான். அன்று பள்ளியில் அரசு கல்வி அதிகாரி வந்தார். அவனுக்குத் தெரிந்த ஒரு வாத்தியார், "மெல்ல நாலு மணிக்கு மேலே வாப்பா, அப்பத்தான் பிரின்ஸிபால் சற்று சாவகாசமாக இருப்பார்," என்று சொன்னார். அவனை அங்கே எல்லாருமே மாணாக்கன் போலத்தான் நடத்தினார்கள். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. நான்கு வருடம் முன்னால் அவன் அங்கு மாணாக்கனாகத்தான் இருந்தான். இப்போது கோட்டு தொப்பி போட்ட வாத்தியாராகாவிட்டாலும் பத்தாம் வகுப்பு மாணவர்களுக்குப் பாடம் சொல்லித்தருகிறான், அதுவும் ஜாடி வாத்தியார் சொல்லிக் கொடுக்கும் பாடங்களை! இப்போது ஜாடி வாத்தியார் இங்கு வந்து விடாதிருக்க வேண்டும். "எனக்கே வாத்தியார் ஆயிட்டியாடா நீ" என்று அவர் கோபிக்கக் கூடும்.

ஜாடி வாத்தியார் வரவில்லை. அகர்வாலின் மூத்த மகன்தான் அப்பக்கம் வந்தான். "குட் ஈவினிங், சார்," என்றான்.

"குட் ஈவினிங்."

இருவரும் பேசாமல் சிறிது நேரம் நின்றார்கள். "சார்! நாளைக்கு நீங்க வருவீங்க, இல்லையா?" என்று பையன் கேட்டான்.

"வருவேன். ஏன்?"

"சார், நீங்க இங்கேயே இருந்துடுங்க, சார்."

''என்ன சொல்றே?''

''நீங்க வெளியூர் எங்கும் போய்விட வேண்டாம், சார்.''

''இரண்டு மாசம் கழிச்சு நீ என்னை விட்டுடப் போறே. அப்போ நீ குட் ஈவினிங் கூடச் சொல்லமாட்டே.''

பையன் பதில் சொல்லத் தெரியாமல் நின்றான். ஆனால் வலுவான பதில் அவன் கண்களில் தெரிந்தது.

''ஏன் அழறே? நீ இப்போ நிச்சயம் பாஸ் பண்ணிடுவே. உன் தம்பியும் தான். நான் இருந்தா இன்னும் இரண்டு மாசங்களுக்குச் சம்பளம் தரணும். அதுக்குத் தேவையேயில்லை.''

அந்த நேரத்தில் பிரின்ஸிபால் அவர் அறைக்கு வெளியே வந்தார். இருவரையும் பார்த்து அவர் பதற்றம் அடைந்தார். ''என்னடா, பையனை அடிச்சுட்டியா?'' என்று கேட்டார்.

''இல்லை சார். நான் இந்த டியூஷனை இந்தமாசம் விட்டுடறேன் சார்.''

''என்ன?''

''அதைச் சொல்லத்தான் வந்தேன்.''

''அப்போ இந்தப் பையன்கள் கதி?''

''எனக்குத் தெரிஞ்சதெல்லாம் சொல்லிக் கொடுத்துட்டேன். இனிமே அவங்களுக்கு நான் தேவையில்லை, சார்?''

''அப்படீன்னு அவங்க சொன்னாங்களா? அவங்க அப்பா சொன்னாரா?''

''இல்லை, சார். நான்தான் சொல்றேன்.''

''அவங்களுக்கு நீ தேவை, தேவையில்லைன்னு உனக்கு எப்படிடா தெரியும்? ஒழுங்காப் பரீட்சை முடியற வரைக்கும் சொல்லிக் கொடு.''

''நான் அடுத்த மாசம் ஊரைவிட்டே போறேன், சார்.''

''என்ன?''

''ஆமாம், சார். நான் இந்த ஊரிலேயே இருக்கப் போறதில்லை.''

பளார் என்று பிரின்ஸிபால் அவனை அடித்துவிட்டார். ''என்னைக் கேக்காமே நீ எப்படிடா முடிவு செய்வே? உங்கம்மா



கிட்டே வந்து சொல்றேன் பாரு. ஊரை விட்டுப் போறானாம் ஊரை விட்டு! போடா வீட்டுக்கு! ஸ்கூல் முடிஞ்சு உங்க அம்மாவை வந்து கேக்கறேன். போ வீட்டுக்கு!''

அகர்வாலின் மகன் திகைத்துப் போயிருந்தான். அவனிடம் ''நாளைக்கு நான் கிளாஸ் எடுக்க வரேன் '' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான். திடீரென்று அவன் மனம் இலேசாகியிருந்தது. பிரின்ஸிபால் அவனை அடித்தது அவனுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது. அவன் ஊரை விட்டுப் போவதைச் சிறிது ஒத்திப்போட வேண்டியிருக்கும். அல்லது அந்த எண்ணத்தைக் கைவிட வேண்டியிருக்கும். ஆனால் அவன் அப்படி வெளியூர் போனால் அவனை வழியனுப்ப அகர்வால், அவருடைய இரு மகன்களோடும் பிரின்ஸிபாலும் வருவார் என்பது நிச்சயம். ●

# மான், சில சிந்தனைகள்

டாக்டர் கே. ராமமூர்த்தி

அதோ, துள்ளி ஓடுகிறதே: அந்தப் புள்ளிமான் துள்ளித் துள்ளி ஓடுகிற அந்த அழகு பாருங்கள்; அதிலே, ஒரு சாத்விகம்; சாந்தமயம்; அப்பப்பா! தெய்விகச் சிந்தனைகளை இதயத்தில் பாய்ச்சுகிற அந்த மானின் மருண்ட பார்வை மனத்தைக் கவர்ந்திழுக்கிறது.

மான், மிருக இனங்களின் சாதுவான மென்மையான சாகபட்சிணி. புல்லைப் புசித்துத் துள்ளி ஓடி மிருதுவான தன்மையால் மனமகிழ்வு தரும். 'மனங்கவரும் மான்' என்றே மனித குலம் போற்றும்.

ஆத்ம ஞானத்தைப் பெற்றுத் தருகிற ஜடபரதர் சரித்திரம் படிக்கிறபோது மான் பற்றிய சிந்தனைகள் மனத்தில் வரும்.

மான் அசை போடுகிற பாலூட்டிகளின் இனம் சார்ந்த தாகும்; ஸெர்விடே (Cervidae) குடும்பத்தைச் சேர்ந்தது என்பதாக ஆய்வாளர்கள் கூறுவார்கள். பழைமையும், தொன்மையும் கொண்ட லத்தீன் மொழியில் 'ஸெர்வின்' (Cervine) என்றால், மானைச் சேர்ந்த, மாநிறம் சார்ந்த என்பதாகப் பொருள். அது பற்றியே ஸெர்விடே குடும்பம் என்ற வழக்கு வந்திருக்க வேண்டும்.

தொன்மைக்கும் தொன்மையான ஸம்ஸ்க்ருதத்தில் மான் என்றால் அதனுடன் கூடியது (வன்) அதாவது அதனை உடையவன் (து) என்பதாக அறிஞர்கள் பொருள் கூறுவதைக் கேட்டிருக்கிறேன். புத்திமான் என்றால் புத்தி உடையவன்; அறிவுடன் கூடியவன் என்பது பொருளாகும். பானுமான் என்றால் கிரணங்களை உடையவன். ஸ்ரீமான், கோமான் என்று சிறப்புப் பெயர்கள் எல்லாம் நம் நெஞ்சில் எழுகின்றன அல்லவா!

தமிழ் மொழியிலும் மான் என்பதற்குப் பல அர்த்தங்கள் உண்டு. பொதுவாக, மான் என்பது பெயர் விகுதியாகப் (Noun Suffix) பயன்படுவது கண்கூடு. உதாரணம், கல்விமான்: இப்படியே பல சொல்லலாம்.

'ஆன்ற மொழிகளினுள்ளே உயர் ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்' எனத் தமிழ்த்தாய் பாடலில் மகாகவி பாரதி மொழிந்தது நினைவு வருகிறது. மான் என்ற சொல்லுக்கு ஸம்ஸ்கிருதத்திலும், தமிழிலும் 'ஒரு பொருள்' காணும்போது மனநிறைவு உண்டாகிறது. காலப்போக்கில் கலாசார வாழ்வின் பிணைப்பில், மாந்தர்களின் உறவாடல்களின் வாயிலாக உண்டாகிற விளைவாக இது இருக்குமோ எனச் சிந்திக்கத் தோன்றுகிறது.

பூமான் என்றால் அரசன், இலக்குமி தேவி என்றும் பொருள். பூ என்றால் பூமி. பூமியாகிய பெருஞ்செல்வத்தை உடையவள் லட்சுமி தேவி; சீமான் செல்வம் உடையவன். 'பெம்மான் இவனன்றோ' என்று இறைவனைப் பாடுவார்கள். பெம்மான் என்பது கடவுளையும் பெரியவர்களையும் குறிக்கும்.

பெருமான் என்ற வார்த்தை நமக்கு சிவபெருமான் நினைவை வரவழைக்கும். தட்சன் வேள்வியின் கதை நாம் அறிந்ததே. அதுசமயம் வேள்வியில் வந்த மானை, நலம் கருதி வலக் கையால் எடுத்துச் சிவபெருமான் உலகை ரட்சித்தது புராணத்திலிருந்து அறியப்படுகிறது.

என் சொந்த ஊர் கல்லிடைக்குறிச்சிக்கு மிக அருகில் உள்ள தளச்சேரியில் ஒரு சிவபெருமான் கோயில் உள்ளது. அக்கோயிலை 'மான் ஏந்தியப்பர் கோயில்' என்றே காலம் காலமாக அழைத்து வழிபட்டு வருகிறார்கள். சிவபெருமான் 'மான் ஏந்தியப்பர்' என்று அறிந்து கொள்கிற மனநிறைவு பீரிட்டு முகத்தில் ஆனந்தக் களிப்பாக மாறுகிறது. 'மானும் மழுவும் ஏந்தி' என்ற வரிகள் கூட நிழலாடுகின்றன.

பெருமான் என்பதற்கு விஷ்ணு என்றும் பொருள் கூறுவது பொருத்தமே. விஷ்ணு என்ற உடனே சார்ங்கம்தானே நினைவுக்கு வரும்? ச்ருங்கம் என்றால் கொம்பு'' ச்ருங்கஸ்ய விகாரம் சார்ங்கம்'' - காரணப் பெயர் இது.

இவ்வாறெல்லாம் நம் மனம் நினைக்கிற போது, 'வனமாலீ கதி சார்ங்கி சங்கி சக்ரீ ச நந்தகி ஸ்ரீமான் நாராயணோ விஷ்ணு வாஸுதேவோ பிரக்ஷகீ'' என்று விஷ்ணு ஸகஸ்ரநாம வரிகள் தாமாகவே நம்மிடமிருந்து உச்சாடனமாகின்றன.

கோமான் என்பதற்குப் பொருள் காண்போமாகில் பெருமை உடையவன், அரசன் என்று விரியும். அத்துடன் மட்டும் பொருள் நிற்காமல் கோமான் என்பதற்கு குரு (Preceptor) என்றும் அர்த்தம் அகராதியில் காணப்படுகிறதை எத்தனை பேர் கண்டு தெரிந்து கொண்டிருப்பார்களோ! கலைமான் (Stag) என்பது ஆண்மான். கலைமான் என்பதற்கு அகராதிப் பொருள் இன்னொன்று உண்டு. அது என்ன தெரியுமா? ஸரஸ்வதி என்று பொருளாகும்.

மான் என்றதும் (Graceful and quick run) என்று சொல்வார்கள். As timid as a deer என்று சாதுவான குணத்துக்கும் மிருதுவான தன்மைக்கும் இந்த ஆங்கிலப் பழமொழியையும் கூறுவதைக் கேட்டிருக்கிறேன்.

மான் (Deer) பெண்மான் (Doe) என்பது யாவரும் அறிந்ததே. காட்டுமான் இனப்பெருவிலங்கு (Elks) தனி வகை ஒன்றும் உண்டு. எஸ்கிமோக்கள் பற்றிப் படித்திருக்கிறோம். அவர்கள், பனிச்சறுக்கு வண்டிக்குப் பயன்படுத்தும் மான் ரெயின்டீர் வகை (Reindeer) என்று அழைப்பார்கள். அமெரிக்க மானியல் விலங்கு வகைக்கு மூஸ் (Moose) என்று பெயர். கரிபௌ (Caribou) என்பவை வட அமெரிக்கக் கலைமான் வகையாகும். மானியல் ஆட்டு வகையானது மறிமான் (ANTLOPE) ஒரு வயதிற்குட்பட்ட மானை இளமான், கன்று (Pawn) அல்லது

மான் கன்று, மான்குட்டி என்று அழைக்கிறோம். Buck, Male deer ஆட்டியல் ஆண்வகை, ஸ்டேக் (stag) என்று உலகமெங்கும் மான்கள் இருக்கின்றன. ஆஸ்திரேலியாவில் பெரும்பாலும் இல்லை என்பதாகச் சொல்லப்படுகிறது.

மான் என்பதற்கு இன்னுமொரு முக்கியமான பொருள் இருக்கிறது. மான் என்பதற்கு தமிழில் 'மூலபிரக்ருதி' என்று அர்த்தம். அதாவது Primordial cause of the Material world என்பதாகக் கொள்ளலாம். துறவு நிலை கொண்டு சந்நியாசம் ஏற்கும்போது 'கிருஷ்ணாஜினம்' வழங்கப்படும் என்பார்கள். கிருஷ்ணாஜினம் என்பது மான்தோல். அதாவது மறிமான் தோல் (The skin of Black Antlope).

மகான்களிடம் மான்தோல் இருக்கும். பிரம்மசாரிகள் பூணூலில் மான்தோல் கட்டிக்கொள்வது மரபு. ஜபதபங்கள் செய்யும்போது மான்தோலில் அமர்ந்து கொள்வது விஞ்ஞான ரீதியாகக் கூட சக்தி மாறாத தான (transform) நிலை பயப்பதாகச் சொல்லப்படுகிறது. மரப்பலகையில் அமர்ந்தும் ஜபதபம் செய்வதுண்டு.

மகான்கள் என்றதும் அப்பைய தீட்சிதர் நினைவு வருகிறது. ஸம்ஸ்க்ருத மொழியில் ஸ்வபாவோக்தி (ஸ்வபாவஉத்தி) அற்புதமாக இருக்கும். மதுரமான ஸம்ஸ்க்ருதத்தைப் படித்து ரசிப்பதே ஒரு தனி அனுபவம். அப்பைய தீட்சிதர் அல்லி மலரின் (ஆம்பல்) ஆனந்தம் என்பதான 'குவளையானந்தம்' மிக அழகாகப் படைத்துள்ளார்.

மான் பற்றிய ஒரு சிந்தனை அங்கே வர்ணிக்கப்படுகிறது. மானின் கண் மருண்ட பார்வை உடையது. மருட்சிக்கு மான் என்பது வழக்கு. மான் அழகாகப் பார்க்கும் போது, அந்த மான் தன் காதுகளை உயர்த்திக் கொண்டபடி பார்ப்பது அதன் சுபாவம். அந்தக் காட்சியை அப்பைய தீட்சிதர் அமைத்துள்ள வரிகள்!

''குரங்கைஹ உத்தரங்க அக்ஷைனி ஸ்தப்தகர்ணைகி உதீஸ்யதே''

இந்த அலங்கார விளக்கத்தை அனுபவித்து மனம் நெகிழலாம். காளிதாஸன் மகாகவி. காளியின் பேரருள் பெற்ற மகான். காளிதாஸனின் ரகுவம்சம் என் சிந்தனையை அழைத்துச் செல்கிறது.

வசிஷ்டர் ஆசிரமம் நோக்கி ரதம் செல்கிறது. மயில், யானை, மிருகங்கள், பறவைகள் எனக் காட்சிப்படுத்தப் படுகிறது மகாகவியால். திலீபனும் சுதக்ஷினாவும் ரதத்தில் செல்கின்றனர்.

ஆண்மானின் கண் திலீபனின் கண்போல் இருப்பதாக சுதக்ஷினா நினைக்கிறாள். பெண்மானின் கண்கள் சுதக்ஷினாவின் கண்போல் இருப்பதாக திலீபன் நினைக்கிறான். ரதம் செல்கிறது. மான் முன்னே பயந்து, பாய்ந்தோடுகிறது. ரதத்தைத் திரும்பிப் பார்த்து, திரும்பிப் பார்த்து மான் ஓடுகிறது. மானின் கண்கள் ரதத்தின் மீது. ரதத்தில் உள்ளவர்கள் கண்கள் மானின் மீது. ரகுவம்சம் சர்க்கம் ஒன்றின் தொடக்கக் காட்சியே மான்மூலம் மனத்தை ஈர்க்கிறது.

''பரஸ்பர அக்ஷிஸாத்ரிஸ்யம் தூர உஜ்ஜிதவர்த்மஸு'' என்ற உபமான அலங்காரத்வனி அதியற்புதமாக



அமைந்துள்ளது பாருங்கள். தொடர்ந்து, ''மிருகத்வந்த வேஷுபஷ்யந்தௌ ஸ்யந்தன ஆபத் தத்ருஷ்டிஷு'' என்று மானின் கண்களின் ஒட்டத்தை நாம் தரிசிக்கும்படி, செய்கிற காளிதாஸனின் ரகுவம்சக் காவியச் சிறப்புடன் மான் பற்றிய சிந்தனை படர்கிறதல்லவா!

மகாகவி காளிதாஸரின் சாகுந்தலத்தில் ஒரு காட்சி உள்ளத்தில் உலாவரத் தொடங்கியது. துஷ்யந்தன் வனத்தில் வேட்டையாடச் செல்கிறான். ரதத்தைப் பார்த்து, மான் பயந்து வேகமாக ஓடுகிறது. மானின் கண் பார்வை ரதத்துடன் இருக்கிறது. துஷ்யந்தனின் அம்பு தன்மீது பாய்ந்திடுமோ என்று மிக வேகமாக மான் முன்னே, முன்னே செல்கிறது.

மானின் பாய்ச்சல் நாம் அறிந்ததே. அந்தப் பாய்ச்சலில் வீச்சு (power) எப்படியிருக்கிறது தெரியுமா? மானின் முன்பகுதி உடலுக்குள் பின்பகுதி உடல், நுழைந்து செல்கிற மாதிரித் தெரிந்ததாம். மானின்

பாய்ச்சலில், அந்தக் காட்சி முன்பாகத்திற்குள் பின்பாகம் நுழைந்து நுழைந்து சென்று சென்று மான் பாய்ந்தோடுகிற மாதிரி உள்ளதாம்.

மானின் அந்தப் பாய்ச்சலில் அந்த வர்ணனையோடு கூட அதன் உயரத் தாண்டலும் (High Jump) நீள் தாண்டலும் (Long Jump) ஏதோ ஆகாயமார்க்கத்தில் மான் செல்வது போல் தோன்றுகிறதாம். ஆகாயப்பாதையில் தாவித்தாவிச் செல்லுவதாகவும், பூமியில் சிறிது நேரம் மட்டுமே ஓடுவதாகவும் ஒரு நினைப்பு.

இது, துஷ்யந்தனின் நினைப்புக்கூட இல்லை; அப்படியேதான் மானின் பாய்ச்சல் என்பதாக இந்தக் காட்சியில் காளிதாசன் வர்ணித்துள்ள ரசானுபவத்தை,

'க்ரீவாபங்கி அபிராமம்'' என்று தொடங்கும் வரிகள் முழுவதும் படித்தின்புற்ற வண்ணம் மான் அங்கு கண்டேன், மன நிறைவு கொண்டேன் என்பதான நிறைவு ஏற்படுகிறது.

மான் மிருதுவான சரீரம் உடையது. அம்பு வஜ்ரம் மாதிரி உள்ளது. மிருதுவான புஷ்பத்தின் மீது அக்னி பட்டால் எவ்வாறிருக்கும்?

'ந கலு ந கலு பாணஹ
சந்நி பாத்யஹ அயம் அஸ்மின்
ம்ருதுனி ம்ருகஷரீரே புஷ்பராசௌ
இவ அக்னி ஹி''

மான்களின் மென்மையான வாழ்க்கை எங்கே! உன்னுடைய கொடூரமான பாணங்கள் எங்கே என்பது சிந்தனை பரவுகிற நேர்த்தியில் நெஞ்சம் நெகிழ்கிற தன்றோ!

மான் ஒரு மலர் மாதிரி. புஷ்பத்தைப் போன்றது. பாணம் அக்னி போன்றது. கண்வர் ஆசிரமம் நோக்கிச் செல்கிற சமயம் நிகழ்கிற சாகுந்தலக் காட்சிகளின் நயம் நிறைந்த காவிய உணர்வுகளுடன் மேலே மேலே காளிதாஸன் நம்மை அழைத்துச் செல்கிறார்.

சகுந்தலை வளர்க்கும் மான் பற்றிய காட்சி மன நெகிழ்ச்சியை உண்டாக்குகிறது. துஷ்யந்தனைப் பார்க்கக் கிளம்பும் போது சகுந்தலையின் ஆடையைப்பற்றி இருக்கிறதாம் மான்.. பாசத்துடன் சகுந்தலை வளர்த்த மான் அல்லவா அது. சகுந்தலையை, புத்ரன் மாதிரி அந்த மான் குட்டி பற்றுகிறதாகப் பேசப்படுகிறது. மான்குட்டி புல்லுடன் தர்பையைச் சாப்பிடும் தருணம் வாயில் புண் ஏற்பட்டிருக்கலாம். அந்தப் புண்ணை ஆறவைக்க 'இங்குலி' தைலத்தை மானின் வாயில் அன்று தடவிய சகுந்தலையின் வாத்ஸல்யத்தை மறவாமல் மான்குட்டி இன்று சகுந்தலையைப் பற்றுகிறது. கை நிறைய ஆகாரம் கொடுத்தவள் ஆயிற்றே! ''உன்னை விட மாட்டேன்'' என்று அந்த மான் கூறாமல் கூறுகிறதாக அமைந்த இடம் நம் நெஞ்சை நெருட வைக்கிறது. செஞ்சொற் கவியின்பத்தை மான் தருகிறது.

இராமாயணத்திலும் திருக்குறளிலும் (கவரிமான்) சங்க கால இலக்கியமான ஐந்திணை ஐம்பதிலும் 'மான்' இடம் பெற்றிருக்கிறது தெரிந்த செய்தியே.

''ஆன்மாவென்றே கருமத் தொடர்பை எண்ணி அறிவு மயக்கம் கொண்டு கெடுதல் வேண்டாம்'' என்ற மகாகவி பாரதியார், தமது பாட்டு வரிகளைத் தொடர்ந்து,

''மான்மானும் விழியுடையாள் சக்திதேவி
வசப்பட்டுத் தனை மறந்து வாழ்தல் வேண்டும்''

என்ற வழிகாட்டும் ஒளிக்கீற்றுக் கவிதை வரிகளும், மனத்தேரில் பவனி வருகிறது. (மானும் என்றால் போன்ற என்று பொருள்). மருட்சியில்லாத பார்வையை நல்கும் மான் விழியாள் - மாதேவி - அந்த சக்தி தேவி - வசப்பட்டு, தன்னை மறந்து வாழ்வோம் (சரீர உணர்வை விட்டு வாழ்வோம்) என்கிற உயரிய கருத்துடன் பாரதியின் பாட்டு வரிகள், மான். சில பல சிந்தனைகளின் சிகரமாகி, சிந்தையை ஆட்கொள்கிறதல்லவா?



# அஞ்சு சுழி பஞ்சகல்யாணி

## திலகவதி

இப்படியெல்லாம் குடும்பத்தாரை அடிக்கடி ஆச்சர்யத்தில் மூழ்கடிப்பது பட்டாபிக்கு சகஜம்தான். குடும்பம் என்பது பட்டாபியும், அவனுடைய மனைவியும், ஒரே ஒரு மகளும் மட்டுமே.

காலையில் காபி குடித்துவிட்டுப் புறப்பட்டவன், ''கோபிநாதம் பட்டியிலிருக்கிற நிலங்களைப் பார்த்துவிட்டு வருகிறேன்'' என்று கிளம்பினான். இத்தகைய 'பொறுப்பான' செயல்களை ஒரு மாமாங்கத்துக்கு ஒரு தடவைதான் பட்டாபி செய்வது வழக்கம். ஆகவே பட்டாபியின் மனைவி அப்படியே பூரித்துப் போய்விட்டாள்.

இப்போது என்னடாவென்றால் பட்டாபி மாடும் கன்றுமாக வந்து நிற்கிறான். வருகிற வழியிலே தாமதிக்காமல் பட்டாபி, பசுவுக்குப் பெயரை வேறு சூட்டியிருந்தான் போல இருக்கிறது.

''லட்சுமி! அம்மாடி... யார் யாரெல்லாம் இருக்கா பாரு உன் வீட்டிலே?'' என்றான் செல்லம் கொஞ்சும் குரலில்.

கட்டிலை விடச் சற்றே உயரமாக இருந்தது அந்தப் பசு. ஸ்ட்ராங் காபி போன்ற நிறத்தில் அங்கங்கே நுரையும் காபித்தூளும் மிதப்பது போல கறுப்பும், வெண்மையும் அதன் மேனியில் ஆங்காங்கே அள்ளித் தெளிக்கப் பட்டிருந்தது. மையிட்டாற் போன்ற கண்கள். நெற்றியில் வெள்ளைச்சுட்டி. பக்கத்தில் கிட்டத்தட்ட அதே அளவு உயரம் இருந்த கன்றுக்குட்டி.

''கன்னுப்போட்டு நாளாவது போல இருக்கே. இத்தினி உசரமா நிக்குதே கன்னுக்குட்டி? பால் வத்தின மாடாப் பார்த்துப் பிடிச்சுட்டு வந்திருக்கிறீங்களே!'' பட்டாபியின் மனைவி சலித்துக் கொண்டாள்.

துப்பறியும் சாம்பு, பீட்டர் செல்லர்ஸ் போன்ற வேடிக்கைக்காரர்களைத் தூரத்தில் நிறுத்தி ரசிப்பது எல்லாருக்கும் முடியும். ஆனால் அவர்களுடன் ஒரே கூரையின் கீழ் இருந்து குடித்தனம் செய்வது என்பது வேடிக்கையாகவோ, ரசிக்கத்தக்கதாகவோ இருக்காது என்பது பட்டாபியின் மனைவி அநுபவ பூர்வமாகக் கண்ட உண்மை.

பட்டாபியின் கொஞ்சலையும் சரி, அவனுடைய மனைவியின் பாரா முகத்தையும் சரி, அந்தப் பசு சட்டை செய்வதாயில்லை. 'ஓடும் செம் பொன்னும் ஒக்கவே கருதும்' பரப் பிரம்மமாக அது அசை போட்டுக் கொண்டு நின்றது.

பட்டாபியின் மகள் துளசி மட்டும் இடுப்போடு ஒட்டினாற் போல முழங்கையை வைத்துக் கொண்டு விரல்களை மட்டும் பயந்து கொண்டே நீட்டி, கன்றுக்குட்டியின் நெற்றி மீது கை வைத்தாள்.

''பாத்துடி... கழுதை ஒதைச்சுக் கிதைச்சு வைக்கப் போறது'' என்றாள் சாரதா, பட்டாபியின் மனைவி.

''ம்ஹ்ம்... கழுதையாம்... லட்சுமி கடாட்சமா சாட்சாத் காமதேனுவே நேரிலே வந்தாப்பல வந்து நிக்கற பசுமாட்டைப் பார்த்துச் சொல்ற வார்த்தையைப் பாரு வார்த்தையை. டப்பாப்பால், தண்ணிப்பால், பாக்கெட்பால் வாங்கிக் குடிச்சு வளர்ந்த வம்சத்துக்கு எங்கே பசு மாட்டோட அருமை தெரியும்? இதே நாலு பசுமாடும், கொட்டிலும், கட்டுத்தறியுமா இருந்த வீட்ல பொறந்த பொண்ணா இருந்தா, மாட்டையும் கன்றையும் ஒண்ணாப் பாக்கற அதிர்ஷ்டம் கெடைச்சுதே கெடைச்சுதேன்னு பொங்கிப் பூரிச்சிருப்பா. கடைப்பாலு கன்றாவிங்க என்னத்தைக் கண்டுது...'' என்று முனகியபடி, பட்டாபி மகளைப் பார்த்து, ''போம்மா, போய் ஆலம் கரைச்சுக் கொண்டாந்து லட்சுமிக்கும் கன்னுக்குட்டிக்கும் திருஷ்டி கழி'' என்று ஆணையிட்டான்.

வீட்டுக்குள்ளே போகத் திரும்பிய துளசியைக் கொக்கி போட்டு இழுத்தது சாரதாவின் குரல். ''நில்லுடி... நீ பாட்டுக்கு எதையாவது எடுத்துக் கரைச்சுடப் போறே... இரு வர்றேன்...'' என்றவள், கணவனைத் துளைத் தெடுக்கிற பார்வையாகப் பார்த்து, ''யாரைப் பார்த்து டப்பாப்பாலுங்கறீங்க? எங்க வீட்லயா கொட்டிலு இல்லை? இந்த மாதிரி நாட்டுமாடு, குள்ளமாடு, வத்தல் மாடு, தொத்தல் மாடெல்லாம் எங்கப்பா திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாரு. காங்கேயனையும், வடகாட்டு மாட்டையும், நெல்லூர் மாட்டையும் கூட அவர் கிட்டே சேர்க்க மாட்டாரு. சிந்துப் பொட்டை என்ன, சர்ஜி என்ன, காலேஜ் மாடு என்னன்னு ஒரே *சீமை* வகையறாவாத்தான் கறவைக்கு வச்சிருந்தோம். ஏருக்கும், நடவுக்கும், பம்பலுக்கும், வண்டிக்கும் இடை வெட்டு காளாச்சிக் கிடாரிதான், லம்பாடி மலையன்தான், நூத்துக்கு நூறு போடிதான், கோலிஸ்டன் கிடாரிதான். ம்க்கும்... அடேயப்பா, அந்தக் கருஞ்செவலையும், கருக்காமயிலையும், காரிக்காளையும், கண்ணாடி மயிலையும், நாய் வெள்ளையும், சந்தனப் புள்ளியும்... உம்... இன்னிக்கெல்லாம் பாத்தாலும் சலிக்காதே! 'மாடு வாங்கத் தெரியாதவன் போனான், மட்டக்கொம்பப் பார்த்து வாங்கினான்!' என்கிற கதையா, ஒரு தொடைவாலை வாங்கிட்டு வந்துட்டு, எங்கம்மா வீட்டை இளக்காரம் பேசாதீங்க...''

பொரிந்து கொட்டினாள் சாரதா. பட்டாபிக்குச் சிரிப்பு வந்தது. ''சரி... அப்படியே இருக்கட்டும், உதவாதது களைக் கொண்டாந்து வீடு சேர்த்து வடவாரம் பண்ணறதுதானே என் வேலை? இப்ப பாரு... ஊர்லே லட்டு லட்டா எத்தினி பொண்ணுங்க இருக்காங்க? எல்லாரையும் விட்டுட்டு உன்னைக்கட்டிகிட்டு ஒரு மாதிரியா குடும்பஸ்தனுமாகி குத்துவிளக்காட்டம் ஒரு பொட்டைப் புள்ளையையும் பெத்துடலையா...? எல்லாம் அப்படித்தான். போ... போ... போய் ஆலம் கரைச்சுக் கொண்டா'' என்றபடி வெளியே வந்து, அத்தனை நேரம் பசுமாட்டைப் பிரிந்ததே தவறு என்பது போல தும்புக் கயிற்றை ஒரு கையில் பிடித்துக் கொண்டு, வலக்கையால் மாட்டைத் தடவிக் கொடுத்தான்.

அதற்குள் பட்டாபி மாடு பிடித்துக் கொண்டு வந்த செய்தி தெருவெங்கும் பரவி, மாட்டைப் பார்க்க வீட்டு வாசலில் ஒரு கூட்டமே சேர்ந்து விட்டது.

ஆளுக்கொரு கருத்தும், விமர்சனமும் தூள் பறந்தன.

"பளபளன்னு அழகா இருககுது பாரு கொம்பு. இதைத்தான் பூங்கொம்புங்கறது" என்றார் ஒரு பெரியவர்.

''பூங்கொம்பென்னவோ பூங்கொம்புதான். ஆனா, கட்டக்கொம்பு" என்று முன்னவரின் கூற்றுக்கு அடுத்தவர் திருத்தம் சொன்னார்.

"அப்படியா? பேச்சோட பேச்சா என் வீட்டுக்காரி இதை மட்டக்கொம்புங்கறா. நீங்க என்னாங்கறீங்க" என்று அபிப்ராயம் கேட்டான் பட்டாபி.

"அதாரு சொன்னது, மட்டக் கொம்புன்னு? கட்டையா இருந்து கொம்பு பின்னாண்டை சாஞ்சிருந்தா மட்டக்கொம்புங்கலாம். இது அப்படியில்லையே! கட்டையா கூழையா இருந்தாலும் விரிஞ்சாப்பலதானே இருக்குது? இப்பிடியுள்ளதை அகுடு கொம்பும்பாங்க. இப்பிடியிருந்தா, குடும்பத்துக்கு நல்லது" என்று நற்சான்று வழங்கினார் இன்னொருவர்.

"மைக்கண் மாடு பாய்ச்சலும்பாங்க..." என்று சற்றே இழுத்தார் பெரியவர்.

"மைக்கண் இல்லை பெரிசு! சரியாப் பாரு. கருங்கண்ணுதான். மைக்கண்ணு மாதிரி தெரியுது. அதெல்லாம் ஒச்சம் ஒண்ணுகூடச் சொல்றதுக்கில்ல..." என்றார் நற்சான்றாளர்.

"கொம்பு, கண்ணு எல்லாம் இருக்கறபடி இருக்கட்டும். கறவையைக் கொண்டாந்தா முக்கியமா எவ்வளவு கறக்கும்னுதானே பாக்கணும்? அதைப் பாருங்க. திருப்தியாக் கறந்தாச் சரிதான்..." என்று அவர்கள் கவனத்தை, பால்கறப்பின் மீது ஈர்த்தார் ஒருவர்.

"பாலைப் பார்த்து பசுவைக் கொள்ளு, தாயைப் பார்த்து பொண்ணைக் கொள்ளும்பாங்க. அதெல்லாம் ஒரு வேளைக்கு மூணுவேளை கறந்து பார்த்துத்தான் வாங்கியாந்தேன்" என்று குறுக்கிட்ட பட்டாபி, இரண்டு உள்ளங்கைகளை ஒன்றரைச் சாண் இடைவெளி விட்டுக்காட்டி "அந்தினி பெரிய பக்கெட் நிறையக் கறக்குது..." என்றான்.

"அப்ப, வீட்டுக்குப் போக, எதுனா ஹோட்டல், டீக் கடைக்கெல்லாம் பால் ஊத்தலாம்...." என்ற கருத்தைத் தெரிவித்தார் பெரியவர்.

"அவ்வளவு பால் கறக்கற மாடு இருக்கற வீட்டுல அவசியம் ஒரு ஐஸ்பொட்டி இருக்கணும். வாங்கிடுங்க..." என்று ஆலோசனை வழங்கினார் இன்னொருவர்.

"நீங்க எதுக்கும் டவுன் ஹோட்டல்லேயே பாலைக் கொடுக்க ஏற்பாடு பண்ணுங்க. உள்ளூர் டீக் கடைக்காரனுங்க எமகாதகப் பேர் வழிங்க. கடைஞ்சமோர்ல வெண்ணெய் எடுக்கற பசங்க. வெளியே விக்கற விலைக்கு இரண்டு மூணு ரூபாய் குறைச்சுத்தான் கேப்பானுங்க. அந்தப் பணத்தை வசூல் பண்றதுக்குள்ள முழி பிதுங்கிடும். பத்துத்தடவை படியேறி இறங்கணும். அதுவும் பத்தாதுன்னு அமாவாசைக்கோ, பௌர்ணமிக்கோ இலவசமாப் பால் தரணும்பாங்க" சொன்னவர் அநுபவஸ்தர் போலிருக்கிறது. குரலில் அப்படி ஓர் எரிச்சல்!

சாரதா, பெரிய பித்தளைத் தாம்பாளம் தளும்பத்தளும்ப செக்கச் செவேலென்று ஆலம் கரைத்து எடுத்து வந்தாள். அப்போதுதான் துலக்கியிருப்பாள் போல இருக்கிறது. தாம்பாளம் தகதகவென்று மின்னியது. அந்த மின்னலுக்குள் உயிர்ததும்பும் சிவப்பும், அதில் மிதக்கும் கன்னங்கரேலென்ற கரித்துண்டுகளும், பவள நிறமான மிளகாய் வத்தலும், கிளி வண்ண வெற்றிலையும் அதன்மேல் முத்துப்பதித்தது போல கற்பூரக் கட்டியுமாக, சாரதா பசுவை நெருங்கினாள். 'இங்கே என்ன கூட்டம்?' என்பது போன்ற முகச்சுளிப்போடு, சுற்றி நின்றவர்களை முரட்டுப் பார்வையாகப் பார்த்தாள். "வா... துளசி... ஒரு கை பிடி" என்று மகளை அழைத்தாள். "மாட்டுக்காரப் பையனை விலகச் சொல்லுங்க. மாட்டையும் கன்றையும் புடிச்சிகிட்டு நில்லுங்க" என்று பட்டாபியிடம் சொன்னாள்.

அவளுடைய கெடுபிடியில் கூட்டம் கரைந்தே போனது. கற்பூரம் ஏற்றி ஆரத்தி எடுக்கையில், "பாவி கண்ணு பரப்பா கண்ணு, கண்டார் கண்ணு, புள்ளக் கண்ணு, கொள்ளிக் கண்ணு எல்லாம் இந்தக் கற்பூரமாட்டம் எரியணும். மாடும் கண்ணும் நல்லாயிருக்கணும்" என்று அவள்அழுத்தம் திருத்தமாக உரத்து உச்சரித்த பாணியில் மிச்சமிருந்தவர்களும் அங்கிருந்து நகர்ந்தனர்.

"பையா... அக்காகிட்ட முளைக்குச்சி வாங்கி, அப்படியே அந்தப் புங்க மர நிழல்லே அடி... இப்பத்திக்கு லட்சுமி அங்க சித்த இருந்துக்கட்டும். நாளைக்கு, நாளை மறுநாளைக்குள்ள கொட்டாய் போட்டுடலாம்" என்று மாட்டுடன் வந்த பையனுக்குச் சொன்னான் பட்டாபி.

"இந்தப் பையனை வேற என்னத்துக்கு மாட்டோடவே சேர்த்துப் புடிச்சாந்துட்டீங்க? உங்க வேலைங்கள்ளாம்..." என்று முணுமுணுத்தாள் சாரதா.

"ஏய்... பேசாம வேலையைப் பாரு. காரிமங்கலம் சந்தையில இருந்து தருமபுரி வரைக்கும் நானே மாட்டையும் கன்றையும் ஓட்டிக்கிட்டு வரணுங்கறியா? பேச்சைப்பாரு... அது எப்பேர்ப்பட்ட மாடு? அதுக்கு என்ன அறிவு? என்ன ரோஷம்? தெரியுமா உனக்கு. வாய் இல்லை பேசறதுக்கு. அவ்வளவுதானே தவிர, மனுசங்களாட்டம் பழகுது. அப்பேர்ப்பட்ட உசுரு, வளத்தவங்களை விட்டுட்டு ஒரே நாள்லே வந்துடுமா? ஏங்கிப் போயிடாதா? அதுக்குத்தான் பழகற வரைக்கும் இரண்டு நாளைக்கு இருக்கட்டும்னு இந்தப் பையனைக் கூட்டிகிட்டு வந்தேன். மாட்டைப் பிடிச்சுகிட்டு நான் சந்தைக்கு வெளியே வந்ததும் வித்தவரு அப்படியே கண் கலங்கிட்டாரு. 'சார்! நான் இதைக் கறவை மாடுன்னே நினைக்கலை சார்! எம் பிள்ளைன்னு நெனச்சு வளர்த்தேன், சார்'னு, அப்படியே தேம்பித்தேம்பி அழுதுட்டாரு. இது அப்படி பிரியமாப் பழகியிருக்குது அவங்ககிட்டே..."

பட்டாபி சொன்னதைக் கேட்டுக் கொண்டு நெஞ்சம் நெகிழ நின்றாள் சாரதா.

"நான் வெலை பேசி மாட்டை அப்பத்தான் புடிக்கிறேன். நான் குடுத்த தொகைக்கு மேல ஐநூறு ரூபாய் தர்ரேன்னு இரண்டு பேரு வந்து மாட்டைக் குடுத்தாத்தான் ஆச்சுன்னு ஒரே தகராறு. ஆனா மாட்டுக்காரரு சொல்லிட்டாரு."சார்!... பணம் என்ன சார் பெரிசு?... ஏதோ எங்க கஷ்டம் தாங்காம இதைச் சந்தைக்குக் கொண்டாந்துட்டேன்... அதுக்குன்னு விலை வர்ற இடத்துல புடிச்சுத் தள்ளி விடறதுக்கும் எம் மனசு கேக்கலை. என்னமோ உங்களைப்பார்த்தா இதை எங்களைப் போலவே நீங்களும் பிரியமா வச்சுக்குவீங்கன்னு தோணுது. அதனால தர்றேன். இல்லைன்னா வெள்ளிக்கிழமை தலை ஈத்து ஈனின மாட்டை என் உசுரு போனாலும் தரமாட்டேன்"னு மளமளன்னு கண்ணால தண்ணி விட்டார்" பட்டாபி தன் முகராசியும் களையும் எப்பேர்ப்பட்ட பேரம் படிவதற்கு வழி செய்திருக்கின்றன என்கிற பெருமையை மனைவியின் மனத்தில் படும்படி எடுத்துச் சொன்னான்.

"ஒரு வாய் காப்பி குடு. நான் டவுன் வரைக்கும் போய் வந்துடறேன்" என்று துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டான்.

''ஓர் ஐந்து நிமிஷம் பொறுங்க. வெங்காயச்சட்னி செஞ்சு, கேழ்வரகு ராகி அடை பண்ணித் தந்துடறேன்'' என்றபடி சமையல் கட்டை நோக்கித் திரும்பினாள் சாரதா.

''வேணாம் சாரு!... நேரமில்லை... யாரோ சொன்னாப்பல நம்ப வீட்ல என்ன ஃபிரிஜ்ஜா இருக்குது? பால் கறக்கறதுக்குள்ள டவுன் ஓட்டல் முதலாளிங்ககிட்ட பேசி வச்சுக்கிறது நல்லது இல்லையா? அப்புறம் கொட்டாய் போட கீத்து மூங்கில் வாங்கணும். கொட்டாய் போடறதுக்கு நாளைக்கே ஆளுங்களை அனுப்பச் சொல்லி, கோபால் மேஸ்திரி கிட்டே நேரத்தோட போய்ச் சொல்லணும். புது இடம். மாடு நல்லபடியா தீனி எடுக்குமோ என்னவோ? எதுக்கும் போற வழியிலே புல்லுக்கார செல்லம்மா கிட்டே ஒரு கட்டு பச்சைப்புல் கொண்டாந்து வீட்டாண்டை போடச் சொல்லி, சொல்லிட்டுப் போறேன். மாட்டுக்கு எடுத்து வை. ஆங்... மறந்துட்டேன் பாரு, பிண்ணாக்கு, தவிடு, கடலைப்பொட்டு வைக்கோல் எல்லாம் வேற வாங்கணுமே...'' பட்டாபி தன் அவசரத்தை அவளிடம் விளக்கிச் சொன்னான்.

சாரதா, மகளிடம் சட்னி அரைப்பதற்கான பொருள்களை எடுத்துக் கொடுத்துவிட்டு, வெங்காயம் பச்சைமிளகாய், கறிவேப்பிலை, கொத்துமல்லி சேர்த்து, கேழ்வரகு மாவை அடையாகத் தட்டி தோசைக்கல்லின் மீது போட்டு 'சொய்ங்' என்று சத்தம் எழ அடையைச் சுற்றி எண்ணெயை வார்த்தாள்.

எண்ணெய்ச் சூட்டில் வேகிற அடையின் வாசனை வீடெங்கும் பரவிற்று. அந்த மணத்தையும் சுவையையும் அனுபவிக்கப் பட்டாபி காத்திருந்தான்.

பட்டாபியின் உடல்தான் வீட்டுக்குள் இருந்ததே தவிர, மனசு டவுனில் அவன்லட்சுமிக்காக வாங்கவேண்டிய சாதனங்களைப் பட்டியல் போட்டுக் கொண்டேயிருந்தது. நிமிடத்துக்கு நிமிடம் அந்தப் பட்டியல் நீண்டுகொண்டே போயிற்று. கழுத்துக்கு வண்ண மணிகள். அதன் நடுவே கட்ட ஓசையெழுப்பும் பித்தளைக் கண்டாமணி ஒன்று. கொம்புகள் சிறிதாயிருந்தாலும் அதற்குப் பூச கிளிப்பச்சை வர்ணம். கொம்புகளுக்குப் போட பித்தளைச் சலங்கை கோத்த கொப்புகள். திருஷ்டி ஏற்படாமல் இருக்க கறுப்புக் கம்பளிநூல். பால் கறக்கப் புதிய எவர்சில்வர் வாளி. கறந்த பாலை



ஒட்டலுக்கு எடுத்துக் கொண்டு போக அலுமினியக் கேன். பால் அளக்கும் லிட்டர் கருவிகள் மூன்று...

நல்லவேளையாக, பட்டியல் மேலும் நீளுவதற்குள சாரதா, அடையும் சட்னியும் பரிமாறி, காபியும் கொடுத்துவிட்டாள்.

''அப்ப, நானும் அப்படியே கிளம்பட்டுங்களா சாமி?'' என்றான் மாட்டை ஓட்டிக்கொண்டு வந்த பையன்.

பட்டாபி, சாரதாவைப் பார்த்தான்.

''போறதுண்ணாப் போகச் சொல்லுங்க. மாட்டைப் பார்த்தா அப்படி யொண்ணும் முரடாகத் தெரியலை.''

''அய்யோ.. அது பச்சைக் குழந்தைங்க'' என்றான் அந்தப் பையன்.

'நீதான் தாத்தா வீட்ல அஞ்சு மாடோ பத்து மாடோ இருக்கப் பாத்துப் பழகியிருக்கேன்னியேம்மா...'' என்று துளசியும் அடியெடுத்துக் கொடுத்தாள். அவளுக்கு வீட்டில் புது மனிதர் முன்னால் நடமாடக் கூச்சம். ஆகவே அவன் போய்விட்டால் தேவலை என்றிருந்தது அவளுக்கு.

பட்டாபி பாக்கெட்டிலிருந்து பத்துருபாயை எடுத்துப் பையனிடம் வழிச்செலவுக்குக் கொடுத்தான்.

தெருவைத் தாண்டிப் போகிற வரை கண்ணில் படுகிறவர்களெல்லாம் பட்டாபியிடம் மாட்டைப் பற்றிய குசலம்தான்.

''இன்னமே பட்டாபி வீட்ல நினைச்ச நேரம் காபி கிடைக்கும்.''

''அஞ்சு சுழி மாடு கெஞ்சினாலும் கிடைக்காது போங்க. ஏதோ உனக்கு கிடைச்சிருக்கு. பஞ்சகல்யாணின்னு பேர் வைப்பா'' என்றாள் எதிர் வீட்டுக் கிழவி.

பட்டாபி வீட்டை விட்டுப் புறப்பட்டான் என்ற சேதி தெரிந்ததும், அக்கம் பக்கத்துப் பெண்கள் குழுமினார்கள். சாரதாவுக்கு உள்ளூரப் பெருமையும் பூரிப்புமாகப் பொங்கியது.

''இந்தச் சுழிங்களை யாராலும் வாகடம் தெரிஞ்சவங்க கிட்ட காட்லாம்னா அவங்கள்ளாம் இப்ப எங்கே இருக்கிறாங்க? காலேஜ்ல படிச்சுட்டு சாயும் சட்டையுமா எடுத்ததுக்கெல் லாம் ஊசி போடற மாட்டாஸ்பத்திரி டாக்டர்கிட்ட போயா சுழியைப் பத்திக் கேக்கறது?'' என்று சலித்துக் கொண்டாள் சாரதா.

பேசிக்கொண்டிருக்கும் போதே புல்லுக்காரி வந்துவிட்டாள். புல்லுக்கட்டைப் பிரித்து மாட்டுக்கும் கன்றுக்கும் எதிரில் அவள் பரப்பியதும், சாரதா ஒரு பிளாஸ்டிக் வாளி நிறையத் தண்ணீர் கொண்டு பசுவின் எதிரே வைத்தாள்.

பசுமாடு, வாளியையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தது.

சாரதா ரகசியம் பேசும் தொனியில் ''என்னடா லட்சுமி! என்ன பாக்கறே?'' என்று அதனிடம் பேச்சுக் கொடுத்தாள்.

மாடு 'ம்மா' என்றது.

'அட! அவர் சொன்னது சரிதான். பேசத்தான் வாயில்லையே தவிர, எப்படி அறிவாக பதிலுக்குக் குரல் கொடுக்கிறது' என்றெண்ணிச் சிலிர்த்துப் போனாள் சாரதா.

அதுதான் அவளும் அவள் குடும்பத்தாரும் மாட்டைக் குறித்துப் பெருமை தொண்ட தருணம். அதற்கு அப்பால் இறங்குமுகம் தொடங்கியது.

மதிய உணவுக்குப் பின் மாட்டைப்பிடித்து நிழலிருக்கிற வேறு பக்கம் கட்டலாம் என்று சாரதா போனபோது போட்ட புல் போட்டபடியே கிடக்க, தண்ணீர் வாளியைக் கவிழ்த்துவிட்டுத் தரையில் கம்பீரமாக உட்கார்ந்திருந்தது அந்த சாதுப் பசு.

மாலை மூன்றரை மணிக்கு சாரதா பால் கறப்பதற்கான ஏற்பாடுகளுடன் பசுவை நெருங்கினாள். அது அவளை அருகே அண்ட விடாமல் நெளிந்து நெளிந்து நகர்ந்து வட்டமடித்தது. சாரதா ஓய்ந்து போனாள். நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம் என்று கன்றுக்குட்டியை அவிழ்த்து ஊட்ட விட்டு விட்டு வீட்டுக்குப் போனாள். வெளியே பால் வாங்கித்தான் காப்பியும், தயிரும் தயார் செய்ய வேண்டிருந்தது.

சாரதாவின் மனது குறுகுறுத்தது.

மாலை மயங்குகிற வேளையில் மாட்டுக்கான சகலவிதமான பொருள்களையும் வாரிக்கொண்டு வீடு. வந்த பட்டாபியைப் பார்த்ததும், அவளுக்குள் ஏதோ ஒரு கலவரம் மூண்டது. பிறந்த குழந்தையைப் பார்க்கும்போது 'அய்யோ இந்தக் கையாலாகாத ஜீவனை எப்படி வளர்த்து ஆளாக்கி மனுஷனாக்கப் போகி றேன் என்று பெற்றவர்களின் மனத்தில் ஒரு பதற்றம் வருமே, அந்த மாதிரியான ஒரு பதற்றம் சாரதாவைப் பிடித்து உலுக்கியது.

சாரதா, பட்டாபியிடம் மாட்டு நிலவரத்தைப் பற்றிக் கவலையுடன் தெரிவித்தாள்.

''அதான் சொன்னேன். அது மனுஷா மாதிரின்னு. தன்னை வளர்த்தவங்களை நினைச்சுக் கவலைப்படும். புது இடம். பழகினா சரியாயிடும்'' என்று அவன் அவளுக்குத் தைரியம் சொன்னான்.

''நாளைக்குப் பாரு அய்யா கைராசியை. நானே கறக்கப் போறேன். புதுசா வாங்கிட்டு வந்த பக்கெட்டை சுத்தப்படுத்திக் குடுத்துடு'' என்றான், சற்று நேர யோசனைக்குப் பின்னால்.

அன்றைய இரவு சாரதாவும் சரி, பட்டாபியும் சரி, சரிவரத் தூங்கவேயில்லை.

**ம**றுநாள் காலை பட்டாபி, எழுந்து போய் மாட்டைத் தடவிக் கொடுத்து, பாடி, குளிப்பாட்டி, கன்றை அவிழ்த்து ஊட்ட விட்டான். பிறகு கன்றைப் பிடித்துக் கட்டி விட்டு, மிக ஆர்வமாய் மாட்டின் பின்னங்கால்களுக்கு முன்னால் மர மணையொன்றைப் போட்டு உட்கார்ந்து, அதன் மடியைக் கழுவ முனைந்தான். மாடு துள்ளியது. வட்டமடித்தது. பட்டாபியும் விடுவதாயில்லை. ஒரு மாதிரியாக அரைச் செம்பு பாலைக் கறந்தும் விட்டான். இதற்கு மேல் அவனை விட்டு வைப்பது சரியில்லை என்று முடிவு செய்து கொண்டது போல மாடு, 'படார்' என்று ஓர் உதை விட்டது. பட்டாபி, நிலை தடுமாறி, பால் பாத்திரம் கையிலிருந்து நழுவ 'பொத்' தென்று கீழே விழுந்தான்.

சாரதா பதறிப் போனாள்.

''சொன்னாக் கேளுங்க. கார்டை வாங்கினா வீடு தேடி வந்து பாலைக் கொண்டாந்து ஊத்தறான். அதை விட்டுட்டு எதுக்கு இந்தக் கழுதையோட மல்லுக் கட்டணும்? புல்லுக்கட்டை வாங்கிட்டு வரவும், சாணி அள்ளவும் என்னாலாகாது. மாடும் வேணாம், ஒண்ணும் வேணாம். கொண்டு போய் வந்த வெலைக்கு இதை வித்துத் தொலைச்சுடுங்க.''

பட்டாபி, பாற்கடலிருந்து அப்போதுதான் வெளியேறிய பரமாத்மா மாதிரி, மேலெல்லாம் பால் திவலைகள் தெறித்திருக்க, புன்னகை புரிந்தவாறு ''அடடா! அதுக்குள்ள மனசை விட்டுடறியே. அதான் சொன்னேன். அது ரோஷக்கார மாடு. நமக்கோ பால் கறந்து பழக்கமில்லை. இரு இரு இதுக்கு வேறோர் ஏற்பாடு பண்றேன்.''

**ம**றுநாள் எதிர்த்தெரு பால்காரி ராஜம்மா, வைக்கோல் கன்றை இடுக்கிக்கொண்டு அதிகாலையில் வீட்டுக் கதவைத் தட்டினாள். ''இங்கு பாரும்மா. நான் கறார் கண்டிப்பான ஆளு. ரெட்டியாரு வீடு வரைக்கும் வந்து




சொன்னாரேன்னு வந்தேன். பேசினது பேசினபடி மாசம் பொறந்தா எனக்குத் தர வேண்டியதைத் தந்துடணும். அப்புறம் ரெண்டு நேரமும் ரெண்டு காபி... என்ன சரிதானா?'' என்றபடி பசுவை நெருங்கினாள்.

என்ன மாயமோ? அவளுக்கு இணக்கமாக லட்சுமி வளைந்து கொடுத்தது. ஒரு தினுசாக கால் பக்கெட் பாலும் கறந்து விட்டாள்.

''மாட்டுக்கு இப்போ வாய் சேர்ந்திடுச்சேம்மா... எட்டுப் பல்லு போட்டிருக்குது. என்னவோ தலை ஈத்துன்னீங்களே...ம்... எனக்கு அப்படித் தோணலை. ஏமாந்துட்டீங்க. அப்புறம் இந்தச் சேங்கண்ணை வளத்து என்ன செய்யப்போறீங்க? கண்ணுக்கு ஏகமா ஊட்டிப்புட்டு கறக்காம எக்கிக்குது இந்தத் திருடு. கன்னுக்குட்டியைப் பார்த்தா ஊட்டு மறந்த கன்னாட்டம் வளர்ந்து நிக்குது. பல் முறிஞ்சாப்பல வேற இருக்குது. விக்கிறவன் சரக்கு விலையாவணும்னு எதையெதையோ சொல்லி நல்லா நாமத்தைப் போட்டுப்பிட்டான். எதுனா விலை வந்தா தள்ளிப்புடுங்க. வேணும்னா அந்தக் கன்னுக்குட்டியை நானே கூட வாங்கிக்கறேன்'' என்றாள் ராஜம்மா.

அந்த வேளையில் ராஜம்மா, அவர்கள் கண்ணுக்கு, செயற்கரிய செய்யும் தேவதையாகவும், அவள் பேச்சு வேதவாக்காகவும் பட்டதால் பட்டாபியும் சாரதாவும் மறுபேச்சின்றி அவளது ஆலோசனையை உடனடியாக ஒப்புக் கொண்டு விட்டார்கள்.

கன்று விலையாகி, கைக்குப் பணம் வந்தது. அங்கு மாட்டுக்கொட்டில் பிரம்மாண்டமாக எழுந்து நின்றது. பிண்ணாக்கு வைக்க, கழுநீர்த் தண்ணி ஊற்ற, என்று சிமெண்ட் தொட்டிகள் புதைத்தார்கள். மாடும் ஏதோ கறந்தது.

''நான்தான் சொன்னேனே. இது வத்தக் கறவைன்னு. ஈணி நாளாச்சில்லையா? மறு செனைக்கு வந்து ஈத்துப் போட்டா தான் நெறையக் கறக்கும். ஆனா, மாடு லட்சணத்திலயோ, சுழியிலயோ, கோளாறில்லை'' என்று ராஜம்மா தன் தீர்ப்பை வழங்கினாள்.

வாரந்தோறும் பாலின் அளவு குறைந்து கொண்டே போனது. சினைக்கு வருகிற வழியாயும் இல்லை. சலித்துப் போன சாரதா, ''இதுக்கு பச்சைப்புல்லு கட்டுக்கட்டா வாங்கிப் போட்டு கடனாளியானதுதான் பாக்கி. போய் நீயா மேய்ஞ்சுகிட்டு வா'' என்று கட்டுத் தறியிலிருந்து அவிழ்த்து விட்டாள். பசுமாடு அங்கிருந்து நகர்கிற வழியாயில்லை.

சாரதாவும், 'பார்க்கலாம் உனக்காச்சு எனக்காச்சு' என்று அன்று பொழுதுக்கும் பசு மாட்டுக்குத் தீவனம், தண்ணீர் எதையும் வைக்கவில்லை.

பசுவும் தன் சத்தியாக்கிரகத்தை விடுவதாயில்லை. அவ்வப்போது தீனமான குரல் உடைந்து சிதற, 'மோ' என்று ஒரு கதறல்!

அந்தக் குரல் சாரதாவின் காதில் விழுந்து வயிற்றுக்குள் புகுந்து நெஞ்சைக் கலக்கியது. தன் வைராக்கியத்தை மூட்டை கட்டி வைத்துவிட்டு உடனே சாரதா கழுநீர்ப்பானையை நிறைத்தாள். புல்லை உதறிப்போட்டாள்.

அவ்வளவுதான். கட்டுத்தறியை உருவிக் கொண்டு சாரதாவை நெருங்கி 'ம்மா, ம்மா, ம்மா' என்று குழைந்த குரலால் கொஞ்சி, சலங்கை கிணுகிணுக்க அவள் தோள் மீது நெற்றியைத் தேய்த்துத் தன் நன்றியைத் தெரிவித்தது லட்சுமி. சாரதாவின் கண்கள் கலங்கின.

பட்டாபி வெளியில் இருந்து வந்தாலும், துளசி பள்ளி முடிந்து வந்தாலும் இதே மாதிரியான வரவேற்புத்தான். நாய்க்குட்டியைப் போல வாலை ஆட்டவில்லையே தவிர, மற்றபடி சகலவிதமான கொஞ்சலும் லட்சுமியிடம் இருந்தன.

''ஆனால், பசு வளக்கறது இதுக்காக இல்லையே. இதுதான் வேணுமின்னா நல்லதா ஓர் அல்சேஷன் வாங்கி வச்சுக்கலாமே'' என்றாள் சாரதா. ''வீட்டோடு மாட்டை வைச்சுகிட்டு பால்காரன்கிட்டே போய் பால் வாங்க என்னவோ போல இருக்குது'' என்றும் சலித்துக் கொண்டாள்.

பட்டாபி, மாட்டை இரண்டு தடவை மாட்டாஸ்பத்திரிக்கு ஓட்டிக்கொண்டு போய் செனை ஊசி போடுவது பற்றி விசாரித்து விட்டு வந்தான். 'குந்து' வேறு வந்து மூன்று தினங்கள் லட்சுமி தானும் அவஸ்தைப்பட்டு, பட்டாபியையும் அவஸ்தைப்படுத்தியது.

கறக்கவில்லையே என்பதற்காக அதை வெளியே அனுப்ப முடியாத அளவுக்கு, லட்சுமி தன் அன்பால், நன்றியால், பாசத்தால் அந்தக் குடும்பத்தைக் கட்டிப் போட்டது.

''வெளிநாட்ல வீடுங்கள்லே, முதலை, பாம்பு, பன்றியையெல்லாம் செல்லப்பிராணியா வளக்கறாங்களாம். அப்படி இது நமக்கு ஒரு செல்லப்பிராணியா இருந்துட்டுப் போவட்டும்'' என்று பட்டாபியே சொல்லிவிட்டான்.

அந்தச் சமயத்தில்தான் லட்சுமி தன் வாழ்வின் மாபெரும் தவற்றைச் செய்துவிட்டது.

அதாவது கொடியிலே காய வைத்திருந்த சாரதாவின் மேகவர்ண மைசூர் கிரேப் சேலையை மென்றுவிட்டது. இத்தனைக்கும் அந்தச் சேலை பச்சை வண்ணமோ, வைக்கோல் வண்ணமோகூட இல்லை. எனவே, சாரதாவால் இந்தக் குற்றத்தை மன்னிக்கவே முடியவில்லை.

மறுவாரம் செவ்வாய்க்கிழமை லட்சுமியை, ராஜம்மாளின் மகன் காரிமங்கலம் சந்தைக்கு ஓட்டிக்கொண்டு போனான்.

லட்சுமி போவதைக் கண்கள் கலங்கப் பார்த்துக் கொண்டிருந்தார்கள் பட்டாபியும், சாரதாவும், துளசியும்.

# பூமராங்

கிருஷ்ணா பரிதியால்

விண்மீன் சிறகுகள்
ஆதித்தியன் ஒளிவாளால் வெட்டுண்டு சிதற
இரவின் விடுதியில் தூரிய உறக்கம் —
தித்திக்கும் அமைதியின் மோகன சயனம்
விண், மண், காற்று, ஒளி
க்ஷண நேர ஒய்வுடன் மங்கிட
எங்கும் போலி ஒளி, போலி ஒலி.

நிசப்தம் உடைக்கும் ஸினாய் கட்டளை,
நிர்வாண ஜோதியில் புத்தன்,
ஜார்டான் நதியில் ஜீஸஸ்,
மெக்காவில் முகம்மது நபி,
ஜென் ஸாடோரி, ஸுபி மரிஃபா,
இருளைக் கிழித்து வெளியேறும் சங்கரர்
அடைக்கலம் ஓதும் இராமானுஜர்,
ஒன்றே ஒன்றைக் காட்டிடும் ரமணர்,
புவனியில் பரமதம் தீட்டும் அரவிந்தர் —

இவர்கள் யாவரும் பார்த்த சிகரம்
பரந்த் வெளியில் உயர்ந்து நிற்க —
இவர்கள் கண்டது விண்டதை ஒன்றே —
ஆனால், ஒரு பயங்கர முழ்கும் பாய்ச்சல்
உள்ளக் குகையில் மின்னலடிக்கும்
ஜோதியின் எவரஸ்ட்
ஆதி ஜோதி, ஆதி மூலம்
அது ஒன்றே காலசர்ப்பம் கவ்வி நிற்கும்
சீற்றம் அகல மின்னும் ஒளி.

*(அமெரிக்காவில் உள்ள விஸ்கான்ஸின் சர்வகலாசாலையில் கூடியிருந்த கவிஞர்களுக்கு இந்தக் கவிதையின் அர்த்தத்தை விளக்க எனக்கு ஒரு மணி நேரம் தேவைப்பட்டது. எப்படி வீசி எறியப்பட்டாலும் பூமராங் (Boumerang) வீசிய கைகளுக்கே திரும்பி வருவதுபோல், பூலோகத்திற்கு ஆண்டவனால் எறியப்பட்ட நாம், ஆண்டவனிடம் நிச்சயம் திரும்ப வேண்டும் என்று விளக்கினேன். கவிஞர்கள் புரிந்தார்கள்)* – கிருஷ்ணா

# தேவர் மலைக் குடைவரை

டாக்டர் இரா. கலைக்கோவன்


தேவர் மலைக் குடைவரை (சண்டேசுவரர்)

புதுக்கோட்டையிலிருந்து பொன்னமராவதி செல்லும் சாலையில் பேரையூருக்கான பாதை வலப்புறம் பிரிகிறது. இப்பாதையில் சற்று உள்சென்று இடப்புறம் திரும்பி மண் சாலையொன்றில் ஏறத்தாழ ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவு கடந்து செல்பவர்க்குத் தேவர் மலைப் பாதை பிடிபடும். இந்த இடத்திற்கு மேல், சைக்கிள் தவிர வேறெந்த ஊர்தியும் செல்ல முடியாதென்பதால், இங்கே இறங்கி கண்மாய்க் கரையில், முட்செடிகளுக்கும் மண் சரிவுக்கும் ஈடுகொடுத்து, ஏறத்தாழ ஒரு கிலோ மீட்டர் நடக்கவல்லவர்கள் தேவர்மலை என்றழைக்கப் படும் அருமையான களத்தை அடையலாம்.

கரையிலிருந்து சடாரென இறங்கும் பாதை, வயல்களைத் தாண்டி மலைச்சரிவை நாடுகிறது. இந்தத் திருப்பத்தில் பெரியதும் பழையதுமான அரசமரமொன்று காற்று வீச்சில் கிளைகளைக் குலுக்கிக் கொண்டு ஆயிரம் இலைகளை விசிறி வரவேற்பு தருகிறது. இதன் நிழலில் பிள்ளையாரும் நாகரும். சற்றே தள்ளி, வளர்ந்து பரவிய நாவல் மரம். தென்புறத்தே புளிய மரங்கள். வடபுறத்தே கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை வயல்கள். பின்னால், நெடுகப் படுத்த யானைக் கூட்டமாய்க் குன்று வரிசை. மேலே ஆழமான சுனையொன்று அதிகமான நீரைத் தேக்கி வைத்திருப்பதால் மலை தழுவிவரும் காற்று குளிர் தந்து செல்கிறது. எத்தனை வெயில் அடித்தாலும் தெரியாத நிழல் பரந்த இந்தச் சூழலில் தான் குடைவரைக் கோயிலொன்று, பிற்காலத்து முகமண்டபத்துடன் நம்மை வரவேற்கிறது. சுற்றுலாத் தலமாக்கினால் மக்கள் கூட்டம் திரள்வது நிச்சயம்.

கோயிலுக்கு முன்னால் நாவல் மரத்தடியில் சிதைந்த மேடையில் இரட்டைப் பிறவிகள்போல் இரண்டு நந்திகள். ஏன் இரண்டென்று யாருக்கும் தெரியவில்லை. இரண்டுமே உருக்குலையாப் பிற்காலப் படைப்புகள்.

பின்னால் சரிந்துள்ள குன்றின் முன்னால் கல்லடுக்கிய கட்டுமானமாய் முகமண்டபம். இதன் கிழக்கு வாயிலில் நான்கு படிகள். முகமண்டபத் தாங்குதளம் உபானம், ஜகதி, எண்பட்டைக் குமுதம், கம்புகளோடு கூடிய கண்டம், பட்டிகை, துணைக் கம்பு என அமைந்துள்ளது. வடபுறத்தே குமுதம் வரை மண் மேடிட்டுள்ளது. தென்புறத்தே, முதலிலும் இறுதியிலுமாய் அமைந்துள்ள தாங்குதளம், இடைப்பகுதியில், பாறை இடையீட்டால் பட்டிகை மட்டும் காட்டப்பெற்றுத் துணைக் கம்போடு சுவர் தாங்கி நிற்கிறது. கிழக்கிலும் வடக்கிலும் பக்கத்திற்கு நான்கென பிரம்மகாந்த அரைத் தூண்கள். இவற்றின் மேற்பகுதியில் கலசம், தாடி, கும்பம், பாலிகை, பலகை, வீரகண்டம், போதிகை, போன்ற தலையுறுப்புகள் ஒழுங்குபட அமைந்துள்ளன. வெட்டுப் போதிகையின் பக்கங்களில் தரங்கத்தை நினைவூட்டும் கோடுகள். போதிகைகளின் மேலமரும் உத்திரத்தையொட்டி தட்டோட்டுக் கூரை. இதுவே சற்று முன்னிழுக்கப் பட்டுக் கபோதம் போல் காட்டப் பட்டுள்ளது.

தென் சுவரின் கிழக்குப் பகுதியில் இரண்டு பிரம்மகாந்த அரைத் தூண்கள் காட்டப்பட்டுள்ளன. நடுப் பகுதியில் ஒரு மீட்டர் இடைவெளிக்குள் கோட்ட அணைவுத் தூண்கள் போல மேலுமிரண்டு பிரம்மகாந்த அரைத்தூண்கள். ஆனால் கோட்டமில்லை. அதற்குப் பதிலாக சன்னலொன்று கல்லிலேயே வடிவமைக்கப்பட்டுள்ளது. மேற்குப் பகுதியில் தூண்களற்ற சுவர். வடக்குச் சுவர் பின்னாலுள்ள பாறையோடு முட்டுமிடத்தில் ஏற்பட்டுள்ள 55 செ.மீ. இடைவெளியைச் செங்கற்கள் அடுக்கி அடைத்துள்ளார்கள்.

91 செ.மீ. அகலமுள்ள கிழக்கு வாயில், முகப்புச் சுவரினின்று சற்று உள்ளடங்கித் திருநிலைக் கால்களும், மேல் நிலையும், கீழ்நிலையும் பெற்று மண்டபத்திற்குள் வழி விடுகிறது. வாயிலின் இருபுறமும் பக்கத்திற்கொன்றாய் முகப்புச் சுவரை அணி செய்யும் பிரம்ம காந்த அரைத்தூண்கள்; மேலுறுப்புகள் ஏதுமின்றி, போதிகைகளை மட்டும் நீட்டி உத்திரம் தாங்குகின்றன. உத்திரத்தின் மேல் வாஜனக் கட்டணைப்பில் தாமரையிதழ்கள் எழுதப் பெற்ற வலபி. மேலே வெளிவாங்கலாய்த் தட்டோட்டுக் கபோதம்.

தென் வடலாக 5.81 மீ அகலமும், கிழக்கு மேற்காக 5.94 மீ. நீளமும் கொண்டமைந்துள்ள முகமண்டபத்தை பக்கத்திற்கு மூன்றென ஆறு தூண்கள் தாங்குகின்றன. மேலும் கீழும் இடையிலும் சதுரங்கள்

அமைய, சதுரங்களுக்கிடையில் கட்டுகள். மேலாக அமைந்துள்ள சதுரத்தின் மேல் தனியாக ஒரு கல் வைக்கப்பட்டுள்ளது. அதன்மீது பக்கங்களில் தரங்கக் கோடுகளோடு கூடிய வெட்டுப் போதிகைகள் கிளைத்து உத்திரத்தைத் தாங்கு கின்றன. உத்திரத்தின்மீது இருபுற வாஜனத் தழுவலில் வலபி, மேலே கூரை. கிழக்குச் சுவரில் இரு வரிசைத் தூண்களுக்கும் நேராய் நிறை வடையாப் போதிகைகள் மட்டும். தூண்வரிசைகளுக்கு வடக்கிலும் தெற்கிலும் கல் பாவிய கூரை.

முகமண்டபத்தில் சிறியதொரு பலித்தளமும் அதன் முன்னே சற்றுப் பெரிய தளத்தில் நந்தியொன்றும் காட்டப்பட்டுள்ளன. வலப்புறத்தே மேடையமைத்துத் தேவநாயகி என்ற பெயரில் அம்மனை நிறுவியுள் ளனர். பிற்காலத் திருமேனி. முன் கைகள் காப்பும் அருளும் காட்டப் பின்கைகள் மலர் மொட்டுகளை ஏந்தியுள்ளன. பாரதியின் பாடல் வரிகளை நினைவூட்டும் நேர் கொண்ட பார்வையும், நிமிர்ந்த தோற்றமுமாய், இடையில் பட்டாடை கணுக்கால்கள் வரை தாழ, அம்மை காட்சி தருகிறார். முக மண்டபத்தின் சுவர்களும் கூரையும் வெறுமையாக உள்ளன.

முகமண்டபத்தை அடுத்த பாறைச் சரிவின் தென், வட பகுதிகளைக் கோட்டங்களாக்கிப் பிள்ளை யாரையும் சண்டேசுவரரையும் அமர்த்தியுள்ளனர். இடைப்பட்ட பகுதியில் ஆழமாய்க் குடைந்து சிறு முகப்புடன் கூடிய கருவறை அமைத் துள்ளனர்.

இந்த முகப்பு, முகமண்டபத் தரையிலிருந்து 39 செ.மீ. உயரத் தில் மேடை போலத் தென் வடலாக 2.92 மீ. நீளத்திற்கும் கிழக்கு, மேற் காக 59 செ.மீ. அகலத்திற்கும், அமைக்கப்பட்டுள்ளது. தூண்களற்ற இந்த முகப்பிற்குப் பின்னால், கரு வறை முன்சுவரின் நடுப்பகுதியில் 63 செ.மீ. அகலமும் 1.59 மீ. உயரமும் உள்ள நுழைவாயில். இதன் இரு புறமும் பிரம்மகாந்த அரைத் தூண்கள். முகப்பின் வட, தென் பாறைப் பகுதிகள் கருவறை முன் சுவரைத் தொடுமிடங்களில், பக்கத்திற் கொன்றாக மேலுமிரண்டு பிரம்ம காந்த அரைத்தூண்கள். இவற்றின் தலைப்பில் கிளைக்கும் தரங்கப் போதிகைகள் மேலே உத்திரத்தைத் தொடுகின்றன. கீழ்க்கைகளைவிட மேற்கைகள் பெரிதாக உள்ள இப் போதிகைகளின் தரங்க எழுச்சி களில், கீழிருந்து நான்காவது எழுச்சி மற்றவற்றினும் பெரிதாகக் காட்டப்பட்டுள்ளது. கருவறை வாயி லின் இருபுறமும் இத்தூண்களுக்கு இடைப்பட்ட பகுதி கோட்டங்க ளாக்கப்பட்டு முனிவர்களின் திரு வுருவங்கள் இடம்பெற்றுள்ளன. புலத்தியர், அகத்தியர் என்றழைக்கப் படும் இவ்வடிவங்கள் போன்ற முனிவர் திருவுருவங்கள் திருக் கோளக்குடிக் குடைவரையின் முக மண்டபப் பக்கச் சுவர்களிலும் காணப்படுவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கது.

கருவறை வாயில், திருநிலைக் கால்கள் காட்டப்பெற்று மேல், கீழ் நிலைகளுடன் அமைந்துள்ளது. பக்கத்தூண்களின் போதிகைகள் தாங்கும் உத்திரம், கருவறையின் மேலும் தென் வடலாகத் தொடர் கிறது. அதன்மீது பிதுக்கமாய்ச் சிறு வாஜனம். கபோதம் 56.5 செ.மீ. முன்னோக்கி வளைக்கப்பட்டுள்ளது. இதன் கீழ்ப்பகுதி நன்றாகச் சமன் படுத்தப்பட்டு வழவழப்பாகக் காட்சி தர, மேற்பகுதி பாறையாகவே விடப்பட்டுள்ளது.

கிழக்கு மேற்காக 2.64 மீ. அகல மும், தென் வடலாக 2.66 மீ. நீளமும் 1.96 மீ. உயரமும் கொண்டு அமைந் துள்ள கருவறையின் சுவர்களும் கூரையும் வெறுமையாக உள்ளன. கூரையையொட்டி நான்கு புறமும் வாஜனம் ஓடுகிறது. கருவறையின் மையப்பகுதியில் பாறையிலேயே வெட்டப்பெற்ற ஆவுடையார் கிழக்கு மேற்காக 1.23 மீ. நீளமும் தென் வடலாக 1.19 மீ. அகலமும் கொண்டு, உபானம் ஜகதி, உருள்குமுதம், கம்புகளோடு கூடிய கண்டம், பட்டிகை, துணைக் கம்பு என்ற கட்டமைப்பில் விளங்க, அதன்மீது 65 செ.மீ. உயர லிங்கமேனி காட்டப்பட்டுள்ளது.

நீர் வெளியேறக் கருவறை வாயிலின் வடபுறமிருந்து கால் வெட்டி, முகமண்டப வடபுற முதல் தூண் பின்வரை நீட்டியிருக் கிறார்கள். இத்துடன் வடபுறக் கோட்டத்தின் கீழ்ப்பகுதியிலும் அகத்தியர் திருவடிகளுக்கு இடப் புறத்தே ஒரு துளையிட்டு நீர் ஓடி வர வழியமைத்துள்ளனர்.

கருவறை முகப்பை விட நன்கு முன்தள்ளி அமைந்துள்ள பக்கப் பாறைப் பகுதிகளில் அமைக்கப் பட்டுள்ள கோட்டங்களில் தென் புறம் பிள்ளையாரும், வடபுறம் சண்டேசுவரரும் செதுக்கப்பட்டுள் ளனர். 91 செ.மீ. அகலமும் 1.27 மீ. உயரமும் 37 செ.மீ. ஆழமும் கொண்ட தென்புறக் கோட்டத்தின் கீழ்த் தளம் முகமண்டபத் தரையிலிருந்து 33 செ.மீ. உயரத்தில் அமைந் துள்ளது. வடபுறக் கோட்டமோ 66 செ.மீ. அகலமும் 96 செ.மீ. உயர மும் 18 செ.மீ. ஆழமும் கொண் டுள்ளது. முகமண்டபத் தரையி லிருந்து 23 செ.மீ. உயரத்திலுள்ள இக்கோட்டக் கீழ்த்தளத்தின் மீது 13 செ.மீ. உயரத்தில் மேலும் ஒரு தளம் காட்டி அதில் சண்டேசுவரரை அமர்த்தியுள்ளனர்.

இக்குடைவரைக் கோயில் வளாகத்தின் தென்புறத்தே மேற்கு நோக்கிய திருவாயிலுடன் பிற் காலத் திருப்பணியாய்ச் சிறியதொரு திருமுன். ஜகதி, கண்டம், பட்டிகை என்றமைந்துள்ள தாங்கு தளத்தின் மீது சுவரும் உத்திரமும் தட்டோட்டுக் கூரையுடன். இக்கூரையே கபோத மாகவும் வளைக்கப்பட்டுள்ளது. கூரையின்மேல் கீரீவமற்ற நாகர சிகரம். உச்சிக்குடம் இருந்து உடைந் துள்ளது. இதைப் பெருமிழலைக் குறும்பர் அடக்கமான இடமாகக் கூறுகிறார்கள். உள்ளே சிறிய அள விலான லிங்கத் திருமேனி யொன்றும் எதிரில் நந்தியொன்றும் உள்ளன.

நேர்நின்ற திருக்கோலத்தில், கைகளைக் குவித்து வணக்க முத்திரையில் அமைத்து ருத்திராக்கக் கங்கணங்களும் வளைகளும் கழுத் தணியும் கொண்டவராய், மழித்த தலையிலும் சுற்றிவர ருத்திராக்க மணிந்து, இடுப்பில் அரையாடை யுடன் லிங்கத்தை வழிபடுவது போல் வடபுறத்தே காணப்படும்

அடியவர் திருமேனியைப் பெருமிழலைக் குறும்பராகக் கொண்டுள்ளனர். இவருக்கு எதிரில் உள்ள சிற்ப வடிவத்தைச் சுந்தரமூர்த்தி நாயனார் என்கிறார்கள். இத்திருமேனியின் வலக்கையில் மலர் மொட்டும், இடக்கையில் பொதுவாக அய்யனார் சிற்பங்களில் காணப்படும் செண்டும் காட்டப்பட்டுள்ளன. சடைமகுடமும், மகர குண்டலங்களும் கழுத்தில் ருத்திராக்கமும் கொண்டமைந்துள்ள இவ்வடிவத்தின் இடைப்பகுதியில் கணுக்கால் வரை தழைந்த கீழ்ப்பாய்ச் சாடை. வழக்கமாகப் பார்க்கும் சுந்தரமூர்த்தி நாயனார் திருவுருவங்களிலிருந்து வேறுபட்டமைந்துள்ள இச்சிற்பம் பிற்கால நிறுவலாகும்.

பெருமிழலைக் குறும்பனார் சுந்தரர் மீது கொண்ட பிசிராந்தையன்பைத் திருத்தொண்டர் புராணம் பத்துப் பாடல்களில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறது. சுந்தரர் கயிலை செல்வது கேட்டு அவரின்றி இந்த மண்ணில் வாழ விரும்பாது தம் யோக ஆற்றலால் அவருக்கு முன் கயிலை சென்று காத்திருந்தவர் பெருமிழலைக் குறும்பனார்.

இப்போதும் பெருமிழலைக் குறும்பனாரைப் போற்றி இக்கோயிலில் பெருவிழாக்கள் எடுக்கப்படுவதும், அதற்குத் திரளான மக்கள் கூடுவதும் அதன் காரணமாய்ப் பாண்டியர் குடைவரைக்கும் பார்வைப் பரிசுகள் கிடைப்பதையும் அறிய மகிழ்வேற்படுகிறது. பிற்காலத்துத் திருமுன் ஒன்றினால் பழைமையின் பெருமையாய் விளங்கும் தேவர் மலைக் குடைவரையும், குறிஞ்சிப் பூவாய்க் கிடைக்கும் மக்கள் காற்றை மகிழ்ந்து உள்ளிழுத்து வாடாமல் நின்று கொண்டிருக்கிறது.

## சிற்பங்கள்

மையக் கோயிலில் பிற்காலப் பணியாய் அம்மன் திருமேனியும், குடைவரைப் புதையல்களாய்ச் சண்டேசுவரர், பிள்ளையார் மற்றும் முனிவர் சிற்பங்களும் உள்ளன.

தென்புறக் கோட்டத்தில் அரைத் தாமரை அமர்வில் காட்டப்பட்டிருக்கும் பிள்ளையாரின் திருமேனி சிதிலமாகியுள்ளது. மார்புப் பகுதியிலும் வயிற்றுப் பகுதியிலும் பாறை செதில் செதிலாகப் பிளந்துள்ளது. இவரது வலம்புரித் துதிக்கையில் மோதகம். மேற்கைகளில் கங்கணங்களும் மணிக்கட்டுகளில் பட்டை வளைகளும் அணிந்து சிறு மகுடமும் உதரபந்தமுமாய் அமர்ந்திருக்கும் இப்பெருமானின் இட முன்கை, வயிற்றருகே. பறக்கும் ஆடையைப் பிடித்துள்ளது. வலப் பின் கையில் மலர். இடப்பின் கையிலிருப்பது கரும்புத் தோகை போல் காட்சி தருகிறது. வலமுன்கை மணிக்கட்டிற்குக் கீழே சிதைந்துள்ளது. நல்ல கம்பீரமான திருமேனி என்றாலும் குன்றக்குடி, வல்லம் பிள்ளையார் திருமேனிகளின் எழிலுக்கும் வடிப்புக்கும் இணையாகாது.



தேவர் மலைக் குடைவரை (புலத்தியர்)



தேவர் மலைக் குடைவரை (அகத்தியர்)

வடபுறக் கோட்டத்தில் வலக் காலைக் குத்துக்காலாக வைத்து இடக்காலை மடித்து ஆடையை இருபுறத்தேயும் தொடையின் மேற்பகுதி வரை சுருக்கி அமர்ந்துள்ள சண்டேசுவரப் பெருமானின் வலக்கையில் கீழிருந்து மேலாகப் பெரிதாகும் உருள் தடி. படமெடுத்த தலையுடன் பாம்பொன்று சுற்றியுள்ள இத்தடியை வலத் தொடையில் தாங்கலாகச் சாய்த்துள்ளார். ஆடையின் முடிச்சைப் பிடித்திருக்கும் இடக்கை கடகமாய் இடத் தொடை மேல். இக்கையின் சுண்டு விரலில் மோதிரம் காட்டப்பட்டுள்ளது. சடைபாரத்தின் உச்சியில் முடிகள் சிறு முடிச்சாக்கப்பட்டு அதைச் சுற்றிலும் ருத்திராக்க வளையம். செவிகளில் பனையோலைக் குண்டலங்கள். மணிக் கட்டுகளில் பட்டை வளைகளும் மேற்கைகளில் கங்கணங்களும் ருத்திராக்கக் கழுத்தணியும் அணிந்துள்ள இவரது திருமுகம், மிக அழகுற வடிக்கப்பட்டுள்ளது. தமிழகக் குடைவரைகளில் காட்டப்பட்டுள்ள சண்டேசுவரத் திருமேனிகளுள் இதுவே மிகச் சிறந்த வடிப்பாய் மிளிர்கிறது.

கருவறை முன் சுவரின் தென் கோட்டத்தில் நிற்கும் இளைய முனிவரைப் புலத்தியரென்று அழைக்கின்றனர். சடை மகுடமணிந்த களையான முகம், கீழாடையைக் கீழ்ப் பாய்ச்சாகக் கட்டிக் கொசுவங்

களை நடுவில் அடுக்கிய பாங்கு கவர்ச்சியாக இருப்பதுடன் சிற்பத் திருமேனியின் காலத்தை நிர்ணயிக்கவும் உதவுகிறது. இடுப்பாடையின் முடிச்சும் தொங்கலும் இடப்புறம் காட்டப்பட்டுள்ளன. இடக்கை கருவறை நோக்கிப் போற்றிடும் பதாகமாய் அமைய, வலக்கை தொடை மீது அமர்ந்துள்ளது நன்றாக மழித்த திருமுகத்தின் இருபுறமும் தொங்கும் சில சடைப் புரிகள் வலத் தோளில் புரண்டு அழகூட்டுகின்றன. அணிகலன்களற்ற செவிகள் நீள் செவிகளாய் அமைந்துள்ளன. துணியை மடித்து முப்புரி நூலாய் அணிந்துள்ள இவர் திருக்கோளக்குடி புலத்தியரை விட மிக அழகுற வடிக்கப்பட்டுள்ளார். பார்வையிலேயே இளமை துள்ளுகிறது.

வலப்பாதத்தைத் திரஸ்ரயமாகவும் இடப்பாதத்தைச் சமமாகவும் நிறுத்திப் புலத்தியரைப் போலவே ஆடையணிந்து, செழித்து வளர்ந்த தாடியும் மீசையுமாய் வட கோட்டத்தில் காட்சி தரும் முதிய முனிவரின் வலக்கை கருவறை இறையைப் போற்றிட, இடக்கை தொடை மேல். துணியை மடித்து முப்புரி நூலாய்க் கொண்டுள்ள இப்பெருமகனாரின் திருமுகமும் கனிந்து அருளுடன் காட்சி தருகிறது. திருக்கோளக்குடி அகத்தியர் கையிலிருக்கும் பூங்கொத்தை இந்த அகத்தியரிடம் காண முடியவில்லை.

இருவர் திருமேனிகளும் சிறு தளமொன்றின்மீது நிற்பதாகக் காட்டப்பட்டுள்ளன. இத்தளம் கருவறை வாயிலில் சிறுபடியாக நீள்கிறது.

### கல்வெட்டு

குடைவரைக் கோயில் அமைந்துள்ள பாறைச் சரிவின் தென்புறத்தே இக்கோயிலுக்கும் பெருமிழலைக் குறும்பர் திருமுன்னுக்கும் இடைப்பட்ட பகுதியில் கல்வெட்டொன்று காணப்படுகிறது. பதினேழு வரிகளில் அமைந்துள்ள இக்கல்வெட்டு துன்முகி ஆண்டு, ஆவணித் திங்கள் பதினோராம் நாளன்று, பெரியான் பேரையூர் பறையன் மகன் நாடியாற்கு, கான நாட்டு விருதராச பயங்கர வளநாட்டுப் படைப்பற்றான மலையாலங்குடியைச் சேர்ந்த ஊரவையார் இறையிலிக் காணியாக நிலமும் வீட்டு மனையொன்றும் தந்தது பற்றிப் பேசுகிறது. மலையாலங்குடியில் தேவதானக் குறை ஏற்பட்டு, அதன் காரணமாக மாளுவ குமாரப்பர் நஞ்சு தின்று இறந்ததாகக் கூறும் கல்வெட்டு, ஏதோ ஒரு வகையில் அவரோடு நாடியாரைத் தொடர்புபடுத்துகிறது. கல்வெட்டின் பிற்பகுதியில் பல இடங்களில் எழுத்துகள் பொரிந்திருப்பதால் இந்தத் தொடர்பினை அறியக்கூடவில்லை. இவ்வம்மைக்கு உதிரப்பட்டியாக மூன்றுமா நிலம் விடப்பட்டிருக்கிறது. இவர் மாமன் பெயர் பொன்னன். மலையாலங்குடி புரவான ஆதங்குடி வயலைச் சேர்ந்த நாதவன நிலம், பொன்னுலக நிலம் வேவலப் பொன்னேரி வயக்கல் பெரியான் வயக்கல் போன்ற நிலப்பகுதிகளைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேலைச் சிறகில் இருந்த தச்சர் மனைக்குத் தெற்கிலிருந்த மனை இவ்வம்மைக்கு வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. நாடியாற்கு நிலமும் மனையுமளித்த ஊராரின் சார்பில் சோழ மாணிக்கப் பேரையன், வாணவதரையன், சமைய மாணிக்கப் பறையன் ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர்.

### குடைவரையின் காலம்

குடைவரையின் அமைப்பு சிற்பங்களின் நேர்த்தி மற்றும் கலையமைப்பு கொண்டு நோக்கும் போது கி.பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கக் காலப் பணிகளுள் ஒன்றாய் இதைக் கொள்ள முடியும். இது பாண்டியர் பணியா, முத்தரையர் பணியா என்பதை வேறுபடுத்தி நிறுவச் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை.

### ஏற்புக்கோடல்

இத்திருக்கோயிலைக் காணச் சென்றபோது அன்போடு உடன் வந்து உதவிய பேரையூர் சிவாச்சாரியார் திரு. கண்ணன் குருக்கள், அவரது திருமகன் க. கார்த்திக், இரண்டாம் முறை சென்றபோது உடன் வந்து நெடுநேரம் துணையிருந்து இலக்கியம் மற்றும் கலைத் தொடர்பான செய்திகளைப் பகிர்ந்து கொண்டு மகிழ்வித்த மல்லாங்குடிப் பெரியவர்கள் திரு. பெ. இராமசாமி, திரு. சி. சோமசுந்தரம், அன்போடு வரவேற்று மகிழ்வித்த அவர்தம் குடும்பத்தார், தேவர் மலைக் குடைவரையைப் பார்ப்பதற்குக் காரணமாய் அமைந்த தமிழ் மாமுனிவர் வணக்கத்திற்குரிய தவத்திரு குன்றக்குடி அடிகளார் வணக்கத்திற்குரிய தவத்திரு பொன்னம்பல அடிகளார், உடன் வந்தகவிஞர் திரு. வே. சங்கர நாராயணன் ஆகியோர்க்கு இக்கட்டுரையாசிரியரின் பணிவன்பு நிறைந்த நன்றி உரியது.



# தோட்டக் கலை மணம் கமழும் கிருஷ்ணகிரி

எஸ். எஸ். நாகராஜன்



நர்சரித் தொழிலில் வேலை வாய்ப்பு.

நாட்டின் வேளாண்மை வளம் பெருக உணவு உற்பத்திக்கு எந்த அளவு கவனம் கொடுத்து வருகின்றோமோ, அதே அளவு கவனம் தோட்டக் கலை வளர்ச்சிக்கும் கொடுத்தாக வேண்டும். இதன் மூலம்தான் நமக்குத் தேவைப்படும் நறுமணமுள்ள மலர்கள், சத்துகள் மிகுதியாகக் கொண்ட பழ வகைகள், காய்கறிகள் ஆகியவற்றைத் தாராளமாகப் பெற முடியும். இப்பயிர்களின் இனவிருத்திக்கும் அவற்றின் உற்பத்திப் பெருக்கத்திற்கும் நாம் சிறந்த தோட்டக் கலை நுட்பங்களை அனுசரித்தாக வேண்டும். மலர்ச் செடிகள், பழ மரங்கள் போன்றவற்றின் சாகுபடியில் தோட்டக் கலையைச் சேர்ந்த நுட்பங்களாகிய ஒட்டுக் கட்டுதல், மொட்டுக் கட்டுதல், பதியன் போடுதல், விண்பதியன் போடுதல் போன்றவை முக்கியத்துவம் பெறுகின்றன. எனவே, தோட்டக் கலை வளர்ச்சியானது தோட்டக் கலைப் பயிர்களின் பராமரிப்பைப் பொருத்தே உள்ளது என்பது தெளிவு.

இன்று தோட்டக் கலைப் பயிர்களில் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது மா மரமாகும். இதன் சாகுபடி நமது தேவைக்கேற்ப இல்லாததற்குக் காரணம் ஒட்டுக் கன்றுகள் தாராளமாகக் கிடைக்காமல் இருப்பதேயாகும். தரமான ஒட்டுக் கன்றுகள் சாகுபடிப் பருவங்களில் லட்சக்கணக்கில் தேவைப்படுகின்றன. மா சாகுபடியில் இனவிருத்திக்குக் கவனம் கொடுப்பது அவசியத்தோடு அவசரமான பணியுமாகும். இப்பணியில் தீவிரமாக ஈடுபடும்போது தோட்டக் கலை வளர்ச்சி தானா

ஒட்டுக் கன்றுகளை அளித்து வரும் சந்திரப்பா நர்சரி கார்டன்ஸ்





முளை ஒட்டுமுறைக் கன்று





மாட்டு வண்டியில் கன்றுகளை எடுத்துச் செல்லுதல்

நர்சரி ஸ்தாபகரின் படத்தின் கீழே அவரது சநததியினர்

திரு. சாந்தகுமார், திருமதி கலாவதி சாந்தகுமார் - தோட்டக்கலை வல்லமைக்குப் பெற்ற விருதுகள்

கவே ஏற்படும். இதனை இன்று கண்கூடாக தருமபுரி மாவட்டத் தைச் சேர்ந்த கிருஷ்ணகிரியில் காணலாம்.

மா சாகுபடியில் முதலிடத் தைப் பெற்றிருப்பது தருமபுரி மாவட்டமாகும். இம்மாவட்டத்தில் அதிக அளவு சாகுபடி கிருஷ்ண கிரியில் தான் உள்ளது. மேலும் மிகப் பெரிய மாம்பழ மார்க்கெட் களும் கிருஷ்ணகிரியில் தான் உள்ளன. இதோடு கிருஷ்ணகிரிக்கு அருகிலுள்ள பையூரில் மாம்பழச் சாறு பிழியும் தொழிற்சாலை களும், பழங்கள் பதப்படுத்தும் நிலையங்களும் உளளன. தோட்டக் கலை மணம் கமழும் கிருஷ்ண கிரியில் இத்தொழில் வளர்ச்சிக்கு ஆதாரங்களாக உள்ள நர்சரிப் பண்ணைகள் அநேகம் உள்ளன. வெட்டி எடுக்கப்படாத வளமாக இருந்த தோட்டக்கலை, கிருஷ்ண

லாரியில் கன்றுகளை எடுத்துச் செல்லுதல்





தாய்ச் செடியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட ஒட்டுக்கன்றுகள்.

கிரி பகுதியில் மணம் கமழுவதுடன் தமிழ்நாட்டின் பிற பகுதிகளிலும்



ஒட்டுக் கட்டுதலுக்குத் தயார் செய்த வேர்ச் செடிகள்

இக்கலை வளர ஒரு தூண்டு கோலாகவும் இருந்து வருகிறது.

கிருஷ்ணகிரி பகுதியில் குறிப் பாக சந்தூர் மற்றும் மஹாதேவ கொள்ள ஹள்ளி போன்ற இடங் களில் தோட்டக்கலை வளர்ச்சி சிறப்பாக இருப்பதற்கு இங்குள்ள சூழ்நிலை மிகவும் சாதகமாக உள்ளது. இங்கு நிலவும் சீதோஷ்ண நிலை மித வெப்பமானது. இங்கு காற்றில் ஈரப்பதம் மிகக் குறைவாக உள்ளது. மேலும் அதிகக் காற்று இல்லாத் இப்பகுதியில் செடியின் தண்டின் மேல் உள்ள தோலில் ஈரம் விரைவாகக் காயாத சூழ் நிலை உள்ளதால் ஒட்டுக்கட்டும் பணியில் நல்ல வெற்றி கிடைக் கிறது.

இப்பகுதியில் வெற்றிக்கு மேலும் முக்கிய காரணங்கள் மண் வளம் மற்றும் விவசாயிகள் திறமை ஆகியவை தான். இங்குள்ள மண் சரளை மண்ணைக் கொண்ட செம்மண் ஆகும். மண்கண்டத்தில் ஆழம் 2 முதல் 3 அடி வரை உள்ளது. அதற்குக் கீழே பாறை வந்து விடுகிறது. ஆகவே, இங்கு வளரும் மரங்கள் குட்டையாக உள்ளன. இதனாலேயே நெருக்க மாகவும் நடப்படுகின்றன. இங்கு ஒட்டுக் கட்டப்படும் கன்றுகள் கணுக்களை அருகருகே கொண் டிருப்பதால் செடிகளை எடுத்துச் செல்லும்போது கணுக்களில் உடையும் பிரச்னை ஏற்படாது. எந்தச் சூழ்நிலையையும் அதாவது வறட்சியையும் தாங்கி வளரும் குணத்தைக் கொண்டுள்ளது. சித்தூர் பகுதியில் ஒட்டுக்கட்டப் பட்ட செடி வறட்சியினைத் தாங் காமலும், போக்குவரத்தின்போது உடையவும் வாய்ப்புகள் அதிகம்.

கிருஷ்ணகிரியில் ஆண்டுதோறும் மார்ச் முதல் ஆகஸ்ட் வரை ஒட்டுக்கட்டும் பணி சிறப்பாக நடைபெறுகிறது. ஆகஸ்ட் மாதத் திற்குப் பிறகு ஒட்டுக் கட்டும் போது செடிகளின் ஒட்டுப் பகுதி சரியாக இணையாது. ஆகவே, ஒட்டுக்கட்டும் பணி இக்கால கட்டத்திற்குள் செய்து முடிக்கப் படுகிறது. அடுத்து இங்குள்ள விவ சாயிகள் இப்பணியினைத் தொடர்ந்து பரம்பரை பரம்பரை யாக குடும்பத் தொழிலாகவே செய்து வருவதால், வீட்டிலுள்ள அனைவருக்கும் இத்தொழில் நுட்பம் எளிதாகத் தெரிந்துள்ளது. வீட்டில் உள்ள குழந்தைகளும் 10 வயதிலேயே இத்தொழில் நுட் பத்தை அறிந்து அனுசரிக்கத் தொடங்குகின்றனர்.

மேலும், அனைத்து விவசாயி களுக்கும் இத்தொழில் நுட்பம் தெரிவதால், சிறு மற்றும் குறு விவசாயிகளும் ஒட்டுக் கன்று களைத் தயார் செய்கின்றனர். இன்னும் சொல்லப் போனால் ஒட்டுக் கன்றுகள் தயாரிப்பது ஒரு குடிசைத் தொழிலாகவே நடை பெற்று வருகிறது. இவ்வாறு செடிகளை உற்பத்தி செய்யும் சிறு மற்றும் குறுவிவசாயிகள் செடிகளை உற்பத்தி செய்து ஒட்டு மொத்தமாக பெரிய நர்சரி நடத்துபவர்களிடம் கொடுத்து அதற்குண்டான தொகையினை யும் பெற்று விடுகின்றனர். நர்சரி

ஆல்பன்சோ மரத்தினடியில் திரு. சாந்தகுமார்





மிஸ்ட் சேம்பர்

தொழில், நிலம் இல்லா மக்களுக்கு வேலை வாய்ப்பினையும் உண்டாக்கித் தருகின்றது.

கிருஷ்ணகிரி பகுதியில் காணப்படும் தோட்டக்கலை வளர்ச்சிக்கு அடித்தளமாக இருந்து வருபவர்கள் இப்பகுதியில் தொன்றுதொட்டு நர்சரிப் பணிகளைச் செய்து வரும் முற்போக்கு விவசாயிகளே ஆவர். இவ்வாறு தொழில் புரிந்து வரும் விவசாயிகளில் குறிப்பிடும்படியாக உள்ளவர் மஹாதேவ கொள்ளஹள்ளியைச் சேர்ந்த திரு. எம்.சி. சாந்தகுமார் ஆவார். இவரது அரிய மேற்பார்வையில் இயங்கி வரும் சந்திரப்பா நர்சரி கார்டன்ஸ், விவசாயிகளிடையே மிகவும் பிரசித்தி பெற்றதாகும்.

தாவரவியல் பட்டதாரியான திரு. சாந்தகுமார், இத்தொழிலை மிகவும் சிரத்தையுடன் ஒரு சமுதாயத் தொண்டாகக் கருதிச் செய்து வருகிறார். இவரது குடும்பம் கடந்த 80 வருடங்களாகவும், இவர் கடந்த 32 வருடங்களாகவும் இத்தொழிலில் ஈடுபட்டு, தோட்டக்கலை வளரப் பாடுபட்டு வருகிறார்.

திரு. சாந்த குமார் அவர்களின் மூத்த சகோதரர் திரு. எம்.சி. மஹாதேவன், இப்பணிக்கு உறுதுணையாக இருந்து உதவி வருகிறார். திருமதி கலாவதி சாந்தகுமாரும் தனது கணவர் உடனிருந்து தொழிலைக் கவனித்து வருகிறார். இதோடு இவரது குமாரர்களும் இவரது பணியில் அவ்வப்போது உதவி வருகின்றனர். இவர்கள் மருத்துவம் மற்றும் கணிப்பொறிப் பட்டதாரிகளாக இருந்தாலும் தோட்டக்கலை வளர்ச்சியில் ஆர்வம் காட்டி வருகின்றனர்.

இவற்றைப் பார்க்கும்போது இவரது குடும்பமே தங்களைத் தோட்டக்கலை வளர்ச்சிக்கு அர்ப்பணித்துள்ளதை அறிய முடிகின்றது. இவரது பணி தமிழக அரசினால் பாராட்டப்பட்டு பலமுறை விருதுகளைப் பெற்றுத் தந்துள்ளது. இவரது நர்சரியும் தமிழக அரசினால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. வருடந்தோறும் இவர் தனது நர்சரியில் கன்றுகளை உற்பத்தி செய்து தோட்டக் கலைத்துறைக்குக் கொடுத்துதவி வருகிறார்.

இவரது தோட்டத்தின் மொத்தப் பரப்பளவு 90 ஏக்கர். இதில் 60 ஏக்கரில் தோப்பும், 30 ஏக்கரில் நர்சரியும் இயங்கி வருகின்றன. இவர் தனது நர்சரிக்கு ஆழ்துளைக் கிணறு கொண்டு பாசனம் செய்து வருகிறார். தண்ணீர் கிடைப்பது அரிதாக உள்ளதால், நர்சரியில் செடிகளுக்கு இடையில் தொட்டி அமைத்து டிராக்டர் டாங்கர் மூலம் ஆழ்துளைக் கிணறுகளிலிருந்து நீரினை எடுத்து வந்து தொட்டிகளில் நிரப்பி பிறகு பாசனம் செய்கிறார்.

இவர் தனது நர்சரியில் வருடத்திற்கு 1,70,000 மா ஒட்டுக் கன்றுகளை உற்பத்தி செய்கிறார். இதில் ஆல்பான்சோ மற்றும் பெங்களூரா வகையில் ஒவ்வொன்றும் 50,000 கன்றுகளும், மற்றவை 70,000 கன்றுகளும் உற்பத்தி செய்து விவசாயிகளுக்குக் கொடுத்து வருகிறார் இவர் கன்றுகளைத் தமிழகம் முழுவதும் கேரளம், கர்நாடகம், ஆந்திரம்,

நடுவதற்கு முன் கடினமடைய செடிகள் நிழலில் வைக்கப்படுவது





இளந்தண்டு ஒட்டுமுறைக் கன்று



தாய்ச் செடியுடன் ஒட்டுக் கட்டுதல்

வேர்ச் செடி நாற்றங்கால்



மஹாராஷ்டிரம், உத்திரப் பிரதேசம், கோவா, டெல்லி போன்ற பகுதிகளுக்கு அனுப்பி வருகிறார்.

இவ்வாறு அனுப்பும்போது இவர் சாலை மார்க்கத்தையே பயன்படுத்துகின்றார். 2,000 முதல் 2,500 கன்றுகள் வாங்குபவர் 10 டன் ஏற்றக்கூடிய லாரியையும், 1,500 கன்றுகள் வாங்குபவர் 5 டன் ஏற்றக்கூடிய லாரியையும் 700 முதல் 1,000 கன்றுகள் வாங்குபவர் 2 டன் ஏற்றக்கூடிய வேன்களையும் உபயோகப்படுத்தி, கன்றுகளை எடுத்துச் செல்கின்றனர் 100 முதல் 500 கன்றுகள் வாங்குபவர் தென்னைப பிரிகொண்டு ஐந்து ஐந்து தொட்டிகளாகக் கட்டி லோக்கல் லாரி சர்வீஸ்களில் போட்டு எடுத்துச் செல்கின்றனர். அருகிலுள்ள பகுதிகளுக்கு எடுத்

துச் செல்ல மாட்டு வண்டிகளை உபயோகிக்கின்றனர்.

இவ்வாறு எடுத்துச் செல்லும் போது லாரியின் அடிப்பரப்பில் வைக்கோல் அல்லது தென்னை நார்க் கழிவினைப் போட்டு அதன் மேல் தொட்டிகளை அடுக்கி எடுத்துச் செல்கின்றனர். லாரி களில் அதிக தூரம் எடுத்துச் செல்லும்போது 12 மணி நேரத் திற்கு ஒருமுறை குழாய் கொண்டு நன்கு தொட்டிகளுக்கு நீர்விடப் படுகிறது. குறைந்த தூரம் உள்ள ஊர்களுக்கு எடுத்துச் செல்லும் போது இக்கவனம் தேவைப்படு வதில்லை. அதிக தூரமுள்ள ஊர் களுக்கு எடுத்துச் செல்லும் வியாபாரிகள் ஏதேனுமொரு முக்கிய நகரில் செடிகளை மொத்தமாக இறக்கி வைத்து அருகிலுள்ள சிறிய ஊர்களுக்கு எடுத்துச் சென்று விற்கின்றனர்.

மேலும், ஒரு கிராமத்திலுள்ள பல விவசாயிகள் ஒன்று சேர்ந்து தங்கள் தேவைக்கேற்ப செடிகளின் எண்ணிக்கையைநிர்ணயம்செய்து கொண்டு ஒட்டுமொத்தமாக வாங்கி, ஒரே லாரியில் எடுத்துச் சென்று தங்கள் ஊரில் சென்று பிரித்துக் கொள்கின்றனர். இதனால் போக்குவரத்துச் செலவில் சிக்கனம் ஏற்படுகிறது. இவ்வாறு லாரிகளில் எடுத்துச் செல்லும் போது 5 சதவீத செடிகள் மடிய வாய்ப்புள்ளது.

திரு. சாந்தகுமார் அவர்கள் ஹசர்கட்டாவில் இயங்கி வரும் இந்தியத் தோட்டக்கலை ஆராய்ச்சி நிலையம் மற்றும் பெங்களூரில் ஹெப்பாலில் இயங்கி வரும் வேளாண்மைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டு அவர்கள் சிபாரிசு செய்யும் தொழில் நுட்பங்களைத் தனது பணியில் கையாண்டு வரு கிறார். குறிப்பாக ஒட்டுப் பணிக்கு முக்கியமாகத் தேவைப்படக் கூடிய வேர்ச் செடி விரிவாக வளரத் தேவையான ஹார்மோன் குறித்து ஆலோசனை பெற்று அதன்படி செயல்பட்டு வருகின்றார்.

திரு. சாந்தகுமார் மா ஒட்டுக் கன்றுகளைத் தவிர தனது நர்சரியில் மாதுளை (கணேஷ்), கொய்யா (அலஹாபாத், லக்னோ 49), சப்போட்டா (பி.கே.எம்.1), முந்திரி (வி.ஆர்.ஐ.3) போன்ற பழமரக் கன்றுகளையும் உற்பத்தி



சிங்கம் : (மனத்திற்குள்)
சே! என்ன மட்டமான எண்ணெயைத் தலையில தடவிக் கொண்டிருக் கானோ?

செய்து கொண்டு வருகிறார். இவரிடம் தற்போது மா ஒட்டுக் கன்றுகளில் ஆல்பான்சோ, ஹுமா யுதீன், செந்தூரா, பெங்களூரா, மல்கோவா, பங்கனப்பள்ளி, நீலம், யாகூத் ருமானி, பையூர்-1, காலப் பாடு, பீத்தர், நீல்கிரன், நீல்கோவா, ஹைபிரிட் 10, ஹைபிரிட் 13, ஹை பிரிட் 17 போன்ற ரகங்களின் தர மான ஒட்டுக் கன்றுகள் கிடைக் கின்றன. இவர் தனது தொழிலில் கீழ்க்காணும் வழிமுறைகளை அனுசரித்து வருகிறார்.

## வேர்ச் செடி தயாரித்தல் :

ஒரு கட்டடத்திற்கு அஸ்திவாரம் எவ்வளவு முக்கியமோ, அதே போல் ஒட்டுக் கட்டும் பணிக்கு அடித்தளமாக அமைவது வேர்ச் செடியாகும். கட்டடத்தின் அஸ்தி வாரம் கட்டடத்தைப் பல வரு டங்கள் பாதுகாப்பது போல் வேர்ச் செடியானது அதன் மேல் ஒட்டுக் கட்டப்பட்டுள்ள தாய்ச் செடியின் வளர்ச்சிக்கு அடித்தளமாக இருந்து பேணிக் காத்து வருகிறது. இதைத் தனது அனுபவத்தில் உணர்ந்த தோட்டக்கலை வல்லுநர் திரு. சாந்தகுமார் அவர்கள் வேர்ச்செடி தயாரிப்பதிலிருந்தே தனது பணி யைத் தீவிரமாகச் செய்யத் தொடங்குகின்றார்.

தரமான வண்டு தாக்காத முளைப்புத்திறன் கொண்ட கொட் டைகள் சாறு பிழியும் தொழிற் சாலையிலிருந்தோ அல்லது பெரிய நகரங்களிலிருந்து பொறுக்கியெடுத்தோ அல்லது வியாபாரிகளிடமிருந்தோ மொத்த மாக வாங்கிக் கொள்ளப்படு கின்றன. இவ்வாறு தேர்ந்தெடுக்கப் படும் கொட்டைகளானது கொட்ட காச்சி மாமரம் அல்லது மற்ற ரகங்களைச் சார்ந்ததாகவும் இருக் கலாம். நாற்றங்காலில் தொழுவுர மிட்டு 4 - 5 சால் ஆழ உழவு செய்து, விதைகள் நிலம் தெரி யாமல் சீராகப் பரப்பப்பட்டு மணல் கொண்டு முடப்படுகிறது. பின் வாரம் ஒருமுறை நீர் பாய்ச்சப்படுகிறது. இவ்வாறு செய்யும்போது ஒரு மாதத்திற்குள் கொட்டைகள் முளைத்து நாற்றங் காலில் நிறைய மாங்கன்றுகள் காணப்படும்.

ஆனால், விதைத்த கொட்டை க்ளில் 30 சதவிகிதமே முளைத்திருக் கும். ஏனெனில், விதைக்கத் தேர்வு செய்யப்பட்ட கொட்டையினுள் பருப்பு உடைந்தோ, பூச்சியால் வியாதி தாக்கியோ இருக்கலாம். எனவே, இவ்வாறு பாதிக்கப்பட்ட விதைகள் முளைக்கா. செடி ஒவ்வொரு துளிர் வைக்கும் போதும், ஊடுருவிப் பாயும் பூச்சி மருந்தாகிய மெட்டாசிஸ்டாக்ஸ், பூஞ்சாள மருந்தான பவிஸ்டின் ஆகியன கலந்து தெளிக்கப்படு கின்றன. வேர்ச் செடி வயது சாதாரணமாக ஒன்று அல்லது ஒன்றரை வருடம் வரை வைத்திருந்து உபயோகப்படுத்தப்படுகின்றது. உபயோகப்படுத்தப்படும் வேர்ச் செடியின் வயது ஒட்டுக்கட்டும் முறையைப் பொருத்து மாறுபடு கின்றது.

## ஒட்டுக்கட்டும் முறைகள்:

கிருஷ்ணகிரி பகுதிக்குப் பெருமை வந்ததே இங்கு அனுசரிக்கும் ஒட்டுக்கட்டும் கலை யாகும். விவசாயி திரு. சாந்தகுமார் ஒட்டுக்கட்டும் முறையில் மூன்று முறைகளை அனுசரிக்கிறார். முதல்முறையான நெருக்கி ஒட்டுக் கட்டும் முறையில், வேர்ச் செடி தாய்ச் செடியின் அருகில் கொண்டு செல்லப்பட்டு ஒட்டுக் கட்டப்படுகின்றது. இரண்டாவது முறையான முளை ஒட்டு முறை யில்,இவ்வாறின்றி, தாய்ச்செடியி லிருந்து ஒரு கிளையை எடுத்து வந்து வேர்ச் செடியின் நுனியில் ஒட்டப்படுகிறது. மூன்றாவது முறையான இளந்தண்டு ஒட்டு முறையிலும், முளை ஒட்டுமுறை யில் கூறியபடியே ஒட்டுக் கட்டப் படுகிறது. இம்முறைகள் இங்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

### 1. நெருக்கி ஒட்டுக்கட்டும் முறை:

தோட்டக்கலையில் தொன்று தொட்டு அனுசரித்து வரும் முறை நெருக்கி ஒட்டுக்கட்டும் முறை யாகும். இம்முறையில் இனத் தேர்வு செய்யப்பட்ட தாய்ச் செடிகள் உள்ள தோட்டத்திற்கு வேர்ச் செடிகள் செல்கின்றன. அதாவது, அவை கொண்டு செல்லப்படு கின்றன. ஒட்டுக்கட்டுதலுக்குத் தயார் செய்யப்பட்ட வேர்ச் செடி தாய்ச் செடியின் அருகில் கொண்டு செல்லப்பட்டு, அதன் கிளையுடன் ஒட்டுக்கட்டுதல் செய்யப்படுகின்றது. இந்தப் பணியின் விவரம் சுருக்கமாக இங்கு கூறப்படுகிறது. ஒன்றி லிருந்து ஒன்றரை வயதுள்ள நல்ல தரமான, பருமனான (1 செ.மீ. - 1 1/2 செ.மீ.) வேர்ச் செடிகள் தேர்வு செய்யப்படுகின்றன. தேர்வு செய்யப்பட்ட செடி பெரிய தொட்டியில் சாய்வாக நடப் படுகிறது. இந்த வேர்ச் செடியில் ஆணி வேர் அறுந்திருக்கும். மீத முள்ள வேர்கள் உயிரோட்டம் கொடுக்கும்.

அச்சமயம் தண்டின் மேல் தோல் பச்சை நிறத்திலிருந்து பழுப்பு நிறத்திற்கு வந்து விடும். இவ்வாறு தயார் செய்யப்பட்ட வேர்ச் செடிகள் தாய்ச் செடிகள் உள்ள தோட்டத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு விடுகின்றன. அங்கு தாய்ச் செடிகளின் அருகில் அமைக்கப்பட்டுள்ள திண்டுகளின் மேல் வைக்கப்படுகின்றன. பிறகு வேர்ச் செடியின் தலைப்பாகத்தில் 8 - 12 செ.மீ. அளவிற்கு அதன் கனத்தில் 3 இல் ஒரு பகுதி மேல் தோலினையும், தண்டினையும் பிசிறில்லமல் சீவப்படுகிறது. இது போல் தாய்ச் செடியிலும் ஒட்டுப் பாகம் சீவப்படுகிறது. சீவுவதற்குப் பிரத்யேகமான கத்தி பயன் படுத்தப்படுகிறது. பிறகு வேர்ச் செடி, தாய்ச்செடி சீவிய பாகத்தை நன்கு பொருந்துமாறு இணைத்து இணைப்பின் மேல் கட்டு போடப் படுகிறது. இதில் இரண்டு முறைகள் உள்ளன.

முதல் முறையில் கட்டு போடு வதற்குத்தேன்மெழுகு தோய்க்கப் பட்ட துணி உபயோகப்படுத்தப் படுகிறது. ஒட்டுக் கட்டிய பகுதியில் காற்றுப் புகா வண்ணம் துணி இறுகச் சுற்றப்பட்டு இதன்மேல் 3 பிரி அல்லது 5 பிரிச் சரடு கொண்டு இறுகக் கட்டப்படுகிறது. இவ்வாறு கட்டிய பகுதியின் மேல் செம்மண் மற்றும் சாணம் இரண் டும் ஒன்றாகக் கலக்கப்பட்டு மேல் பூச்சாகப் பூசப்படுகிறது.

இரண்டாவது முறையில் கட்டு போடுவதற்கு பாலிதீன் நாடா பயன்படுத்தப்படுகிறது. ஒட்டுக் கட்டிய பகுதியை பாலிதீன் நாடா கொண்டு இறுக்கிக் கட்டப்படு கிறது. இதன் மேல் சாணிப்பால் பூச வேண்டிய அவசியம் இல்லை.

ஒரு தாய்ச்செடியில் பல ஒட்டுக் கன்றுகள் இணைந்திருக் கும். இப்படி இணைந்திருக்கும் ஒட்டுக் கன்றுகளுக்கு ஒரு நாளில் இருமுறை நீர் ஊற்றப்படுகிறது. இதுபோல் 60 நாள்கள் முடிந்த பின் ஒட்டுக் கன்று தாய்ச் செடி யிலிருந்து பிரித்தெடுக்கப்படும். இதற்காக ஒட்டுக்கட்டப்பட்ட பகுதிக்குச் சற்று கீழே அறுக்கப்படு கின்றது. இந்தப் பணி நிதான மாகப் பல கட்டங்களில் செய்யப் படுகின்றது. 60 நாள்களுக்குப் பிறகு முதல் அறுப்பு (மூன்றில் ஒரு பங்கு) போடப்படுகின்றது. மீண்டும் 10 நாள்கள் கழித்து இரண்டாவது அறுப்பு ( இரண் டில் ஒரு பங்கு) போடப்படுகின் றது. மீண்டும் 10 நாள்கள் கழித்து எஞ்சியுள்ள பாகத்தினையும், மேல் தோலையும் பிரித்தெடுத்து, பின்னர் ஒட்டுக்கன்றுகள் 5 நாள்கள் தாய்ச் செடியுடனேயே இருக்கும்படி விடப்படுகின்றன. தாய்ச் செடி யிலிருந்து பிரிக்கப்பட்ட ஒட்டுக் கன்றுகள் மேலும் கடினப் பட நிழலில் வைக்கப்படுகின்றன. இந்த ஒட்டுக் கன்றுகளை ஒரு மாதத்திற்குள் நடவு செய்ய அறிவுறுத்தப்படுகிறது.

### 2. முளை ஒட்டு முறை :

இம்முறைக்கு மிகவும் இளம் வேர்ச்செடி மட்டுமே பயன் படுத்தப்படுகிறது. வேர்ச்செடி ஒரு கணு தான் வைத்திருக்க வேண்டும். இதை இரண்டாவது கணு வைப்ப தற்கு முன்பாகவே பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இந்த வேர்ச் செடியின் வயது 40 முதல் 60 நாள்களுக்குள்தான் இருக்கும். இந்த இளம் வேர்ச்செடி வேரில் கொட்டையுடன் இருக்கும்படியும், ஆணி வேர் சிறிதளவு கூட அறு படாத நிலையிலும் எடுத்து, சிறிய தொட்டியில் நடப்படுகிறது. இந்த வேர்ச்செடியுடன் ஒட்டுப் போட நல்ல இனத்தேர்வு செய்யப்பட்ட தாய்ச் செடியிலிருந்து குச்சி தேர்வு செய்யப்படுகிறது. பிறகு இதன் நுனியில் உள்ள இலைகள் ஒவ் வொன்றும் பாதியாக வெட்டப்படு கின்றன. இதனால் குச்சியின் நுனி யில் முளை நன்கு பருமனடைந் திருக்கும்.

அடுத்து தொட்டியில் வைக்கப்பட்டுள்ள வேர்ச் செடி யின் தலைப் பாகத்தில் 2 செ.மீ. அளவுக்கு இரண்டாகப் பிளக்கப் படுகிறது. தொடர்ந்து தாய்க் குச்சியின் அடிப்பாகத்தை 2 செ.மீ. அளவு பட்டையாகச் சீவி இந்த அடிப்பாகத்தை வேர்ச் செடியின் தலைப்பாகத்தில் இரண்டாகப் பிளக்கப்பட்ட பகுதியில் பொருத்தி, 100 'காஜ்' கனமுள்ள பாலிதீன் பேப்பர் கொண்டு இறுகக் கட்டி மிஸ்ட் சேம்பரில் வைக்கப் படுகிறது.

மிஸ்ட் சேம்பரில் 20 நாள் களுக்கு 28 டிகிரி - 30 டிகிரி செல்சியஸ் வெப்பநிலை உள்ள படியும், 80 -85% ஈரப்பதம் உள்ள படியும் வைத்து, பிறகு வெப்ப நிலையையும், ஈரப்பதத்தையும் சிறிது சிறிதாகக் குறைத்துக் கொண்டு வந்து 30 ஆம் நாளில் செடியை வெளியில் எடுத்து நிழலில் திறந்த வெளியில் ஒரு மாதம் வைத்திருந்து, கடினப் படுத்தப்படுகிறது. அது சமயம் கோமியம், பெரு ஊட்டச் சத்து, நுண்ணூட்டச் சத்து ஆகியவற்றை வாரம் ஒரு முறையும், அசோஸ் பைரில்லம் 200 கிராம் அளவினை 10லிட்டர் நீரில் கலந்து (40 செடிகள் வீதம்) 15 நாள்களுக்கு ஒரு முறை யும் ஊற்றப்படுகின்றன. இவ்வாறு தயாரிக்கப்பட்ட கன்றுகள் தயாரான ஒரு மாதத்திற்குள் பூமியில் நடச் சிபாரிசு செய்யப் படுகிறது.

### 3. இளந்தண்டு ஒட்டு முறை :

இந்த முறையில் சற்று முதிர்ச்சி அடைந்த வேர்ச் செடிகள் அதாவது 6 மாதங்கள் வயதுடைய வேர்ச் செடிகள் பயன்படுத்தப் படுகின்றன. வீரியமான வேர்ச் செடிகளை மிகவும் கவனமாக ஆணி வேருடன் பறித்து, பெரிய மண் தொட்டிகளில் (4" X 8") நடப் படுகின்றன. இனத்தேர்வு செய்யப்

பட்ட தாய்ச் செடியிலிருந்து பென்சில் அளவு பருமனுள்ள நன்கு முளை அரும்பிய நிலையில் உள்ள நுனிக்கிளை 15 செ.மீ. அளவுக்கு எடுத்துக் கொள்ளப் படுகிறது. பின் வேர்ச் செடியின் தலை பாகத்தை 2 1/2 செ.மீ. - 3 செ.மீ. அளவு பிளந்து, அதனுள் தயாராக வைக்கப்பட்டுள்ள தாய்ச் செடியின் அடிப்பாகத்தைப் பட்டையாகச் சீவிப் பொருத்தப் படுகிறது.

இவ்வாறு பொருத்திய பகுதியினை 150 'காஜ்' பாலிதீன் பேப்பர் நாடாவால் இறுகக் கட்டி மிஸ்ட் சாம்பரில் வைக்கப்படுகிறது. பிறகு முளை ஒட்டுமுறையில் அனுசரித்த அதே பராமரிப்புப் பணிகள், இளந்தண்டு ஒட்டுக்கன்றுகளுக்கும் செய்யப்படுகின்றன. இந்த ஒட்டுச் செடிகள் அனைத்தும் நிழலில் வைத்துக் கடினப்படுத்தப்பட்டு, பின்னர் அவை விற்பனை செய்யப் படுகின்றன. இக்கன்றுகளை 6 மாதங்களுக்குள் பூமியில் நடச் சிபாரிசு செய்யப்படுகிறது.

மேலே விவரிக்கப்பட்ட மூன்று முறையிலும் கிடைத்த ஒட்டுக் கன்றுகள் உடனடியாக விற்பனை செய்யப்படுவதில்லை. ஒட்டு பாகம் நல்ல முறையில் கடினமடைய, கன்றுகள் நிழலில் வைக்கப்பட்டு பின்னரே அவை விற்பனை செய்யப்படுகின்றன.

பொதுவாக ஒட்டுக்கட்டும் பணி, மார்ச் முதல் ஆகஸ்ட் வரைதான் செய்யப்படுகிறது. கன்றுகள் திடீரென்று தீர்ந்து விட்டால் ஆகஸ்ட் மாத்திற்குப் பிறகு வரக்கூடிய தேவையைப் பூர்த்தி செய்ய திரு. சாந்தகுமார் 'மிஸ்ட் சேம்பர்' நுட்பத்தை அனுசரிக்கிறார்.

### மிஸ்ட் சேம்பர் :

இவர் இரும்பு பைப்புகள் மற்றும் பாலிதீன் தாள், காற்றினை வெளியேற்றும் ஒரு காற்றாடி கொண்டு மிஸ்ட் சேம்பர் ஒன்றை வடிவமைத்துள்ளார். இதனைப் பற்றிக் குறிப்பிடும்போது, "மிஸ்ட் சேம்பரானது, பண்ணை வீட்டிற்கு அருகிலும் நல்ல நீர் உள்ள கிணற்றுக்கு அருகிலும், நல்ல வெயில் படும் இடமாகவும், நான்கு பக்கம் காற்றோட்டம் உள்ள இடமாகவும், நீர் தேங்காத நல்ல வடிகால் வசதியுள்ள இடமாகவும் இருக்க வேண்டும்" என்கிறார். மேலும், "இதன் நீள அளவு-வடக்கு, தெற்கு திசையிலும்; முகப்புக் கதவும், காற்றினை வெளியேற்றும் காற்றாடியும் - தெற்குப் பக்கமாகவும்; பின் கதவும், குளிரூட்டும் அமைப்பும் வடக்குப் பக்கமாகவும் இருக்க வேண்டும். 50 சதுர அடி உள்ள மிஸ்ட் சேம்பர் அமைக்க ரூ. 20,000 - முதல் 25,000 வரை செலவாகும்" என்கிறார். மிஸ்ட் சேம்பர் அமைப்பதன் மூலம் கீழ்க்காணும் நன்மைகளைப் பெறுவதாக திரு. சாந்தகுமார் விளக்குகிறார்.

1. திறந்த வெளியில் ஒட்டுக்கட்டு தலுக்கு பருவம் சீராக இல்லாத போது கன்றுகளின் திடீர்த் தேவையைக் கருத்திற் கொண்டு மிஸ்ட் சேம்பர் உதவியை நாடலாம். உதாரணமாக ஆகஸ்ட் மாதத்திற்குப் பின் ஒட்டுக் கட்டும் பணி அவசியம் ஆகும் போது பணியைச் சிறப்பாக, வெற்றிகரமாக மிஸ்ட் சேம்பர் உதவியால்செய்யலாம்.
2. குறுகிய காலத்தில் ஒட்டுக் கன்றுகள் தயாராகி விடும்.
3. கன்றுகளை அதிக அளவில் தயார் செய்யலாம்.
4. கன்றுகள் நல்ல உயிர்ப் பிடிப்புடன் தரமானதாக இருக்கும்.
5. கன்றுகளுக்கு பூச்சி, நோய் பாதிப்பு இல்லாமல், கன்றுகள் ஆரோக்கியமாக இருக்கும்.

### நர்சரித் தொழிலில் பொருளாதாரம் :

சாதாரணமாக ஓர் ஏக்கர் நர்சரியைப் பராமரிக்க ரூ. 80,000 வரை செலவாகும். ஏக்கரில் 8,000 முதல் 10,000 கன்றுகள் வரை தயாரிக்கலாம். கன்றின் விலை ரூ. 12 முதல் ரூ. 15 வரை விற்பதுண்டு. எனவே, ஏக்கரில் வருமானம் ரூ. 16000 முதல் ரூ. 25000 வரை கிடைக்கும். இந்த இலாபமானது. இந்தத் தொழிலை ஒரு தார்மீக முறையில் செய்யும் போது தான் கிடைக்கிறது. இத்தொழிலைச் செய்பவர்களுக்கு நல்ல மன தைரியமும், விவசாயிகளின் பேரில் அக்கறையும் தேவை. பாடுபட்டு உழைக்கும் போது பலவித சோதனைகளால் நர்சரி நடத்துபவர்கள் நிலைகுலைவை அடைகின்றனர். இவர்களுக்குக் கடும் சோதனையை விளைவிப்பது வறட்சியாகும். இச்சோதனையைக் கண்டு பயப்படாமல், தொடர்ந்து பணி செய்யும்போது ஒரு வருடத்தில் இலாபம் குறைந்தோ அல்லது நஷ்டமோ ஏற்பட்டாலும் அடுத்து வரக்கூடிய வருடங்களில் கிடைக்கும் வருவாய் அதை ஈடுகட்டி உற்சாகத்தை அளித்துவிடும்.

விவசாயி திரு. சாந்தகுமார், நர்சரி வியாபாரம் பற்றிக் குறிப்பிடும் போது, "தற்போது எல்லா இடங்களிலும் மழை குறைந்து விட்டதாலும், விவசாயக் கூலியாட்கள் கிடைக்காத பிரச்னை உள்ளதாலும், கூலி அதிகமாகி விட்டபடியாலும், விவசாய விளைபொருள்களுக்குச் சரியான விலை கிடைக்காததாலும் இதுவரை தான்யப் பயிர்களைச் சாகுபடி செய்து வந்த விவசாயிகள் மர விவசாயத்திற்கு மாறி வருவது நர்சரித் தொழிலுக்கு ஒரு திருப்பு முனையாக உள்ளது" என்கிறார். மேலும், "தற்போது ஜூஸ் செய்யும் தொழிற்சாலைகள் மற்றும் பதப் படுத்தும் தொழிற்சாலைகள் அதிகமாகி வருவதால், மர விவசாயத்தில் மக்கள் ஒரு விழிப் புணர்வினைப் பெற்றிருப்பது இத் தொழில் வளர ஒரு சாதகமான நிலையைத் தோற்றுவித்துள்ளது." மேலும், அனைத்துத் தொழிலிலும் உள்ளது போல் இத் தொழிலிலும் கூட்டுறவு முறையில் ஓர் அமைப்பு தேவை. விதைச் சட்டம் இருப்பது போல், நர்சரி சட்டம் ஒன்று அரசால் கொண்டு வரப்பட்டால் இப்போது இருப்பதை விட தரமான கன்றுகளை விவசாயிகளுக்குக் கொடுத்துதவ முடியும். இம்முறையில் விவசாயிகள் ஏமாந்து போவதற்கு வாய்ப்பில்லை" எனக் குறிப்பிடுகின்றார்.

ஒரு பகுதி குறிப்பிட்ட விவசாய வளர்ச்சிக்குப் பிரசித்தி பெற்றிருந்தால், அதற்கு முக்கிய காரணமாக விளங்குபவர்கள் தன்னலம் பாராமல் பொதுநலம் கருதி உழைக்கக் கூடிய விவசாயிகள்தான். இன்று கிருஷ்ணகிரி பகுதியில் தோட்டக் கலை நறுமணம் வீசிக் கொண்டிருக்கிறது என்று சொன்னால், அதற்கு திரு. சாந்தகுமார் போன்ற விவசாயிகளே காரணம் என்றால் அது மிகையாகாது. ●

# ஓரே நாவில் மூன்று தலங்கள்

**ஸ்ரீ ரங்கம் ஸ்ரீதரன்**

**காலைக்கடம்பர்**
**மத்தியானச் சொக்கர்**
**அந்தி ஈங்கோய் நாதர்**



அய்யர் மலையின் அழகான தோற்றம்

திருச்சிராப்பள்ளியிலிருந்து கரூர் செல்லும் வழி காவிரி ஆற்றின் கரையிலே செல்வதால், காவிரியின் இரு மருங்கும் இயற்கை அழகை ரசித்துக் கொண்டே செல்லலாம். இவ்வழியில் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள இரண்டு தலங்கள் உள்ளன. குளித்தலை, அய்யர் மலை எனப்படும் சிவாய மலை, திரு ஈங்கோய்மலை ஆகிய அம் மூன்று தலங்களும் சிறப்பானவை. மூன்று

திருச்சியிலிருந்து சுமார் 45 கி.மீ. தொலைவில் காவிரி ஆற்றின் கரையில் குளித்தலை எனும் தலம் அமைந்துள்ளது. குளித்தலையின் அருகே

தலங்களையும் இணைத்து 'காலைக் கடம்பர்', 'மத்தியானச் சொக்கர்', 'அந்தி ஈங்கோய்நாதர்' என்பது வழக்கில் இருந்து வருகிறது. ஒரே நாளில் இம் மூன்று தலங்களையும் தரிசனம் செய்வது மிகவும் சிறப்பானது என்றும், மேலும் வாழ்க்கையில் நினைத்தது நிறைவேறும் என்றும் கூறப்படுகிறது. இனி இத்தலங்களின் சிறப்பைக் காண்போமா!

**குளித்தலை:**

குளித்தலைக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை திருநாவுக்கரசர் 'கடம்பந்துறை நாமம் ஏத்த நம் தீவினை நாசமே' எனப் போற்றுகின்றனர்.

பாடல் பெற்ற காவிரியின் தென் கரைத் தலங்களில் இரண்டாவது தலமாக இது விளங்குகிறது. 'கடம்ப மரம்' இத்தலத்தின் தலவிருட்சமாக விளங்குவதால் திருக்கடம்பந்துறை, கடம்பர் கோயில் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது. மேலும், இத்தலம் கடம்பவனம், குழித்தண்டலை, பிரமபுரம், சதுர்வேதபுரி, கந்தபுரம், வட மதுரை, ஞானோதயபுரி என்றெல்லாம் சிறப்பாகப் போற்றப்படுகிறது.

இரத்தினகிரி மலையிலிருந்து ஊரின் அழகுத் தோற்றம்



இத்தலத்தில் சப்த கன்னியரும் இறைவனை வழிபட்டுப் பேறு பெற்றார்கள். அதனால் கருவறையில் லிங்க வடிவான இறைவனுக்குப் பின்னால் சப்த கன்னியரின் உருவங்கள் காணப்படுவது சிறப்பாகும். காசி போன்று வடக்கு நோக்கிய தலமாக விளங்குவதால் 'தட்சிண காசி' எனவும் அழைத்துப் போற்றப்படுகின்றது. அம்பிகை பாலகுஜாம்பிகை என்ற பெயருடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறாள். காவிரியில் நீராடி கடம்பவன நாதரை வழிபடுவோர் வேண்டும் வரங்களைப் பெறுவார்கள் எனக் கூறப்படுகிறது.

நடராஜர் திருமேனியில் முயலகன் இல்லாதது இங்கே சிறப்பாகும். குளித்தலைத் தலத்தைப் பல இலக்கியங்கள் போற்றுகின்றன. அருணகிரிநாதரின் திருப்புகழ் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானைப் போற்றுகிறது. உ.வே. சாமிநாத அய்யர் அவர்களால் பதிப்பிக்கப் பெற்ற 'கடம்பர்

கோயில் உலா' இத்தலத்தின் சிறப்பை எடுத்துக் கூறுகிறது. ஸ்ரீ திருப்பதி சுவாமிகளின் பாடல்கள், யாழ்ப்பாணம் வண்ணை தாமோதரம் பிள்ளை இயற்றிய கடம்பவன மான்மியம் ஆகியன இத்தலத்தின் புகழை மேலும் வெளிப்படுத்துகிறன.

**அய்யர் மலை:**

குளித்தலையிலிருந்து மணப்பாறை செல்லும் சாலையில் சுமார் 8 கி.மீ தொலைவில் இம் மலைக்கோயில் அமைந்துள்ளது. அய்யர்மலை, வாட் போக்கி, சிவாயமலை, ரத்தினகிரி, மணிகிரி, சிவதைபுரி, ரத்தினவெற்பு என்று பல்வேறு பெயர்களில் அழைக்கப் படுகிறது. அப்பர் பெருமான் 'கின்னரங் கேட்கும் வாட்போக்கி' 'ஆடல் பாடல் உகந்த வாட்போக்கி' என்றெல்லாம் போற்றுகின்றார். பாடல்பெற்ற காவிரித் தென்கரைத் தலங்களுள் இது முதலாவது தலமாகும். மலைப்படி களின் அமைப்பும் பிராகாரங்களின் அமைப்பும் 'ஓம்' எனும் பிரணவம் போன்றிருத்தலால் 'சிவாய மலை' என்று பெயர் பெற்றது. 1178 அடி உயரமுள்ள இம்மலையில், 1017 படிகள் உள்ளன.

மலைக்குச் செல்லும் முன் அடிவாரத்தில் நூற்றுக்கால் மண்டபம் உள்ளது. முகப்பில் விநாயகர் எழுந் தருளியிருக்கிறார். இம் மண்டபத்தில் சக்தி வாய்ந்த வைரப் பெருமாள், கருப்பண்ணசாமி, கோடங்கி நாயக்கன், தண்டபாணி ஆகியோரின் சந்நிதிகள் உள்ளன. இவர்களை வழிபட்டு மலை மேல் செல்வோம். மலைக்குச் செல்லும் பாதையில் 21 மண்டபங்கள் உள்ளன. ஆகவே, ஆங்காங்கே இளைப்பாறி சுற்றுப்புற அழகை ரசித்துக் கொண்டே செல்லலாம்.

முதலில் காண்பது சகுனக் குன்று என்ற பாறை. உருண்டையான அப் பாறை எப்பொழுது கீழே விழும் என்ற நிலையில் அப்படியே உள்ளது. இதன் அருகில் உள்ள கம்பத்தடியில் பில்லி, சூனியம் போன்றவற்றை நீக்க கயிறு கட்டி வழிபடுகின்றனர். இதற்கும் சற்று மேலே 'பொன்னிடும் பாறை' உள்ளது. இதற்கு அடுத்து 18 ஆம் படி உள்ளது. இதில் பொய்ச்சத்தியம் செய்யாமல் உண்மையே பேசுவார்கள் என நம்பி மக்கள் தங்களிடையே ஏற்படும் வழக்கு களை இங்கே தீர்த்துக் கொள்கின்றனர். அழகிய வேலைப்பாட்டுடன் காணப் படும் இப்படிகளைப் புனிதமாகக் கருதுகின்றனர்.



8 கி.மீ. தொலைவில் ஓடும் காவிரியிலிருந்து அபிஷேக நீர்

தொடர்ந்து இலட்சதீப மண்டபம், ஏகாலியர் மண்டபம், காக்கை மண்டபம், வசந்த மண்டபம் ஆகிய மண்டபங்கள் உள்ளன. மலையில் பாதி தூரம் வந்துவிட்டோம். இங்கு செங்குத்தான பாறைகள் இரண்டு உள்ளன. 'கன்னி மார் பாறை' என அழைக்கின்றனர். இதன் நடுவே சப்தகன்னியர், காளி, விநாயகர் ஆகியோர் வழிபடப் பெறு கின்றனர். அதற்கு மேலே உகந்தான்படி விநாயகர் சந்நிதி உள்ளது.

விநாயகரை வழிபட்டுச் சென்ற வுடன் முதலில் நாம் காண்பது சோழபுரீசர் கோயில். அதற்குப்பின்னால் கிழக்கு நோக்கிய சந்நிதியில் அம்மன் 'சுரும்பார் குழலி' என்ற பெயருடன் பக்தர்களுக்கு அருள் புரிகிறாள். இத் தலத்தின் தலவிருட்சம் வேம்பு இங்கு உள்ளது.

அம்மனை வழிபட்டுவிட்டு, சற்று மேலே சென்றால் இறைவனின் சந்நிதி உள்ளது. மேற்கு நோக்கி இறைவன்

'திருவாட் போக்கி மலை' எனக் குறிப்பிடும் குலோத்துங்க சோழனது கல்வெட்டு.





திருஈங்கோய் மலையின் அழகுத் தோற்றம்.

நடைபெறும் தேர்த்திருவிழா சிறப் பானவை. திருநாவுக்கரசர் தேவாரம், அருணகிரிநாதர் திருப்புகழ், திருவாட் போக்கி புராணம், வாட்போக்கி கலம் பகம், இரத்தினகிரி உலா போன்ற இலக்கியங்கள் இத்தலத்தின் புகழை எடுத்துக் கூறுகின்றன.

சோழ, பாண்டிய, போசள, விஜயநகர மன்னர்களின் 50க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் இக்கோயிலில் உள்ளன. திருமாணிக்க மலை உடையார், திருவாட் போக்கி மலை மகாதேவர் என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப் படுவதையும், 1000 ஆண்டுகளாக சிறப்பாகப் போற்றப்பட்டு வந்ததையும் அறிகிறோம். 2000 ஆண்டுகளுக்கு

குளித்தலை - திருக்கடம்பந்துறைக் கோயில்



சுயம்பு மூர்த்தியாக எழுந்தருளி யிருக்கிறார். இறைவன் இரத்தினகிரி நாதர், வாட்போக்கி நாதர், இராஜலிங்கர், முடித்தழும்பர், மணிக்கொழுந்தீசர், மத்தியானச் சொக்கர் என்றெல்லாம் பல பெயர்களால் அழைத்துப் போற்றப் படுகின்றார்.

கருவறையின் தேவ கோட்டங்களில் தட்சிணாமூர்த்தி, ஆரிய தேசத்து மன்னர், துர்க்கை, அர்த்தநாரீசுவரர் ஆகிய உருவங்களைக் காணலாம். சந்நிதிக்குள் நுழையும் இடத்தில் வைரப் பெருமாள் சூடி கொண்டுள்ளார். காக்கும் சக்தி வாய்ந்த இவரை, மக்கள் வழிபட்டு நலமடைகின்றனர்.

இச்கோயிலில் தனிச்சிறப்பு உண்டு. இங்கிருந்து 8 கி.மீ. தொலைவில் காவிரி ஆறு ஓடுகிறது. நாள்தோறும் 8 கி.மீ. தூரத்திலிருந்து காவிரி ஆற்று நீரைத் தலையில் சுமந்து வந்து அபிஷேகம் செய்கின்றனர். ஆரிய தேசத்து மன்னர் இத்தலத்தில் இறைவனுக்காக நீரைக் கொண்டு வந்து தொட்டியில் நிரப்பி னார். தொட்டி நிரம்பாமல் போகவே, வாளை எடுத்து இறைவனை வெட்ட முயல, வாளைப் போக்கி மாணிக் கத்தைக் (இறைவனை) காட்ட, இறைவனுக்கு சிவத் தொண்டு செய்து பேறு பெற்றான். அவனது பரம் பரையினர் இன்றும் நீரைக் குடத்தில் எடுத்து வருகின்றனர். நாள்தோறும் குறைந்தது 12 குடங்களாவது எடுத்து வரப்படுகிறது. தீர்த்தப்பிரியர் எனப் படும் சிவபெருமானுக்கு இவ்வாறு நாள்தோறும் 8 கி.மீ. தொலைவிலிருந்து காவிரி ஆற்று நீர் எடுத்து வரப்படுவது இத்தலத்தின் சிறப்பாகும்.

இக்கோயிலில் நடைபெறும் கார்த் திகை சோமவாரம், சித்திரை மாதத்தில்

சமண தீர்த்தங்கரர் உருவம் பொறிக்கப்பட்ட பாறை 'குண்டாங்கல்லு'





இரத்தினகிரீசுவரர் - சுரும்பார் குழலி



சிவாயம் ( சிவபாத சேகரபுரம்) கோயில் கோபுரம்

முன்னர் (கி.பி. முதல் நூற்றாண்டு) சமண முனிவர்கள் இம்மலையில் வாழ்ந்து வந்த பகுதிகள் உள்ளன. 'பனைதுறைவேசன்' என்பவன் செய்து அளித்த கற்படுகைகளை இன்றும் காணலாம். தமிழ்பிராமி எழுத்துகளில் இப்பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இம்மலையின் அருகே சமண தீர்த்தங்கரர் சிற்பம் பொறிக்கப்பட்ட 'குண்டாங் கல்லு' என்ற பாறை உள்ளது. இதனால் சமண சமயமும் இங்கு சிறப்பாகத் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

அய்யர் மலை அருகே 'சிவாயம்' என்ற தலமும் உள்ளது. 'சிவபாத சேகர மங்கலம்' எனக் கல்வெட்டுகள் இவ் வூரை அழைக்கின்றன. கோபுரவாயில் கதவுகளில் இராமாயணக்கதை தொடர் சிற்பமாகச் செதுக்கப்பட்டு அமைந் துள்ளது, கண்ணுக்கு விருந்தாக அமைகிறது.

அய்யர் மலையிலிருந்து பார்த்தால் இயற்கை அழகு கண்ணைக்கவரும். காலை 10 மணி அளவில் கோயில் திறக்கப்பட்டு மாலை 6 மணி வரை தொடர்ச்சியாக இறைவனைத் தரிசிக் கலாம். உச்சிப்பொழுதில் இங்கு இறைவனைத் தரிசிப்பது மிகவும் சிறந்தது என்கின்றனர்.

### திரு ஈங்கோய் மலை:

குளித்தலை அருகே காவிரியின் வடகரையில் பாடல்பெற்ற 63ஆவது தலமாக ஈங்கோய்மலை விளங்குகிறது. இம்மலையின் அருகே ஓடும் காவிரி ஆறும், மலையைச் சுற்றியுள்ள வயல்கள், வாழைத் தோட்டங்கள் இயற்கை வனப்புடன் திகழ்ந்து மனத்துக்கு நிம்மதியை அளிக்கின்றன திரு ஈங்கோய்மலை, மரகதாசலம் என்று இத்தலம் அழைக்கப்படுகிறது. இறை வனை அகத்தியர் ஈ வடிவம் கொண்டு வழிபட்டதால் 'ஈங்கோய் மலை' எனப்பட்டது. சிவசக்தி மலை எனவும் அழைக்கின்றனர். 'பூச்சாரல் ஈங்கோய் மலை', 'எழிலார் சுனையும் பொழிலும் புடை சூழ் ஈங்கோய்மலை. என்று ஞானசம்பந்தப் பெருமான் போற்றிப் பாடியுள்ளார்.

சுவாமி, அம்மன் சந்நிதி இரண்டும் கிழக்கு நோக்கி அமைந்துள்ளன. தல விருட்சம் புளிய மரமாகும்.

கல்வெட்டுகளில் இறைவன் ஈங்கோய்மலை ஊருடையார், மரக தாசலமுடைய நாயனார் என்று அழைக் கப்படுவதைக் காண்கிறோம். பன்னிரு திருமுறையில் 11 ஆம் திருமுறையில் நக்கீரருடைய நூல்களாக பத்து நூல்கள் கூறப்பட்டுள்ளன. இதில் ஒன்று

'ஈங்கோய் மலை எழுபது'. இதை 10 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நக்கீரதேவர் எழுதினார் என ஆராய்ச்சியாளர்கள் உறுதி செய்துள்ளனர். இம்மலையின் எழிலும், சிறப்பும் அதில் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. மூன்றாம் குலோத் துங்க சோழன் காலத்திலும் இக் கோயிலில் நக்கீர தேவரின் திருமேனி எடுக்கப்பட்டு வழிபாடு செய்யப் பட்டதாக ஒரு கல்வெட்டு கூறுகிறது. மலைக்கு ஏறும் இடத்தில் கம்பத்தடி கறுப்பு என்ற இடத்தில் உள்ள சந்நிதியில் யாழ் ஏந்திய நக்கீர தேவரின் திருமேனி இன்றும் வழிபடப் பெறுகிறது.

**சோமாஸ்கந்தர் வடிவம் (மூன்று தலங்கள்)**

குளித்தலை, அய்யர் மலை, ஈங்கோய் மலை ஆகிய மூன்று தலங்களும் வழிபாட்டுச் சிறப்பு, வரலாற்றுச் சிறப்பு, இலக்கியச்சிறப்பு வாய்ந்த திருத்தலங்களாகும். மூர்த்தி - தலம் - தீர்த்தம் என்ற மூன்றினாலும் சிறப்புப் பெற்றவை. அய்யர்மலை சிவ தத்துவமாகவும், குளித்தலை கந்தர் வடிவமாகவும், ஈங்கோய் மலை சக்தி தத்துவமாகவும் மூன்றும் இணைந்து 'சோமாஸ்கந்தர்' வடிவமாக விளங்கு கின்றன.

காலை 9 மணிக்குள் குளித்தலை கடம்பர் கோயிலில் தரிசித்து விட்டு வந்தால், அய்யர் மலையில் உச்சிப் பொழுதில் வாட்போக்கி நாதரைக் கண்டு வழிபடலாம். பின்னர் ஓய்வெடுத்துக் கொண்டு 3 மணிக்குக் கீழே இறங்கி வந்து மாலை 6 மணி அளவில் ஈங்கோய் மலையைத் தரிசனம் செய்துவிடலாம்.

ஒரே நாளில் இம் மூன்று தலங் களையும் வழிபடுவோர்க்கு எல்லா நலன்களும், இறையருளும் கிடைக் கின்றன. சிறப்பு வாய்ந்த இம்மூன்று தலங்களையும் நாமும் கண்டு நலமடைவோம்.

# பிணி என்று தீரும்?



**டி.வி. சுவாமி நாதன்**

சும்மா இருந்தாய்;
சொல்லற் றமர்ந்தாய்;
அம்மா! நின் முகம்
அருள்பொழி முழுமதி

நின்றே கருணை
நிலவில் குளித்தோம்;
என்றோ மீண்டும்
எம்துயர் கேட்டு

மதுரக் குரலில்
மறுமொழி பகர்ந்து
இதயச் சுமையை
இறக்கி வைப்பாய்

என்று வியந்தோம்;
எனினும் விரைவில்
கன்றை அணைக்கும்
காராம் பசுவாய்

நேயம் ததும்பி
நிட்டை கலைந்து
தாயாய் எமக்குத்
தானெழுந்துவந்து

தெய்விக ஞானத்
தெளிவின் தேன்மழை
பெய்தெமை வருத்தும்
பிணிகள் போக்குவை;

வித்தகம் நிகழ்த்தும்
விழிகளின் பார்வையில்
சித்தக் குளத்தில்
சிரித்திடும் தாமரை;

குரு வடிவாகக்
குவலயந் தன்னில்
திருவடி வைத்த
தேவாதி தேவா!

உன் முக தரிசனம்
ஒன்றே எமக்கு
ஜன்ம சாபல்யம்;
ஜனனம் மரணம்

சுழலில் மீளச்
சுரோத்தம! நின் திருக்
கழலிணை பற்றிக்
கரைசேர்ந்திடுவோம்

என்ற நம்பிக்கை
எம்முள் நிறைந்தது;
இன்றோ அச்சம்
எம்மை விழுங்கிடும்.

"மாதவச் செல்வர்
மண்மிசை எடுத்த
பூத உடல்தனைப்
போந்த பின்னரும்

அருட் பேரொளியின்
அமுதக் கலையாய்
இருப்பர் நிரந்தரம்"
என்று மொழிந்துளாய்;
வேதப் பொருள் நீ
விளம்பிய தெல்லாம்;
ஆதலால் இனிநாம்
ஆறுதல் அடைவோம்

எனயாம் முயன்றும்
இம்மியும் பயனிலை;
தினமும் எம்மைத்
தின்னும் வேதனை.

தென்புலத் தரசனைத்
தூர விரட்டி
முன்பு மார்க்கண்டனை
முதுமை உறாது



இன்றுபோல் என்றும்
'இருத்தி' என்ன
அன்று வரம் தந்த
அரன் நீ அலவோ!

நலிவுறும் மன்பதை
நற்கதி எய்திட
கலியுக முற்றிலும்
காணும் தெய்வமாய்

இருந்தெமைக் காக்க
ஏனோ மறுத்தாய்?
பெருந்துயர் விளைக்கும்
பிணி என்று தீரும்?

# துடைப்பம்

## ராஜம் கிருஷ்ணன்

மல்லிகா வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாகத் தன் கைப்பை, 'டிபன்' டப்பி ஆகியவற்றை மூலையில் எறிவது போல் போட்டுவிட்டு ஒய்ந்து உட்காருகிறாள்.

காலை ஆறரை மணிக்குச் சீவிச் சிங்காரித்துப் பளிச்சென்று ஒரு பாவாடை சீலை உடுத்திப் புறப்பட்டுச் சென்ற பெண். இப்போது மணி ஆறடித்தாகிவிட்டது. கையில் அந்த டப்பியில் ஒரு புளிச் சோறு தான் வள்ளி கட்டிக் கொடுத்திருந்தாள். இரண்டு நேரம் டீயும், இரண்டு 'புரை'யும் கம்பெனி செலவில் கொடுக்கிறார்களாம். அது போதாதுதான்.

''ஏங்கண்ணு? எப்படியோ கீற? இன்னிக்கு எதானும் பிரச்னையா!''

''சீ! கஸ்மாலம்! அந்த சூப்ரைசர், காபி குடிக்கப் போலாம் வாரியா பேபின்னு கண்ணடிச்சிக் கையப் புடிக்கிறான்! கஸ்மாலம். கைய்ய ஒதறித் தள்ளிட்டு ஓடியாந்தேன்! அந்த எக்ஸ்பட்டுக் கம்பெனி பக்கம் இனி தலவச்சிக் கூடப் படுக்கமாட்டேன்... ஆ..மா!''

வள்ளியம்மை துணுக்குறுகிறாள். சில விநாடிகள் பேச்சே எழவில்லை.

''ஏம்மா...! இன்னா நடந்திச்சி? இவ்வளவு கோபமாகீற!''

''சீ! எக்ஸ்பட்டுக் கம்பெனியாம்! தண்ணியில்லாத கக்குசு போல. அதுல நுழையிறதே தப்பு. நாத்தம். நல்ல வேளை, காலத் தெரியாம வச்சாலும், ஒண்ணும் பட்டுக்காம ஓடியாந்துட்டேன்.''

வெறுப்புடன் மல்லி வார்த்தைகளை உமிழும்போது, வள்ளியம்மை நெஞ்சுக்குள் கட்டிய கோட்டைகள் நொறுங்கி விழுகின்றன.

தலைச்சன் மகனைப் பெற்றதற்காகப் பெருமைப்பட்டாள். அவன் படித்துப் பெரிய ஆபீசராகி, இந்த ஒட்டைக்குச்சு வாழ்வைத் தூக்கிப் பங்களாவில் வைப்பான் என்று தங்கக் கனவுகளுக்கு அடித்தளமிட்டு, அவனைப் பள்ளிக்கூடத்திற்கனுப்பினாள். 'டூசன்' வைத்தாள். சீமான் வீட்டுப் பிள்ளைகளைப் போல் பேணினாள். ஆனால் அவன் நாலாவதிலேயே 'டிமிக்கி' கொடுத்துவிட்டு, சைக்கிள் கடையில் 'பங்க்ச்சர்' ஒட்டவும் காற்றடைக்கவும் போனான். சுயமாகத் துட்டு சம்பாதிக்கும் ஆசை. சிறகு முளைத்த பிறகு, வீட்டில் ஒட்டுமா? நாலில், இரண்டில் வந்து, ஏதோ சில்லறை கொடுத்தான்; அதிகாரமாகச் சாப்பிட்டான். சைக்கிள், மெல்ல மெல்ல 'லாரி'யாக உயர்ந்துவிட்டது. அப்பனுக்குப்பிள்ளை நான்தான் என்று எப்போதோ தாம் தூமென்று வருகிறான். அன்று கொடுக்கும் காசுக்கு அதட்டிக் கேட்டுச் சாப்பிடுகிறான்.

அப்பனும் இப்படித்தானே? உடல் வணங்கி நாலு காசு சம்பாதித்து, இரண்டு 'பொட்டைப்' பிள்ளைகளைப் பெற்றிருக்கும் உணர்வுடன் என்று நடக்கிறான்? அன்றைய உடம்புத் திமிர் ஒடுங்கிவிட்டது. என்றேனும் கிராக்கி கிடைத்தால் 'கொட்டாய்' கட்டப் போவான். பத்து, இருபது வள்ளி கையில் வந்துவிழும். இல்லையேல் அங்கங்கு குந்தி இருந்து பீடி குடிப்பான். வாய்ச்சவடால் எல்லாம் வள்ளியிடம் தான். வேறெங்கும் செல்லுபடியாகாது. அவன் என்றேனும் உடம்பு வணங்கி ஏதோ வேலை செய்து சம்பாதிக்கிறான் என்றால், அது சாராயத் தேவைக்குத் தான். சம்பாத்தியத்தில் முன்னுரிமை பெறும் தேவை அது.

இந்தப் பாரத நாட்டு மரபு, வள்ளியம்மையின் ரத்தத்தில் ஊறி இருக்கிறது. அவள் கொண்டுவரவில்லைதான். எனினும் அவனைப் பேணிப் பராமரித்து, கௌரவம் கெடாமல் வாழ்கிறாள்.

'ஆம்புளப்புள்ள' வெளியில் சிறகு முளைத்துப் போனான். ஆனால் பொட்டைகளை அப்படி விடமுடியுமா? மல்லிக்கு ஆறுவயசில் கையில் துடைப்பத்தைக் கொடுத்து வேலை செய்யப் பழக்கிவிட்டாள். அப்போதே குழந்தை பார்த்துக் கொள்ளும் குட்டி ஆயாவாக இருந்து, தன் சோற்றுக்கும் துணிக்கும் வழிதேடிக் கொண்டாள். பாத்திரம் துலக்கி, துணிதுவைத்து, பெருக்கி வாரி, மிகவும் சுறுசுறுப்பாக மாசம் இரண்டு நூறுக்குமேல் சம்பாதிக்கத் தொடங்கிய போது, மல்லிகா முழுப் பெண்ணாகி விட்டாள். அடுத்தவள் கன்னி என்கிற கன்னிம்மா. குல தெய்வத்தின் பெயரைச் சூட்டிவிட்டு, தனக்கு இனி பிள்ளைப் பேறு வேண்டாம் என்று வள்ளி ஆபரேஷன் செய்து கொண்டாள். கன்னிக்குப் பன்னிரண்டு முடிந்து விட்டது. ஜோசபின் டீச்சர் வீட்டில் பிள்ளை பார்த்துக் கொண்டும் மேல் வேலையைச் செய்து கொண்டும் வீட்டோடு இருக்கிறாள். மாசச் சம்பளம் நூறுரூபாயை அவர்கள் அப்படியே வங்கியில் கட்டி விடுகிறார்கள்.

இப்போதுதான் வள்ளிக்கு, ஒரு பெரிய கனவு மலர்ந்து வந்தது.

பெரிய சாலைக்கப்பால் புதிதாக முளைத்த ''எக்ஸ்போர்ட்'' கம்பெனிக்கு படித்தது, படியாதது எல்லாம் படையாய்த் திரண்டு வேலைக்குப் போயின. அழுக்கு ஒட்டாமல் குந்தியிருந்து வேலையாம். மாசம் விள்ளாமல் விழுங்காமல் நானூறு நானூற்றைம்பது கிடைத்தது. குடிசைகளைக் கடந்து பெரிய சாலையையும் தாண்டி அப்பால் சிறிது தொலைவு நடக்க வேண்டும். கம்பெனி பஸ் அங்கே வந்து பெண்களை ஏற்றிச் சென்றது. ஆறரை மணிக்கு அங்கே பார்த்தால், தலைவாரல் என்ன? 'வண்ணவண்ணக்' கிளிப் ஒய்யாரங்கள் என்ன? சேலை, ஜாக்கெட்கள், கைப்பைகள் என்ன என்று, ஓர் இளசுப் பட்டாளமே அந்த வேலைக்குப் போனதைப் பார்த்து, வள்ளி தன் மகளுக்கும் இந்த வாய்ப்பு வேண்டும் என்று யார் யாரையோ அண்டி, கெஞ்சிச் சேர்த்து விட்டாள். ஒரு நாளைக்குப் பத்து ரூபாய் சம்பளம். ஆனால் ஓ.டி என்று அதிகப்படி நேரம் வேலை செய்ததில், முதல் மாசமே மல்லிகா ஐந்து நூறுகளைக் காண முடிந்தது.

வள்ளி நூறு ரூபாயை, திருப்பதி சாமிக்கு எடுத்து வைத்தாள். அடையாமல் இருந்த மளிகைக்கடனில் ரூபாய் இருநூற்றை அடைத்து நிமிர்ந்தாள். குடக்கூலி பாக்கியையும் தீர்த்தாள். இனி ஒவ்வொரு மாசமும் தங்கச் சீட்டுக்கு முந்நூறும், துணிக்கடை சீட்டுக்கு ஒரு நூறும் எடுத்து வைத்து விட வேண்டும். காதுக்கு ஒரு தோடு சிமிக்கி - நல்லதாக ஒரு சரிகைப் பட்டுச்சேலை. இரண்டும்

ஆசைக் கனவுகளாக வேர்பிடித்து விட்டன.

முதல் சம்பளம் பெற்று மூன்று நாள்கள் ஆகவில்லை. இந்தப் பெண் இப்படிக் குண்டைத் தூக்கிப் போடுகிறாளே!

"ஏம்மா! நீ ஒரேயடியா வாணான்னா வந்துட்டே?"

இரண்டு பெட்டைகளைக் கரை யேற்ற வேண்டும்... கன்னி இப்போதோ அப்போதோ என்றிருக்கிறாள். அது 'உட்கார்ந்து'விட்டால் டீச்சர் வீட்டில் வைத்துக் கொள்வாளோ?

"அம்மா... அது நமக்கு வாணாம். அது தோதுப்படாத இடம்.."

"இன்னாம்மா கண்ணு, உனக்கு மட்டும் தோதுப்படாமப் போச்சு! ஊர் முச்சூடும் எக்ஸ்பர்ட் கம்பெனில போயிச் சம்பாதிக்கலயா? அல்லாமா நாத்தம்னு கால வச்சிருக்காங்க! கண்ணகிப் பொண்ணு, தேவநாயகி, அம்சவள்ளி, பிரேமா, ருக்குமணி அல்லாந்தானே போறாங்க! ருக்குமணி ஒரே வருசத்துல நாலு சவரன் சங்கிலி வாங்கிட்டா. தேவநாயகி சீலைச்சீட்டுக் கட்டினா சீட்டு வுழுந்து, ரெண்டாயிர ரூவாச் சீலை வாங்கிட்டா. உனக்கு மட்டும் இன்னாம்மா, நாத்தம் கண்டுட்ட? அட ஆம்புளக பகடியாப் பேசவாறுவ. ஆனா ஒடனே ஒட்டிக்கிச் சின்னு உதறிட்டா எப்பிடிம்மா!"

மல்லி எழுந்து சென்று வெளியே காறித் துப்புகிறாள்.

"இதபாரு! நீ செய்யிற வூட்டுவேல நான் செய்றேன். நீ கம்பெனிக்குப் போ. பிளாஸ்டிக் பை தைக்கிறாங்க. தையல் வுழுந்திருக்குதான்னு சரிபார்த்து அடுக்கி வைக்கணும். சுளுவுதான் போ!"

அவள் எகத்தாளமாகப் பேசுவ தாகவே வள்ளிக்குப் படுகிறது.

இவள் கையில் புழுப் போல் நெளிந்த பெண்...இதுவா இன்று உயர்பீடத்தில் ஏறி உட்கார்ந்து நீதி பேசுகிறது? இத்தனை அறிவு இதற்கு எப்படி வந்தது?

"கண்ணகிக்கு அண்ணன் அங்கே வேலை செய்யிது. அது பூனியல்ல முக்கியமான ஆளு. அவ எம்பக்கம் வேலை செய்யல. அஞ்சு மணி ஆவுமுன்ன ஏ ஆளு, 'ஓ' ஆளுன்னு சாடை பேசறதும் சிரிக்கிறதும் சோடி சேருறதும்...தூத்தேறி! காசுன்னா கண்ட எடத்திலும் காலு வச்சிடறதா? நான் சட்டி பானை கழுவுவேன், கொஞ்சியா கஞ்சி குடிப்பேன்!"

வள்ளி வாயடைத்துப் போகிறாள்.

அப்போதுதான் பீடிக்காரலும் இரு மலும் கொடிகாட்ட புருஷன் வருவது புலனாகிறது.

வள்ளியின் ஆற்றாமை அவன்மீது வெடிக்கிறது.

"ஒரு பத்து ரூவாய்க் காசுக்கு வக்கில்லாத ஆம்புள எனக்குன்னு வந்துவாச்ச! எங்கனாலும் மூட்ட தூக்கினாலும் குடும்பத்துக்கு மானம் மருவாதியோடு பொளைக்க ஒரு வழி செய்யணும்னு இருக்குதா உனக்கு? ரெண்டு பொட்டப்புள்ளகள வச்சிட்டு அன்னாடம் நான் நெருப்புல வேகு றேன்...!"

"த்தா! இன்னா வந்திச்சி இப்ப? எப்ப வூடு வந்தாலும் இதே பாட்டுத்தா. முந்தாநா தான உங்கிட்ட அம்பது ரூவா குடுத்தேன்?"

"ஆமா! ஒருமாசத்துல அம்பது ரூவா கொண்டாந்து குடுத்திட்ட! ரேசன் அரிசி கிருஷ்ணாயில், எண்ணெய், புளி அல்லாம் என்ன வெலவிக்கிது? வேல செய்யிற வூடுங்கள்ள ஒரு சோறு தண்ணி குடுக்கக் கணக்குப் பாக்கி றாங்க. மழவந்தா ஒழுவுது, வெளியே போயி தண்ணி அடிச்சிக் கொண்டா ரணும், குடக்கூலி கரன்டு சார்ச்சின்னு ரெண்டு நூறு ஆவுது. புறம்போக்குல எங்கனாலும் ஒரு மூணுசென்டு புடிச்சிக்க உனுக்குத் துப்பிருக்கா?"

"இந்தா, சும்மா கத்திக்கிட்டே போவாத. எல்லாம் எனக்கும் தெரியும்"

"இன்னாத்தத் தெரிஞ்சுகிழிச்ச! போயி சாராயத்த ஊத்திட்டு வந்து, பெனாத்துவ. எக்ஸ்பட்டு கம்பெனி வேலய வுட்டுப் போட்டு வந்திடிச்சி பொண்ணு. அங்க யாரும் நடப்பே சரியில்லங்குது. கட்டிக் குடுக்க வேண்டிய புள்ள. இந்தமட்டும் முன் யோசனையா வந்து சரிதான்னாலும், இப்ப தொறந்த வழி மூடியேல்ல போச்சி?... ரெண்டு பொட்டகளக் கட்டிக்குடுக்கணுமே!..."

அந்தப் புறம்போக்கு பயல் வீடுவந்து ஒரு மாசமாகப் போகிறது. அவனுக்கு எவ்வளவு செலவு செய்தாள், படித்துக் கிழிக்கப் போகிறானென்று! ஆம்புளப் புள்ள என்று கூடவே பால் கொடுத்து சீராட்டி, ஆயிரமும் அஞ்சு நூறும் கடன்பட்டுக்கட்டி, சட்டை நிஜார் பூடிசு வாங்கி இங்கிலீசு பள்ளிக் கூடத்தில் படிக்க வைத்தாள்..

ஆனால் இந்தக் குழந்தைகளுக்கு ஒரு நல்ல துணி கூட எடுத்துக் கொடுக்கவில்லை.

படிக்காத போனாலும் கௌரவமாக ஒரு வேலை செய்யும்படி... நர்மதா டாக்டர் வீட்டில்.. கிளினிக்கில் முன்னதாகப் போய் தண்ணீர் கொண்டு வைத்து, சுத்தம் செய்து கட்டுக்கட்ட, பஞ்சு துணி சீராக்கி உதவி செய்ய ஒரு பொண்ணுதான் இருந்தா. படிக்கல. வெளியில் நர்சம்மான்னு சொல்லிக்கும். நூறோ ஏதோ தான் சம்பளம்... அப்படின் னாலும் பரவாயில்ல... என்றெல்லாம் மனசு கணக்குப் போடுகிறது.

"சும்மா குந்திக் கெடக்கிற. பாத்திரக் கடை துணிக்கடையில கூட பொம்புள ஆளுக தா வேலை செய்யிதுங்க. எங்க னாலும் கவுரதியா ஒரிடம் பாத்துப் புடியேன். நல்ல கெட்டிக்காரப் பொண்ணுதா நம்ம மல்லி. முன்ன கூட டாக்டரம்மா கேட்டாங்க. அறுபது ரூபாதாந் தருவேன்னா. வாணான்னு வுட்டேன்.."

அவள் புருஷன் மெல்ல நழுவுகிறான்.

வள்ளி முணுமுணுத்துக் கொண்டு கிரசின் ஸ்டவ்வைப் பற்றவைத்து சோற்றைப் பொங்குகிறாள். குழம்பு காய்ச்ச மேல் சாமானில்லை. பூண்டை யும் மிளகையும் சீரகத்தையும் தட்டிப் போட்டு, ரசம் வைக்கிறாள்.

கொசு படை படையாக வந்து அப்புகிறது. பக்கத்தில் எருமை மாடுகள் கசம் பண்ணியிருக்கும் இடத்தி லிருந்தும் சாக்கடைத் தேங்கலி லிருந்தும் புதிது புதிதாக மனித ரத்தம் நாடி வருகின்றன.

சுடுசோற்றை மகளுக்கு வட்டித்து வள்ளி வாஞ்சையுடன் பார்க்கிறாள்.

கொசுக்களுக்கு ஈடு கொடுக்க, கிரசின் புட்டியைக் கவிழ்த்துப் பார்க் கிறாள் மல்லி. சொட்டுக்கூட இல்லை.

மேல தடவிக்க, பொட்டுக்கூட இல்ல... அஞ்சு ரூவான்னு நாளக்கி மூணு லிட்டர் போடுறானாம். அநியாயம் பண்ணுறாங்க. கிருஷ்ணாயில் வந்திருக் குன்னு ஒடினா, தீர்ந்து போச்சுங் கறானுவ. பொறவு இப்படி அடாவடி வெலக்கிப் போடுறானுவ! நாளக்கி உனக்கு தான் வேலை இல்லையே! துட்டு எங்கனாலும் பெரட்டித்தரேன். நின்னு வாங்கிட்டுவா தாயி!" என்று கூறுகிறாள் தாய்.

விளக்கை அணைத்துவிட்டார்கள்.

வள்ளிக்குத் தூக்கம் பிடிக்கவில்லை.

புருஷன்... எங்கே தொலைந்திருக் கிறானோ!... இன்னா பொயப்பு இது!...

ஊரோசை அடங்கிவிட்ட நேரத்தில் அவன் விடுவிடென்று வருகிறான்.

குடிக்கத்தான் கையில் காசில்லையே? எவனும் ஓசியில் வாங்கிக் கொடுக்க வில்லை போலும்!

''வள்ளி, ஏகாம்பரம் இல்ல? எலக்ட்ரி வேல செஞ்சிட்டிருக்கறப்ப கரன்ட் கையிலடிச்சி வலிப்பு வந்தாப்புல கெடந்தானே?''

வள்ளிக்கு எந்தச் செய்தியும் கேட்க மனமில்லை.

''சோத்தத் தின்னிட்டுக்கெட. இப்ப எதுக்கு ஊர்க்கதெயெல்லாம்!''

''அதில்ல வள்ளி, அவன் தங்கச்சி, ஒரு செவத்த பொண்ணு, கோயிலாண்ட ஒரு கிறிஸ்தவனக் கட்டி அவனுஞ் செத்து ரெண்டு புள்ளங்களோட சீவிச்சிட்டிருந்தது தெரியுமில்லே!''

''ஆமா. இஸ்கூல் வாசல்ல தேங்கா மாங்கா சுண்டல் விப்பா. அவளுக்கு இப்ப என்ன!''

''அது இப்ப பல்லாவரத்துக் கந்தாண்ட எலக்ட்ரி வேல தையல் வேல கத்துக் குடுக்கிற ஓர் ஓம்ல சேந்திருக்கு தாம். அவங்களே டிரெயினிங் குடுத்து வேலையும் தாராங்களாம். மேஸ்திரி சொன்னாரு. கவுர்மென்டில ஏழப் பொம்புளப் புள்ளகளுக்குன்னு வச்சிருக் காங்களாம். நம்ம மல்லிய அதுல சேத்துடலாம்...''

மல்லி கேட்டுக் கொண்டிருக்கிறாள் போலும்!

விருட்டென்று எழுந்து உட்காரு கிறாள்.

''தையல் எலக்ட்ரானிக்ஸ் இதெல் லாம் கத்துத்தரும் இஸ்கூல்ல சேர, குறைஞ்ச பட்சம் பத்துப் படிச்சிருக் கணும். படிக்காதவர்களை எடுக்க மாட்டாங்க. நான் எட்டுகூடப் படிக்கல்ல.. அஞ்சு கூடப் படிக்கல. மல்லின்னு கையெழுத்து மட்டும்தானே கத்திட்டி ருக்கிறேன்?''

''இல்ல கண்ணு. இது புதுசா வச்சிருக் காங்க. ஏகாம்பரம் தங்கச்சிக்கு கையெழுத்துப் போடக் கூடத் தெரியா தாம். மேஸ்திரி சொன்னாரு..''

''அதுசரி. எங்க ஏதுன்னு விவரமா விசாரிச்சிட்டு வந்தா தானே போயிப் பாக்கலாம்!''

''பின்ன! கோயிலாண்ட போயி பாதிரியார் கிட்ட குடகுடான்னு குடாஞ்சி, அட்ரசு வாங்கியாந் திட்டேன்!''

என்று பெருமிதத்துடன் தலைத் துணிக்குள் மடித்துச் செருகியிருக்கும் விலாசத்தைக் காட்டுகிறான்.

வள்ளிக்கு இரவெல்லாம் உறக்கம் பிடிக்கவில்லை. தன்புருசனும் உருப்படி யாக அக்கறையாக ஒரு முயற்சியைச் செய்திருக்கிறான் என்ற கிளர்ச்சியில், மகள் அப்போதே ஒரு கவுரவமான பெரிய வேலையில் அமர்ந்துவிட்டதாக மிதக்கிறாள். நிகுநிகுவென்று கன்னங் களில் சதைபிடிக்க, காதுகளில் சிமிக்கி, தோடு, ஒற்றைக்கல் மூக்குத்தி, இரண்டு வரிச்சங்கிலி, கைகளில் வளையல்கள்,



வாட்ச் எல்லாம் அணிந்து... மயில் கழுத்து வண்ணத்தில் உடல் நிறைய சரிகை புட்டா பெரிய கரை போட்ட சேலை... முழங்கைக்குக் கீழ் இறங்கிய இசைவான பட்டு ஜாக்கெட்... அவளுக்கு ஏற்ற... சினிமா கதாநாயகன் போல் ஒரு படித்த மாப்பிள்ளை... ஒழுக்கமானவன், குடிக்கமாட்டான், அடிக்க மாட்டான். ரோஜா மாலையுடன் இருவரும் அவள் கால்களில் விழுந்து பாதம் தொட்டுக் கும்பிடுகிறார்கள்...

உடலும் மனமும் இந்தக் கற்பனையில் சிலிர்க்கின்றன.

மறுநாள் அதிகாலையில் எழுந்து சென்று வேலை செய்யும் வீடுகளில் கெஞ்சி விடுப்புப் பெறுகிறாள் வள்ளி.

முகவரியைக் கையில் வைத்துக் கொண்டு பல்லாவரம் செல்லும் பஸ்ஸைப் பிடிக்கிறார்கள்.

யார் யாரிடமோ கைச்சீட்டைக் காட்டி அந்தத் தெருவையும் ஒதுக்குப்புறமாக பெரிய சுற்றுக்குள் இருக்கும் அந்தப் பழைய கட்டடத்தையும் கண்டு பிடிக்கிறார்கள். வாயிலில் ஏதோ பெயர்ப்பலகை பதிக்கப்பட்டிருக்கிறது. இவர்களால் படிக்க முடியாது. வாசலில் பெரிய மீசையுடன் ஒரு காவல்காரன் நிற்கிறான். அவனுடைய காக்கி உடுப்புப் பட்டையில் தோல் துப்பாக்கிப் பை பொருத்தப்பட்டிருக்கிறது.

வள்ளி மெல்ல அவன் அருகில் சென்று பணிவாகக் கேட்கிறாள்.

"ஐயா, நாங்க உள்ளாற போலாமா? சூப்பரின்ட் அம்மாளப் பார்க்கனும். இந்தப் புள்ளய உள்ளாற சேக்கனும்..."

அவன் விறைப்பாக அவளைப் பாராமலே பதில் கூறுகிறான்.

"சூப்பரின்ட் அம்மா இன்னும் வரலை"

எப்ப வருவாங்க என்று கேட்கலாமா? அவனைப் பார்க்கவே பயமாக இருக்கிறது.

அம்மாள் இதுவரை வந்திராததும் ஒருவகையில் நல்லது தான். இங்கே வெளியிலேயே பார்த்துவிடலாம்...

நிழலே எங்கும் இல்லை. சித்திரை வெயில் கொளுத்துகிறது.

சற்று எட்டி, பானைகளில் தண்ணீரும் கலர் கலராகக் குப்பிகளில் சர்க்கரைக் கரைசலும் வைத்துக் கொண்டு பேருக்கு இரண்டு காய்ந்த எலுமிச்சை மூடிகளை கவிழ்த்து வைத்த டம்ளர்களின் மீது காட்டியவாறு ஒருவன் சர்பத் வியாபாரம் செய்கிறான்...

வெயிலுக்குச் சில்லென்று ஒரு சர்பத் வாங்கிக் குடிக்கலாம்...

முருகா... வந்த வேலை நல்லபடியாக முடியட்டும். போகும்போது மனம் குளிர நெஞ்சு குளிர வாங்கிக் குடிக்கலாம்.

.....பாக்கு வண்ணத்தில் வண்டு ஒன்று உருண்டு வருவது போல் வண்டி வருவது தெரியாமல் வந்து வளைவுக்குள் நுழைகிறது. காவலன் தடுப்பதைப் பொருட்படுத்தாமல், வள்ளி மல்லிகாவுடன் உள்ளே நுழைந்து விடுகிறாள்.

காரைத்தானே ஒட்டி வந்த-சற்றே பருமனாகத் தலை நரைத்த–அந்த அம்மாள் ஓரமாக வண்டியை நிறுத்தி விட்டு இறங்குகிறாள்.

வள்ளி அருகில் சென்று கை கூப்பி, வணக்கம்மா!" என்று பணிகிறாள்.

"யாரம்மா நீங்க?"

குரல் கனிவாக நெஞ்சில் பால் வார்க்கிறது.

"இது எம்புள்ள மல்லிகாங்க. அத்த இங்க சேத்துவுடனுங்க. அதுக்கு வயசு பதினஞ்சாவுது..." என்று கோரிக்கையை வைக்கிறாள் வள்ளி.

அந்த அம்மா திடுக்கிட்டாற் போல் பார்க்கிறாள்.

"உம் மகளா!... உனக்குப் புருஷன் இருக்கிறானா!"

"இருக்காரம்மா, வெவரங்கெட்ட ஆளும்மா. தொழில் ஒன்னும் கிடையாது, குடிச்சிட்டுக் கிடப்பாரு. மூத்த பயனும் வூட்டுக்கு ஒதவாத போயிட்டான். ரெண்டு பொட்டபுள்ள. படிக்க வைக்கவும் முடியல. வூட்டு வேலதா செய்திட்டிருந்திச்சி. நீங்க அந்த தேவானப் பொண்ண ரெண்டு புள்ளங்களோட இங்க சேத்துட்டிங்கன்னு, கிறிஸ்தவப் பொம்புள சொல்லிச்சி. அவங்கதா இந்த விலாசம் சொன்னாங்க..."

"ஏம்மா, இவ்ளோ சின்னப் பொண்ணு... டாக்டர் யாரு பார்த்தாங்க? உன்ன! உம்புருஷனைப் பார்த்தாங்களா. எச்.ஐ.வி. இருக்குன்னு சர்ட்டிபிகேட் ஆரு குடுத்தாங்க!"

வள்ளிக்கு ஒன்றும் புரியவில்லை.

"சர்ட்டிபிகேட் வேணும்னு தெரியாதுங்க. வேணுன்னா எப்படியாச்சும் வாங்கி வாரேங்க. நாங்க ஏழைங்க தாயே! ஒரு வழி காட்டுங்கம்மா.. அது சீக்கிரம் புடிச்சிக்கும். தையல் வேலை, எலக்ட்ரி சாமான் வேலை எதுண்ணாலும் சொல்லிக் குடுத்தா புடிச்சிப்பா. உங்களுக்குப் புண்ணியமாப் போவுது தாயே!"

அவள் எதிர்பாராமலிருக்கையில் வள்ளி தடாலென்று அவள் கால்களில் விழுகிறாள்.

அந்த அம்மாள் திடுக்கிட்டுப் பின் நகர்ந்தவளாக,

"ஏம்மா! ஏங்கால்ல ஏன் வுழுற? எந்திரி! இந்த அறிவு மின்ன இருந்திருக்கனும்... இவ்ளோ சின்னப் பொண்ணு, இதுக்கு எப்படி வந்திச்சி?.... எவ்வளவு பிரசாரம் பண்ணுறாங்க! முறையில்லாம, ஆம்புள பொம்புள சகவாசம் கலக்கிறதால இந்தக் கொடிய நோய் வருதுன்னு! இந்த நோய் பாதிச்ச பொம்புளங்க வெளியே இருந்தா மேல மேல ஆம்புள சகவாசம் வச்சி, பரவிப் போயிரும்னு தான் ஓர் இருபது பொம்புளங்க - நோய் பாதிச்சவங்கள ஒதுங்கி இருந்து, பிழைக்க இப்படித் தொழில் பழக்குறோம்! இதுக்குமேல இடமுமில்ல. பணமுமில்ல. உங்களப் போல பொறுப்பில்லாதபடி பொண்ணுங்கள காசுக்குன்னு வுட்டு, மருந்தே இல்லாத உயிர்க்கொல்லி நோயைப் பரப்புறீங்க!"

"ரிப்போர்ட் இருந்தா கொண்டா! எந்த டாக்டர் யார் ஆஸ்பத்திரின்னு சொல்லு... வா!"

அவள் படியேறுகிறாள்.

வள்ளிக்குத் தன் பிடரியில் யாரோ குண்டாந்தடியால் ஓங்கியடித்தாற் போலிருக்கிறது.

தன் மகளைக் கையில் பற்றிக் கொண்டு போய் துரத்தினாற் போன்று அந்தக் கட்டடத்தை விட்டு வெளியே வருகிறாள்.

அந்த அம்மாள் மேலே திரும்பி ஒரு கணம் வெறித்துப் பார்த்தபடி "இந்தாம்மா ...ம்மா!" என்று கூப்பிடுவதையும் பொருட்படுத்தாமல் ஒட்டமாக ஓடி வருகிறாள். வெயில், குளிர் பான வரிசைகள் எதுவும் நினைவில் இல்லை.

அன்றாடம் பெருக்கும் போதும் துணிதுவைக்கும் போதும், வானொலியிலும் தொலைக்காட்சியிலும் கேட்கும் குரல் அவள் மூளையை வளைத்துப் பிடிக்கிறது "இது மருந்தே இல்லாத உயிர்க் கொல்லி.. உடலுறவின் மூலமாகவே பரவும் பயங்கர நோய் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கட்டுப்பாட்டை மீறுபவர்களுக்கு எச்.ஐ.வி. தொற்றி எய்ட்ஸ்..."

பஸ் போகும் சாலையில் வந்து நிற்கிறாள். மூச்சுத் திணறுகிறது.

"அட்ரஸா வாங்கிவந்தாரு! கசுமாலம்!...." என்று காறித் துப்பினாள்.

"கண்ணு, நீ சொன்னாப்பல எங்க காலு வச்சாலும் நாத்தமாகீது! அழுவாத! நாம தொடப்பம் புட்ச்சே கவுரதியா வாழலாம்."

# இதயத்தில் இமயம்

பால. இரமணி

கண்களில் பேரொளி...
காலம் காலமாய்
நம்மில் வருவது!

கனவுகளில் நிஜஒளி...
காலம் கடந்தாவது
நம்மிடம் வருவது!

இப்படி...
நினைவுகள் மட்டும்
நடப்பதில் நினைப்பதில்
மானுடத்தை வந்து
மயக்குவது ஏனோ?

இன்றும் இருப்போம்...
நாளையும் இருப்போம்...
இந்தத் தத்துவம்
எத்துணை நாள்கள்?

வாழ்க்கையில் சுகமும்
வாழ்க்கையில் சுகமும்
மெல்லிய இழையில்
வேறுபடுவது...

இந்த வேறுபடும்
இழைக்குள்ளே
சிக்கித் தவிக்கிற
சிலந்திகள் சிலர்...

நாம்
சிலந்திகளில்லை...
சின்னச் சின்ன
எதிர்பார்ப்புகளில்
இமயத்தைக்
காண்போம்!

இமயம் எங்கேயோ
தூரத்தில் இல்லை...
நம்மை இயக்கும்
இதயத் துடிப்பின்
ஓரத்தில் உண்டு!

# கைக்கிளை

மஹி

ஒற்றைக் குரல் கொடுக்கும்
ஓசைக் குயில் சோகம்
சற்றைக் கொரு தடவை
சலனப் படுத்திடுது!
கற்றைக் குழல் முகிலின்
காதலினால் ஏங்குகிற
மற்றைய மனமயில்கள்
மயங்கித் தயங்கிடுது!

எங்கோ குரல் கொடுக்கும்
ஏக்கக் குயில் சத்தம்
சங் கேதக் காதல் மொழி
சாற்றிடுது காற்றிலதை
நங்காதில் கேட்டவுடன்
நலம்யாவும் ஒலியாகித்
தங்கிடுது நம்மனத்துள்
தவித்திடவே வைக்கிறது!

குரலுக்கு எதிர்க் குரலாய்
குக்கூக்கூ என்னும் ஒலி
முரலுவதும் அதைக் கேட்டே
முண்டெழுந்த ஆங்காரக்
குரலுடனே குயில் கூவும்
எதிர்க்குரலும் ஒடுங்கிவிட
குரலினிலே ஒரு சோகம்
கைக்கிளையின் பரிதாபம்.



போட்டோ: யோகா

"சூரியனே அஸ்தமிக்காத மாபெரும் சாம்ராஜ்யம் பிரிட்டிஷ் ராஜ்யமே!" என திக்கெட்டும் புகழ் பரப்பி, இந்தியாவி லிருந்து ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள இங்கிலாந்திலிருந்து, "முடியாட்சி" செய்தது பிரட்டிஷ் அரசு. நம் பாரதமோ "பிரிட்டிஷ் முடியாட்சி யின் கீழ் இந்தியா அடிமை நாடு" என்ற அவப்பெயரோடு இருந்து வந்தது. "மிலேச்ச ஆங்கிலேயருக்கு நம் பாரதம் அடிமையா? இது கூடவே கூடாது!" என நம் முன்னோரின் நெஞ்சங்களில் சுதந்தர தாகமும் வாட்டியது. அன்றே அவர்கள் ஆங்கிலேயர்களை நம் நாட்டைவிட்டே துரத்தியடித்து, நாடு விடுதலை அடைய அவர்கள் ஆட்சி யாளர்களை எதிர்த்து, பல போராட்டங் களை நடத்திய பின்பு, "வீர சொர்க்கம்" புகுந்தனர். அன்று அவர்கள் நடத்திய போராட்டங்களில் "நீல்சிலை" போராட்டம் என்பது நம் தமிழகத்தே நிகழ்ந்ததாகும். அதன் விவரங்களை இங்கே காண்போம்:

## 1857 இல் "முதல் இந்தியச் சுதந்தரப் போர்!"

1806இல் தென்னகத்தே வேலூரில் நடந்த "வேலூர் சிப்பாய் புரட்சி"க்குப் பின், சுமார் 50 ஆண்டுகளாக ஆங்கிலேய ரின் கொடுமைகள் நம் இந்தியரைப் பெரிதும் வருத்தின. வடக்கே இராணு வத்தில் பணியாற்றிய இந்திய சிப்பாய் களுக்கு அளிக்கப்பட்ட தோட்டாக்களில் மிருகக் கொழுப்புகளைத் தடவித் தந்தனர். தவிர, கொழுப்பு அடைக்கப்பட்ட குப்பி களின் மூடிகளை சிப்பாய்கள், தங்கள் பற்களினாலே திறந்து, அதிலுள்ள கொழுப்பை அவர்களே கைகளால் எடுத்து, தோட்டாக்களில் தடவிக் கொள்ள வேண்டுமாம். இதைத் தவிர மேலும் பல கடுமையான உத்தரவுகளை யும் பிறப்பித்தனர்.

இது சிப்பாய்களுக்குப் பெரும் வேதனையை அளித்தன. இதனை எதிர்த்து இந்திய இராணுவத்தின் 19 ஆவது படையைச் சேர்ந்த மங்கள் பாண்டே என்ற சிப்பாய் இதற்கு ஒரு முடிவு கட்ட, 1856 ஆம் ஆண்டிலிருந்தே தனது சக சிப்பாய்களுடன் தீவிர மானான். அடுத்து 1857 ஆம் ஆண்டு மார்ச் 29 இல் மங்கள் பாண்டே மற்ற சிப்பாய்களோடு ஆங்கிலேய இராணுவ அதிகாரிகளை எதிர்த்து ஒரு பெரும் புரட்சியை மூட்டினான். வடக்கே இப்புரட்சி வெகு விரைவிலேயே, பெரும் காட்டுத் தீயைப் போலப் பரவியதோடு, அது ஆங்கிலேயர்களையே தகிக்கச் செய்துவிட்டது.

எனவே, ஆங்கிலேய இராணுவத் தளபதியான கர்னல் வீலர் இக்கலகத் திற்கு மூலகாரணமான மங்கள் பாண்டேயைத் திடீரெனக் கைது செய்து, அந்த வீரனை 1857 ஆம் ஆண்டு ஏப்ரல் 8இல் தூக்கிலிட்டுக் கொன்றான். மங்கள் பாண்டே தூக்கிலிடப்பட்ட பின் இந்திய இராணுவத்தினர் ஒன்று திரண்டு "சுதந்தரம் எங்களது மூச்சு!. அதனை அடைய இனி ஒருபோதும் தாமதிக்க மாட்டோம்!" என்ற சூளுரையோடு தங்களது உணர்ச்சிகளை வெளிப்படுத் தினர்.

வடக்கே இந்திய சிப்பாய்கள், ஆங்கிலேய இராணுவ அதிகாரிகள், மற்றும் பிற அதிகாரிகளைத் தாக்கிய துடன், அவர்களது அலுவலகங்களும், இல்லங்களும் தீயிட்டுத் தகர்க்கப் பட்டன. நாளுக்கு நாள் இந்திய சிப்பாய் களின் போராட்டங்கள் வலுத்தன.



அன்று நிகழ்ந்த இச்சம்பவங்களே இந்திய வரலாற்றில் "முதல் இந்திய சுதந்தரப் போர்" ('சிப்பாய்க் கலகம்') எனப்படுகிறது.

### "வாரணாசி"யில் கர்னல் நீல்!

இதற்கிடையில் நம் பாரதத்தின் புண்ணிய க்ஷேத்திரமான காசி என்ற வாரணாசியில் இந்திய இராணுவக் காலாட் படையினருக்கும், ஆங்கிலேயருக்கும் ஒரு பெரிய கலவரமே மூண்டது. இதனை ஆங்கிலேயர்களால் அடக்க முடியவில்லை. அப்போது இந்தியாவின் கவர்னர் ஜெனரலான வார்டு கானிங் சென்னை பீரங்கிப் படையின் தளபதியான கர்னல் நீல் என்பவரை உடனுக்குடன் வரவழைக்க ஏற்பாடு செய்தார்.

### யார் அந்த "கர்னல் நீல்?"

கர்னல் பிரிகேடியர் ஜெனரல் நீல் இங்கிலாந்து அயர்ஷயரில் 1810 ஆம் ஆண்டு மே 27 இல் பிறந்தான். இவனுடைய தந்தை போர்னி வில்லைச் சேர்ந்த கர்னல் நீல் ஆவார். தாயார் அயர்ஷயரைச் சேர்ந்த செண்டிரிச் மூரி. இத்தம்பதிக்குப் பிறந்த மூத்த மகனே கர்னல் நீல். இவனது முழுப் பெயர் ஜேம்ஸ் ஜார்ஜ் ஸ்மித் நீல் என்பதாகும். நீல், கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவன். அந்நாளில் சென்னை மாகாணத்தின் கவர்னராக இருந்த ஸர். தாமஸ்மன்றோ நீலின் உறவுக்காரன்.

1827 ஆம் ஆண்டு ஜூன் 1 இல் சென்னைக்கு வந்தபோது, நீலின் வயது 17. இங்கு முதன் முதலாக கிழக்கிந்தியக் கம்பெனியில் ஒரு சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தான். உடனே அடுத்த சில நாள்களில் நீல் மசூலிப்பட்டணத்திலுள்ள ஐரோப்பிய ரெஜிமெண்டில் இராணுவ வீரனாகச் சேர்ந்தான். பின்னர் மிகக் குறுகிய காலத்திற்குள் பல உயர் பதவிகளைப் பெற்றதோடு மேஜர் ஜெனரலாகவும் பொறுப் பேற்றான். 1835 அக்டோபர் 31 இல் கல்கத்தா பட்டாளத்தைச் சேர்ந்த கர்னல் வார்டே என்பவரின் மகளான இஸபெல்லாவை, நீல் திருமணம் செய்ததோடு, இரு மகன்களுக்குத் தந்தையும் ஆனான்.




திருமணத்திற்குப் பின் நீல் சென்னையிலுள்ள பிரிட்டிஷ் பீரங்கிப் படைக்கு மாற்றப்பட்டான். அப்போது அப்படையின் கர்னல் பதவியிலிருந்த ஸ்டீவன்சன் உடல்நலமின்றி இங்கிலாந்திற்குச் செல்லவே, அவரது இடத்தில் அமர்ந்து 1857 ஆம் ஆண்டு ஏப்ரல் 28 இல் பீரங்கிப் படையின் கர்னலாகப் பதவியையும் ஏற்றான். அன்று முதல் சாதாரண நீல், கர்னல் நீல் என்றழைக்கப் பட்டான்.

அந்நாளில் இராணுவத்தில் இவனது பெயரைக் கேட்டதுமே, அனைவருக்குமே மிக்க நடுக்கம்தான். இராணுவச் சிப்பாய்களும், பொதுமக்களும் இவனது அராஜகத்தைப் பொறுக்காமல், மனம் குமுறி கொடுங்கோல் நீலன் என்றே பழித்தனர்.

இந்திய கவர்னர் ஜெனரல் வார்டு கானிங்கின் அவசர அழைப்பை ஏற்று கர்னல் நீல் உடனுக்குடன் வாரணாசிக்கு விரைந்தான். அங்கும் அவனுக்கு மிக்க சிறப்பான வரவேற்பு அளித்தனர். அங்கு ஏற்பட்டுள்ள கலவரங்களை நன்கறிந்த நீல், 1857 ஆம் ஆண்டு ஜூன் 4 இல், அங்குள்ள காலாட்படையினரை ஒரு திறந்த வெளியில் ஒன்று கூட்டினான். அவர்களைச் சுற்றி துப்பாக்கி மற்றும் பீரங்கிப் படையினரை வளைத்து நிறுத்தினான். பின்பு தனது அதிகாரத்தோடு காலாட்படையினரிடமுள்ள ஆயுதங்களையெல்லாம் கீழே போட்டுவிட்டு சரணடையுமாறு எச்சரித்தான்.

இனி தாங்கள் தப்ப முடியாதென்ற ஒரே காரணத்தினால், காலாட் படையினர் தங்களது ஆயுதங்களைத் தரையில் போட்டுவிட்டு, தங்களது இரு கைகளையும் உயரே தூக்கினர். இதனைக் கண்டு நீல் தனக்குள் எள்ளி நகைத்தான். அந்த நகைப்பில் ஏதோ மர்மம் இருப்பதை அறிவதற்குள், திடீரென தங்களைச் சுற்றி நின்ற இராணுவப்படையினர் வெகு வேகமாகத் தங்களை நெருங்குவதை அறிந்த காலாட்படையினர், எதற்கும் அஞ்சாமல், கீழே போட்ட தங்களது ஆயுதங்களைக் குனிந்து எடுப்பதற்குள், மிக ஆத்திரம்



லக்னோவிலுள்ள பிரிட்டிஷ் அதிகாரியின் இல்லத்தில் பில்லியர்ட் விளையாட்டு மேஜையை சிப்பாய்கள் சேதப்படுத்திய காட்சி.

அடைந்த நீல் அவர்களைச் சுடும்படி சமிக்ஞை செய்தான்.

உடனே, துப்பாக்கி மற்றும் பீரங்கிப் படையினரும் இந்தியக் காலாட் படையினரைத் தாக்கினர். இத்தாக்குதலில் தப்பிய காலாட்படையினரும், சீக்கிய வீரர்களும் ஒன்று சேர்ந்து, எல்லாவிதக் கட்டுப்பாடுகளையும் மீறி ஆங்கிலேயர்களைப் பழிக்குப் பழி தீர்த்தனர். இத்தாக்குதலில் கர்னல் நீல் தப்பியது மிக அதிசயமானது.

வெள்ளையர் வாழ்ந்த மாளிகையை, சிப்பாய்கள் தரைமட்டமாக்கிய காட்சி



## நீலனின் சூழ்ச்சி!

இக்கலவரம் மேலும் உச்சநிலையை அடைவதற்குள் நீல் ஒரு யுக்தியைக் கையாண்டான். காலாட்படையுடன் இணைந்துள்ள சீக்கியர்களிடம் நய வஞ்சமாக ஏமாற்றிப் பேசி, அவர்களைத் தன் வசமாக்கினான். உடனே மீண்டும் அவர்களைக் கொண்டே இந்தியக் காலாட்படையினரையும் பொது மக்களையும் தாக்கத் துணிந்தான். சீக்கியப் படையினரும் நீலின் உத்தரவுப் படி கண்களில் படும் இந்தியர்களைச் சுட்டுத் தள்ளினர். அடுத்து, கிராமங்கள் தோறும் சென்று, அங்குள்ள வயோதிகர், பெண்கள், கர்ப்பிணிப் பெண்கள், சிறு குழந்தைகள் எல்லாரையுமே இரக்கமின்றிச் சுட்டுத்தள்ளினான். இராணுவத்தினர் சிலர், பெண்களின் கற்பைச் சூறையாடினர்.

பிடிபட்ட இந்தியர்களை நீல் படுத்திய கொடுமைகள் ஏராளம். பலரைத் தூக்கிலிட்டுக் கொல்ல அவன் நவீன தூக்கு மேடைகளையும் ஏற்படுத்தினான். பிடிபட்டவர்களின் கை, கால்களைக் கட்டி, அவர்களைப் பெரிய பெரிய யானைகளின் முதுகுகளில் ஏற்றி நிற்க வைத்து, உயரமான மரக் கிளைகளில் தயாராகக் கட்டியுள்ள தூக்குக் கயிறுகளை இவர்களது கழுத்துகளில் மாட்டியதுமே, யானைகளை விரட்டி விடுவர். யானைகளும் மிரண்டு பிளிறிக் கொண்டே ஓடியதும், அவற்றின் முதுகுகள் மீது நின்றவர்களின் கழுத்திலுள்ள சுருக்குக் கயிறுகள் இறுக்கப்பட்டு, அவர்களது கோரமான குரல்கள் உயிருக்காக ஊசலாடும்.

இன்னும் பலருடைய உடல்களை, பிரிமணையைப் போல வட்டவடிவில் கட்டியும், மற்றும் பலரை '8' என்ற எண் வடிவில் வளைத்துக் கட்டியும் அவர்களையும் தரையில் உருட்டிய

சென்னை மியூசியத்திலுள்ள நீல் சிலை.



ஸ்பென்ஸருக்கு எதிரே பெரிய பீடத்தின் மீது நீல்சிலை நிற்கும் காட்சி.



வாறு சென்று, மரங்களில் தொங்கும் தூக்குக் கயிறுகளில் இவர்களையும் மாட்டி வேகமாக ஆட்டிவிடுவான். அந்த வேகத்தில் அவர்களது கழுத்துச் சுருக்கு களும் இறுக்கும்போது, அவர்கள் கதறி யும், துடித்தும் மாண்டனர்.

இக்காட்சிகளைக் கண்டதுமே நீல், தனது மற்ற இராணுவத்தினரோடு மதுபானங்களை அருந்திக் கொண்டே தனது அதிகாரத்தைக் காணச் செய்வான். இது கர்னல் நீலுக்குக் கைவந்த கலை என்பதுடன், பொழுது போக்காகவும் எண்ணியே மேலும் மேலும் இந்த அநீதிப் பாதையில் செயல்பட்டான். இதனால் இவனது அதிகாரமே வட நாட்டில் கொடிகட்டிப் பறந்தது. இவனது செயல்களைப் பற்றி இந்திய இராணுவ அதிகாரிகள் எல்லாரும் பெரிதும் பாராட்டியதோடு, இது விஷயம் லண்டனிலுள்ள மேலதிகாரிகள் வரை அடிக்கடி எட்டின.

## கொடுமைகளை நேரில் கண்டவர்களின் விமர்சனங்கள்

வடக்கே நீல் செய்த அநீதிகளைப் பற்றி அன்று அவனது இராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய்களும், வரலாற்று நூலாசிரியர்கள், பிற நபர்கள் ஆகிய பலரும் அன்றே நேரில் கண்ட காட்சி களை அவர்கள் வாயிலாகவே கேட் போம். பிரபல 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையில் நீல் தலைமையிலான படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய் கூறியதாவது:

"நாங்கள் கூட்டம் கூட்டமாக கிராமங் களுக்குச் சென்று அக்கிராமத்தைத் தீயிட்டு, தரைமட்டமாக்கினோம். அடுத்த கிராமத்தில் எங்கள் இஷ்டப்படி சூறை யாடினோம். அங்கு கண்ணில் படு வோரைப் பிடித்து மரக்கிளைகளில் தூக்கிலிட்டுக் கொன்றோம். பின்னர் மற்றொரு கிராமத்தைச் சூழ்ந்து கொண்டு அங்கிருந்த கலகக்காரர் களைத் தீயிலிட்டுக் கொன்றோம். இவ்விதம் நாங்கள் செயல்பட, இதற்கு ஆணைகளைப் பிறப்பித்தது கர்னல் நீல்தான்".

ஒரு பாதிரியார் பத்திரிகைப் பேட்டி யில் கூறியிருப்பதாவது: "மனித உருவில் வந்த கொடுங்கோல் அரக்கனே நீல். இவனுக்கு, பிறரைத் தூக்குமேடைகளில் ஏற்றிச் சாகடிப்பது சர்வ சாதாரணம். நாள் தவறினாலும் தவறலாம். ஆனால் இந்தியர்களைப் பழிவாங்கும் எண்ணத்தி லேயே அவர்களை எமலோகத்திற்கு அனுப்புவதில் ஒருநாளும் தவறினதே இல்லை. இதுவே தன் கடமை என்று நீல் கூறுவதுண்டு.

அடுத்து ஓர் ஆங்கிலேய அதிகாரி தமது குறிப்பில் கூறியிருப்பதாவது:

"இந்தியரின் புண்ணிய க்ஷேத்திரம் காசி. அங்கு இன்றுவரையில் நாங்கள் செய்த முற்றுகைகளைப் போல் வேறெவருமே செய்திருக்க மாட் டார்கள். நாங்கள் இரண்டு பெரிய பீரங்கிப் படைகளுடன் அங்கு சென் றோம். சுமார் 40 பேரைக் கைது செய்து, அவர்களை ஒன்றாகக் கட்டி, பின்பு சுட்டுத் தீர்த்தோம். மற்றும் பலரை ஈட்டிகளால் குத்திக் கொன்றோம்".

பிரபல ஆங்கில சரித்திர ஆசிரியர் ஜே.ஈ.கே. தமது நூலில் குறிப்பிட் டுள்ளது பின்வருமாறு:

"மூன்று மாதங்களாக தினமும் ஓயாமல் பிணங்களை வண்டிகளில் ஏற்றிச் சென்றதைப் பார்த்தாலே, மிக நடுக்கமாக இருந்தது. தவிர, சிறுவர்கள் வேடிக்கைக்காகக் கைகளில் சுதந்தரக் கொடிகளை ஏந்தி, கோஷங்களோடு சென்றதைப் பார்த்த ஓர் ஆங்கிலேயன், அச் சிறுவர்களைக் கும்பலாகக் கட்டி, அவர்களையும் தூக்கிலிட்டுக் கொன் றான். தமது சிப்பாய்கள் இந்தியர் களைச் சித்திரவதை செய்து கொல் வதைக் கண்டு நீல் கைகொட்டி நகைத்துக் கொக்கரித்தான்".

## "எரிமலை" என்ற நூலில்:

பின்னொரு சமயம், பிரபல இந்தியப் புரட்சியாளரான வீர சாவர்க்கர், தான் எழுதிய 'முதலாவது இந்தியச் சுதந்தரப் போராட்டம்', அல்லது 'எரிமலை' என்ற நூலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"கிழவர்களையும், நடுத்தர வயதினர், இளைஞர்கள், குழந்தைகள், சிசுக்களை யும் நீல் குத்திக் குத்திக் கொன்றான். தாயிடம் பால் அருந்திய பச்சிளம் சிசுக் களையும் கொன்றான். நூற்றுக்கணக் கான பெண்களைத் தமது இராணுவத்தி னரைக் கொண்டு கற்பழித்தபின், அவர் களையும் கொன்றான். அவர்களை ஏன் கொல்ல வேண்டும்? அவர்கள் என்ன பாபங்களைச் செய்தனர்? தேசாபி மானம் என்ற பாபத்தைச் செய் தார்களே தவிர, வேறொன்றும் செய்ய வில்லை. அதற்காகவா இப்படிப்பட்ட கொடும் தண்டனை?"

## "வினை விதைத்தவன் வினையையே அறுத்தான்"

கடைசியாக ஆங்கில தளபதி கர்னல் நீல் 1857 ஆம் ஆண்டு ஆகஸ்டில் லக்ஷ்மண புரி என்னும் லக்னோவுக்குச் சென்று, அங்கு நடத்திய அநீதிகள் அளவற்றவை. ஆனால் இவனது செயல்களுக்கெல் லாம் இந்தியச் சிப்பாய்களும் பொது மக்களும் பதிலடிகள் கொடுத்தே வந்தனர். இது தளபதி நீலையே வியப் படையச் செய்தது. இந்தியர்களைக் கொன்று, கொன்று பிணமாகக் குவிப்

பதில் வெகு தீவிரமாக இருந்த நீலின் செயல்கள், இறைவனுக்கே பொறுக்க முடியவில்லை போலும்! கடைசியாக நடந்த ஒரு கலவரத்தின்போது இந்தியச் சிப்பாய்களில் ஒருவனால் கொடுங் கோலன் நீல் 1857 ஆம் ஆண்டு செப் டம்பர் 25 இல் சுட்டுக் கொல்லப் பட்டான். அப்போது அவனுக்கு வயது 47.

"வினை விதைத்தவன், வினையை அறுப்பான்!" என்ற பழமொழிக்கு கர்னல் நீல் உதாரணமாகி விட்டான்.

### "கொடுங்கோலன்" நீலனுக்குச் சிலை

கொடுங்கோலன் நீலின் இராணுவ சேவைகளைப் பெரிதும் பாராட்டிய பிரிட்டிஷார், அவனது நினைவைப் போற்றும் வகையில் அவனுக்கு சென்னை மாநகரில் பிரம்மாண்ட மான முழு உருவச் சிலையை வைக்க ஏற்பாடாகியது. லண்டனில் புகழ்மிக்க பிரபல சிற்பத் தயாரிப்பாளர்களான இராபின்ஸன், காட்டன் ஆகியோரால் மிகுந்த வேலைப்பாடுகளுடன் கூடிய சுமார் 16 அடி உயரங்கொண்ட முழு உருவமும் செம்பு உலோகத்தினால் தயாரிக்கப்பட்ட நீல் சிலை தயாரிக்கப் பட்டு 1859 இல் முடிவடைந்தது. பின்பு இங்கிலாந்திலிருந்து கப்பல் மூலம் சென்னைக்குக் கொண்டுவரப்பட்டது.

1860 ஆம் ஆண்டில் நம் சென்னை மாநகரின் பிரதான சாலையான மௌண்ட்ரோட்டில் (தற்போதைய அண்ணாசாலை) ஸ்பென்சர் கம் பெனிக்கு எதிரே உயரமான பீடம் எழுப்பப்பட்டு, அதன்மீது கர்னல் நீல் சிலையை நிறுத்தி வைத்து, இதற்காக அந்நாளிலேயே சிலை திறப்பு விழாக் கூட்டமும் நடைபெற்றது. அச்சிலை யின் அடி பீடத்தில் பொறிக்கப்பட்ட ஆங்கில வாசகமாவது:

"A Brave resolute self-restraint soldier universally acknowledged as the First, who stemmed the torrent of rebellions in Bengal. He fell gloriously at the relief of Lucknow 25th September - 1857; Age 47".

இதன் தமிழ் விளக்கம்: "சென்னை ஃப்யூசிலியர்ஸ் (பீரங்கிப்படை) படை லெப்டினெண்ட் கர்னலும் பிரிட்டிஷ் பேரரசியின் ஏ.டி.சியுமான ஜேம்ஸ் ஜார்ஜ் ஸ்மித் நீல், உறுதியும், தன்னம் பிக்கையும் படைத்த போர்வீரர். வங்கா ளத்தில் கிளர்ச்சியைத் தடுத்தவர்களில் முதன்மையானவர் என எல்லாராலும் ஏற்கப்பெற்றவர். இலட்சுமணபுரி நிவாரண நடவடிக்கையில் 1857 ஆம் ஆண்டு செப்டம்பர் 25 ஆம் தேதியன்று, புகழ்மிக்க மரணம் அடைந்தார்" என்ப தாகும்.

பின்னொரு சமயம், காந்தியடிகள் கர்னல் நீல் சிலை பீடத்தில் பொறிக்கப் பட்டுள்ள ஆங்கில வாசகத்தில் 'நீல் புகழ்மிக்க மரணம் அடைந்தார்!' என்று கூறுவது 'புகழ்' என்ற சொல்லையே அவமதிப்பதாகும் எனக் கூறி மிகுந்த வருத்தம் அடைந்தார். சென்னையில் கர்னல் நீல் சிலையை எழுப்பியதற்குத் தமிழக மக்கள் அனைவருமே பெரும் அதிர்ச்சியும், கவலையும் கொண்டனர். அதோடு அவர்களின் உள்ளங்களில் பெரும் கொதிப்பேற்பட்டு 'நீலனா? காலனா?' என அவனது கொடுமை களைப் பழித்தனர்.

### வடக்கே லாரன்ஸ் சிலைக்கு வீசிய புயல் தெற்கே நீல் சிலைக்கும் வீசியது

வடக்கே பஞ்சாபில் ஏற்கெனவே அமைக்கப்பட்டிருந்த ஆங்கில அதிகாரி லாரன்ஸின் உருவச்சிலையை அகற்றும் போராட்டம் மிகத் தீவிரமாக இருந்தது. இது விஷயத்தைப் பழம்பெரும் தேச பக்தரும், தீவிரவாதியும், நம் தமிழகத்தைச் சேர்ந்த சென்னை திருவல்லிக்கேணி 'மண்டபம்' திருமலாச்சாரி அறிந்ததுமே, உடனுக்குடன் சென்னை மௌண்ட் ரோடிலுள்ள நீலின் சிலையையும் அகற்ற வேண்டுமென்ற போராட்ட எண்ணமும் உதித்தது. உடனே அவர் பிரபல ஆங்கில நாளேடான 'ஹிந்து'வில் ஓர் அறிக்கை யும் வெளியிட்டார். அதனைப் படித்த துமே, தமிழர்களின் நெஞ்சங்களில் பெரும் துடிப்பு ஏற்பட்டு, சென்னையி லுள்ள நீல் சிலையை இருக்குமிடம் தெரியாமல் தகர்த்தெறிய வேண்டிய போராட்ட முயற்சியும் தொடங்கியது. இப்போராட்டம் 1927 ஆம் ஆண்டு ஆகஸ்டிலேயே தொடங்கியது.

### நீல் சிலை உடைப்புப் போராட்டம்

சென்னையிலுள்ள நீல்சிலையைத் தகர்த்தெறிய வேண்டும் என்ற வர லாற்றுச் சிறப்புமிக்க போராட்ட எண்ணம் முதல் முதலாக மதுரை மாவட்ட தேசபக்தர்களுக்குத்தான் தோன் றியது. இதற்கான போராட்டம் திரு

சோமயாஜுலு



இராஜாஜி



எஸ்.எஸ். விஸ்வநாததாஸ்



நெல்வேலி எஸ்.என். சோமயாஜுலு வின் தலைமையில் தொடங்கியது.

இதில் மதுரை ஸ்ரீநிவாச வரதய்யங்கார், அவருடைய மனைவி பத்மாஸினி அம்மாள், மதுரை சிதம்பர பாரதி ஆகியோர் போராட்டத்திற்குப் பெரும் துணையாக நின்றனர். போராட்டத்திற்கான செலவு வகைகளுக்கு, தமிழகத்தில் பிரபலமானவரும், 'தமிழ்நாடு' பத்திரிகையின் ஆசிரியருமான டாக்டர் பி.வரதராஜுலு நாயுடு பொருளுதவியும் அளித்தார். இப்போராட்ட நிகழ்ச்சியே தமிழக வரலாற்றில் "நீல் சிலை உடைப்பு சத்தியாக்கிரகம்!" என்ற சிறப்புப் பெயரோடு இடம்பெற்றது.

சென்னையில முதல் நாள் போராட்டமாக, மதுரையைச் சேர்ந்த சுப்பராயலு நாயுடு, முகம்மது சாலி என்ற இரு இளைஞர்களும் சென்னை மௌண்ட்ரோடிலுள்ள நீல் சிலையின் மீது ஏணி வைத்து ஏறி, நீல் கையில் பிடித்திருந்த வாளைத் தகர்க்க முயன்றனர். அவர்களில் ஒருவர் சிலையை வெட்டும்போது, மற்றவர் அச்சிலையைத் துடைப்பது போல வெளி நபர்களுக்காக பாவனையும் செய்தனர். அப்போது அவ்வழியாகச் செல்லும் பொதுமக்கள் அரசாங்க வேலைக்காரர்கள் சிலையை சுத்தம் செய்கின்றனர் போலும் என்றே எண்ணி விட்டனர்.

இதற்குள் நீல் சிலையின் இடக்கையில் பிடித்திருந்த நீளமான வாளின் மேல் கைப்பிடியிலிருந்து சுமார் ஒன்றரை அடி நீளத்திற்கு வெட்டி எடுத்து விட்டனர். இதற்குள் சில ஆங்கிலேய அபிமானிகள் நீல்சிலையைப் பின்னப்படுத்தியதை 'மதராஸ் மெயில்' நாளேட்டின் ஆசிரியரான 'வெல்பி'க்கு தகவல் அளிக்கவே, அவரும் உடனுக்குடன் சென்னை நகரப் போலீஸ் கமிஷனருக்கு நீல் சிலையில் இந்தியரின் விஷமம் நடக்கிறது. உடனே நேரில் வந்து தடுக்கவும்" என அவசரப் புகாரும் தந்தார். உடனுக்குடன் போலீஸ் உயர் அதிகாரிகள் ஸ்தலத்திற்கே விரைந்து வந்து நீல்சிலையைத் தகர்த்துக் கொண்டிருந்த அவ்விருவரையும் கைது செய்து, அவர்கள் மீது வழக்குகளும் தொடரப்பட்டன.

இவர்கள் மீதான வழக்கு சென்னை எழும்பூர் பிரதம மாகாண மாஜிஸ்டிரேட்டும், பிரபல நாடகாசிரியருமான பம்மல் சம்பந்த முதலியாரிடம் விசாரணைக்கு வந்தது. விசாரணையில் அவ்விரு இளைஞர்களும் மிகத் துணிச்சலோடு, "நீல்சிலை நாங்கள் நினைத்தது போல வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கவில்லை. ஆனால் அது முழுவதும் செம்பு உலோகத்தாலே செய்யப்பட்டிருந்தது. அதனால் எங்களது முதல் முயற்சியிலேயே அதனை முழுவதிலுமே அழிக்க முடியாமற் போயிற்று. அதற்காக மிகவும் வருந்துகிறோம். தவிர, இதனால் எங்களுக்குக் கடும் தண்டனைகள் கிடைக்குமென எதிர்பார்த்துத்தான் நாங்கள் இதில் ஈடுபட்டோம். எங்களுக்கு எவ்வளவு கடுந்தண்டனை என்றாலும் ஏற்கத் தயார். அதற்காக வருத்தப்படவும் மாட்டோம்!" என கோர்ட்டில் வெளிப்படையாகவே கூறினர்.



வார இதழில் வெளியான கார்ட்டூன்
(நன்றி: 'ஆனந்த விகடன்'
சென்னை)

இந்த வழக்கில் சுப்பராயலு நாயுடு, முகமது சாலி ஆகிய இருவருக்கும் தலைக்கு ஆறு மாதங்கள் கடுந்தண்டனை விதித்துத் தீர்ப்பு கூறப்பட்டது. இத்தீர்ப்பைக் கண்டித்து, அந்நாளையப் பத்திரிகைகள் மிகுந்த கண்டனம் தெரிவித்தன. இதனால் தமிழகமே கொந்தளித்தெழுந்தது. தவிர, தமிழ்நாட்டின் பல மாவட்டங்களிலிருந்து நூற்றுக்கணக்கான சத்தியாக்கிரகிகள் நீல்சிலைப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றனர்.

தொடக்கத்தில் நெல்லை சோமயாஜுலு போராட்டத்திற்குத் தலைவராயிருந்து பல நாள்கள் வரை தொண்டர்களைத் தொடர்ந்து அனுப்பிய பின்னர், அவரே நீல் சிலைப் போராட்டத்தில் கலந்து கொண்டதற்காக, அவருக்கு 15 மாதங்கள் கடுங்காவல் தண்டனை அளித்து, அவரை ஒரிஸாவிலுள்ள பெர்ஹாம்பூர் சிறையில் கொண்டு போய் அடைத்தனர். இவருக்குப் பின்பு, போராட்டங்களில் கலந்து கொண்டு சிறை சென்றவர்களின் பட்டியலே நீளமானது.

### காந்திஜியின் பாராட்டு

நீல் சிலைப் போராட்டம் பற்றி காந்தியடிகள் தமது 'யங் இந்தியா' பத்திரிகையில் குறிப்பிட்டிருந்த வரிகளில் சில இவை:

"சிப்பாய் கலகக் காலத்தில் பிரக்யாதி பெற்றவரான கர்னல் நீலுக்கு சென்னை மவுண்ட் ரோட்டில் வைத்திருக்கும் சிலையைப் பின்னப்படுத்திய குற்றத்திற்காக, சென்னையில் 30 வயதுள்ள ஓர் இந்துவின் மீதும், 25 வயதான ஒரு முஸ்லிமின் மீதும் கொண்டு வந்த வழக்கு சுவையானதாக இருக்கிறது. ஒத்துழையாமை இயக்கம் ஓங்கியிருந்த காலத்தில் லாகூரில் லாரன்ஸ் சிலையை அப்புறப்படுத்திட வேண்டுமென்று நடந்த கிளர்ச்சியை, இவர்களது முயற்சியானது நினைவூட்டுகிறது. லாகூரில் இந்த முயற்சி பொதுமக்களால் செய்யப்பட்டது. சென்னையில் இந்த இரண்டு இளைஞர்கள் எவ்வித ஆடம்பரமுமில்லாமலும் திடபுத்தியுடனும் இதனைச் செய்திருக்கிறார்கள். அவர்கள் நீதி மன்றத்தில் கொடுத்ததாக 'இந்து' பத்திரிகையில் காணப்படும் வாக்குமூலத்தை, பொதுமக்கள் படிப்பார்களென்று நம்புகிறோம்.

இந்த இளைஞர்களுடைய உத்தமமான லட்சியத்தையும், வழக்கு

“வெடிச்கடப் போறது டோய்!”

“பொடிப் பசங்களா... என்ன என்னைப் பார்த்தா கிண்டட பண்றீங்க?”

“இல்ல மாமா! வெடி வெடிக் கடப் போறதேன்னுதான் சொன் னேன். வேறெந்த அர்த்தத்திலயும் சொல்லல... நீங்க வருத்தப் படாதீங்க!”



விசாரணையின் போது, அவர்கள் மிக வும் கண்ணியமாக நடந்து கொண்டதை யும் குறித்துப் பெருமைப்படாமலிருக்க முடியவில்லை".

நீல்சிலை போராட்டங்கள் காலை வேளைகளில் மௌண்ட்ரோட்டில் நடக்கும். அன்று கைதானவர்களைப் பற்றிய கூட்டம் அன்று மாலையே சென்னை திருவல்லிக்கேணி கடற்கரை திலகர் கட்டத்திலும், மற்றும் ஆங்காங்கு நடைபெறுவதில் நகரப் பெருமக்களும், வெளியூர்களிலிருந்து வந்தவர்களும் கலந்து கொண்டு அப்போராட்டத்திற்கு பேராதரவு தரும் கோஷங்களை எழுப் பினர்.

தொடர்ந்து இப்போராட்டம் நடத்து வதற்கான சூழ்நிலையும், பொது மக்களின் பேராதரவுகளும் மேன்மேலும் அதிகமாகி வந்த சமயத்தில், அதே 1927 ஆம் ஆண்டு டிசம்பரில் சென்னையில் இந்திய தேசியக் காங்கிரஸின் 43 ஆவது மாநாடு முஸ்லிம் லீக் தலைவரான டாக்டர் எம்.ஏ. அன்சாரி தலைமையில் கூடியது. தவிர 1928 ஆம் ஆண்டு இங்கி லாந்திலிருந்து இந்தியாவுக்கு வருகை தரும் "சைமன் கமிஷன் குழு"வைப் புறக் கணிப்பதெனவும் முடிவெடுக்கப் பட்டது. அதோடு பரிபூர்ண சுதந்தரமே இந்திய மக்களின் குறிக்கோள் என, நடந்த மாநாட்டுத் தீர்மானப்படி, அதனை நிறைவேற்ற காங்கிரஸ் தலைவர்கள் தீவிரமாக ஈடுபடவே, நீல்சிலை அகற்றும் போராட்டம் சற்று நிறுத்தி வைக்கப்பட்டது.

1928 ஆம் ஆண்டு முதல் இந்தியா வுக்கு வருகை தந்த சைமன் கமிஷன் புறக்கணிப்பு, அடுத்து காந்தியடிகள் உப்பு சத்தியாக்கிரகத்திற்காக 'தண்டி யாத்திரை' அதே ஆண்டில் தமிழகத்தில் இராஜாஜியின் தலைமையிலான 'வேதா ரண்ய உப்பு சத்தியாக்கிரக யாத்திரை', பின்னர் 'தேசியக் கொடி வணக்கம் நாள் போராட்டம்', 'அந்நியத் துணி புறக்கணிப்பு', 'கள்ளுக்கடை மறியல்கள்' மற்றும் பல நிகழ்ச்சிகளால் காங்கிரஸ் தலைவர்கள் கைது செய்து சிறை யில் அடைக்கப்பட்டனர். தொடர்ந்து 1937 ஆம் ஆண்டில் தமிழக சட்டசபைக் கான தேர்தல் என 10 ஆண்டுகள் உருண்டோடின.

### சென்னை சட்டசபையில் 'காங்கிரஸ் கட்சி'யின் அமைச்சரவை

1937 ஆம் ஆண்டு சட்டசபைக்கான தேர்தலில், 'காங்கிரஸ் கட்சி' அநேக இடங்களைக் கைப்பற்றி 1937 ஆம் ஆண்டு ஜூலை 15 இல் மூதறிஞர் இராஜாஜி தலைமையிலான அமைச்ச ரவை அமைக்கப்பட்டது.

### நீல் சிலை அகற்றப்பட்டது

தமிழக சட்டசபைக்கு இராஜாஜி முதலமைச்சராகப் பதவியேற்றதுமே, மௌண்ட்ரோடிலுள்ள கர்னல் நீல் சிலையை அகற்றுவதற்கான நடவடிக்கை யில் பெரிதும் ஈடுபட்டார். ஆனால் அன்றைய பிரிட்டிஷ் அரசு பலத்த மறுப்புகளைத் தெரிவித்தும், இராஜாஜி அவர்கள் விடாப்பிடியாக அச்சிலையை அகற்றியே தீரவேண்டும் என பதில் மறுப்பும் தெரிவித்தார்.

இது விவரங்களை நன்கறிந்திருந்த காந்தியடிகள் சற்றே கோபமும் நகைச் சுவையும் கலந்தவாறு, "நீல்சிலை இருக்க வேண்டிய இடம், சென்னை மௌண்ட் ரோடில்லை. அதனை பிரிட்டனுக்கே எடுத்துச் சென்று அங்கேயே வைக் கட்டும். அங்கு வைக்க அதனை எடுத்துச் செல்லாவிடில் அதனைக் கடலிலோ, அல்லது குப்பைத் தொட்டிகளிலோ வீசி எறியுங்கள்!" என்றார்.

இதற்கு இராஜாஜி, "அந்த நீல் சிலையை எதற்காக பிரிட்டனுக்குத் திருப்பி அனுப்பவேண்டும்? கூடவே கூடாது. அதோடு அதனைக் கடலிலும் எறிய வேண்டாம்; குப்பைத் தொட்டி யிலும் போடவேண்டாம். இந்த மூன்று இடங்களும் அச்சிலைக்கு வாயக் கில்லை. அதற்காக நான்காவது இடம் தயாராக உள்ளது. அதுதான் சென்னை எழும்பூரிலுள்ள மியூசியம். இச்சிலையை அங்கேதான் அனுப்பப் போகிறேன்" எனக் கூறி அதற்கான நடவடிக்கை களையும் எடுத்தார்.

1860 ஆம் ஆண்டு முதல் 1937 ஆம் ஆண்டு இறுதி வரையில் சுமார் 77 ஆண்டுகளாக சென்னை மௌண்ட் ரோட்டில் இருந்து வந்த கர்னல் நீல் சிலையை, 1938 ஆம் ஆண்டு ஜனவரி 19 இல் அகற்றப்பட்டு, சென்னை எழும் பூரிலுள்ள அரசு அருங்காட்சியகத்தில் ஒப்படைக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சி யைக் குறிப்பிட்டு வார இதழ் ஒன்றில் நீல்சிலையைப் பொதுமக்கள் தள்ளுவது போலவும், அதனை மியூசியம் வாயிலில் அங்குள்ள மிருகங்களின் எலும்புக் கூடுகள் வரவேற்பது போலவும் ஒரு கேலிச்சித்திரமும் (கார்ட்டூன்) வெளி யிட்டிருந்ததைப் பலர் பாராட்டினர்.

சென்னை எழும்பூரிலுள்ள அருங் காட்சியகத்தின் ஒரு மூலையில் நீல் சிலையை அந்நாளில் கொண்டு போய் வைத்தது, இன்றும் அப்படியே இருக் கிறது. அச்சிலையைக் காண வருபவர் களிடம், "நீலன் என்ற காவன்! நான் உங்கள் வ[redacted] நினைவு!" (An [redacted] in the page of your History) என்றே சொல்வது போல இருப்பதாகக் கூறி விளக்கமளிக்கப்பட்டு வருகிறது.

இப்போதும் சென்னை எழும்பூர் அரசு அருங்காட்சியகத்தில் உள்ள அந்த கொடுங்கோலன் நீல் சிலையைக் காண் போருக்கு, அந்நாளில் அவனது கொடுமைகளைச் சித்திரித்து தேசபக்தர் மதுர பாஸ்கரதாஸ் எழுதி, அதனை மேடைகள்தோறும் தனது நாடகங்களில் இடையிடையே ஆங்கிலேய ஆட்சியின் கொடுமைகளைப் பற்றி பிரபல தேசியக் கவிஞரும் நாடக நடிகருமான வீரத் தியாகி எஸ்.எஸ். விஸ்வநாததாஸ் பாடிய 'கெருவம் மிகுந்த நீலன் - மகாக் கேவலக் கொடுங்கோலன்!' பாடலே இன்றும் நமது செவிகளில் எதிரொலிக் கின்றன.

# மூன்று வருட இடைவெளி

## ஆர். சூடாமணி

கடைவீதி முனை திரும்பியதுமே அம்மா கண்ணில் பட்டாள். அடி வயிற்றில் அடையாளம் சிலீரென்றது.

மூன்று ஆண்டுகளில் - சரியாய்ச் சொல்வதானால் மூன்று ஆண்டுகள், இரண்டு மாதங்கள், பதினொரு நாள்களில் - அம்மா எப்படி மெலிந்து உருமாறிவிட்டாள்! இத்தனைக்கும் பெற்றோரைப் பார்க்க வேண்டுமென்ற தாபம் மிகும்போதெல்லாம் ஹேமா ஒரு வெள்ளிக்கிழமையன்று மாலை மயிலாப்பூருக்குப் பஸ் ஏறி, அவர்கள் வெள்ளிதோறும் வருகிற கபாலீஸ்வரர் கோயிலருகில் சென்று தொலைவிலிருந்து பார்த்துவிட்டு வருகிறவள் தான். அப்படியும் இன்று அம்மாவின் மெலிவு புதிதாய்க் கண்ணை உறுத்திற்று..

ஓடிப்போய் அம்மாவின் வயிற்றோடு புதைந்து கொண்டு கதறி அழ வேண்டும் போல் ஹேமாவுக்கு உடம்பு பரபரத்தது.

''என்ன ஹேமா நின்னுட்டே?''

பக்கத்தில் நடந்துவந்து கொண்டிருந்த கணவனின் குரல் முகத்தில் ஐஸ் தண்ணீராய் விழ, சுய பிரக்ஞை பெற்றாள்.

''அதோ, அங்கே நாலு கடை தள்ளி என் சிநேகிதி மாலா மாதிரி இருக்கு. போய், அவளாயிருந்தா பத்து நிமிஷம் பேசிட்டு வரட்டுமா? என்கூட ஸ்கூல்ல படிச்சவ. பார்த்து ரொம்ப காலமாச்சு.''

''இரண்டு பெண்கள் பேச ஆரம்பிச்சா பத்து நிமிஷத்தில் முடிந்த மாதிரிதான்!''

''அரைமணி ஆனாலும் தான் எனக்காகப் பொறுத்துக்குங்களேன்!'' சிரித்தாள். அம்மா என்றதும் பொய்ச் சிரிப்பு எத்தனை இயல்பாய் வருகிறது! ''பார்த்து ரொம்ப காலமாச்சு.''

''ஏற்கெனவே சொல்லிட்டியே''.

''ப்ளீஸ்!''

வேண்டாம் என்று சொல்லி விடுவானோ? தன் கணவனுக்கும் தன் பிறந்த வீட்டினருக்கும் பகை மூண்டால் ஒரு பெண்ணின் நிலைதான் நரகமாகிறது.

''நீங்க கடைக்குள்ளே போய் ஷர்ட்டிங் துணியெல்லாம் பார்த்து கிட்டிருங்க. நான் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ வந்துடறேன்.'' பதைப்புடன் பக்கவாட்டில் நோக்கினாள். நல்ல வேளையாய் அம்மா இன்னும் அங்கேயே தான் நின்று கொண்டிருந்தாள். எதிர்த்திசையில் அவள் பார்வை இருந்தது. சாலையைக் கடக்க வேண்டும் போலும்! வாகனங்கள் குறுக்கும் நெடுக்கும் பாய்ந்து கொண்டே இருந்தன. இடைவெளிக்காகக் காத்திருக்கிறாள். மாலை ஆறு மணியின் புரசைவாக்கம் சாலை போக்குவரத்து நெரிசலுக்கு ஹேமா மனசில் நன்றி கூறினாள்.

''சரியா வாசு?''

''சரி. போய் சீக்கிரம் பேசிட்டு வா. மோகன் என்கூட இருக்கட்டும். நீ உன் சிநேகிதியோட பேசிட்டிருக்கறப்ப அவன் இடைஞ்சல்.'' மூன்றரை வயதுக் குழந்தையை வாசு தன்பக்கம் இழுத்துக் கொண்டான்.

''ஊஹூம், நான் அம்மாவோட தான்.'' அவள் சேலையோடு ஒட்டிக் கொண்டான் மோகன். ''இவன் என் கூட இருக்கட்டுமே வாசு!''

''சரி, உன் இஷ்டம். ஜாக்கிரதையாய் இரு. சாயங்கால நெரிசல். அவன் குழந்தை. மோகன் கண்ணா, அம்மா கையைப் பிடிச்சுக்கிட்டே இருக்கணும், என்ன?''

வாசு துணிக்கடைக்குள் நுழையும் வரை ஹேமா சாதாரணமாய் அடிவைத்து நடந்தாள். கடை வாசலின் கண்ணாடிக் கதவுகள் அவனை விழுங்கியதுமே குழந்தையைத் தூக்கிக் கொண்டு தோளிலிருந்து நீள வாரில் தொங்கிய கைப்பை குலுங்க ஓடினாள்.

''அம்மா!''

சாலையின் இரைச்சல்கள் அவள் குரலை விழுங்கிவிட்டன. கிட்டே வந்து கையைப் பற்றியபோது அம்மா திடுக்கிட்டு ''யாரு?'' என்று கையை உதறி இழுத்துக் கொண்ட மறுவிநாடி கண்ணும் வாயும் விரிந்த மகிழ்ச்சியின் வியப்பில் ''ஹேமா! ஹேமு, நீயா?'' என்று குழறினாள்.

''அம்மா! அம்மா!''

அம்மாவின் கிழமுகம் மெலிவுக் கோடுகளில் சுருங்கியிருந்தது. திறந்திருந்த கண்களையே இன்னும் விரியத் திறந்து திறந்து நோக்கினாள். மாலை மந்தாரம் மறைத்திருக்கிறதா? அல்லது கண்ணில் சதை வளர்ச்சியா? முன்பு அந்தக் கோளாறில்லை. இந்த மூன்று ஆண்டுகளில் என்னென்ன மாற்றங்கள் நேர்ந்திருக்குமோ? பெற்ற தாயைப் பற்றியே தெரியாத நிலை.

''அம்மா, உன்னைப் பார்க்க எத்தனை சந்தோஷமாயிருக்கு!'' குழந்தையை இறக்கினாள். ''ஆனாலும் ஒரேயடியா இளைச்சுப் போய்ட்டியேம்மா! உடம்பு ஏதும் சரியாயில்லையா?''

''மனசுக்குள் ஏக்கம் அரிச்சுக் கிட்டே இருந்தால் உடம்பு இளைக்காம என்ன செய்யும்...? ஹேமா, ஹேமுக்கண்ணு! நிஜமாத்தான் எனக்கெதிரே நின்னுகிட்டிருக்கியா? உன்னைப் பார்க்காம கண்ணு பூத்துப் போச்சுடா! இப்படி திடீர்னு இங்கே உன்னைப் பார்ப்பேன்னு நினைக்கவேயில்ல. நல்லாயிருக்கியா?''

கையிலிருந்த துணிப்பை கீழே விழுவது தெரியாமல், சாலை என்ற நினைப்பில்லாமல், மகளைத் தழுவிக் கொண்டாள். மழையினூடே பளீரிடும் சூரிய பிம்பம் போல் அழுகையூடே புன்னகை.

அம்மாவின் இந்த சந்தோஷம் ஹேமாவை முள்ளாய்க் குத்தியது. இந்த சந்தோஷம் அம்மா பட்டிருந்த வேதனையின் அளவுகோல்.

''எனக்கென்னம்மா, நல்லாத்தான்

இருக்கேன். வேளாவேளைக்குச் சாப்பிடறேன், தூங்கறேன். வேறென்ன வேணும் நல்லாயிருக்க?'' குனிந்து பையை எடுத்துக் கொள்ளும் சாக்கில் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''இவன் உன் குழந்தைதானே? மோகன்தானே?''

''ஆமாம்.''

''ஆறு மாசக் குழந்தையில பார்த்தது.''

''இப்ப எல்.கே.ஜி. போறான்.''

''கண்ணா, என்கிட்ட வரியா?''

அவள் தொட்டதுமே குழந்தை சுணங்கி விலகி நின்றான். தாயின் சேலையைப் பற்றி உலுக்கி ''அப்பா கிட்டே போலாம் வா'' என்றான்.

''நான் சீக்கிரமே போயிடணும் அம்மா! வாசுவும் நானும் துணிகள் வாங்க இங்கே ஷாப்பிங் வந்தோம். நீ நிக்கறதைப் பார்த்ததும் எனக்கு மனசு கேக்கலை. ஏதோ சாக்கு சொல்லிட்டு வந்துட்டேன். ரொம்ப நேரம் இருக்கறதுக்கில்லை. வாசு கடைக்கு வெளியே வந்து நம்மைப் பார்த்துட்டார்னா வம்புதான்.''

''ஆமாம், சீக்கிரம் போ... ஆனாலும் உன்னைப் பார்த்தது எனக்கு மனசு கொள்ளாத சந்தோஷம்டி ஹேமா!'' நடுங்கும் விரல்களால் திரும்பத்திரும்ப மகளின் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். சாலையில் போகிற சிலர் விசித்திரமாய்ப் பார்த்துக் கொண்டு போனார்கள்.

''உன்னைப் பார்க்கணும்னு மனசு கிடந்து துடிக்கும். மாப்பிள்ளை இல்லாத நேரம் வந்து அஞ்சு நிமிஷம் பார்த்துப் பேசிட்டு ஓடிடலாம்னு நினைப்பேன். ஆனா உங்கப்பா 'நம்ம உறவை முறிச்சுகிட்டுப் போனவள் வீட்டிலே காலை வச்சியானா அப்புறம் என் முகத்திலே முழிக்காதே'ன்னு கண்டிப்பாச் சொல்லிட்டார். அவர் மட்டும் உன்னைப் பார்க்கத் துடிக்கலையா என்ன? ஆனா ஆம்பிளை மனசு. வைராக்கியமாய் இருக்க முடியுது. என்னாலதான்... ஆனா உனக்கும் கல்லு மனசடி ஹேமா. பெத்தவங்களைப் பார்க்க நீதான் ஒரு நடை மயிலாப்பூருக்கு வரக்கூடாதா?''

''உன் பிரச்னையே தாம்மா எனக்கும். வாசுவுக்குத் தெரிஞ்சா விபரீதமாயிடும்னு பயம். ஆனா நான் உன்னையும் அப்பாவையும் பார்க்காம இல்லை. மனசு ரொம்ப ஏங்கறபோது ஒரு வெள்ளிக்கிழமையாப் பார்த்து வாசுகிட்ட வேறெங்கேயோ போற தாய்ச் சொல்லிட்டுக் கபாலீசுவரர் கோயிலுக்கு வந்து தூரத்திலேர்ந்து உங்க இரண்டு பேரையும் பார்த்துட்டு வருவேன்.''

''அடிப்பாவி! கிட்டே வந்து எங்களோடு பேசியிருக்கக் கூடாதா? நாங்க எத்தனை சந்தோஷப் பட்டிருப்போம்!''

''எப்படிம்மா முடியும்? அந்த ஏரியாவில்தானே வாசுவோட அக்கா இருக்காங்க? எல்லாம் அவங்களால வந்த வினைதானே? நான் உங்ககூட பேசிகிட்டிருக்கறதை அந்தம்மாவோ அவங்களுக்குத் தெரிஞ்ச யாராவதோ பார்த்துட்டா விஷயம் வாசு காதுக்கு எட்டாமப் போயிடுமா?''

''அதுவும் சரிதான்.''

* * *

மூன்று ஆண்டுகளுக்கு முன் ஹேமாவின் தகப்பனாருக்கு அறுபதாண்டு நிறைவு விழா. ஹேமா, வாசு, வாசுவின் அக்கா கமலம் மூவரும் போயிருந்தார்கள். கமலத்தின் கணவன் ஊரில் இல்லை.

மருமகனையும் அவன் சகோதரியை யும் ஓடி ஓடி கவனித்துக் கொண்டாள் ஹேமாவின் தாய். கடைசியில் விடை கொடுக்கும் சமயம் வெற்றிலை - பாக்கு - மஞ்சள் - தேங்காய் அடங்கிய பிளாஸ்டிக் உறையைக் கமலத்திடம் கொடுத்தபோது கைதவறிப் பை கீழே விழுந்தது.

''அத்தனை அலட்சியம்! வயசா யிட்டா போதுமா?'' என்றாள் கமலம்.

''கோச்சுக்காதேம்மா. ஏதோ தவறுதலா..''

''அக்கறை இருந்தா தவறு எப்படி வரும்? கல்யாணத்தின் போதே எங்களையெல்லாம் அவமதிப்பாத் தான் நடத்தினீங்க...''

கமலம் அபாண்டமாய் சண்டையை வளர்த்தாள். பேச்சு தடித்தது.

மனைவியின் முகத்து வேதனை யைப் பார்க்கப் பொறாத ஹேமாவின் தந்தை குறுக்கிட்டார். ''போதும்மா கமலம், நிறுத்திக்க. இப்ப என்ன பெரிய குற்றம் நேர்ந்திடுச்சு? கல்யாணத்தில் தான் உங்களுக்கு என்ன குறை வச்சோம்? என் மனைவி உன்னைவிட வயசில் பெரியவ. நீ இப்படி அவள்கிட்டே மரியாதை இல்லாம பேசறது நல்லாயில்லை.''

''எனக்கு யாரும் மரியாதை கத்துக்கொடுக்க வேணாம். நான் யார் தெரியுமில்லே? பெரிய பில்டிங் காண்ட்ராக்டர் பெண்ஜாதி. பெரிய பணக்காரர் சம்சாரம். தெரியுமா?''

''அந்த காண்ட்ராக்டர் எப்படிப் பணக்காரரானார் என்கிறதும் தெரியும்.''

கமலம் ஓவென்று கூச்சலிட்டாள். ''அடேய் வாசு, உன் மாமனார் என் வீட்டுக்காரர் பத்தி என்ன சொல்றார் கேட்டியா? வாயை மூடிகிட்டு நிக்கறியே!''

''ஊருக்குத் தெரியாத ரகசியம் எதையும் நான் சொல்லிடலையே!''

''கேட்டியாடா வாசு? கேட்டியா?''

இப்போது வாசு பேசினான். ''மாமா, ஆனாலும் ஓவராப் போறீங்க. உடனே என் அக்கா கிட்டே மன்னிப்பு கேளுங்க.''

''கேக்கிறேன். ஆனா அதுக்கு முன்பு உங்கக்கா, வயசில் மூத்த ஒரு பெரிய மனுஷியை மனம் நோகப் பேசினதுக்கு மன்னிப்புக் கேக்கணும்.''

''எங்கக்கா மன்னிப்புக் கேக்கறதா? நல்லாயிருக்கே நியாயம்!''

''நியாயத்தைப் பத்தி நீங்க பேசவேணாம் மாப்பிள்ளை! உங்க குடும்பத்துக்கே நியாயம்னா என்னன்னு தெரியாதுங்கறது நல்லாப் புரிஞ்சு போச்சு.''

சண்டை முற்றியது. கடைசியில் வாசு,''இன்னியோட நமக்குள் உறவு அறுந்துபோயிடுச்சு. இனி இந்த வீட்டு வாசப்படியை நான் மிதிக்க மாட்டேன். ஹேமா, கிளம்பு. உனக்கும் இனிமே இந்த மனுஷங்களோடு ஒரு சம்பந்தமு மில்லை'' என்று கூறி தயங்கித்தவித்த மனைவியை இழுத்துக்கொண்டு வெளியேறினான்.

* * *

சாலையோரம் நின்ற ஹேமாவின் தாய் பெருமூச்சு விட்டாள்.

''அப்பா எப்படிம்மா இருக்கார்?'' என்றாள் ஹேமா.

''அவருக்குத்தான் உடம்பு ரொம்ப முடியலை.''

→

''ஐயையோ! என்ன விஷயம்?''

''இருதயம் பலவீனமாயிருக்குன்னு டாக்டர் சொல்றார். ப்ளட்பிரஷர் வேறு. தினம் மாத்திரை போட்டுக்கறார். ஸ்டாக் தீர்ந்து போச்சு. புதுசு வாங்கணும். இங்கே பக்கத்துல ஒரு நர்சிங்ஹோமில் நம்ம கோமதி மாமி இடுப்பெலும்பு முறிவோட படுத்திருக் காங்க. அவங்களைப் பார்த்துட்டுத் தான் வரேன். அப்படியே பி.பி. மாத்திரைகளை இங்கே புரசை



வாக்கத்திலேயே வாங்கிகிட்டுப் போயிடலாம்னு யோசனை. மருந்துக் கடை எதிர்ச் சாரியில் இருக்கு. இந்த ரோட்டைத் தாண்டறதுக்காக நின்னுட்டிருந்த போதுதான் நீ வந்தே.

''நீ இந்த ட்ராஃபிக்லே ரோட்டைக் க்ராஸ் பண்ண வேணாம். ப்ரிஸ்கிரிப்ஷனைக் குடு. நான் போய் வாங்கிட்டு வந்துடறேன்.''

''எதுக்கு ஹேமா, உன் வீட்டுக்காரர் உன்னைத் தேடிக்கிட்டு வரதுக்குள்ளே நீ கடைக்கு ஓடு.''

''இருக்கட்டும்மா. இத்தனை நாளுக்குப் பிறகு உன்னோடு பேசற சந்தோஷம் கிடைச்சிருக்கு. உனக்கும் அப்பாவுக்கும் நான் இதுகூட செய்யக் கூடாதா?''

அம்மா நெகிழ்ந்து போனாள். பையைப் பிரித்தாள். லேசாய் மாம்பழ வாசனை வந்தது. நோயாளிக்குப் பழங்கள் எடுத்துப் போயிருப்பாள்.

''இந்தா, ப்ரிஸ்கிரிப்ஷன். இதோ பணம்.''

''பணம் உன்கிட்டயே இருக்கட்டும்.''

''ஹேமா! என்னடி இது? ஹேமா!''

குழந்தையைத் தூக்கிக் கொண்ட ஹேமா அவள் கூப்பிடக் கூப்பிட விரைந்து சென்று சாலையைக் கடந்தாள். திரும்பி வந்து மாத்திரைகள் அடங்கிய பழுப்புநிறக் காகித உறையைத் தாயிடம் கொடுத்தாள்.

''நான் வரேம்மா. அப்பாவுக்கு என் வணக்கத்தைச் சொல்லு. நான் ரொம்பக் கேட்டேன்னு சொல்லு.''

அம்மா பேச்சின்றி அவள் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். கண்களில் பனித்த ஈரம் சாலையின் சோடியம் விளக்கொளியில் பளபளக்கத் தலையாட்டினாள்.

ஹேமா அழக்கூடாதென்ற பிடிவாதத்துடன் குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு கடையை நோக்கித் திரும்பி நடந்தாள்.

''அந்த ஆண்ட்டி யாரும்மா?''

இப்போது அழுகை வெடித்து விட்டது. கைக்குட்டையால் வாயைப் பொத்திக் கொண்டாள். லேசில் அடங்க மறுத்த கண்ணீரை வலிக்க வலிக்க அழுத்தித் துடைத்துக் கொண்டாள்.

வாசு இன்னும் துணிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். ''ஹேமா, நிறைய நல்ல வெரைட்டி இருக்கு. எதை எடுக்கறதுன்னு குழம்பிட்டிருந்தேன். நல்லவேளை, நீ வந்துட்டே. உனக்கு இதில் எது பிடிச்சிருக்கு பாரு,''

''ஷர்ட்டைப் போட்டுக்கப்போறது நீங்க!'' என்றாள் சிரிக்க முயன்று.

''பார்க்கப் போறது நீ!''

அவனுக்குப் பிறகு அவளுக்கும் குழந்தைக்கும் உடைகள். யமாஹா வில் மூவரும் திவான்ராமாசாலைக்குத் திரும்பியபோது இரவு மணி எட்டு.

ஹேமா மௌனமாய் வீட்டுக்குள் சென்று வேலைகளைக் கவனித்தாள். புதுத்துணிகளை எடுத்து வைத்தாள். குழந்தைக்கு உணவு கொடுத்துத் தூங்கச் செய்தாள். கணவனுக்கும் தனக்கும் தட்டும் தண்ணீரும் எடுத்து வைத்தாள்.

''சாப்பிட வரீங்களா வாசு?''

அவள் முகத்து சோகம் வெளிப்படையாகவே தெரிந்தது.

''பத்து நிமிஷத்திலே வரேன்னு போனவ ரொம்ப நேரம் பண்ணிட்டே ஹேமா. அங்கே கடைத் தெருவில் சொல்றேன்.''

அவள் பேசவில்லை.

''அதிலேர்ந்தே தெரிஞ்சுக்கிட்டேன், நீ பார்த்தது உன் சிநேகிதிதான்னு.''

''ஆமாம்.'' எங்கோ பார்த்துக் கொண்டு தாழ்ந்த குரலில் சொன்னாள். ''என் சிநேகிதிதான்''

''என்ன சொன்னாங்க உன் சிநேகிதி பாலா?''

''யாரு? ...ஓ, பாலா. ஆமாம், அவள் வந்து... அதாவது இப்ப மெட்ராஸ்லதான் இருக்காளாம். ஒரு பெண் குழந்தையாம். அவ ஹஸ்பெண்ட்...''

நிறுத்தினாள். மாலா என்றல்லவா சொல்லியிருந்தாள்? பாலா என்று கேட்டு மடக்கிவிட்டான். முகம் சிவக்க நிமிர்ந்து பார்த்தாள்.

''நானும் உங்கம்மாவைப் பார்த்தேன்.'' அவன் முகத்தில் சலனம் இல்லை.

அவள் கண்களைத் திருப்பிக் கொண்டாள். உதடுகள் லேசாய் ஒரு கணம் நடுங்கின. ''எனக்கு என்ன தண்டனை?'' என்றாள் வெறுமையான குரலில்.

''எதுக்கு தண்டனை? மூணு வருஷத்தில் நான் மாறியிருக்கலாமில்லையா?'' ஹேமா சட்டென்று திரும்பிப் பார்த்தாள்.

''கோபத்தையும் மனுஷத்தனத்தையும் தனித்தனியாய் வச்சுக்கற பக்குவம் எனக்கு வந்திருக்கலாமில்லையா?''

திடீரென்று கட்டு அவிழ்ந்தாற் போன்ற ஒரு தளர்வு அவளைச் சூழ்ந்தது உதடுகள் புன்னகை பூத்த போதே மோவாய் அலுங்கியது.

''அழணும் போல இருக்கு, இல்லே? கொஞ்சம் இரு.''

அவன் எழுந்து வந்து அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். அவள் தலையைத் தன் தோள்மீது சாய்ந்து அணைத்துக் கொண்டான்.

''இப்போ அழு.''



# மு.மேத்தாவின் கவிதைகள்

### அன்பான காதலரே!

சபைகளில் பாடும்போது
என் பெயரை மட்டும்
உச்சரிக்க வேண்டாம்
இந்த ஊருக்குப்
பழி சொல்லத் தெரியும்...
வழி சொல்லத் தெரியாது!

### அன்பான காதலியே!

ஒரு மூங்கிற் காட்டையே
அழித்து
ஒரே ஒரு
புல்லாங்குழல் செய்தேன்
ஊதும்போது தான்
தெரிந்தது
அது ஊமை என்று!
உன்னைப் போலவே!...

### வாழ்க்கை

விழிகள்
நட்சத்திரங்களை வருடினாலும்
விரல்களென்னவோ
ஜன்னல் கம்பிகளோடு தான்...

### 'சுய'வரம்

வரங்கொடுக்கும் தேவதைகள்
வந்தபோது தூங்கினேன்
வந்தபோது தூங்கிவிட்டு
வாழ்க்கையெலாம் ஏங்கினேன்...

### முதல் தேதி

இந்த
மணியார்டர் பாரத்தில்
நான் எழுதப்போகும்
தொகையை
உற்றுப் பார்க்கின்றன
தொலைதூரத்துக்
கிராமத்திலிருந்து
ஒரு தாயின்
தளர்ந்த விழிகள்!

### இசை

தாங்கமுடியாத
மகிழ்ச்சியில்
மரம்
தலையாட்டுகின்றதே...
பூமிக்கடியில்
வேர்கள்
புல்லாங்குழல் வாசிக்கிறதோ?





வாணி ஜெயராம்

போட்டோ : யோகா





அரவிந்த்சாமி

வண்ணப்படம் : யோகா

# ஸ்ரீ சர்வ மங்கள சாயா புத்திரன்

உலகம் எங்கும் பரவியுள்ள ஸ்ரீ ஆதி சக்தியால் படைக்கப்பட்டு அதில் எண்ணிலடங்காப் பல கோடி ஜீவராசிகளும், கடலும், மலைகளும் பற்பல விதமான செடி, கொடி, மரமும் படைத்து ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு விதமான அற்புத சக்திகளையும் கொடுத்து இந்த மானிட ஜென்மத்துக்காக தம் முன் வினைகளுக் கேற்ப சுக துக்கங்களை அனுபவித்து வருவது கண்கூடு.

இத்தகைய முன் வினைகளின் செயல்படி இன்ப துன்பங்களைப் பாரபட்சமில்லாமல் அளிக்கும் தர்ம கர்த்தா போன்றவள் ஆதிசக்தி என்பதை நாம் மனத்தில் நினைக்க வேண்டும். அத்தகைய சுபா சுப பலன்களை இறைவி தானே நேரே அளிக்காமல், ஈர்ப்பு சக்தி மூலம் மானிடர்களாகிய நமக்கு அளிக்கிறாள் என்பதை ஜோதிட சாஸ்திர நூல்கள் மூலம் நாம் அறிகிறோம். அந்த கிரகங்கள் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்ற ஒன்பதுதான் சோதிட நூல்களின் முடிவாகும்.

ஒன்பது கிரகங்களில், இயற்கையாகவும் அவரவர் ஜாதக அமைப்பின் படியும் இன்பதுன்பங்களை அளிப்ப தற்காக ஏற்பட்ட கிரகம் சனிபகவான். இவர் ஆயுள், ஆரோக்கிய காரகராவார். ஜாதக ரீதியாகவும், கோசார ரீதியாகவும், தசாபுத்திகள் ரீதியாகவும், ஒரு ஜாதக ருக்கு சனி பகவானின் பலன் குறைவாக அமையக் கூடும். சனிபகவான் பகைமை, நீச்சம் அடைந்திருந்தால், அந்த ஜாதகனுக்கு நோய்களின் தொந்தரவுகளும், உயிருக்கு ஆபத்தும், மானநஷ்டம், தனநஷ்டம் போன்ற கஷ்டங்கள் ஏற்படும் என்று ஜோதிட சாஸ்திரம் எச்சரிக்கிறது.

ஆகவே, அத்தகைய காலங்களில் செய்வதறியாது தவிக்கின்ற மக்கள் தெய்வத்தின் மீதும், கிரகங்களின் மீதும், நம்பிக்கை வைத்து சனிபகவானின் உருவ வழிபாட்டை மேற்கொள்வது நலம்.

உலகத்தில் நமது பாரத கண்டம் ஆன்மிகத்தின் சிறப்பிடமாக இருந்து வருகிறது. மக்கள் தொகை பெருமளவிற்குப் பெருகி வருவதைத் தொடர்ந்து, நாளுக்கு நாள் மக்களின் கஷ்டங்களும், சிக்கல்களும் பெருகி வருகின்றன. இத்தகைய துயர்களிலிருந்து மக்களை விடுவிக்க, நவக்கிரகங்களை உள்ளமுருகத் துதிகள் செய்வது நலமளிக்கும் என சமய, சாத்திர, சோதிட வல்லுநர்கள் கூறுகின்றனர்.

நவக்கிரகங்களில் ஸ்திரமான கிரகம் ஸ்ரீ சனிபகவான் ஒருவனே. நன்மையளிக்கும் விஷயத்தில் தாராள மனப்பான்மை கொண்டவனென்றும், அதேபோன்று தீமையளிப்பதிலும் தலைசிறந்தவனென்றும் சோதிட அறிஞர்கள் பகருகின்றனர்.

பிரபாவத்தில் மும்மூர்த்திகள், இந்திராதி முப்பத்து முக்கோடி தேவர்கள் முதல் நளச்சக்ரவர்த்தி, பாண்டு புத்திரர்கள் அனுபவித்த கஷ்டங்கள் உலகறிந்தவை. அத்தகையமாபெருஞ்சக்ரவர்த்திகளே பலப்பலஇன்னல் களை அனுபவித்திருக்க, இந்நாளைய எளிய மக்களான நாம் எம்மாத்திரம்?



### ஸ்ரீ சர்வ மங்கள சாயாபுத்திரனின் வரலாறு
### (ஸ்ரீ சனீஸ்வர பகவான் வரலாறு)

சூரியன், துவஷ்டாவின் பெண்ணாகிய சஞ்சிகை என்பவளை மணம் செய்து, வாழ்ந்தபோது, அந்த இல்லற வாழ்க்கையில் அவர்களுக்கு வைவச்சுத மநு, யமன், யமுனை என்னும் மூவரும் புத்திரர்களாகப் பிறந்தனர். அதன்பின் சஞ்சிகை சூரியனுடைய வெப்பத்தைத் தாங்காமல், சூரியனுக்கே தெரியாமல், தன் தந்தை வீட்டுக்குப் போக எண்ணி, சஞ்சிகை தன் நிழலையே ஒரு பெண்ணாகச் செய்து அங்கு விட்டுச் சென்றாள். அந்த நிழல் உருவத்துக்குச் 'சாயாதேவி என்று பெயர். இவள் சூரியனோடு வாழ்ந்து வந்தாள். சாயாதேவி, சாவர்ணீ என்ற மநுவையும், ஸ்ரீ சனி பகவானையும், பத்திரை என்னும் பெண்ணையும் பெற்றாள்.

சூரியனுக்கும் சாயாதேவிக்கும் புதல்வனாகத் தோன்றிய ஸ்ரீ சனிபகவான், காசிக்குச் சென்று தன் பெயரால் ஒரு லிங்கத்தை நிறுவிப் பூஜை செய்து வழிபட்டான். அதன் பயனாக கிரக பதவியை அடைந்து வாழலானான்.

ஸ்ரீ சனிபகவானுக்கு ஒருகால் சற்றே சிறுத்திருத் தலின் மெல்ல நடப்பான். அதனால் சனைச்சரன் என்ற பெயர் வந்தது. இவனுக்கு குளிகன் என்ற பிள்ளை ஒருவன் உண்டு.

இவனுக்கு உரியனவாக இருவகை மந்திரங்கள் உண்டு. ஒன்று வேத மந்திரம். அதற்கு ரிஷி இளிமிளி. அந்த மந்திரம் உஷ்ணிக் என்னும் சந்தத்தில் அமைந்தது. மற்றொரு மந்திரத்துக்கு உரியவர் மித்ர ரிஷி. அது காயத்ரீ சந்தசை உடையது.

ஸ்ரீ சனிபகவான் வில்லைப் போன்ற ஆசனத்தில் வீற்றிருப்பவன், கழுகு வாகனம் உடையவன், மேற்கு நோக்கி வீற்றிருப்பவன், நீலமேனி உடையவன், முடி தரித்தவன், சூலமும், வில்லும், வரதமும், அபயமும் கொண்ட நான்கு கரங்களை உடையவன், கருமலரையும், நீலமலர் மாலையும் புனைபவன், கரு நிறக் குடையும் கொடியும் கொண்டவன், மேருவை வலம் புரிபவன், சௌராஷ்டிர தேசத்தில் தோன்றியவன், மகர

ராசிக்கும் கும்ப ராசிக்கும் அதிபதி. நவக்கிரக மண்ட லத்தில் சூரியனுக்கு மேற்கே தனுசின் உருவங்கொண்டு மண்டலத்தில் உறைபவன். இவ்வாறு நவக்கிரக ஆராதனம் என்னும் நூல் சொல்கிறது.

சனிபகவானுக்குத் தமிழ்நாட்டில் எங்கும் காக்கை யையே வாகனமாகச் சொல்வது வழக்கமாக இருக் கிறது. கோயில்களில் உள்ள விக்கிரகங்களிலும் காகத்தையே வாகனமாக அமைத்திருக்கிறார்கள்.

இது தவறான கருத்தாகும். காக்கை பிதுர் தேவதை களின் பரிபாலனத்திற்குத்தான் உகந்தது. மேலும் ஓர் ஆற்றல் நிறைந்த பறவையும் அன்று. அதனால் இதை வாகனமாக ஒப்பிட்டுக் கூறுவது ஒவ்வாததாகும்.

ஸ்ரீ சனிபகவான் நவகோள்களில் மிகவும் சக்தி வாய்ந்தவர். தனக்கென்று தனி ஆதிக்கமும் பெற்றவர். தன் பார்வையினாலேயே நன்மை, தீமைகளுக்கு ஏற்ப பலன்களை அளிக்கும் வல்லமை பெற்றவர். கழுகு பறவைகளின் வேந்தன் என்றும் அதன் கூர்மையான பார்வையும், பராக்கிரமமும், தனித்தன்மை வாய்ந்த செயலாற்றும் திறன் பெற்றது என்றும் கூறுவர். அதனால் வடதேசத்து சோதிட நூல்களில் ஸ்ரீசனிபகவானுக்கு கழுகையே வாகனமாக ஒப்பிடுகிறார்கள்.

சனிக்கு மந்தன், பிணிமுகன், முதுமகன், முடவன், காரி என்னும் பெயர்கள் தமிழ் நூல்களில் வழங்கப் படுகின்றன.

இவனுக்கு விருப்பமான மலர் வன்னி, சமீபுஷ்பப் பிரியன் என்ற பெயரால் இதை உணரலாம். இளைத்த உடம்புடையவனாதலால் நிர்மாம்ச காத்ரன், சுஷ்கன், சுஷ்கோத்ரன் என்ற பெயர்களைப் பெற்றிருக்கிறான். இவனுடைய அர்ச்சனையில் இவனைச் சூரியன் முதலிய கிரகங்களாகவும், கணபதி, குமரன், விஷ்ணு, சிவன் முதலிய தெய்வங்களாகவும் திருநாமங்களைக் கூறிப் பூசிக்கிறார்கள். அதனால் இவனுடைய வியாபகம் நன்கு புலனாகும்.

சனி தாமத குணம் உடையவன். மேற்குத் திசைக்கு உரியவன். இவனுக்குப் பிரியமான உலோகம் இரும்பு; மணி நீலம்; தானியம் எள்; மலர் கருங்குவளை; சுவை கசப்பு; இவனுக்கு ஜடாதரன் என்ற பெயர் இருப்பதால் சடையுடையவன் என்று தெரிகிறது.

மாலினி மந்திரத்தால் துதிக்கப் பெற்ற குரு குகருக்கும் களிப்பு அளிப்பவர், எள் கலந்த உணவிலும், நல்லெண்ணெய் விளக்கிலும் மிக்க விருப்பம் உடை யவர். கருணைக் கடலைப் போன்றவர், பயமற்றவர், விரும்பிய பயன்களை அருள்வதில் காமதேனுவைப் போன்றவர், கால சக்கரத்தைப் பிளப்பதில் கதிரவனைப் போன்றவர், சாயாதேவியின் குமாரர், மெல்ல நடப்பவர்.

படத்தில் கழுகு வாகனத்தின் மேல் அமர்ந்திருக்கும் சனிபகவான் திருவுருவத்தைக் காணலாம். இவன் உருவமும், உடையும், அணியும் மணியும், மலரும் கருமை யும், நீலமும் உடையவனாகிறார்.
சடையுடையவனாகவும், சூலமும், வில்லும், அம்பும் பூண்டவனாகவும் காட்சி தருகிறான்.

சனியை ஆயுஷ்காரனாகச் சொல்வது சோதிட நூல். இவனை வழிபட்டு இவனுடைய அருளுக்கு உரியவர்களானால் நீண்ட ஆயுளுடன் வாழலாம். இவனைப் போல் கெடுப்பவரும் இல்லை; கொடுப்ப வரும் இல்லை என்ற பழமொழி ஒன்றும் உள்ளது

ரகுவம்சத்து அரசர்களில் தசரதர் என்னும் அரசர் அறுபதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இப்பூவுலகை ஆட்சி செய்தார். அவருடைய ஆட்சிக்காலத்தில் சங்கடமான ஒரு நிலை தோன்றியது. சோதிடர்கள் பலர் தசரதனிடம் சனிபகவான் ரோகிணி நட்சத்திரத் தின் சகடத்தை உடைத்துக் கொண்டு சஞ்சாரம் செய்யப் போவதால் பன்னிரண்டு ஆண்டுகள் நாட்டில் மழை இருக்காது என்றும், அதனால் நீர்நிலைகள் வற்றிவிடும், தானியங்கள் பட்டுப்போய் விடும், உயிருள்ள ஜீவன்கள் அனைத்தும் பட்டினியால் மடிந்துவிடும் என்றும், மேலும் சர்வ லோகங்களும் அழியக்கூடிய நிலை ஏற்படும் என்றும் கூறினார்கள். இந்நிலை ஏற்படப் போவதை அறிந்த தேவர்களும், அசுரர்களும்கூட அச்சத்தால் நடுங்கினர்.

உலகம் முழுவதும் இந்நிலை கண்டு அச்சுறுவதைக் கண்ட தசரதர் மந்திரிகளுடன் ஆலோசனை செய்தார். குலகுரு வசிஷ்டர் மற்றும் பல முனிவர்களைக் கலந்து இதற்கு என்ன சாந்தி செய்ய வேண்டும் என்று வினவினார். அதற்கு அவர்கள் தசரதனிடம், "சனிபக வான் கிருத்திகை நட்சத்திரத்தின் முடிவிலிருந்து ரோகிணி நட்சத்திரமென்னும் சகடத்தைப் பிளந்து செல்வராகில் உலக மக்கள் அழியும் நிலையைப் பிரம்மா முதலிய தேவர்களாலும் தவிர்க்க இயலாது" என்று கூறினார்கள்.

மக்களுடைய நலனில் தீவிர ஆர்வம் கொண்ட தசரத மன்னர், திவ்யமான பாணங்களைத் தமது சிறந்த வில்லில் பூட்டி, தேரில் ஏறி சனிக்கிரகத்தை நோக்கிப் புறப்பட்டார். அப்போது சனி சூரியனின் மேற்கு திக்கில் இருந்தாராம். தசரதர் ஆகாயத்தை நோக்கிச் சென்று சூரியனுக்கு மேல் ஒன்றேகால் லக்ஷம் யோசனை உயரத்தில் உள்ள நட்சத்திர மண்டலத்தைத்தன் பின்புறம் இருக்கும்படி செய்து நின்றார். சகல ரத்தினங்களால் அலங்கரிக்கப் பெற் றதும், அம்சங்களின் வர்ணத்துடன் கூடியதும், மேரு பர்வதம் போன்று உயர்ந்ததுமான திவ்யமான ரதத்தில் விசித்திரமான மகுடத்தில் ஒளிவீச அமர்ந்திருந்த தசரதன் இரண்டாவது சூரியன்போல் காட்சி யளித்தார்.

தசரத மன்னர் சனியின் மேல் அம்பைச் செலுத்திப் போரிட முயன்றார். இதைக் கண்ட சனிபகவான், யாராலும் மாற்ற முடியாத தனது சஞ்சாரத்தை, ஒரு மானிட மன்னர் மாற்ற முயற்சி செய்வதை அறிந்து தசரதனின் அறிவீனத்தைக் கண்டு சிரித்தார். ஆயினும் தசரதனின் சுயநலம் கருதாத தன்மையையும், உலக மக்களின் நலனிற்காக தன்னிடம் போரிட வந்த காரணத் தையும் எண்ணி அவரை மெச்சி, அவர் வேண்டும் வரத்தைத் தருவதாக வாக்களித்தார். ("நாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து கஷ்டங்கள் வராது தவிர்க்கப்பட வேண்டும்" என்பது தசரதருடைய வரமாக அமைந்தது).

இதனால் மகிழ்ச்சி அடைந்த தசரதர் சனிபகவானைக் குறித்து துதிப் பாடலொன்றைப் பாடினார். அதனைக் கேட்ட சனிபகவான் மனம் மகிழ்ந்து "இத்துதிப் பாடலைத் துதிப்பவர்களுக்கு சனியினால் துன்பங்கள் வரா" என்று கூறினார். அந்த வரத்தைப் பெற்றுக்

கொண்ட தசரத மன்னர் இந்த பூமிக்கு சகலவித நலன் களோடு திரும்பினார். அது முதல் இத்துதிப்பாடல் அனைவராலும் சனிபீடா பரிகாரத்துக்காகப் படிக்கப் பட்டு வருகிறது.

"த்வ்யாக்ருதம் து யத்ஸ் தோத்ரம் ய! படேதிஹ மாநவ;!

ஏகவாரம் த்விவாரம் வா பீடாம் முஞ்சாமி தஸ்ய வை!!"

தினந்தோறும் ஒருமுறை இதைப் படித்தால் போதும். காலை, மாலை என்று இருமுறை படிப்பது மிகவும் நன்று. இதனால் சனிபகவான் மூலம் வரக்கூடிய கஷ்டங்கள் யாவும் நீங்கும். எல்லாவிதமான நன்மை களையும் பெற்று வாழ்க்கையில் இன்புறலாம். இவ் வரலாறு பத்மபுராணம், மார்க்கண்டேய புராணம் ஆகியவற்றில் காணப்படுகிறது. மேலும் இவரை நித்திய ஆராதனையில் பூசை செய்து வழிபட்டு வந்தால், நமக்கு எப்பேர்ப்பட்ட எதிரிகளாக இருப்பினும், அவர்களால் ஏவப்பட்ட செய்வினை, பில்லி, சூனியம், வைப்பு, ஏவல் முதலியவற்றை எதிரிகளுக்கே தந்து நம்மைப் பல விதங்களில் காப்பாற்றி ரட்சிக்கும் அருள் உடையவர். இத்துதிப்பாடல் சனிக்கிழமைகளில் சொல்லப்படுவது நன்றிலும் நன்றாகும். இப்பாடல் அளவில் சிறியது; மகிமையில் பெரியது. பக்தர்கள் அனைவரும் இதை மனப்பாடம் செய்து எல்லா விதமான நன்மைகளையும் அடையலாம்.

**தசரதர் இயற்றிய துதிப்பாடல்**

ப்ரீதோஸ்மி தவ ராஜேந்த்ர ஸ்தோத்ரேணாநேந ஸம்ப்ரதி ।

அதேயம் வா வரம் துப்யம் ப்ரீதோஹம் ப்ரததாமி ச ॥

த்வ்யா க்ருதம் து யத் ஸ்தோத்ரம் ய : படேதிஹ மாநவ: ।

ஏகவாரம் த்விவாரம் வா பீடாம் முஞ்சாமி தஸ்ய வை ॥

ம்ருத்யுஸ்நாநகதே வாபி ஜந்மஸ்தாநகதேபி வா ।

ய: புமாந் ஸ்ரத்தயா யுக்த: ஸுசி: ஸ்நாத்வா ஸமாஹித: ॥

ஸமீபத்ரை: ஸமப்யர்ச்ய ப்ரதிமாம் லோஹஜாம் மம ।

மாஷோத நம் திலைர் மிஸ்ரம் தத்யால் லோஹம் து தக்ஷிணாம் ॥

க்ருஷ்ணாம் காம் மஹிஷீம் வஸ்த்ரே மாமுத்திஸ்ய த்விஜாதயே ॥

மதறிநே து விஸேஷேண ஸ்தோத்ரரேணாநேந பூஜயேத் ।

(இதில் 'த்வ்யா' என்று தொடங்கும் இரண்டாவது துதிப்பாடல் நமக்கு முக்கியமானது).

ஸ்ரீ சனிபகவானின் உருவத்தை சில மாற்றங் களுடன் மக்களின் நன்மைக்கும், உயர்விற்கும், நித்ய வழிபாட்டிற்கும் ஏற்றவாறு சமர்ப்பிக்கின்றேன். இவரைப் பற்றி, பெரும்பாலோர் தவறான கருத்துகளுடன் உள் ளார்கள். ஸ்ரீ சனிபகவானால் கஷ்டம் வரும்போது தான் அவரை வழிபட வேண்டும், மற்ற நேரங்களில் இவரைப் பற்றி நினைப்பது கூடாது என்பது தவறான கருத்து. நித்ய ஆராதனையில் இவரைச் சேர்ப்பது மில்லை சிலருக்குக் கோபம் ஏற்படும்போது இவர் பெயரை உச்சரித்து சனியனே என்று ஏளனமாக முகம் சுளித்துக் கடிவதும் உண்டு. இது மாதிரியான கருத்துகளை, தயவு செய்து நமது மக்கள் மாற்றிக் கொண்டு தினமும் ஸ்ரீ சனிபகவானை வழிபாடு செய்து வந்தால் இவரால் ஏற்படும் துன்பங்கள் விலகி மங்களம் உண்டாகும்.

ஆதிசங்கரர் ஆறு மதங்களுக்கும், பக்தி ஞான வழிபாடு களை எப்படி வகுத்தாரோ, அதாவது கணபதி, குமரன், சிவன், விஷ்ணு, தேவி, சூரியன் போன்ற அறுவரும், இவன் மூலம் ஒன்று சேர்ந்து பொதுவான நல்ல பலன்களை அருள் செய்ய வல்லான். ஆதலால் மக்கள் மனத்தில் எவ்விதமான பயமுமின்றி இவனை வழிபட்டுப் பேரின்பம் அடைய வேண்டுமென்பது என் எண்ணம். இவன் நம் எல்லாருக்கும் மங்களம் அளிக்கும் பொருட்டு சித்திரத்தில் மஞ்சள் ஆடை அணிந் துள்ளான். அவனது பீஜாட்சரம் 'ஸ்ரம்' என்ற நாமத்தின் மேல் வில்போல் ஆசனமிட்டு, கழுகின் மேல் அமர்ந்து, அருள் செய்யும் இமையுடனும், புன்சிரிப் புடைய தோற்றமும் கொண்டு, நல்ல ஞானத்தை அளிக்கவல்ல கருணா கடாட்சத்துடன் அருள் பாலிக் கின்றான். பகவானின் திருவடிகளை வணங்கி இக் கட்டுரையைச் சமர்ப்பிக்கின்றேன். பக்தர்கள் இதில் பிழைகள் காணக் கூடுமாயின், அவற்றைப் பொருட் படுத்தாமல் நலமானவற்றைக் கொண்டு தங்கள் ஆதரவை அளிக்க வேண்டுகிறேன். இத்தகைய விசேட அமைப்பில் என்னால் வரையப்பட்ட சனி பகவானின் படத்தைப் பெற விரும்பும் அன்பர்கள் நாயுடு ஹால் 95, 96, பாண்டி பஜார், சென்னை - 600 017 என்ற முகவரியில் தொடர்பு கொண்டு பெற்றுக் கொள்ளலாம்.

சனிபகவான், அவரவர் ஜாதகத்தின் படி அவரவர் பிறந்த (சந்திர) ராசிக்கு 12, 1, 2 என்னும் மூன்று ராசிகளில் சனிபகவான் சஞ்சாரம் செய்யும் போது ஏழரை நாட்டுச் சனி என்று வழங்கப்படுகிறார்.

ஏழரை நாட்டுச் சனி என்பதை ஏழரை ஆண்டுச் சனி என்று பொருள் கொள்ள வேண்டும்.

சனிபகவான் ஒவ்வொரு ராசியிலும் இரண்டரை ஆண்டுகள் சஞ்சாரம் செய்வார்.

அவரவர் பிறந்த (சந்திர) ராசிக்கு எட்டாமிடத்தில் சனி வரும்பொழுது, அஷ்டமச் சனி என்றும், அவரவர் பிறந்த (சந்திர) ராசிக்கு நான்காமிடத்தில் சனி வரும் பொழுது அர்த்தாஷ்டமச் சனி என்றும் அழைக்கப் படுவார். ஏழரை நாட்டுச் சனியும், அஷ்டமச் சனியும், அர்த்தாஷ்டமச் சனியும் இருக்கப் பெற்றவர்கள் படும் பாடுகள் எண்ணிலடங்காதவை.

ஆகவே, அத்தகைய காலங்களில் செய்வதறியாது தவிக்கின்ற மக்கள் தெய்வத்தின் மீதும், கிரகங்களின் மீதும் நம்பிக்கை வைத்து, லோக நன்மையும், உலக சகோதரத்துவமும் ஏற்பட வேண்டுமென்று அப் பகலோன் மைந்தனுக்கு 33 அடி உயரச் சிலை அமைத்து புனித திருக்கோயிலமைத்து சேவை உணர்ச்சியுடன் பணி செய்ய வாருங்கள் என்று வணக்கமுடன் பிரார்த் திக்கிறேன்.

**நவக்கிரக ஸ்தலங்கள்**

**ஓவியம், கட்டுரை:**

**ஜி.கே. மூர்த்தி.**



## உன் கையில் உலகம்

கலகலெனச் சிறுகுழந்தை கைகொட்டிச் சிரிக்கும்
கலகங்கள், கலக்கங்கள் காணாமல் இருக்கும்.
வளருகிற வயதினிலே, வாய்மைகள் மறைய,
வஞ்சகமும் நெஞ்சகத்தில் நஞ்சுகளும் நிறைய,
தலைவரெனப் பலர் வருவார்; தான் வளர வழிகள்
தனைக்காண, உனை ஏய்க்க இனிமையுறு மொழிகள்
பலப்பலவாய் உரைத்திடுவார். பகல்வேட மிடுவார்.
பாடுபடு வாய், இலையேல் பாழ்படுத்தி விடுவார்.

'உனக்காக உழைப்பது'வாய் உரைப்பதையே நம்பி
உன்வாழ்வை ஒருபோதும் இழக்காதே தம்பி !
கணக்காக ஏய்ப்பார்கள், கண்டறிய மாட்டாய்.
கடைசியிலே தான் தெரியும் கல் எழுத்துக் காட்டாய்.
தனக்காக வாழாமல் தரைமக்கட் கென்றே
தகைவாழ்வு வாழ்ந்தோரின் தலைமுறைகள் அன்றே !
உனக்காக உழைமுதலில் ! குடும்பத்திற் காகும்.
உன்வீட்டு விறகில்தான் உன்கட்டை வேகும் !

கல்வியினைக் கண்ணென்றே கற்றுக்கொள் ! ஒளியில்
கால்வைக்க அதுவொன்றே பற்றுக்கோல் வெளியில்
செல்வமதை நல்வழியில் தேடிவிட முனைவாய் !
திருட்டுக்கும் இருட்டுக்கும் தேடாதே நினைவாய்.
பல்விதமாம் கலைபயில்க ! பரவிடும் உன் புகழே.
பசுமையுறும் எதிர்காலம்; பறந்துவிடும் இகழ்வே.
சொல்வதிலே திருத்தம் வரும் சோதனைகள் விலகும்.
சோர்வின்றி உழைத்துப்பார், உன்கையில் உலகம் !

பகவானந்ததாசன்

## உறுதி ஏற்போம்!

வறுமையின் சுவடுகள் அழிந்திட - வாழ்வில்
வளமையின் தொடக்கம் பளிச்சிட
பொறுமையின் சின்னம் மிளிர்ந்திட - இன்று
பொன்னாள் வந்தது சிறந்திட!

அறிவொளி எங்கும் பரவிட - நாட்டில்
அறியாமை இருளே விலகிட
திறமைகள் நாளும் வெளிப்பட - தீபத்
திருநாள் வந்தது நினைத்திட!

வாழ்வில் ஏழ்மை களைந்திட - மக்கள்
வளங்கள் யாவும் அடைந்திட
தாழ்வுகள் உலகில் நீங்கிட - இன்பத்
திருநாள் வந்தது நிறைந்திட!

ஒருமையின் பெருமை உணர்ந்திட - நாட்டில்
ஒற்றுமை என்றும் நிலைத்திட
அருமையாம் இந்தத் திருநாளில் - நாம்
அனைவரும் உறுதி ஏற்போமே!

பி.வி. கிரி

## ஈசன் கருணை

கேவல நிலையில் கிடந்தோம் அன்று
ஈசன தருளால் பிறந்தோம் இன்று
ஏவிடும் பணியைக் கொளவே நன்று
மேவிடும் உருவைத் தரவே தொன்று
தாங்கிடும் இருகால் சமைத்து மற்று(ம்)
ஓங்கிடும் இருகை ஒழுங்காய் வைத்து
பாங்குடன் எலும்பைப் பணியில் கொள்ள
ஆங்கவன் தசையை அழகாய் இட்டு
நாரென நரம்பால் நயமுடன் பின்னிச்
சீருடன் நிணமும் செந்நீரும் பெய்து
ஒருடல் இதனில் ஒண்தோல் ஒட்டி
வேருடன் பிறவிப் பணியை வெல்லத்
தேங்கிய புலன்கள் ஐந்தும் ஈந்து
பாங்குடன் அவத்தை ஐந்தும் தந்து
ஈங்கவன் சகல நிலையில் இட்டான்.

நெய்தற்கிழான்

## வேண்டும்!

காவியத் தலைவ னுக்கும்
கனிவார்ந்த அன்பு வேண்டும்!
ஓவியக் கவிஞ னுக்கும்
ஒளிவழங்கத் தெளிவு வேண்டும்!
பாவியப் புலவ னுக்கும்
புரட்சிமிகு துணிவு வேண்டும்!
மேவிய கருத்தைச் சொல்லி,
மனிதனாக வாழ வேண்டும்!

★ ★

இடிமுரசார்

## கலிகாலம்

முள்ளை ஒடித்தழும் ரோஜாக்களின் ஓலம்
முறைதவறி வாழ்வோர்க்கே இது காலம்;
பள்ள உவர்க்கடலும் பாவம்கழுவாது - நாளும்
மெல்ல மணவிடம் வந்துபோடும் கும்மாளம்!
வெள்ளைத் தாமரைகள் விதவைகள் கோலம்
மாறியேதினம் வேண்டுவது விதவித ஜாலம்!
'கொள்'ளிடம் குதிரைகள் கும்பிடும் காலம்
கொற்றவர் 'கள்'குடிக்கு' அஞ்சிடும் கோலம்
கொள்ளிடம் கால்வாயாய்க் குறுகிய காலம்
மற்றவர் நலனை மறந்த மாஞாலம்!
கள்ளம், கபடம், கயமை கொண்டோர்க்கே
கற்றோரும் கழல்வருடிப் போடும்தாளம்!
உள்ளதைச் சொன்னால் உயிருக்கே பாதாளமென
குற்றங்கள் நாளும் பெருகிடும் பூகோளம்!

பின்னலூர் மு. விவேகானந்தன்

# ஆசிகளுடன்

அனுராதா ரமணன்

உள்ளிருந்து வந்த ஓமப் புகை, கண்ணைக் கரித்தது. இராமேசம் மெல்ல வெளியே வந்து வாசலில் போடப் பட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொள்கிறார்.

உள்ளே கூட்டம் பிதுங்கி வழிகிறது. எல்லாம் இராமேசத்தின் பிள்ளை விசுவநாதனின் மாமியார் வீட்டு மனிதர்கள்.. சிநேகிதப் பட்டாளங்கள். இன்னும் விசுவநாதனின் மருமகள், மகனுடைய உறவினர்களும், உயிர் நண்பர்களும்...

இராமேசத்தினுடைய கொள்ளுப் பேரனுக்கு ஆண்டு நிறைவு. காது குத்தி, கல்யாணம்.. கொட்டு மேளம்... பங்களாவின் பின்னால் பந்தல் போட்டு வடை, பாயசத்தோடு சமையல் தயாராகிக் கொண்டிருக்கிறது.

இராமேசம், தனது கண்ணாடிக் கூண்டைத் திறந்து,கொள்ளுப் பேரனுக்கு ஆசிர்வாதப் பணமாக, தான் கொடுக்கப் போகும் ரூபாய் நோட்டு பத்திரமாய் இருக்கிறதா என்று ஒரு முறை பார்த்துக் கொண்டார்.

ஐந்து ரூபாய்... புத்தம் புதிய தாள்...

எப்பொழுதும் - அந்தக் குடும்பத்தில் நடக்கும் கல்யாணம், வளைகாப்பு, பெயரிடுதல், ஆண்டு நிறைவு இப்படி எது நடந்தாலும் முதல் ஆசிர்வாதப் பணம் இராமேசம்தான் கொடுப்பார்.

ரோச்சனோ ரோச்சமான - சோபனோ சோபமான கல்யாண முகூர்த்தத்தில் - பெரியவர் - குழந்தையோட கொள்ளுத் தாத்தா ஆசிர்வாதம் ....“எங்கே சார் பெரியவர்? கூப்ட நங்கோ... அவர் வந்து, அவர் கையாலேதானே, தொடங்கி வைக்கறது வழக்கம்...?”

அந்த வீட்டுக்கு வ மாய் - எல்லா விசேஷங்களுக்கும் வரும் புரோகி தர்களுக்குக் கூடத் தெரியும்.

இராமேசத்தின் இரண்டாவது பிள்ளை நாராயணனின் கடைசிப் பேத்தி வரை அப்படித்தான் நடந்து வந்திருக்கிறது.

“எங்கே அப்பா? அவரைக் கூப்பிடுங்க... அவர் முதலிலே தரட்டும். அதுதான் ராசி...”

இப்படி பெற்ற குழந்தைகள் கூறும் போது அந்த வயதான சரீரத்துக்குள் சந்தோஷம் மின்சாரமாய்ப் பரவும். அவர், தன் மனைவி அலமேலுவை கம்பீர மாய்ப் பார்ப்பார்.

“பணம் பத்திரமா வச்சிருக்கியா?”

“ஆகா... உங்க மூக்குக் கண்ணாடிக் கூண்டுக்குள்ளேதானே வச்சிருக்கேன்...”

கணவரின் பெருமையில் அவளுக்கு மட்டும் பங்கில்லையா என்ன? ஆனாலும், எதையும் அவள் வெளிக் காட்டிக் கொண்டதே இல்லை. அவளது சுபாவம் அது.

கிராமத்தில் இருந்த வரையில் கூட யாராவது கொள்முதல் போட்டு வியாபாரம் தொடங்க வேண்டுமானால், பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்க வேண்டுமானால், பெண்ணுக்குக் கல்யாணம் பேச வேண்டுமானால் - இராமேசத்தைத்தான் முதலில் பேச அழைப்பார்கள்.

அவர் தொட்டு, தொடங்கி வைத்தது எதுவுமே நடைபெறாமல் போனதில்லை.

நினைவு தெரிந்த நாளிலிருந்து ஐந்து ரூபாய்க்கு மேல் அவர் தன் கையால் யாருக்கும் கொடுத்ததில்லை. இந்த ஐந்து ரூபாய் கூட - குடும்பத்தில் நடக்கும் வைபவங்களுக்குத்தான். வெளியிடம் என்றால் இரண்டு ரூபாய்க்கு மேல் நகர்த்தியதில்லை.

அதனால் என்ன? அவர் கையால் தொட்டுக் கொடுத்த பணம் வளரும் என்கிற அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிற போது - அவர் ஒரு பத்துபைசா நாணயத்தைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ள மற்றவர்கள் காத்திருந்தார்கள்.

அதையெல்லாம் பொய் என்று ஆக்கி விட்டார்கள், விசுவநாதனுடைய பிள்ளைகள்..

“எல்லாம் பெண்டாட்டிங்களோட தலையணை மந்திரம்தான் .. வேறென்ன?..”

அலமேலுவிடம் ஒரு முறை வாய் விட்டுச் சொல்லிக் குறை பட்டுக் கொண்டார் பெரியவர்.

அவளுக்கும் அதில் வருத்தம் தான். இருந்தாலும் பேரப் பிள்ளைகளையும், அவர்களது பெண்டாட்டிகளையும் விட்டுக் கொடுக்காமல் பேசினாள்.

“நம்ம விச்சு, அப்பா எங்கே, எங்கே என்று தான் தேடினான்... அப்போன்னு பார்த்து, நீங்க, வாயில அடக்கி வச்சிருந்த புகையிலையைத் துப்பப் போயாச்சு. யார் மேலே தவறு? யாரோ, சுந்தரோட பெரிய மாமனார்... பெரிய கோடீஸ்வரர். ஆளுசரத்துக்கு என்னவோ பார்சலை வச்சிட்டு நின்னுட்டிருந்தார்.... உங்களுக்காக அவரை எத்தனை நேரம் காக்க வை⌐கிறது? நான்தான் ‘தாத்தாவோட பணம் எங்கேடா போயிடப் போறது? பெரியவரைக் காக்க வைக்காதே’ன்னு சொன்னேன்... அது ஒரு குறையாய்ப் போயிருச்சா உங்களுக்கு? வயசானதுக்கு அடை யாளம் கோபம்தான் இருக்கு...”

அன்றைக்கு -அந்தக் கணத்தில் அவர் நடந்ததை யதார்த்தமாக எடுத்துக் கொண்டாலும் - அடுத்தடுத்து வீட்டில் நடந்த சுப நிகழ்ச்சிகளில் எல்லாம் அவர் பின்னுக்குத் தள்ளப்பட்ட போதுதான் புரிந்து கொண்டார்...

முன் போல பெரியவர்களை மதித்து, தாத்தாவின் ஆசிர்வாதத்துக்காகவும், அவர் தருகிற ஐந்து ரூபாய்க்காகவும் ஏங்கி நிற்கிற தலைமுறை இல்லை இது..

முன்பெல்லாம் - குடும்பத்தில் உள்ள அத்தனை பேரும் ஒரிடத்தில் கூடி, பழைய கதை பேசி, நடுவில் விட்டுப் போன உறவைப் புதுப்பித்து, பெண் கொடுத்து, பெண் கொண்டு சந்தோஷமாய்ப் பந்தி போட்டு... கொண்டாடுவதற்காகவே காதுகுத்தல்

வைபவமும், உபநயனமும், அறுபதுக்கு அறுபதும் வந்தன.

இப்பொழுதோ - இவை எல்லாம் பிசினஸ் கெட் - டு - கெதராகி விட்டது.. விச்வநாதனின் மூத்த பிள்ளை - தன் மகனின் பிறந்த நாளுக்கு நூறு பெரிய மனிதர்களை அழைத்து விருந்து போட்டால் - நாராயணனின் இரண்டாவது மகன் - தன் பங்குக்கு நாலு பேரைக் கூப்பிட்டுச் சாப்பாடு போடச் சந்தர்ப்பமே இல்லையென்று -அவசர மாய்த் தன் பெண்ணுக்கு அரங்கேற்றம் என்கிறான்...

ஆறு வயசுப் பெண் 'தத்தக்கா - பொத்தக்கா' என்று ஆட - அதற்கு அறுநூறு பேருக்கு டின்னர்... சபா வாடகை... பிரதம விருந்தாளிக்கு மாலை மரியாதை... அவர் கையினால் - தான் பெற்ற பெண் பொன்னாடை போர்த்திக் கொள்வதைப் படமாய் எடுக்க வீடியோ கேமரா... பத்திரிகைகளில் படத்துடன் வெளியிடத் தனி ஏற்பாடு..

இது போன்ற சமயங்களில் இராமேசம் - விளையாட்டில் சேர்த்துக் கொள்ளப்படாத சிறுவன் போல - தனித்து விடப்பட்டார்... சில சமயங்களில் தானே முந்திரிக் கொட்டை மாதிரி முந்திக் கொண்டு போய் நின்று மூக்கறுபட்டுமிருக்கிறார்.

''இருங்கடா..என் கொள்ளுப் பேரனுக்கு முதல்லே நான் ஆசிர்வாதம் பண்ணிடறேன்..''

''இப்ப உங்களுக்கு என்னப்பா அவசரம்? நம்ம வீட்டு மனுஷங்க எப்ப வேணுமானாலும் தரலாம்... எத்தனை பேர் சாப்பிடக் கூடப் போகாம, பணம் ஓதியிடறதுக்குன்னு காத்துட்டிருக் காங்க?''

விச்வநாதன் தந்தையை அதட்ட -

''என்ன, உங்களைத்தானே.. இங்கே கொஞ்சம் வாங்கோ... ரொம்ப நேரமா, காபி வேணும்னு கேட்டுட்டிருந்தாப்பல இருக்கே..''

அலமேலு, கணவரை வடம் கட்டி இழுக்காத குறையாக இழுக்க-

இராமேசத்துக்கு ரோஷத்தில் கண்ணில் நீர் தளும்பும்.

சந்தடி எல்லாம் ஓய்ந்து, சாப்பிட்டு, ஆரஞ்சுக்குவியலும், தேங்காய்ப் பைகளும் ஒரு பக்கம் குவிந்து கிடக்க - உண்ட மயக்கத்தில் இராமேசம் கட்டி லில் சுருண்டு கிடக்க - அப்பொழுது அன்றைய வைபவத்தின் கதாநாயக, நாயகி அல்லது பூணல்காரப் பிள்ளைகள் அவரருகில் வந்து நிற்பார்கள்.

''தாத்தா... நமஸ்காரம் பண்றேன்; ஆசிர்வாதம் பண்ணுங்கோ..''

இராமேசம் காதில் விழாதது போல சிறிது நேரம் படுத்திருப்பார். உள்ளுக்குள் முகம் தெரியாத கோபம் நுரைக்கும்.

''காலம்பற முகூர்த்த சமயத்துல ஒவ்வொருத்தனும் விரட்டி விரட்டி அடிச்சானுங்க... இப்ப வந்து நமஸ்காரம் பண்றாங்களாம் ... நமஸ்காரம்..''

கொஞ்ச நேரம் முறுக்கிக் கொண்டு கிடப்பார். கொஞ்ச நேரம்தான்..

அதற்குள் பாசம் கிடந்து அடித்துக் கொள்ளும்.

'ச்சே... நம்ம குழந்தைகள் கிட்ட நமக்கு என்ன கோபம் வேண்டிக் கிடக்கு?''

உடனே எழுந்து உட்கார்ந்து, மடியைத் துழாவி, கண்ணாடிக் கூண்டைப் பிரித்து, தான் பத்திரமாய் வைத்திருக்கும் ஐந்து ரூபாயை எடுப்பார்..

''எங்கேடா உங்கம்மா... வெத்தலை பாக்குத் தட்டைக் கொண்டு வரச் சொல்லு..''

அந்தக் குரலில் கம்பீரம், அலமேலுவின் இதழ்க்கடையில் புன்னகையைத் தோற்றுவிக்கும்.



அவளுக்குத் தெரியும்; ஒரு ரிடையர்டு ஹெட் மாஸ்டரினால் இதற்கு மேல் கொடுக்க முடியாது என்பது...

ஆனால் பிள்ளைகளுக்குத் தெரியவில்லையே... காலம் மாற மாற - சம்பிரதாயங்களும், பழக்க வழக்கங் களும் மாறித்தானே ஆக வேண்டி யிருக்கிறது?

அன்றைக்கு அப்பா ஆசிர்வதித்துத் தரும் அந்த ஐந்து ரூபாய் லட்ச ரூபாய்க்கு சமமாயிருந்தது... இன்று?

அலமேலுவின் பேரன்களுக்கும், அவர்களது மனைவிகளுக்கும் இந்தப் பழக்கம் துளிக் கூடப்பிடிக்கவில்லையே.!

''நானும் பார்க்கறேன்.. ஒவ்வொரு ஃபங்ஷனையும் நாம எவ்வளவு கஷ்டப்பட்டுச் செய்யறோம்? இன்னிக்கு எங்க அப்பாவோட அழைப்புக்கு இணங்கி சூப்பர் ஸ்டார் வந்திருக்கார்.. அப்பாவோட வாடிக்கையாளர்கள் - பெரிய கோடீஸ்வரங்க அவங்க வேலையெல்லாத்தையும் விட்டுட்டு, அப்பாவோட வார்த்தைக்கு மதிப்பு கொடுத்து வந்திருக்காங்க... ஒவ்வொரு வரும் ஆயிரக்கணக்கில பணம் செலவு செய்து, கிஃப்ட் வாங்கிட்டு வந் திருக்காங்க.. பார்த்தீங்க இல்லையா? அவங்க முன்னாடி தாத்தா - 'ஆசிர்வாதம் தொடங்கும் போது என்னைக் கூப்பிடு.. கூப்பிடுன்னு ஒரே தொந்தரவு.. இவர் கொடுக்கற அஞ்சு ரூபாய்க்கு - சாஸ்திரிகள் ஒரு முழ நீளம் மந்திரம் சொல்லி .. ஆயிரம் கட்டி வராகன்னு' வேற சொல்லணுமாக்கும்.''

''இத இப்பவே சொல்லிட்டேன்... நாலு பேர் முன்னாலே - குடும்பத்துக்கு பெரியவர்ங்கற முறையில ஒரு நாற்காலியப் போட்டு, அவரை உட்கார வையுங்க. அதை நாங்க யாரும் வேண்டாங்கலை. அந்த அஞ்சு ரூபா ஆசிர்வாதத்தை மட்டும் அப்புறம் வச்சுக்கச் சொல்லுங்க.. அல்லது கௌரவமா ஒரு கவர்லே போட்டுத் தரச் சொல்லுங்க.. வெளில தெரியாமலாவது இருக்கும். யாரோ வெளி மனுஷங்க கொடுக்கிற மொய்ப் பணமா இருந்தாலும் பரவாயில்லை. ஏதோ, அவங்களுக்கு முடிஞ்சது அவ்வளவுதான்னு சொல்ல லாம்,.. தாத்தா - அதுவும், ஒரு ஜட்ஜ், ஒரு டாக்டர், ஒரு புரபசர் இப்படி மூனு ரத்தினங்களைப் பெத்தவர்.. பேரன்கள் எல்லாரும் இன்னிக்கு பெரிய டைரக் டர்களாகவும், சினிமாப்பட முதலாளி களாகவும் இருக்கிறப்ப.. ஓர் அஞ்சு ரூபாயைத் தூக்கிக்கொண்டு வந்து அமர்க்களப்படுத்தறார்..''

இத்தனையும், அலமேலு தன் காதில் மட்டும்தான் விழுந்ததாக நினைத்துக் கொண்டிருக்க இராமேசத்தின் செவிகளிலும் விழத்தான் செய்தன.

பலன்-

இப்பொழுதெல்லாம் வீட்டில் எந்த வைபவம் வந்தாலும் இவர் வாசலுக்கு வந்து உட்கார்ந்து விடுகிறார்.

'ஆசிர்வாதம் தொடங்கற சமயத்துல கூப்பிடு' என்று சொல்வாரே தவிர -அவர்கள் கூப்பிடாவிட்டாலும் அதிகம் அலட்டிக் கொள்வதில்லை.

மனசு மட்டும் - தான் ஆசி வழங்கி, இன்றைக்குப் பெயரும் புகழுமாய் இருக்கும் தனது வம்சக் கிளைகளைப் பற்றியே நினைக்கும்..

'விச்வநாதனோட மூத்த பிள்ளை.. முதல்லேயெல்லாம் படிப்பே வரல்லை.. 'உங்க கையாலே ஆசி வாங்கியும் கூட பய தேற மாட்டான் போல இருக் கேப்பா'ன்னு ஒரு நாள் அழல்லையா? ஆனா - அவன்தான் இன்னிக்கு சினிமாவுல கொழிச்சுக் கொட்டறான்..'

''நாணா பொண் சீதா.. அமெரிக்கா கிளம்பறதுக்கு முன்னாலே 'தாத்தா நீங்க ஆசிர்வாதம் பண்ணுங்கோ'ன்னு காலிலே விழுந்தா - இன்னிக்கு லட்சக்கணக்கான டாலர்களுக்கு சொந்தக்காரி..''

'ஏன்.. இன்னிக்கு தாத்தாவோட அஞ்சு ரூபாயை மட்டமாய்ப் பேசறாளே.



பேரன் பொண்டாட்டி.. அவளோட அப்பாவுக்கு இதே சினிமாவுலே கோடிக்கணக்கா நஷ்டம் வந்தப்ப - புது படத்தின் பூஜைக்கு என் கையாலே அஞ்சு ரூபாய் வாங்கிட்டு, கீழே நெடுஞ்சாண் கிடையா விழுந்து அழுததெல்லாம் மறந்து போச்சா? நான் தொட்டுத் தந்த பணம் சமுத்திரமாப் பெருகி - இப்ப இவளைப் பேச வைக்கிறது...

'ஹூம்...'

அவர் தோட்டத்து நாற்காலியில், கன்னத்தில் கை பதித்து அமர்ந்திருந்தார். புறக்கணிக்கப்பட்ட அவமானம் தீயாய்ச் சுட்டது.

சற்று தொலைவில் பங்களாவிலிருந்து சிரிப்பு சத்தம்.. காமிராக்களின் ஃப்ளாஷ்...

'அய்யா...'

'....'

''அய்யா...''

இராமேசம் சுற்றும் முற்றும் பார்த்தார்... வாசற்புற இரும்பு கேட்டுக்குப் பின்னால் குறப்பெண். இடுப்பில் கமுக்மொழுக்கென்று குழந்தை...

இவர் பார்ப்பது தெரிந்ததும் அந்தப் பெண் கைகளை உயரத் தூக்கிக் கும்பிட்டாள்..

''அய்யா.. சாமீ.. குழந்தைக்கு ஏதுனாச்சம் பலகாரம் தாங்க..''

''போ.. போ.. இன்னும் சாப்பாடே ஆகலை.. எல்லாரும் சாப்பிட்டதுக்குப் பிறகு கூப்பிடறேன்..''

அந்தப் பெண் கலைந்த கூந்தலும், பரந்த புன்னகையுமாய்க் கெஞ்சினாள்..

''குழந்தை பசி பொறுக்காது சாமி.. ராவே ஒண்ணும் கிடைக்கல..''

குழந்தையைப் பார்த்தால் பசி தெரியவில்லை. கதுப்புக் கன்னங்களும், கருந்திராட்சைக் கண்களும், சின்ன உதட்டில் வழியும் எச்சிலுமாய்..

இராமேசத்தைப் பார்த்து, பொக்கை வாயைத் திறந்து சிரித்தது..

உள்ளே -

ஆசிர்வாதம் தொடங்கிவிட்டது - புரோகிதர் கணீரென்ற குரலில் - 'ரோச்சனோ ரோச்சமான - சோபனோ சோபமான கல்யாண முகூர்த்தத்தில் ' என்று நீட்டி முழக்கி யாரோ ஒரு பெரிய மனிதரின் பெயரை உச்சரித்துக் கொண்டிருந்தார் ..

''ஏய் பொண்ணு.. இங்கே வா..''

இராமேசம் குறப்பெண்ணை, கை தட்டி உள்ளே அழைத்தார்.. அந்தப் பெண்ணின் முகத்தில் நம்பிக்கையில்லாத ஆச்சர்யம்..

''என்னையா..?''

''உன்னையே தான்..''

அவள், இரும்பு கேட்டைத் திறந்து கொண்டு தயங்கியபடி உள்ளே வர - இராமேசம் தனது இடுப்பு மடிப்பில் செருகியிருந்த மூக்குக் கண்ணாடிக் கூட்டைத் தேடினார்..

''இதோ இருக்கு..''

அவர் பின்னால் ஓசையின்றி அந்த நேரம் வரையில் நின்றிருந்த அலமேலு, கண்ணாடிக் கூண்டை எடுத்துத் தர -

இராமேசம் கூட்டைத் திறந்து - அதில் தனது கொள்ளுப் பேரனுக்காக எடுத்து வைத்திருந்த ஐந்து ரூபாயை எடுத்து - அந்தக் குறக் குழந்தையின் பிஞ்சுக் கரத்தில் கொடுத்தார், தன் ஆசிகளுடன்.

''நீங்க - பிள்ளைகுட்டிகளோட நல்லா இருக்கணும் சாமி;''

குறத்தியின் வாழ்த்து, இராமேசத்துக்கு சிரிப்பை வரவழைத்தது.

''நாங்க எல்லாரும் நல்லா இருக்கறதுதான் எப்பவும் இருக்கே.. இனிமே நீயும், உன் குழந்தையும் நல்லாயிருங்க.. என் ஆசிர்வாதம் உன் பிள்ளைக்கு..''

குறத்தி - தன் இடுப்பிலிருந்த குழந்தையை இறக்கி, இராமேசத்தின் காலடியில் கிடத்த - அலமேலு யாரும் பார்க்காத வண்ணம் - பொங்கிவழிந்த கண்ணீரைப் புடைவைத் தலைப்பால் ஒற்றிக் கொண்டாள்.

## வலிவும் பொலிவும்

ஏர்வாடி. எஸ். இராதாகிருஷ்ணன்





வலியைத் தந்துநாம் வந்ததனால்தான்
வலியே வாழும் வாழ்வென்றானது.
வலியே நமக்கு வாழ்வினை வழங்கும்
வலியே வாழ்வின் வழியினை அமைக்கும்.

மாய்கிற வரைக்கும் மானிட வாழ்க்கையில்
நோய்களோ நாய்களாய் நம்மைத் துரத்தும்
நோயில் லாமலும் ஆயுள் முடியலாம்
நோய்நொடி யோடும் நீண்டநாள் வாழலாம்.

நோயுடன் நீண் டநாள் வாழ்வ தென்பது
பாவத்திற் கான பரிசென்றானது.
மருத்துவத் தாலே பிழைப்பது யாரெனில்
மருத்துவர் மட்டுமே! மற்றவர் இல்லையே!









துன்பமும் வலிகளால் தோன்றுவ துண்டு
இன்பமும் வலியால் ஏற்படல் உண்டு.
சுகமோ சோகமோ சொரணைகள் இல்லையேல்
இகத்தில் வாழ்வதில் அர்த்தமே இல்லை.

உணர்ச்சி வசப்படும் தன்மையோ வேறு
உணர்வுகள் விழித்துள்ள நிலைமையோ வேறு
ஆத்திரப் படுபவன் அடிக்கடி நோயாளி
காத்திருப் பவன்தான் காலனின் முதலாளி.

வலிகள் எப்படி வருவதென்றாலும்
வலிதான் வாழ்வில் வலிவினை வழங்கும்
வலிவும் பொலிவும் வாழ்க்கையில் பெற்றிட
வலிக்கும் வரைக்கும் உழைத்திட வேண்டும்.



அமுதசுரபி – தீபாவளி மலர் 1996 ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் - வண்ணப் போட்டோ : யோகா

# நெஞ்சு பொறுக்குதில்லையே

## சுப்புடு

மும்மூர்த்திகள் ஆயிரக்கணக்கான பக்திப் பாடல்களை இயற்றினார்கள். அவர்கள் இறைவனுடன் உரையாட முயன்றார்கள். ஒவ்வொரு பாடலும் அவர்களுடைய உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து பொங்கி எழுந்தவை.

அவர்களுக்கு இறையருள் இருந்தது; ஈடுபாடு இருந்தது. ஆனால், தீர்க்க தரிசனம் இல்லை என்று தோன்றுகிறது. ஏனெனில், வருங்கால வித்வான்கள் அந்தக் கவனங்களைச் சேதப்படுத்துவார்கள் என்று அவர்களுக்குத் தோன்றவில்லை. அவர்களுடைய எதிர்பார்ப்பும் இருக்க முடியாது.

தியாகராஜர் இராம பக்தர்.

தீட்சிதர் முருக பக்தர்.

சியாமா சாஸ்திரிகள் காமாட்சி தாசர்.

தியாகராஜரின் ஒவ்வொரு பாட்டும் ஒரு சம்பவத்தை அடிப்படையாய்க் கொண்டது.

தீட்சிதர் ஒரு ஸ்தல புராண வல்லுநர்.

### இது தகுமோ?

சியாமா சாஸ்திரிகள் காமாட்சியை வருணித்தார். இந்தக் கவனங்களை நமது வித்வான்கள் சேதப்படுத்தும் பொழுது ஏற்படும் வேதனை வருணிக்க இயலாதது. உதாரணமாக, ஓர் இசை நிகழ்ச்சி எப்படி அமைய வேண்டுமென்று அவருடைய ஸ்ரீரஞ்சனி கிருதி மிக அழகாக வருணிக்கிறது.

'சொகுசுகா மிருதங்க தாளமு' என்பது பல்லவி அனுபல்லவி கூறுகிறது:

''நிகம சிரோத்தமுலு'' என்று அமைகிறது.



போட்டோ: யோகா

விஜயசிவா, உன்னிகிருஷ்ணன், சௌம்யா



லால்குடி ஜெயராமன் - மும்பை ஜெயஸ்ரீ

அதாவது, ஓர் இசை நிகழ்ச்சி சொகுசாக அமைந்து, கேட்பவரைச் சொக்கவைக்க வேண்டும் எனக் கூறி, ''இதை நான் சொல்லவில்லை. உத்தமர்கள் கூறியுள்ளார்கள்'' என்று அவையடக்கமாக அமைத்துள்ளார்.

இந்த அனுபல்லவியை நிக—மசிரோ என்று பிரித்துப் பாடும் பொழுது எவ்வளவு வேதனை பாருங்கள்!

### இது முறையோ?

அதுபோன்று தீட்சிதர் மதுரை மீனாட்சி அம்மனைத் துதித்து 'மீனாட்சி தேபுதம்' என்று புனைந்திருக்கிறார்.

அம்பாளையே நினைத்து உருகி அவர் இறக்கும் தறுவாயில் இந்தப் பாடலைப் பாடச் சொல்லி இறைவனுடன் இரண்டறக் கலந்தார்.

இந்தப் பாடலை நமது வித்வான்கள் பாடும் பொழுது சரணத்தில் வரும் ''மதுராபுரி நிலையே'' என்ற இடத்தில் நிரவல் ஸ்வரப்பிரஸ்தாரம் என்ற பெயரில் சின்னா பின்னம் செய்கிறார்கள்.

நியாயமா?

### இது தருமந்தானோ?

அடுத்தது சியாமா சாஸ்திரிகள்.

அவருடைய பைரவி ஸ்வரஜதி ஆகிய 'காமாட்சி அம்பா' வித்வான்கள் கையில் படும்பாடு சொல்ல இயலாது.

''சியாமா கிருஷ்ண சோதரி சிவ சங்கரி பரமேஸ்வரி'' என்று வரும் அற்புதமான வருணனையை நிரவல் செய்து சேதப்படுத்துகிறார்கள்.

அவர்களைச் சொல்லிக் குற்றமில்லை. ஏனெனில் இசை இப்பொழுது வியாபாரப் பொருள் ஆகிவிட்டது.

பக்திக்கும் பாவத்திற்கும் இடமில்லை. செப்பிடு வித்தைகளுக்குத்தான் மவுசு. அப்படியே பழக்கத்தில் வந்துவிட்டது.

சாகித்தியத்திற்குக் கௌரவமே கிடையாது. நியாயமா?

இதுதான் நாம் வாக்கேயகாரர்களுக்குச் செய்யும் அஞ்சலியா?

அவர்கள் ஒரு பிரதிபலனையும் எதிர்பார்க்காமல் இறைவன் மீது இசை புனைந்தார்கள். அந்தக் கிருதிகளை வைத்து, பிழைப்பு நடத்தும் வித்வான்கள் சாகித்யச் சிதைவு இல்லாமல் பாட வேண்டாமா? அதுதானே முறை?

நூறு வருடங்களாக இயங்கிவரும் இந்த வழி முறையை மாற்றி அமைக்க, இன்றைய வித்வான் களால் இயலாது. அவர்களுக்கு அதற்கு நேரமுமில்லை. காலில் சக்கரம் கட்டிக்கொண்டு பறக்கிறார்கள். மூச்சுவிட நேரமில்லை.

### இளம் சிட்டுக்களே! எழுந்திருங்கள்

இந்த நிலை மாற வேண்டுமென்றால் அது இளம் வித்வான்களின் கைகளில்தான் இருக்கிறது.

அவர்களிடம் எனக்கு அபார நம்பிக்கை இருக்கிறது. புத்திக் கூர்மையும், குரல் வளமும், அபார ஞானமும் அவர்களிடம் மின்னுகின்றன.

விஜய் சிவா, சஞ்சய் சுப்ரமணியம், ராஜ்குமார் பாரதி, பாலாஜி சங்கர், பம்பாய் ஜெயஸ்ரீ, சௌம்யா ஆகியோர் இன்று மின்னும் நட்சத்திரங்கள்.

அவர்களுக்கு வாக்கு சுத்தம் அமைந்திருக்கிறது. அவர்கள் மனது வைத்தால் மெல்ல மெல்ல இந்த அவல நிலையை மாற்றி விடலாம்.

அது அவ்வளவு எளிதில்லை என்பதை நான் அறிவேன். ஏனெனில், நூறு வருடங்களாக இயங்கி வரும் ஒரு சீர்கேட்டை அவ்வளவு எளிதில் மாற்றி விட முடியாது. மெல்ல மெல்லத் தான் அது முடியும்.

### நல்ல அறிகுறி

லால்குடி ஜெயராமன் இந்த விஷயத்தில் முதல் அடி எடுத்து வைத்திருக்கிறார்.

அவருக்கு ஒரு பரமானந்த சீடன்.

பி. ராம்.

சாகித்யச் சிதைவு இல்லாமல் பாட அவனுக்கு வழிகாட்டியுள்ளார்.

பாடுகிறான் பரவசமாய்.

கேட்க இனிமையாய் இருக்கிறது.

பொதுவாக ரசிகர்களிடம் மெல்ல மெல்ல இதற்கு அங்கீகாரம் கிடைத்து வருகிறது.

நான் ஏதோ பழம்பெரும் வித்வான்களைக் குறை கூறுவதாக நினைக்கக் கூடாது.

அவர்களிலும் சிலர் பாவத்துடன் பாடி, கேட் போரைப் பரவசமடையச் செய்திருக்கிறார்கள்.

உதாரணமாக முசிறி சுப்ரமணிய அய்யர், அவருடைய திருவடி சரணம், நகுமோமு, பாகிராம, தேயிலைத் தோட்டத்திலே, என்றைக்கு சிவகிருபை ஆகிய கீர்த் தனங்கள் இசை உலகத்தையே ஓர் உலுக்கு உலுக்கி விட்டன.

ரசிகர்கள் சொக்கிப் போனார்கள்.

அதன்பிறகு வந்தார், பாலமுரளி கிருஷ்ணா. அவருடைய இனிமையான சாரீரத்தை வைத்துக் கொண்டு, பதச்சேதமில்லாமல், பாவம் பொங்க இந்த அறுபத்தாறு வயதிலும் பாடி வருகிறார்.

ரசிகர் கூட்டம் அலைமோதுகிறது. இன்றைய இளம் வித்வான்களில் பம்பாய் ஜெயஸ்ரீயும், சௌம்யாவும் நம்பிக்கை ஊட்டும் நட்சத்திரங்கள். லால்குடியும், டாக்டர் இராமநாதனும் அவர்களை நன்கு பயில் வித்திருக்கிறார்கள். இது ஒரு நல்ல சூசகம்.

### ஒரே வழி

சரி, இதைச் செயல்படுத்துவதற்கு என்ன வழி முறை என்று கேட்கலாம். என் மனத்திலுள்ளதைச் சொல்லுகிறேன். இது திடீர் இட்லி, திடீர் பாயசம் இல்லை. மெல்ல மெல்லத்தான் மெருகேறும். இன்றைய இசை இளைஞர்கள் YMIA என்று ஒரு ஸ்தாபனத்தை நிறுவியுள்ளார்கள்.

ஆங்காங்கு பள்ளிக்கூடங்களுக்குச் சென்று, இசை நிகழ்ச்சிகள் நடத்தி இளைய சமுதாயத்தினிடையே கர்நாடக இசை ஈடுபாடு உண்டாக முயற்சி செய்து வருகிறார்கள். ஓரளவு வெற்றியும் பெற்றுள்ளார்கள். அவர்கள் செய்ய வேண்டியது என்னவெனில், அவ்வப்போது சாகித்யத் தெளிவுடன், பாவத்துடன் நிகழ்ச்சிகள் அமைக்க வேண்டும்.

மேலைநாடுகளில் வழக்கில் இருப்பதுபோல் பாடப் படும் கீர்த்தனைகளை அச்சிட்டு விநியோகித்து விட வேண்டும்; அவற்றின் அர்த்தத்தையும், சம்பவக் குறிப்பையும் சேர்த்து, கூடுமான வரை நிரவல் ஸ்வர பிரஸ்தாரங்களையும் இரண்டொரு கீர்த்தனைக ளோடு கட்டுப்படுத்த வேண்டும்.

இதில் ருசி கண்டுவிட்டால் ரசிகர் கூட்டம் மெல்ல மெல்லப் பெருகும்.

அதனால் இன்று நிலவி வரும் 'டப்பா'திரை இசை யின் மகத்துவம் குறையும். இன்று கர்நாடக சங் கீதத்தை வேறு மாநிலத்தாரும் வெளிநாட்டவரும் அதிகம் ருசிக்காததற்குக் காரணம் அதில் கையாளப் படும் செப்பிடு வித்தைகள்தான். இனிமைக்கு இட மில்லாமல் போனதுதான்.

### கனவு பலிக்குமா?

ஒரு விஷயம் சொன்னால் ஆச்சரியப்படுவீர்கள். தியாகராஜர், காம்போதியில், 'மாஜானகி' என்று ஒரு கீர்த்தனை இயற்றியுள்ளார். அதில் கூறுகிறார் "இராமா! உனக்கேதடா பெருமை? ஜகன்மாதா, சீதா பிராட்டியின் கரம் பிடித்ததனால்தானே உனக்கு இந்த கௌரவம்?" என்று உரிமையுடன், நையாண்டி கலந்து இயற்றியிருக்கிறார். என்ன அற்புதமான, அதீதமான கற்பனை! இதைப் பாடுபவர்கள் சிலர், மாஜா நக்கி என்று இக்கன்னாவுக்கு அழுத்தம் கொடுத்துப் பாடுகிறார்கள். என்ன அபசாரம்?

நான் கனவு காண்கிறேன். பலிக்குமா? ●





ஸ்ரீ கந்தாஸ்ரமத்தின் தோற்றம்

ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் தொண்டை அளவிட முடியாது.

இந்த மகானின் திருப்பணிகளால் உலகப் புண்ணிய ஸ்தலங்களில் ஒன்றாகத் திகழ்கிறது ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம். இந்த ஆசிரமம் சேலத்திலிருந்து ஆத்தூர் செல்லும் நெடுஞ்சாலையின் வலப்புறத்தில் 9 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது.

அந்த நாள்களில் சந்நியாசி முண்டு, எருமைப் பாளையம், உடையா பட்டி என்று அழைக்கப்பட்டு வந்து, இன்று உடையாபட்டியாக விளங்கும் ஊருக்கு அருகில் மூன்று பக்கங்களிலும் மலைகள் சூழ நடுவில் ஸ்கந்த கிரியும் அதில் ஸ்ரீ ஸ்கந்தாசிரமமும் நிமிர்ந்து நின்று தெய்வ மணம் பரப்புகின்றன.

கன்னிமார் ஓடையின் சுகமான காற்றும் கடப்பமரம் போன்ற

# ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமம்

திருவனந்தபுரத்தில் நீதிபதியாக இருந்தவர், சதாசிவம். தனது முன் தவப்பலனாய் ஆத்ம ஞானம் பெற்று ஒருநாள் உத்தியோகத்தைத் துறந்து துறவியானவர். ஸ்ரீ காளஹஸ்தியிலிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ன அவதூத பரமஹம்ஸரிடம் ஆத்மஞான தீட்சை பெற்று ஆத்மானுபூதியும் அடைந்தவர். அவரைத்தான் ஜட்ஜ் சுவாமிகள் என்று உலகத்தினர் யாவரும் போற்றி வழிபடுகின்றனர்.

அத்தகைய மகானிடம் ஸ்ரீமத் ஸ்வயம்பிரகாச அவதூத பிருமேந்த்ர சுவாமிகளும் அவதூத தீட்சை பெற்று, சேலத்தை அடுத்த சேத்தி மங்கலக் குன்றுகளில் வெயில், மழை, சுக துக்கம் பாராது, பல நாள்கள் உணவின்றி ஆழ்ந்த ஆத்ம தியானத்தில் இருந்தார். அந்த அவதூத துறவியிடம் ஸ்ரீமத் சாந்தானந்த அவதூத ஸத்குரு சுவாமிகள் என்று போற்றப்படும் புதுக்கோட்டை ஸ்ரீபுவனேச்வரி பீடத்தை அலங்கரித்துக் கொண்டிருக்கும் சுவாமிகள் ஆத்ம ஞான தீட்சை பெற்றார்.

நம் புண்ணிய பூமி செய்த நற்றவத்தின் காரணமாக இன்று நம்மிடையே வாழ்ந்து நாட்டிற்கு நலம் புரியும் பல அற்புத வேள்விகள் செய்து வரும்



பஞ்சமுக கணபதி

தருக்களின் நிழலும் வேத ஒலியும் பகவந்நாமாவின் மந்திர முழக்கமும் ஸ்கந்தகிரியின் புனிதத்தை மேலும் உயர்வடையச் செய்கின்றன.

அமைதி தவழும் இந்தக் கோயிலில் நுழைந்து நீண்ட படிகளில் ஏறி முடிக்கிறபோது எதிர்ப்படுகிறவர் ஸ்ரீ வினை தீர்க்கும் விநாயகர். அவரைச் சுற்றி வலம் வந்தால் மிகப் பிரம்மாண்டமான உருவில் 16 அடி உயரத்தில் ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்சநேய சுவாமி. ஆஞ்சநேயரின் இடப் புறத்தில் சிறு வடிவங்களாக ஸ்ரீ நாரத மகரிஷியும், வலப்புறத்தில் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளும் இடம்பெற்றுள்ளனர்.

ஆஞ்சநேயருக்கு நேர் எதிரே ஸ்ரீ பஞ்சமுக ஹேரம்ப கணபதி, இட - வலப் புறங்களில் ஸ்ரீ அகத்திய மகரிஷியும், ஸ்ரீ லோபா முத்ரா தேவியும் வீற்றிருக்கிறார்கள்.

அதற்கடுத்த பிரம்மாண்ட சிலை வடிவம் ஸ்ரீ தத்தாத்ரேய பகவான். ஸ்ரீ தத்தாத்ரேயருடன் ஸ்ரீ அத்ரி மகரிஷியும், ஸ்ரீ அனுசூயா தேவியும் உள்ளனர்.

14 அடி உயரத்தில் ஸ்ரீ தன்வந்த்ரி பகவான், ஸ்ரீ வர்ணாகர்ஷண பைரவர், ஸ்ரீ இடும்பன் சிலா





ஸ்ரீ வினை தீர்க்கும் விநாயகர்

ஸ்ரீ ஸ்வர்ணாகர்ஷண பைரவி

ரூபங்கள் கண்களையும் மனத்தையும் விட்டு என்றுமே அகலாதவை.

ஒவ்வொரு வடிவங்களுக்கும் வெவ்வேறு புராணங்கள். ஞானிகளின், மகான்களின், யோகிகளின், பேரருளாளர்களின், பக்த சிகாமணிகளின் திருவுருவைத் தாங்கி மந்த்ர சாஸ்திரங்களில் கூறப்பெற்ற பல்வேறு மகிமைகள் கொண்ட மகா யந்திரங்களுடன் திகழும் மகா மண்டபம்.

ஓம் ஸ்ரீஸ்கந்தாஸ்ரம குருகுல பிரார்த்தனை மண்டபத்தில் பாதுகா பூஜை, சாதுர் மாதம், ஏகாதசி திதி, புனர்பூச நட்சத்திரத்தில் தத்தாத்ரேய பகவானின் பாதுகா பூஜை ஆகியன மிகவும் சிறப்பு என்றால் —

அதைவிட விசேஷம் அங்கே அருள் பாலித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ அஷ்டதசபுஜ மஹாலக்ஷ்மி - அன்னை துர்கா பரமேஸ்வரி. 18 கரங்களுடன் உலகம் யாவிற்கும் அருள் புரிகிறாள் துர்கா மாதா.



ஆதிசங்கரர்



ஜட்ஜ் ஸ்வாமிகள்

மாதாவிற்கு நேர் எதிரே ஸ்ரீ ஞான ஸ்கந்த குருநாதன் தண்டாயுத பாணியாய்ப் புன்முறுவலுடன் நம்மைக் காக்கக் கரந்தூக்கி நிற்கிறார்.

இந்த தண்டாயுதபாணியின் கருவறையில் சுற்றி தத்தமது மனைவியருடன் அருள் புரிகின்றனர், நவக்கிரக நாயகர்கள்.

சூர்ய பகவான் உஷா, ப்ரத்யுஷாவுடனும், சந்திர பகவான் ரோகிணியுடனும், சுக்கிர பகவான் சுகீர்த்தியுடனும், அங்காரக பகவான் சக்தி தேவியுடனும், ராகு பகவான் ஸிம்ஹீயுடனும், சனி பகவான் நீலா தேவியுடனும், கேது பகவான் சித்ரலேகாவுடனும், புத பகவான் ஞான தேவியுடனும், குருபகவான் தாரா தேவியுடனும் இருப்பது தனிச்சிறப்பு.

அதேபோல் துர்கா தேவியின் இருபுற அறைகளில் ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகளும், சேந்த மங்கலம் மஹா புருஷரும் - வெளிப்புறத்தில் ஸ்ரீ வேத வியாசரும், ஸ்ரீ ஆதி சங்கரரும், ருக் - யஜுர் - சாம - அதர்வண வேத மூர்த்திகளும் இடம்பெற்றுள்ளனர். ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் அருட்பெரும் பக்திக்கு இந்தக் கோலங்கள் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.



ஸ்ரீ அஷ்டதசபுஜ மஹாலக்ஷ்மி

யாக சாலா மண்டபத்தில் இடம் பெற்றுள்ள திருவுருவங்களும், ஸ்ரீ ஸ்வயம் பிரகாச ஞான ஸபா மண்டபத்தில் இடம்பெற்றுள்ள திருவுருவச் சிலைகளும் ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் ஆற்றலை அதிகப் படுத்திக் கொண்டே செல்கின்றன.

இந்த மகான், புதுக்கோட்டை அதிஷ்டானம் மற்றும் ஓம் ஸ்ரீ ஸ்கந்தாஸ்ரமத்தில் கடந்த 38 ஆண்டுகளாக நடத்திய ஹோமங்களையும், யக்ஞங்களையும், வேள்விகளையும் பட்டியலிட்டால் பக்கங்கள் போதா.

நாகராஜகுமார்

போட்டோ : யோகா



குரு



சுக்கிரன்



அத்தனாவூர் ஏரிப் பூங்கா

# எழிலார்ந்த ஏலகிரி

மலைகளின் ராணி நீலகிரி என்றால் மலைகளின்இளவரசி ஏலகிரி.

இயற்கையன்னையின் நூதன எழில் கொஞ்சும் ஏலகிரியின் முகவிலாசம் கோடையில் குதூகலத்தை, குளுமையை, தொடும் தூரத்தில் வானத்தின் பேரெழிலைத் தரிசனங்களாக்குகிறது.

கண்களின் புள்ளிகளாய்த் தொலைவிலும் காட்சியளிக்கும் எத்தனையோ எண்ணங்களை ஈர்க்கும்

தொலை நோக்கியகம்



வண்ணங்கள் பொழுதுகளைப் பொய்களாக்குகின்றன.

குப்பென்று வீசி, சப்பென்ற சலிப்பைப் போக்கும் எண்ணிறந்த வாசமலர்களின் பிறப்பிடமாய், மனமூலை முடுக்குகளி லெல்லாம் புகுந்து இன்ப லாகிரியை உண்டாக்கும் இதத்தின் இருப்பிடமாய், மண் வகையை, மர வகையை, புள் வகையை, வானிலையை, புராதனப் பெருமையை, கலாச்சாரக் கலவையைக் கர்ப்பத்தில் காக்கும் சிறப்பிடமாய், நிரந்தர நிர்ப்பந்தங்களிலிருந்து சிறிதாவது விடுதலை வாங்கித் தரும் பொறுப்பிடமாய்த் தன்னை இனம் காட்டுகிறது ஏலகிரி.

கடல் மட்டத்திலிருந்து சுமார் 1048.5 மீட்டர் உயரத்தில், 5104.43 ஏக்கர் பரப்பளவு கொண்ட ஏலகிரியின் அடிப்புறம் வட்ட வடிவமானது. முகடு பீடபூமியாய் அமைந்தது. பக்கங்கள் செங்குத்தான பாறைகளைக் கொண்டவை. வெளிப்புறச் சரிவுகளில் தாவர வளர்ச்சியே சிறிதும் இல்லை.

வடக்குப் பகுதியும், வடகிழக்குப் பகுதியும் சரிவுகளாய்ப் பச்சைப் பட்டாடைகளின் போர்த்துதலில் பளிச்சிடுகின்றன.

அதாவது மரங்களையும், செடிகளையும் கொண்டு பார்வைகளில் பச்சையத்தை நிரப்புகின்றன.

மேற்பகுதிகள் எப்போதும் பசுமை மாறா வனதேவதையின் தலைமைப் பீடங்கள்!

மலை சாதி மக்கள் இவ்வூரில் எவ்வாறு குடியேறினார்கள் என்பதற்குச் சான்றுகள் அவ்வளவாக இல்லை. ஒரு சிறு சான்று மட்டும் திப்பு சுல்தானின் வரலாற்றிலிருந்து கிடைக்கிறது.

அவர் காஞ்சிபுரம் பகுதியில் படையெடுத்தபோது போர்க் கொடுமைக் கஞ்சி, இம்மலைக்கும், ஜவ்வாது மலை, கொல்லி மலை, கல்வராயன் மலை, பச்சை மலை போன்ற மலைகளுக்கும் மக்கள் பலரும் தங்கள் குடியிருப்பை மாற்றிக் கொண்டனர்.

இன்னொரு சிறு சான்றும் உள்ளது.

காஞ்சிபுரம் பகுதியைச் சேர்ந்த ஒரு கிராமத்தில் வேளாளர் இனத்தைச் சார்ந்த பெரியண்ணன், நடுவண்ணன், சின்னண்ணன் ஆகிய மூன்று பேர் சாதி நீக்கம் செய்யப்பட்டு காய்கொலா, வேதா,

நீலவன்

பல்லா ஆகிய மூன்று பெண்களை மணந்து கல்வராயன் மலையில், பச்சை மலையில், கொல்லி மலையில் குடியேறினர்.

அவ்வாறு குடியேறியவர்களின் வழியினரே ஏலகிரியின் மூதாதையர்.

பழங்காலத்தில் ஏலக்காய் ஏராளம் விளைந்ததால் 'ஏலகிரி' ஆனதாம்.

பெருமாள் ஒரு தடவை உலகவலம் போனார். அப்போது தன் கால் பாதத்தை இம்மலை முகட்டிலுள்ள ஒரு பாறையின் மீது ஊன்றியதால் மாமலை அசைவுற்றது.

மலைவாசிகள் பீதியுற்று ஒருவரை யொருவர் நோக்கி "ஏலோ" என்று குரலெடுத்துக் கூவி "கிலி" என்று கூறி நடுங்கினர்.

'ஏலோகிலி'யே பின்னாளில் 'ஏலகிரி'யானது, என்பர்.

பெருமாளின் பாத அடையாளமாக, ஏலகிரியில் அடங்கும் கிராமமான நிலாவூர் ஐயப்பன் பாதம் பாறையில் இன்றும் உள்ளது.

வடார்க்காடு அம்பேத்கர் மாவட்டத்தில் திருப்பத்தூர் வட்டத்தில், ஜோலார்ப் பேட்டை இருப்புப் பாதை சந்திப்புக்கருகில் திருப்பத்தூர் வாணியம்பாடி சாலையில் கிழக்குப் பக்கத்தில் திருப்பத்தூரிலிருந்து 14 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஏலகிரியைப் பார்க்கப் பார்க்கப் பரவசம் கூடுமே தவிரக் குறையாது.

வானக் கூரையின் கீழே நிலவும் –

ஏலகிரியின் சீதோஷ்ணம் ஏழை எளியவர்களைக் கூடத் தன்னிடம் அழைக்கிறது. அதனாலேயே இது 'ஏழைகளின் ஊட்டி' எனப்படுகிறது.

ஏலகிரியின் முகம் அத்தனாவூர்க் கிராமம்.

அந்த முகத்தில் வியாபித்திருக்கும் பூரணப் பொலிவைக்காண்பதே ஓர் அபூர்வ அனுபவம்.

சன்னமான அலைகளின் வீச்சு மிகுந்து நீர் நிரம்பி வழியும் ஏரியில் 'போட்டிங்' நல்லதொரு பொழுதுபோக்கு ஏற்பாடு.

ஏரியில் படகில் பயணம் செய்து கொண்டே நான்கு பக்கங்களிலும் எழுந்த, எழுந்து கொண்டிருக்கின்ற கட்டடங்களைக் காண்பதும், இதய நோயாளிகள் மட்டுமின்றி உல்லாசப் பயணிகளும் தெம்பூட்டித் தாலாட்டும் குளிர்காற்றைச் சுவாசிப்பதும் மற்றும் ஓர் அபூர்வ அனுபவம்.



மங்கலம் - மீன் வளர்ப்புக் கழகம் (ஏரி)

பளீர் பளீரென்று வெள்ளித் துண்டங்களாய் படகு மீதும், பயணிகள் மீதும் கண்ணாமூச்சி ஆடும் விதவிதமான மீன்களை ரசிப்பதோ வேறோர் அனுபவம்.

இப்படியே அனுபவங்களை அடுக்கி மகிழலாம்.

சின்னஞ்சிறிய இவ்வூரில் அரசுயர் பள்ளியொன்றுள்ளது.

வசதிமிக்கோர் தங்கிப்படிக்கும் தனியார் பள்ளிகளான தொன்போஸ்கோ, எபநேசர் மேனிலைப் பள்ளிகளின் எடுப்பான கட்டடங்கள் கண்களில் குடிபுகுகின்றன.

போக்குவரத்து மையமான இவ்வூரில் 'மினி பேலஸ்' என்ற பத்து ஏக்கர் பரப்பில் செடி, கொடிகள், பழ மரங்கள் கொண்ட தனியார்க்குச் சொந்தமான விடுதி பயணிகளைக் கவர்கிறது.

மற்றும் தனியார் சுற்றுலா, வனத்துறை விடுதிகளும் உள்ளன.

முருகன் கோயில்





ஏலகிரியின் தோற்றம்

அனைத்துப் பொருள்களும் கிடைக்கும் அங்காடிகளுக்கும் குறைவில்லை.

'ஒட்டல் ஏலகிரி' தனியாருடையது.

கண்களைக் கவர்ந்திழுக்கும் காட்சிகளுக்கினிய பூங்கா காணற்குரியது.

இவ்வூரைச் சேர்த்து–

புதூர், தாயலூர், நிலாவூர், பள்ளக் கனியூர், மேட்டுக் கனியூர், முத்தனூர், புங்கனூர், கொட்டையூர், மங்கலம், பாடு வானூர், கோட்டூர், அரங்கனேரி போன்ற ஊர்கள் கிழக்கு மேற்காக ஆறு கி.மீ. நீளமும், வடக்குத் தெற்காக ஏழரைக் கி.மீ. அகலமும் வசிப்பிடமாக ஏலகிரி விளங்குகிறது.

ஐந்நூறுக்கும் மேற்பட்ட மஞ்சம்புல்மீது தென்னை ஒலைகள் வேய்ந்த வீடுகள் உள்ள நிலாவூர் ஏலகிரியின் தலைமை ஊர்.

அத்தனாவூர் ஏரி - 'போட்டிங்'



இங்கே அரசினர் தொடக்கப்பள்ளி ஒன்றுள்ளது.

நேர்த்தியான ஊரான இங்கு தைத்திங்கள் முழுநிலா நாளன்று பெண்கள் தூய்மையாக பொதுவிடத்தில் கூடி, ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் சேகரித்த தானியத்தை மர உரலிலிட்டு உலக்கைகளால் குத்தி அரிசியாக்கு கின்றனர்.

ஒரு பெரிய பானையிலிட்டுப் பொங்குகின்றனர்.

முழு நிலா புறப்பட்டதும் –

உரலில் ஓர் உலக்கையைச் செங்குத்தாக நிறுத்தி உச்சியில் ஒரு கலயத்தில் சமைத்ததைப் படைக் கின்றனர்.

கும்மியடிக்கத் தொடங்குகின்றனர்.

"நிலாவே வா! நிலாவே வா!" என்ற வாழ்த்துப் பாடல் வனாந்தரமெங்கும் ஒலித்து வானத்திலும் எதிரொலிக்க ஆடிப் பாடுகின்றனர், விடிய விடிய.

நூற்றுக்கும் அதிகமான வீடுகள் கொண்ட மங்கலம் இன்னோர் எழிலூர்.

இவ்வூரில் –

மீன்கள் வளர்க்கும் சிறிய ஏரியைப் போன்ற மிகப் பெரிய குளம் உள்ளது.

பதிமூன்று ஊர்களில் மிகச்சிறிய ஊர் அரங்கனேரி.

கோடையில் முப்பத்து நான்கு டிகிரி சென்டிகிரேடும், குளிர்காலத்தில் பதினோரு டிகிரி சென்டிகிரேடும் இங்கு நிலவும் சீதோஷ்ண நிலை.

மார்ச்சு முதல் ஜூன் வரை, அருமையான–அனுபவிக்கத்தூண்டும் பருவநிலை.

ஜூலையிலிருந்து பிப்ரவரி வரை அருமையின் பாதி அனுபவத்தையே அளிக்கும் பருவநிலை.

மழைக்காலங்களில் சிறு சிறு ஓடைகள் தோன்றி பூதாகரமான மரவட்டைகளைப் போன்று சற்றே வேகமாய் நகரும் நேர்த்தியே நேர்த்தி.

கிணறுகளின் ஊற்றுக் கண்களுக்குப் பார்வையிருக்காது. கோடையில் வான மண்டலத்திற்கு வந்துவிட்டோமோ என்ற பிரமிப்புண்டாக்கும்.

பயிர்த்தொழிலுக்கேற்ற, செயற்கை உரங்களிடுதலே அவசியமற்ற அருமை யான செம்மண் பூமி.

கடுக்காய்ச் செடிகள் மலிந்துள்ளன.



நிலச் சாகுபடித் தோற்றம்

மா,பலா,கொய்யா,ராம்சீத்தா,பப்பாளி, வாழை, போன்ற பழத் தோட்டங்கள் அங்கங்கே உள்ளன.

ஏலக்காய்த் தோட்டங்களில்லை!

சுவாமிமலை ஆலய தரிசனமும், 'ஓம்' என்ற நாதவிநோத சப்த ஜாலத்துடன் விழும் ஜலகப் பாறை நீர்வீழ்ச்சியும், செவ்வாய், வெள்ளிகளில் மட்டுமே பூசாரியின் முறையான பூசைகள் புனஸ்காரங்கள் நடக்கும் குன்றுறை முருகனின் அருளாசியும், பெரும்பான்மை வழிபாட்டுக்குரிய இறைவியாய் விளங்கும் அம்மனின் பிரசன்னமும், வனத்துறைக் குடில்களும், நடுவண் அரசின் பட்டு உற்பத்தி மையமும், தமிழக அரசின் பழத்தோட்டமும், இருநூறடி உயரத்தி லுள்ள பழைய மரத்தின் மீதமைந்த ஏலகிரியின் ஏற்றமிகு எழிலைக்காண வழிகோலும் பள்ளத்தாக்குப் பார்வை மையமான பரண் பகமை இல்லமும், தொலைநோக்கு மையமும், ஆட்டாறுப் படுகையும், மான்பூங்காவும், இருப்புப்பாதை நிலையமும் இயற்கையின் ஏற்றங்களில் ஏங்க வைக்கும் புளிச்சக்குட்டையும்...

ஏலகிரியின் முழுமைகளாய் அசத்து கின்றன.

மலைவாசிகளுக்கென கூட்டுறவுச் சங்கம் நன்கு இயங்குகிறது.

தங்களை 'மலையாளிகள்' என்று அழைத்துக் கொள்ளும் மலைவாழ் மக்கள் கடுமையான உழைப்பாளிகளாய்த் தோன்றுகின்றனர்.

ஆடி பதினெட்டு, ஆடிக்கிருத்திகையில் 'காவடி' எடுக்கின்றனர்.

அன்றாடம் பயன்படுத்தும் கீரைகளில் பண்ணைக் கீரை சிறப்புச்சேர்ப்பு.

தேனெடுத்தல், வேட்டையாடுதல், பயிர்த்தொழில், இளம் புழுப்பட்டு வளர்த்தல் முதலியன பிரதான தொழில்கள்.

காடை, கௌதாரி, முயல், மான், பன்றி, கோழி, ஆடு என்று பலவற்றை, புரட்டாசி மூன்றாம் சனி தவிர மற்ற நாள்களில் விரும்பியுண்கின்றனர். தொண்ணூறு விழுக்காடு மக்கள் குடிப்பழக்கம் உள்ளவர்கள். கள்ளுண்ணலில் களிப் படைகின்றனர்.

பல தாரங்கள் என்றிருந்த நிலை மாறி, 'ஒருவனுக்கொருத்தி' தலை நீட்டத் தொடங்கியிருக்கிறது.

கணவனை "முதலாளி" என்றே மனைவி அழைக்கிறாள்.

மாமியாரை "அம்மா" என்றே அழைத்து 'காஸ் ஸ்டவ்'கள் அங்கு இல்லாத நிலையிலும் அன்பில் ஐக்கியமாகிறாள் மருமகள்.

ஊரின் நடுவில் இருக்கும் 'பொதுக்குதிர்' சற்றே நின்று கவனிக்கத் தூண்டுகிறது.

ஊரின் ஒவ்வொரு குடும்ப விளைச்சலில் சிறுபகுதிகள் அடங்கியதே அது.

விளைச்சலில்லாத பஞ்சகாலத்தில் அதில் கடன் பெற்று அடுத்த ஆண்டு அதைத் திருப்புவர்.

திருவிழாக் காலங்களில் 'பொதுக்குதிர்' காலியாகும்; அதாவது கூட்டாஞ் சோறாகி விடும்.

மாரியம்மனும் , முருகனும், பெருமாளும் தான் தெய்வங்களாவர்.

நிலாவூர் கதவதம்மா சிறப்பு அம்மன்!

காளைமாடு விடும் 'முத்திரை இடும் விழா' விழாக்களிலேயே முத்திரை விழா!

ஏலகிரியை அடையப் பதினான்கு ஊசிவளைவுகளைக் கடக்க வேண்டும்.

கடக்கும் பொழுது ஏற்படும் நூதனம் அதி நூதனம்.

ஒன்பதாவது ஊசி வளைவு வரை –

குரங்குகளுக்குப் பஞ்சமில்லை.

அதற்குப் பிறகுள்ள ஊசி வளைவு களில், மலைமீது ஒரே ஒரு குரங்கு கூட இல்லை.

தட்ப வெப்ப நிலையே அதற்குக் காரணம்.

மலைமீது காணக் கிடைக்காத ஒரு பறவை 'காகம்' –

அதற்கும் தட்பவெப்ப நிலைதான் காரணம்.

'மண்ணைப் பொறுத்தே மக்கள்; மக்களைப் பொறுத்தே மண்...' இது நூற்றுக்கு நூறு உண்மை என்பதை நிரூபிக்கும் இங்கு –

கோடையில் கூட வெயிலின் கொடுமை அந்நியமாகிறது.

குளுமையே வியாபித்துக் குதூகல மூட்டுகிறது.

அதனாலேயே இது ஊட்டியை நினைப்பூட்டுகிறது.

மனமும் உடலும் செம்மையுற எழிலார்ந்த ஏலகிரி செல்லுதல் ஏற்றதொன்றெனில், அது ஏற்றிக் கூறப் படும் ஒன்றாகாது.

படங்கள்: விடிவெள்ளி



பாரிசில்
'க் கலைஞர்கள்

# நினைவில் நிற்கும் நாந்த் கலைவிழா

லீலா கோபாலன்

உலகச் சுற்றுலா செல்லும் பலரும் ஃபிரான்ஸ் நாட்டில் பாரிஸைச் சுற்றிவிட்டு ஈபில் டவரைக் கண்டு மூக்கில் விரல் வைத்துத் திரும்பி விடுகின்றனர். எனினும் ஃபிரான்ஸின் வடமேற்கு மாநிலமான லுவார் - அட்லாண்டிக்கின் தலைநகரம் நாந்த், பழைமையும் அழியாது புதுமைக் கலாசாரமும் ஒன்று கூடி விளங்குகிறது.

7-ஆம் நூற்றாண்டிலிருந்து சரித்திரம் படைத்திருக்கும் லுவார் மாநிலம், நூற்றாண்டு யுத்தத்தையும் நார்மன்டி பிரிட்டனி அரசர்களின் ஆட்சியையும் கண்ட ஒன்று.

ஆங்கில, ஸ்பானிஷ், இட்டாலியன், ஜெர்மன், டச்சு ஆக்கிரமிப்பால் அதன் கட்டடங்களும், சிற்பங்களும், சிலைகளும் மிகப்பழைமையான கலை நயமுடையவை. 6815 சதுர மீட்டர் பரப்புள்ள இந்த மாநிலம் 20 நதிகளைத் தன்னுள் கொண்டது. இதில் ஆல்ஃப்ஸ் மலையில் உற்பத்தியாகி மாநிலத்தைச் சுற்றி 110 கிலோமீட்டர் ஓடும் லுவார் நதி அட்லாண்டிக் கடலில் கலப்பதால், லுவார் - அட்லாண்டிக் என்று பெயர் பெற்றது இந்த மாநிலம்.

நாந்த் நகரில் அகில உலக விமானதளம், இங்கிருந்து 600 கிலோமீட்டரிலுள்ள பாரிஸை இரண்டு மணிநேரத்தில் அடையும் டி.ஜே.வி. துரித ரயில், கார்கள் விரைந்து செல்ல 'வழுவழு'தார் ரோடுகள் – இவை இங்குள்ள நவீன வசதிகள். ஆன் அரசி காலத்தில் கட்டிய ஸாதோ (CHATEAU) என்னும் பிரும்மாண்டக் கோட்டையைப்

ஜயஸ்ரீ இராஜகோபாலன் - பரதநாட்டியம்







விழா நடந்த கோட்டை

புதுப்பித்து இங்கு நாந்த் கலாசாரக் குழு அகில உலக வேனிற் கலை விழாவை நடத்தி வருகிறது. இதில் உலகக் கலைஞர்கள் பலரும் பங்கு கொண்டு சிறப்பித்திருக்கின்றனர். ஸாதோவின் சுவரையொட்டி, பக்கம் பக்கமாக மேடைகள் அமைத்து, பல நாட்டுக் கிராமிய நடனங்கள் நடப்பதும், லட்சக்கணக்கான மக்கள் கண்டு களிப்பதும் வழக்கம்.

மேயர், மாநில முக்கிய மந்திரி, இந்திய தூதுவர் போன்றோர் வந்து சிறப்பிக்கும் இந்தக் கலைவிழாவின் தொடக்க நிகழ்ச்சி, பத்து வருடமாக அங்கு வாழ்ந்துவரும் தமிழ்ப் பெண்மணி திருமதி. மாலினி ரங்கநாதனின் கதக் நடனமாகும். ஃபிரெஞ்ச் மாணவர்களைத் தயார் செய்து மேடை ஏற்றியதோடு, மாலினி பல ஃபிரான்ஸ் நகரங்களிலும், ஸ்வீடன், நார்வே, ஸ்விட்சர்லாந்து போன்ற நாடுகளில் நடனம் ஆடியும் புகழ் பெற்றவர். கலைவிழாவுக்குப் பலவிதத்திலும் உதவி செய்து வந்திருக்கும் மாலினியின் பெரும் முயற்சியில் இவ்வருடம் 5 நாளும் இந்தியக் கலைவிழாவாகவே நடத்திக் கொண்டாட நாந்த் கலாசாரக் குழு முன் வந்தது நமக்குப் பெருமை தரும் விஷயம். இந்தியத் தூதுவர் ரஞ்சித் ஸேதியின் தலைமையில் நடக்கும் இந்தக் கலைவிழாவிற்கு தூதரகம் ஊக்கமும் பாராட்டையும் அளிக்கவே, லுவார் மாநில அரசு, ஐ.ஸி.ஸி.ஆர்., இந்திய சுற்றுலா, ராஜஸ்தான், ஆந்திரம் மாநில அரசுகளும் உதவி செய்ய முன் வந்தன.

முதற் கட்டமாக விழாத்தலைவர் திரு. மிஷேல் (MICHEL BERTAUD), இயக்குநர் பத்ரான் (BERTRAND DELAPORTE), நிகழ்ச்சி நிர்வாகி மாலினி மூவரும் இந்தியப் பயணத்தில் அரசிடம் தங்கள் விருப்பத்தை விவரித்து, மாநில அரசுகளையும், சாஸ்த்ரிய, கிராமிய நடன இசை நிகழ்ச்சிகளையும், பல கைவினைக் கலைஞர்களையும் கண்டனர்.

இரண்டாம் கட்டமாக திரு.பத்ரானும் திருமதி. மாலினியும் இந்தியா வந்தபோது, சென்னையில் டிசம்பர் இசை மழை. கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸில் மிகப் பெருங் கூட்டத்தைத் தன் சுநாதத்தில் கட்டுப் படுத்தி, வானளாவும் கரகோஷத்தையும் பெற்ற திரு. டி.என். கிருஷ்ணனின் வயலின் இசையில் சொக்கிப் போனார். ஃப்ரஞ்சு கலை இயக்குநர், உலகப்புகழ் எய்திய திரு. கிருஷ்ணனை அவர் வீட்டில் சந்தித்து தங்கள் இந்தியக் கலை விழாவுக்கு நிகழ்ச்சி தர வேண்ட, கிருஷ்ணன் முழுமனத்துடன் தன் சம்மதத்தை உடன் தெரிவித்ததோடு, மாலினியின் தாத்தா தனக்கு சிறு வயதில் காட்டிய ஊக்கத்தையும், குடும்ப நட்பையும் சொல்லி உணர்ச்சி வசப்பட்டபோது, "ஓ! இந்தியாவில் கலையே மனிதர்களைப் பிணைத்து விடுகிறது" என்று வியந்தார் பத்ரான்.

மும்பையில் டாக்டர் பத்மா சுப்ரமணியத்தின் முதன்மை மாணவியும் பத்மாவின் 'நிருத்யோதயா'வின் கிளை இயக்குநருமான ஆன திருமதி. ஜயஸ்ரீராஜ கோபாலனின் பரத நாட்டியம் அவர்களை ஈர்த்தது.

ராஜஸ்தானின் இருபது கிராமிய இசை, நடனக் கலைஞர்களை இட்டுச் செல்ல திருப்தி என்னும் பெண்மணி தலைமை ஏற்றார். ஆந்திராவிலிருந்து லம்பாடி, பொனாலு, மாதுரி, டஃப்பு, பக்கம்மா போன்ற நடனக் கலைஞர்கள் இருபது பேர் அடங்கிய குழுவுக்குத் தலைமை தாங்கியவர் திருமதி. ஜயந்தி கண்ணன் ஆவார். இங்கு ஒன்று சொல்லவேண்டும். ஆந்திரக் கலாசார இயக்குனர் திரு. கிஷன்ராவ், நேரிடையாக மிகுந்த ஆர்வமும், முயற்சியும் எடுத்துக் கொண்டு லம்பாடிகளையும் மற்ற கலைஞர்களையும் கிராமத்திலிருந்து வரவழைத்து, ஆடவைத்து, அவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் வெளி நாடு செல்லும்போது நடந்து கொள்ளவேண்டிய முறைகளை எடுத்துக் கூறி, நம் நாட்டிற்குப் பெருமை தேடித்தரும் வண்ணம் அவர்களை தயார் செய்ய வைக்க பாடுபட்டதைப் பாராட்ட வேண்டும். முக்கிய மந்திரி நம் ஆந்திரக் குழு மிக உயர்வாக அமையும்படி கலைஞர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றதும், கலாச்சார மந்திரி திரு.

கலைஞர்கள் குழு



மாதவரெட்டியே இந்தியத் தூதுவருடன் தொடக்க விழாவிற்கு வருகை தந்ததையும் இங்கே குறிப்பிடவேண்டும். அது மட்டுமன்றி, ஆந்திராவிலிருந்து தயார் செய்யப்பட்ட இருபத்திரண்டு ஷாமியானாக்கள் நாந்த் நகரை முன்பே அடைந்து, கோட்டை முழுதும் அலங்கரித்து திருமணக் கோலம் பூண்டுவிட்டது.

லம்பாடிகளும், டப்பூவாலாக்களும் ரவீந்த்ர பாரதியில் பயிற்சியளிக்கப்பட்டு வந்தனர்.

ஆயினும் ஃபிரெஞ்சுக்காரர்களின் சுறுசுறுப்புக்கும், அவசரத்திற்கும் நம் நாட்டு நிதானம் சற்று அவர்களைப் பரபரக்க வைத்ததுண்டு. மறுபடியும் மாலினி இரு முறை வந்து கிராமியக் கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் விமான டிக்கெட்டுக்கு பாஸ்போர்ட் வசதியை ஏற்பாடு செய்து ஜூன் மாதம் 30–ஆம் தேதி ஏர்–இந்தியா ஃப்ளைட் 139–இல், கேரள கலரிபாயட் குழு, திரு. டி.என். கிருஷ்ணன் குழு, திருமதி ஜயஸ்ரீயின் நடனக்குழு, ஆந்திர கிராமியக்குழு, ஆகியோருடன் புறப்பட்டு, தில்லியில் ராஜஸ்தான் குழுவையும் சேர்த்துக் கொண்டு, 82கலைஞர்களுடன் பம்பாய் ஸஹார் விமான தளத்திலிருந்து பாரிசுக்குப் பறந்தார். இந்த விழாவில் ஏர்– இந்தியாவின் முக்கியப் பங்கைக் குறிப்பிட வேண்டும்.

விடியற்காலை 5.30 மணிக்கு மும்பையிலிருந்து புறப்பட்ட விமானம், ஃப்ரெஞ்சு நேரம் பகல் ஒரு மணிக்கு (இந்திய நேரம் மாலை 4.30 மணி) பாரிஸைத்தொட்டது. வழக்கமான விமான தளச்சோதனைகள் முடிந்து வெளிவர, தங்களுக்கென்று காத்திருந்த பேருந்தில் கலைஞர்கள் நாந்த்துக்குப் பயணமாயினர். ஃப்ரான்ஸின் இயற்கை அழகை ரசித்துக் கொண்டு, நடுவில் ஓர் ஓட்டலில் சிற்றுண்டியும் காஃபியும் அருந்திவிட்டு, நாந்த் போய்ச் சேர இரவாகிவிட்டது. இயக்குநர் பத்ரானும் அவரது காரியதரிசியும் கலைஞர்கள் அனைவரையும் மகிழ்வுடன் வரவேற்றனர். துஷ்ஷஸ் ஆன் (DUCHESSE ANNE) நட்சத்திர ஓட்டலில் தங்கும் வசதி செய்யப்பட்டிருந்தது. அதில் வசதியான அறைகளும், நடுநாயகமான உணவுக் கூடத்தில் எல்லாரும் அமர்ந்து உண்ணும் வசதிகளும் செய்யப்பட்டிருந்தன. காலை, மாலை சிற்றுண்டிக்கு கேக், பிரெட், காஃபியும் பகல், இரவு உணவுக்கு இந்திய வகைகளையே தயார் செய்யப் பயிற்சி அளிக்கப்பட்ட ஃபிரெஞ்சுக்காரர்கள் மிகப் பணிவுடன் உணவு கொடுத்து உபசரித்தனர். ஒவ்வொரு குழுவையும் கவனித்துக் கொள்ள ஒன்றோ அதற்கு மேலோ வாலன்டியர் அமர்த்தப்பட்டனர். இதற்காக ஃபிரான்ஸின் பல பாகங்களிலிருந்தும் இளைஞர்கள் வரவழைக்கப்பட்டிருந்தனர். இவர்கள் தத்தமது குழுவை அன்புடன் கவனித்து அவர்களது அன்றாட நிகழ்ச்சிகளையும் அறிவித்து, கார்களிலும் பேருந்துகளிலும் அழைத்துச் சென்று திருப்பி அழைத்து வந்து சேர்ப்பது வரை தலையாய பொறுப்பாக ஏற்றுக் கொண்டது வியக்கத்தக்கது. இதில் ராஜஸ்தானியருக்கு ஹிந்தி அறிந்தவரும், கலரிபாயட்டு குழுவினருக்கு மலையாளமறிந்த ஃபிரெஞ்சுகாரரும் அமைந்தனர். ஜூலை முதல் தேதி கலைஞர்கள் ஊரைச் சுற்றிப் பார்க்கவும், பல நூற்றாண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்ட தொல்பொருள் காட்சி சாலைகள் (MUSEUMS), கடைகள் ஆகியவற்றைக்கண்டுவந்தனர். ஜூலை 2 ஆம் தேதி மாலை இந்தியத் தூதுவர் திரு. ரஞ்சித் ஸேதி தலைமையில் அலங்கரிக்கப்பட்ட கோட்டை நடுவில் பல ஃபிரெஞ்சு பிரமுகர்கள் முன்னிலையில் கலைவிழா ஆரவாரமாகத் தொடங்கப்பட்டது. அன்றைய முக்கிய நிகழ்ச்சியாக இந்திய அரசுப் பரம்பரையை விளக்கும் முறையில் ராஜஸ்தானி பாட்டும் நடனமும் இடம் பெற்றன. அவர்கள் சனியா – சோளிகளும் கண்கவரும் அணிகளும் மக்களை மயக்கின. அன்று இரவு 10 மணிக்கு கேரளத்தின் கிருஷ்ணதாஸ் குழுவினரின் கலரிபாயட்டு நடனம் காஸ்ஸில் (CASTLE) திறந்த வெளி அரங்கத்தில் வண்ண விளக்கு ஜொலிப்பில் நடைபெற, சுழன்று சுழன்று ஆடிய அவர்களது வாள் வீச்சுகளைக் கண்டு களித்த மக்கள் ஆரவாரக் கரவொலி எழுப்பினர்.

இதைத் தொடர்ந்து திருமதி ஜயஸ்ரீராஜகோபாலனின் பரதநாட்டியம் இடம் பெற்றது. ஜயஸ்ரீயின் மிக வேகமான கரணங்கள், தில்லானாவில் அவர் கையாண்ட சாரிகள் ஆகியன அவர்களை வியப்பிலாழ்த்தின. 'ஆனந்தமே' என்ற பாடலில் சிவனார் திருத்தொண்ட நாயனாரிடம் பிள்ளைக்கறி கேட்டு சோதித்து, பிள்ளையை வெட்டிக் கறி செய்யும் கட்டத்தில், பின் சிவனார் பிள்ளையில்லா வீட்டில் உணவருந்த மாட்டேன் என்றும், பின் குழந்தையை உயிர்ப்பித்ததையும் உருகி நடித்ததில் பல பெண்மணிகள் கண்ணீர் வடித்தனர். நிகழ்ச்சி முடிந்ததும் அவையினர் எழுந்துநின்று தொடர்ந்து கரவொலி எழுப்பினர். மறுதினம் அதை SACRIFICIAL DANCE என்று பிரமாதமாக பத்திரிகைகள் பாராட்டின.

மறுநாள் எதிர்பாராத மழை வந்து, அரங்கின்முன் குடையைப் பிடித்து நின்று கொண்டிருந்த பல்லாயிரம் மக்களுக்கு நிகழ்ச்சியை ரத்து செய்தது ஏமாற்றத்தை

மேயருடன் கலைஞர்கள்



ஏற்படுத்தியது. பிறகு மறுநாள் ஆடிட்டோரியத்தில் ஜயஸ்ரீயின் அஷ்டபதியும், துளசிராமாயணமும் மக்கள் மனங்களைக் கொள்ளை கொண்டன. இருமுறை வானொலிப் பேட்டியிலும், பாரிஸ் தொலைக்காட்சிப் பேட்டியிலும் பரத நாட்டியத்தையும், தன் குழுவின் ஆராய்ச்சிகளையும் ஜயஸ்ரீ விளக்கினார். நட்டுவாங்கம் செய்த ராஜஸ்ரீயும், பாடிய லட்சுமியும் வைஷ்ணவியும், புல்லாங்குழல் மூர்த்தியும், வயலின் ரவியும், மிருதங்கம் ஸ்ரீராமும், சித்தார் ஸுனேன்கான், தபேலா ரூபக்பவார் ஆகிய அனைவரும் ஜயஸ்ரீயின் நடனத்திற்கு மெருகேற்றி, தனிப்பட்ட முறையில் பிருந்த கானம் இசைத்து, பாராட்டையும் பெற்றனர்.

ஃபிரெஞ்சு காபி என்றால் தனி ருசி. அதையும் இந்தியர்கள் அங்கு ருசித்தது மிகையில்லை. ஆனால் திரு. டி.என். கிருஷ்ணனின் காபி ராகத்தை மக்கள் அணுஅணுவாக ருசித்து, ரசித்தனர். ஃப்ரெஞ்சு ரசிகர்கள் இரண்டு நாள் ஸிடிதே-கோங்க்ரஸ் (CITI DE CONGRES) அரங்கத்திலும் சினிமாடோக்ராஃப் எனும் ஆடிட்டோரியத்திலும் கண் இமைக்கக் கூட மறந்து, இசையைக்கேட்டு, நிகழ்ச்சி முடிந்ததும் வானளாவக் கரவொலி எழுப்பி வரவேற்றனர். பாரிஸிலுள்ள ரிகார்டிங் கம்பெனி திரு. கிருஷ்ணனின் நாலு மணி நேர வயலின் இசையை 'டிஸ்க்'காக வெளியிட ரிகார்டிங் செய்தது. அதை எடுத்த பொறியியலாளர் "நான்கு மணி நேர இசையை 'ரீ-டேக்' (RETAKE)குக்கு வாய்ப்பளிக்காதவாறு வாசித்த ஒரே கலைஞர். ஓ! கிரேட்" என்று, குறிப்பிட்டது பெருமைக்குரியது.

இந்நிகழ்ச்சிகள் ஒருபுறம் நடந்து கொண்டிருக்கும்போதே கோட்டையின் மறுபுறம் லா-ஸாலெட் (LAPSALETTE) மேடைகளில் ஆந்திர நடனங்கள் இடம் பெற்றன. லம்பாடி, டஃப்பூ, போனாலு நடனக்காரர்கள் டஃப்பூ, கொம்பு போன்ற வாத்தியங்களை இசைத்துக்கொண்டு இருவர் நடுவில் ஒருவர் நுழைந்து அதிவேகமாக சுழன்று சுழன்று ஆடுவதைக் கண்டால் நமக்கே மூச்சு நின்றுவிடும்போல் இருக்கும். லம்பாடிகளின் பளபளக்கும் கண்ணாடி பதித்த உடைகளும் அவர்கள் ஆடிய லாவகமும் கண்டு தொலைக்காட்சி, பத்திரிகைக்காரர்கள் மொய்த்துக் கொண்டனர். ஏற்பாடு செய்ததற்குமேல் அவர்களுக்கு 'டிமாண்ட்' அதிகமாகி, சில மைல் தொலைவிலுள்ள கடற்கரை நகரங்களில் கடலோரத்தில் இவர்கள் நடனத்தை வைத்து மக்களும் கூட ஆடி மகிழ்ந்தனர். இவற்றை பேனிடோ (BENEDOT) என்னும் இடத்தில் தொலைக்காட்சியினர் படமாக்கினர்.

விழாவின் நான்காவது நாள் – ஜூலை 6–ஆம் தேதி முற்பகல் 11 மணி அளவில் நாந்த் நகர மேயரும் அவர் மனைவியும் அவர்கள் பிரும்மாண்டமான வீட்டில் இந்தியக் கலைஞர்கள் அனைவருக்கும் பகல் உணவு அளித்து, தாங்களே கலைஞர்களை மகிழ்வுடன் உபசரித்த தோடு, கலைஞர்களையும், விழா நடத்திய மிஷேல், பத்ரான், மாலினி ஆகியோரையும் தனிப்பட்ட முறையில் பாராட்டினர்.

ஜூலை 7 ஆம் தேதி, சிற்றுண்டிக்குப் பின் கதிட்ரலில் (CATHEDRAL) நிறைவு நாளைக் கொண்டாடினர். ஃபிரெஞ்சுக்காரர்களின் மாஸ்ஸி (mass)ற்குப்பின் அவர்கள் சேர்ந்து பாட, நம்மவர்கள் கிருஷ்ண பஜன் செய்ய, திருப்தி ஒரு ஹிந்தி பஜன் பாட அந்நிகழ்ச்சி முடிவுற்றது. இதனை அடுத்து, கலைஞர்கள் டி.ஜே.வி.யில் ஏறி, பாரிஸை நோக்கிப் பாய்ந்தனர், (ஆம்! டி.ஜே.வி விரைவு ரயில் அப்படித்தான் செல்லும்) இந்தியா திரும்புவதற்காக.

# ஒரு துண்டுக் கடிதம்

ஆர்வி

குமரேசனுக்கு உடல் வேதனையைவிட உள்ளத்து வேதனைதான் அதிகமாக இருந்தது. படுக்கையில் இருப்புக் கொள்ளாமல் அப்படியும் இப்படியும் புரண்டான். உதடுகள் கோணலாக நெளிந்தன. கண் பார்வையில் சுவரிலிருந்த கடிகாரம் தென்பட்டது. அவன் அந்த இடத்தைவிட்டு விடைபெறு வதற்கு இன்னும் இரண்டு மணி நேரமே இருந்தது.

அவன் அங்கே வந்து சேர்ந்து கிட்டத்தட்ட மூன்றரை மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டன. முதல் மாதமெல்லாம் அவனுக்குத் தன் நினைவேயில்லை. உயிருடன் இருப்பதுகூடத் தெரியாமல் நாள்கள் ஓடிவிட்டன. பிறகுதான் போதை தெளிவடைவது போல அவனுக்குச் சுய நினைவு வரத் தொடங்கியது. கால்களில் பெரிதாக அடிபட்டு, ஆஸ்பத்திரிப் படுக்கையில் போடப்பட்டிருக்கிறோம் என்பது தெரிந்தது. படுக்கைக்கு அருகில் பார்வதி, இரவு-பகல் எந்த நேரமும் பசி, தாகம் பார்க்காமல் உட்கார்ந்திருக்கிறாள் என்று தெரிந்து கொண்டான். தன்னுடைய காய்ப்பேறிய கையை, அவள் தன் பஞ்சு போன்று மிருதுவான கைகளில் எடுத்து வைத்துக் கொண் டிருப்பதை உணர்ந்து பெரும் ஆறுதல் அடைந்தான்.

கண்ணிமைகள் மூடியிருந்தன. அவற்றின் கடைவழியே கண்ணீர் கசிந்து கொண்டேயிருந்தது. பார்வதி தன் புடைவைத் தலைப்பினால் அந்தக் கண்ணீரை ஒற்றி ஒற்றி விட்டாள்.

அந்தரங்கமான குரலில் அவள். 'ரொம்ப வலிக்குதா?' என்று கேட்டாள்.

அவன் ''இல்லை'' என்று தலையசைத்தான்.

ஆனால் அவள் எந்த வேதனையைக் கண்டாள்? ஒரு கால் முழங்காலுக்குக் கீழே இல்லை. மற்றொரு கால், கணுக்காலுக்குக் கீழே இல்லை. ஆஸ்பத்திரி டாக்டர்கள் இரண்டையும் வெட்டி எடுத்துவிட்டார்கள். இல்லாவிட்டால் அவன் உயிர் பிழைத்திருக்கவே முடியாதாம்!

கால்களை இப்படி வெட்டி அவனை உருக்குலைத் திருப்பதைவிட, அவனைச் சாகவிட்டிருந்தால் எத்தனை பெரிய நன்மையாகப் போயிருக்கும்!

குமரேசனுக்கு எந்த வேதனையும் பெரிதில்லை. அவனால் தாராளமாகப் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனால், தன்னால் பார்வதி படப் போகிற வேதனையை எண்ணியபோது அவனால் பொறுக்க முடியவில்லை.

இந்த வேதனைக்குச் சிகிச்சை செய்யக்கூடிய டாக்டர் யார்? உள்ளத்துக்கு வைத்தியம் செய்ய முடியாதவர்கள், உயிரைப்பற்றி மட்டும் கவலைப் படுவானேன்?

பார்வதியின் மிருதுவான கையை அவனுடைய உள்ளங்கை சிறிது அழுத்திவிட்டது. வாயைத் திறந்து சொல்ல முடியாத செய்தி ஒன்றை வைத்துக் கொண்டு குழம்புவது போல் நடுங்கின, அவன் விரல்கள்.

நான்கு மாதங்களுக்கு முன் தன் கையை முதல் முதலாகப் பிடித்தபோது இந்த விரல்கள் இப்படித்தான் நடுங்கின என்பது அவள் நினைவுக்கு வந்தது.

அவளால் பொறுக்க முடியவில்லை.

புடைவைத் தலைப்பால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''என்ன?'' என்கிற மாதிரி பார்த்தாள்.

''பார்வதி! எத்தனை நாள்... எத்தனை நாள் நீ இப்படி உட்கார்ந்திருப்பே?''

அவள் மெல்லச் சிரிக்க முயன்றாள்.

''இது என்ன கவலை இப்ப?''

நினைவு திரும்பி, நிலைமை புரிந்ததிலிருந்து குமரேசன் அவளிடம் இதையே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அவளிடம் மட்டுமின்றி, அவனுடைய நண்பன் கோவிந்தனிடமும் இந்த 'எத்தனை நாள்' பல்லவியை அவன் விடவில்லை.

குமரேசன் மின்சார யந்திரத்தில் அடிபட்டு விழுந்ததும், அவன் தான் முதலில் ஓடி வந்தான். அவன்தான் சரியான சமயத்தில் ஆஸ்பத்திரியில் சேர்க்க வைத்தான். அவன்தான் குற்றம் குமரேசனுடையதில்லை என்று நிர்வாகத்துக்கு நிரூபித்துக் காட்டினான். வைத்திய உதவிக்கும் மற்ற செலவுகளுக்கும் தட்டுப்பாடில்லாமல் பணம் கிடைப்பதற்கு வழி செய்தவனும் அவனேதான்.

எந்தக் காரியத்துக்குப் போனாலும், அதில் தோல்வி என்று அவன் திரும்பியதே இல்லை. அப்படிப் பட்டவனால்கூட குமரேசனின் இந்தப் பல்லவிக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை.

''கோவிந்தா! என்னாலே எத்தனை பேருக்குக் கஷ்டம்?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. இது அவங்க கடமை.''

''யாரைச் சொல்றே, கடமைன்னுட்டு?''

''நர்சுகளைத்தானே சொல்றே நீ?''

''சரியாப் போச்சு போ! உனக்கு... பார்வதிக்கு... இன்னும்... உங்களாலே...''

''எங்களுக்கு மட்டும் கடமையில்லையா? இதெல்லாம் என்ன பெரிய கஷ்டம்?''

''என்ன அப்படிச் சொல்றே? கஷ்டம்தான். கடமையாவது ஒண்ணாவது?''

''......''

''என் நிலைமை எப்படி ஆயிட்டுது, பார்த்தியா? ஆயுசுக்கும் இனிமே...''

''சரி விடு; வீணா இப்ப மனசைப் போட்டுக் குழப்பிக்காதே... நாளைக்குப் பன்னிரண்டு மணிக்கு டிஸ்சார்ஜ். உனக்கு விடுதலை!''

பார்வதி இதைக் கேட்டதும் துள்ளிக் குதிக்காத குறைதான். குமரேசனின் கையை அர்த்த புஷ்டியோடு அழுத்தினாள். சங்கேதமாக நகங்களை வருடினாள்.

கோவிந்தன்தான் டாக்டரிடம் போய் டிஸ்சார்ஜ் செய்ய ஏற்பாடு செய்து கொண்டு வந்திருந்தான்.

''நாளைக்கு நீ வருவியா?''

''நான் வராமே எப்படி வீட்டுக்குப் போறது?''

"டியூட்டி இல்லையா?"

"இருந்தா என்ன? பர்மிஷன் வாங்கிக்கிட்டு வர வேண்டியதுதான், வழக்கம் போல! பர்மிஷன் வாங்கிற தாவது? நான் போய் நின்னதுமே, 'போ போ! போயிட்டு வா!'ன்னுடுவாரு ஜே.ஈ. அதனாலே நீ ரெடியா இரு!"

குமரேசன் சூனியத்தைப் பார்த்தபடி இளக்காரமாகச் சிரித்துக் கொண்டான். அவன் ரெடியாக இருப்பது என்ன? இல்லாவிட்டால்தான் என்ன? போட்ட இடத்தில் படுத்துக் கிடக்கிற நிலையில் இருக்கும் அவன் ரெடியாக இருப்ப தாவது?

அந்த இளக்காரச் சிரிப்பைக் கவனித்த பார்வதியும் கோவிந்தனும், ஒரு நொடி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். குமரேசன் இப்படி எந்தச் சிறிய விஷயத்துக்கும் அடிக்கடி சிரித்துக் கொண்டிருந்தான். அதை இருவரும் கவனித்துக் கொண்டுதான் இருந்தார்கள். அவன் என்ன நினைத் தாலும் சரி; அவர்கள் இருவருமே மேலே ஆக வேண்டிய காரியத்தில் கண்ணாக இருந்தார்கள்.

"சரி, நேரமாயிட்டுது; கிளம்பு! இருட்டிப் போச்சு!" என்றான் குமரேசன்.

கோவிந்தனுக்குச் சொல்வதாக நினைத்துப் பார்வதி பேசாமல் இருந்தாள்.

"உன்னைத்தான் பார்வதி!"

"எனக்கு என்ன வந்தது. புதுசா இன்னிக்கு? சிறிது நேரம் பொறுத்துப் போய்க்கிறேன். இதைவிட அதிக நேரங்கழிச்சு நான் போனதில்லையா?"

"இன்னிக்கு ஒரு நாள் நேரத்தோடு தான் போயேன். நாளையிலிருந்து கவலையே இல்லை. இப்பத் துணை இருக்கிறப்ப போகலாமில்லையா?" - குமரேசன் கொஞ்சம் அழுத்தமாகவே சொன்னான்.

நோயாளியுடன் யாராவது ஒருவர் கூடவே இருந்து தான் ஆக வேண்டும் என்ற நிலை மாறியதிலிருந்து, பார்வதி காலை, மாலை இரண்டு வேளை களிலுமாக வந்து போய்க் கொண்டிருந் தாள். அவன் கண்களும் அவள் வருகிற வழியை ஆவலோடு பார்த்துக் கொண்டு தான் இருக்கும். குறிப்பிட்ட நேரத்துக்கு முன்னாலேயே வெளுத்துச் சிவந்த முகத்திலே முறுவல் நெளிய, கண் களிலே அன்பும் அக்கறையும் பளிச்சிட, கையிலுள்ள துணிப் பையிலே எதையாவது எடுத்துக் கொண்டு அவள் விரைந்து வருவாள். வந்த பரபரப்பிலே அவளுக்கு மூச்சு வாங்கும். இள மார்பு ஏறி இறங்குவதை அவன் பரிவோடு கவனிப்பான். போகும் போது பையில் வேண்டாதவற்றை எடுத்துப் போட்டுக் கொண்டு, பார்வையிலே ஏக்கத்தையும் பிரிவுத் துன்பத்தையும் சுமந்து கொண்டு, குறிப்பிட்ட நேரத்துக்கு கால் மணி நேரம் கழித்துத்தான் தயங்கி, தயங்கி நடப்பாள். அவள் இருக்கும் வரை எல்லாம் இருப்பதுபோல இருக்கும். அவள் போன பிறகு எல்லாமே அவளோடு போய்விட்ட மாதிரி ஆகிவிடும்.

அப்போதெல்லாம் அவளுக்குத் துணை வேண்டாமா என்று அவன் கவலைப்பட்டதேயில்லை. அவளும் கவலைப்பட்டதில்லை. இன்றுமட்டும் அந்தப் பேச்சு எங்கே வந்தது? துணையாமே துணை! யாருக்கு யார் துணை?

"ம்..ம்.. அவன் சொல்றதும் சரிதான். கிளம்புங்க உடனே..." என்ற கோவிந்தன், "எல்லாம் அவன் காரணத் தோடுதான் சொல்றான். பை இன்னிக்குப் பெரிசா இருக்கில்லையா? உங்களாலே தூக்க முடியுமா? இப்படிக் கொடுங்க அதை" என்று பையை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டான்.

"வேணாம் வேணாம்.. இது என்ன பெரிய கனம்?" என்று பையைத்திரும்ப வாங்கப் பார்த்தாள்.

"இருக்கட்டும்; புறப்படுங்க!"

அவள் தயங்கினாள்.

"சரி, சரி; நீ புறப்படு!" என்றான் குமரேசன்.

அந்த ஒரு நொடியில் மூவருமே சொல்லொணாத உணர்வையடைந் தார்கள். அவர்கள் இருவரும் போய் வெகு நேரம் ஆன பிறகு கூட, குமரேசனால் கண்களைத் திறந்து வெளிச்சத்தைப் பார்க்க முடியவில்லை. இதைவிடப் பெரிய கொடுமை வேறு என்ன இருக்கிறது?

என்னதான் எதிர்பார்த்ததைவிட லட்சக் கணக்கில் நஷ்ட ஈட்டுப் பணமும் மற்ற வகைப் பணமும் வந்தாலும், ஊனமாகிவிட்ட வாழ்க் கையை அவனால் எப்படிச் சகிக்க முடியும்?

✪ ✪ ✪

இதோ, இப்போது இன்னும் சில நிமிஷ நேரத்தில் கோவிந்தன் வந்து விடுவான். அதற்குப் பிறகு ஒரு புதுவாழ்க்கை - நரக வாழ்க்கையாகத் தான் இருக்கப் போகிறது. அவனுக்கு அதில் சந்தேகமேயில்லை. அந்த வாழ்க்கை வாழ்வதைவிட உயிரை விட்டுவிடுவது எவ்வளவோ நல்லதாக இருக்கும். அவனுக்குக் கோவிந்தன் முகத்தில் விழிக்கக்கூட வேதனையாக இருந்தது.

டிஸ்சார்ஜ் செய்ய வந்த டாக்டர்கள் பரிவாரத்தோடு நல்ல வேளையாகக் கோவிந்தன் மட்டும் தான் வந்தான். பார்வதி வரவில்லை.

ஆனால் இப்போது அவளைக் காணாமல் குமரேசனின் கண்கள் அலை பாய்ந்தன. படுக்கையில் அமர்ந்தபடி நர்ஸ்கள், மற்றுமுள்ள சிப்பந்திகள், வார்டிலுள்ள நோயாளிகள் முதலி யோரிடம் அவன் விடைபெற்றுக் கொண்டபோது பார்வதி பக்கத்தில் இல்லாதது ஊனத்தைவிடப் பெரிய ஊனமாகத் தோன்றிற்று.

"என்னாதி இதி - இன்னிக்குப் போய் பார்வதியம்மாவைக் காண்றதில்லே?" என்று உடைத்தே கேட்டுவிட்டாள் ஸ்டாஃப் நர்ஸ் பாலி சைமன்.

இப்பொழுதும் கோவிந்தன் தான் அதற்கு விளக்கம் சொல்ல வேண்டி யிருந்தது.

"அம்மா வந்துட்டா, வீட்டிலே வேண்டிய ஏற்பாடுகளை யார் செய்யறது? வீட்டைப் பூட்டிக்கிட்டு வந்துடமுடியுமா?"

"ஓ. அதுதன்னே கேட்டது - சரிதான்!"

குமரேசனுக்கும் அதுவே சமாதான மாக இருந்தது. அதுவே உண்மையாக இருக்கட்டும் என்று கண்களை மூடி வேண்டிக் கொண்டான்.

அவன் பிரார்த்தனை வீண் போகவில்லை. செக்கச் சிவந்த முகத்தில் பளிச்சென்று குங்குமமும் பரபரப்புமாய் அவள் எத்தனை ஆவ லோடு குமரேசனை வீட்டுக்கு அவர்கள் அழைத்து வருவதை எதிர் பார்த் திருந்தாள்! கோவிந்தன் அழைத்து வரப் போயிருக்கும்போது, குறித்த நேரத்தில் வருவதற்கும் ஒரு சங்கடமும் இருக்காது என்று அவளுக்கு ஒரு நம்பிக்கை.

அன்று குமரேசனைப் பார்க்க வந்தவர்கள் - அவர்களில் சிலர் வேடிக்கை பார்க்கிறதுக்காக வந்தவர் களாய் இருந்தாலும் - அத்தனை பேருக்கும் அவள் அலுக்காமல் சலிக்காமல் பதில் சொல்லி, உபசாரம் செய்து அனுப்பினாள்.

அன்றிரவு வெகு நேரம் கழித்து அவள் எல்லா வேலைகளையும் முடித்து விட்டு, அவன் கால்மாட்டுக்கு அருகே வந்த உட்கார்ந்தபோது குமரேசனுக்குக் கோபம்தான் வந்தது.

"என்னமோ போல இருக்கீங்களே, ஏன்?'' என்று கவலையோடு விசாரித்தாள் பார்வதி.

"ஊரிலே இவ்வளவு பேர்தானா, இன்னும் யாராவது பாக்கியிருக்காங்களா, வந்து வேடிக்கை பார்க்க?''

பார்வதி களைத்துப் போயிருந்தாலும் சிரிக்க முயன்றாள்.

"என்ன செய்யிறது? வராதே என்று யாரிடம் சொல்ல முடியும்?''

"எல்லாருக்கும் நான் ஒரு வேடிக்கைப் பொருளாயிட்டேன் இல்லையா?''

"அப்படியெல்லாம் நினைக்காதீங்க'' என்றவளுக்குத் திடீரென்று அவன் கால் நினைவு வந்தது. உடனே இடுப்பருகே நகர்ந்து உட்கார்ந்து கொண்டாள். அவன் பெருமூச்சு விடுவதைக் கண்ட அவளுக்கு ஆறுதலான சொற்கள் எதுவுமே அகப்படவில்லை.

"நீ என்ன நினைக்கிறே?''

"எதுக்கு?''

"எல்லாரும் என்னை மட்டுமா பாக்க வந்தாங்க?''

"பின்னே?''

"இல்லை. எல்லாரும் உன்னைத்தான் எப்படியிருக்கேன்னு பார்க்க வந்திருக் காங்க!''

பார்வதிக்குச் சுருக்கென்றது. அவன் சொல்வதில் உண்மையிருக்கிறது என்று அவளுக்குப் பட்டது.

அவள், வந்தவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியாக நினைத்துப் பார்த்தாள். அவர்கள் என்ன நினைப்போடு வந்திருப்பார்கள் என்பதையும் எண்ணிப் பார்த்தாள். குமரேசன் சொன்னது மிகவும் பொருத்தமாகப் பட்டது.



அவர்களில் சிலர் சில மாதங்களுக்கு முன்பு - அதாவது அவளுடைய கல்யாண நாள் வரையில் - அவளுக்காக 'நான்-நீ' என்று போட்டி போட்டிருக்கிறார்கள். அவர்களில் படித்தவர்கள், பணம் படைத்தவர்கள், நல்ல வேலையில் இருப்பவர்கள் என்று சிலர், அவளிடமே தகாத முறையில் நெருங்கியிருக்கிறார்கள். சிலர் அவளுடைய பாட்டியிடமே பெண் கேட்டு வந்திருக்கிறார்கள். அத்தனை பேரையும் அவள் பிறருக்குத் தெரியாமல் ஒவ்வொரு வகையில் மட்டம் தட்டி ஒதுக்கித் தள்ளியிருக்கிறாள்.

கடைசியில் எல்லாரையும் விட்டு விட்டு, குமரேசனுக்கு மாலையிடச் சம்மதிப்பாள் என்று குமரேசனே கூட எதிர்பார்க்கவில்லை. எல்லாருக்குமே ஆச்சரியம். 'போயும் போயும் இந்தக் குமரேசனா இவளுக்குக் கிடைச்சான்!'' என்று கேலி செய்து சிரித்தார்கள். இது அவளுக்கே தெரியும்.

குமரேசன் ஒரு தனிப் போக்குத்தான். அதிலும் ஒரு முரட்டுப் போக்கு. ஆளாவது நல்ல லட்சணமாக, நாகரிகமாக இருப்பானா? அதுவும் இல்லை. பின்னே பார்வதி அவனிடம் எந்த நல்ல அம்சத்தைக் கண்டு கழுத்தை நீட்டச் சம்மதித்தாள்?

"எல்லாம் சரி; எல்லாரையும் விட்டுட்டு என்னைக் கட்டிக்க எப்படிச் சம்மதிச்சே?' என்று அவன் கேட்டான்.

"அதான் எனக்கே தெரியலை. என் கண்ணையும் நெஞ்சையும்தான் கேக்கணும்!''

குமரேசனுக்கு அந்தப் பேச்சுச் சாமர்த்தியமெல்லாம் இல்லை. ஆனால் ஒன்றுமட்டும் அவன் வரையில் நிச்சயமாகத் தெரியும். அவளிடம் தன்னளவுக்கு யாராலும் ஆசை, அன்போடு இருக்க முடியாது என்று அவன் உறுதியாக நினைத்தான். அப்படி ஒரு முரட்டு அன்பு. ஈடிணையில்லாத அன்பு; ஆசை!

கோவிந்தனுக்குக்கூட அந்த வகையில் அவனிடம் கொஞ்சம் பொறாமைதான். இதைஅவன் வெளியில் காட்டிக்

கொள்ளவில்லையே தவிர, குமரேசனுக்கு நன்றாகத் தெரியும். அந்தக் கோவிந்தனுக்கு அடிக்க வேண்டிய பரிசு மாறிப் போய்விட்டது.

'ஏ குமரு! என்ன இருந்தாலும் நீ பெரிய அதிர்ஷ்டக்காரன்தான்!" என்றான் கோவிந்தன்.

"என்னடா இது! திடீர்னு இப்படிச் சொன்னா, என்னடா வந்துட்டுது எனக்கு இப்ப?"

"என்ன வந்துட்டுதா? அதிர்ஷ்டப் பிரைஸ் அடிச்சட்டு என்ன வந்துட்டு துன்னு என்னைக் கேக்கறியே. அதை வந்து நான் சொல்லணுமா?"

இப்படிச் சொல்லிவிட்டுக் கோவிந்தன் அவசரமாகப் போய் விட்டான். பிறகுதான் அவன் சொல்ல வந்தது குமரேசனுக்குப் புரிந்தது.

ஒரு நாள் வழியோடு போன அவனை யாரோ கையைத் தட்டிக் கூப்பிட்டார்கள். கூப்பிட்டவள் பார்வதியின் பாட்டிதான்.

"என்னையா கூப்பிட்டீங்க?"

"ஆமா, தம்பி! அன்னம்மா பேரன் தானே நீ?"

"ஆமா பாட்டி!"

"வந்து இப்படி உக்காரேன்!"

"இருக்கட்டும்; சொல்லுங்க!"

"ஒண்ணுமில்லை. வந்து என் வீட்டுப் பேத்திப் பொண்ணைப் பாத்திருக்கியா நீ?"

குமரேசனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அந்தப் பெண்ணையும் தெரியும். அவளிடம் சிலர் பேச்சுக் கொடுத்து 'வாங்கிக் கட்டிக்' கொண்டிருக்கிறார்கள் என்பதும் தெரியும்.

"தெரியுமே - பார்த்திருக்கிறேனே - ஏன் தெரியாது?"

"உன்னையும் அது பாத்திருக்குதாம். அன்னம்மாவை ஒரு நாளு வாசல் வரைக்கும் கொண்டாந்து விட்டுப் புட்டு, தெருவோட போயிட்டியாமே."

"அவசரம், போயிட்டேன்."

"போவட்டும். அன்னம்மாவும் நானும் சின்னப்புள்ளையிலேருந்து ஒடி ஆடி விளையாண்டவங்க. உசிருக்கு உசிராப் பழகினவங்க. ஆச்சா! இப்ப எனக்கோ வயசாயிடுச்சு. இனிமே எது எப்படியோன்னு நாளை எண்ணிக் கிட்டுத்தான் இருக்கேன். போயேன். திடீர்னு அப்படி ஏதுனா ஒண்ணு ஆயிடுச்சுன்னு வை. ஆயி, அப்பன் இல்லாத எம் பேத்திக்கு யாரும் துணையில்லையேன்னு ஆண்டவனை வேண்டிக்கிட்டிருக்கேன். உன்னைக் கண்டதும் எனக்கு அன்னம்மா நினைவு திடீர்னு வரவேதான் கூப்பிட்டேன். பொட்டைப் புள்ளெ பாரு, தனக்கு யாரும் துணையில்லையேன்னு அது கண் கலங்காமெ இருக்கணும் பாரு - அதச் சொல்லலாம்னு தோணிச்சு, சொல்லிப்புட்டேன்" என்றாள் பாட்டி.

கதவுக்குப் பின்னாலிருந்து இவர்கள் பேசுவதை அந்தப் பேத்தி கேட்டுக் கொண்டிருந்ததையும் அவன் கவனித் தான். பாட்டி ஏதோ பழைய அபி மானத்தில் இதையெல்லாம் சொல்கிறாள் என்று, அவன் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

பாட்டி கவலைப்பட்டபடி 'அவள் கணக்கு' அதற்கு அடுத்த மாதமே தீர்ந்துவிட்டது. பார்வதி தனியாகி விட்டாள். சொந்தத்தில் வீடு இருந்தது; பாட்டி சேமித்து வைத்திருந்த ரொக்கமும் கணிசமாக இருந்தது. ஆனால் அவளை ஒருவன் கையில் ஒப்படைக்கத் தான் சொந்த பந்தம், என்று யாரும் இல்லை.

பேத்தியின் கல்யாண விஷயமாய் பாட்டி என்ன அபிப்பிராயம் கொண் டிருந்தாள் என்று எப்படியோ அக்கம் பக்கத்தாருக்குத் தெரிந்து, குமரேச னுக்குப் பேசி முடிப்பது என்று தீர்மானித்தார்கள்.

"ஏம்மா, உனக்குச் சம்மதம்தானா?" என்று பார்வதியைப் பார்த்துக் கேட்டாள், ஒருத்தி

"இது என்ன கேள்வி கேக்கறே அதுகிட்டே போயி? அதுவே பாட்டியின் அபிப்பிராயம்னு சொன்னப்பவே, அதோட சம்மதம் தெரியலையா? வீணாக் கேட்டுக்கிட்டிருக்கியே!" என்றாள் அடுத்த வீட்டுக்காரி.

"இருந்தாலும் அவ வாயாலே சம் மதம்னு வந்துடட்டுமே... என்னம்மா கண்ணு, உனக்கு அவனைக் கட்டிக்க இஷ்டந்தானா?"

பார்வதியின் முகம் குப்பென்று சிவந்து போயிற்று. சம்மதத்துக்கு அறிகுறியாக அவள் மெல்ல, தலையை அசைத்தாள்.

இந்த விவரமெல்லாம் தெரிந்துதான் கோவிந்தன் பிரைஸ் அடித்து விட்ட தாகச் சொல்லிவிட்டுப் போகிறான் என்பது குமரேசனுக்குப் புரிந்தது.

குமரேசனுக்குக் கல்யாணமான பிறகுகூட எல்லாம் கனவு போலத்தான் இருந்தது. யாருக்குமே எட்டாத கொம் பாக இருந்த பார்வதி, அவனிடம் தானாக எப்படித் தணிந்து போனாள்? இப்படி அவன் அதிசயப்பட்டது கிடக்கட்டும்; ஊரே இப்படித்தான் அதிசயப்பட்டது. ஆற்றாமையால் வெம்பி வெடித்தது.

குமரேசன் நன்றாக நினைத்துப் பார்த்தான். அன்று அவன் அதிர்ஷ் டத்தைப் பற்றிச் சொல்லி விட்டுப் போனதிலிருந்து கோவிந்தன் அவன் கண்ணிலேயே படவில்லை.

பிறகு அந்தச் சம்பவத்தின் போதுதான்-



அந்த விபத்துக்குக்கூட ஊர் ஓமல் தான் காரணமாக இருந்திருக்கும் என்று சிலர் சொன்னார்கள். இல்லாவிட்டால் குமரேசனா ஏமாந்துபோய் மெஷின் சக்கரத்தில் மாட்டிக் கொள்வான்? அதுகூடச் சரியில்லை. பொறாமை வெடித்ததுபோல, யந்திரத்தில் ஏதோ ஒரு மரை படீரென்று வெடித்துத் தெறித்தது. அவன் சட்டென்று குனிந்து உட்காரப் போக... கீழேயிருந்த ஏண் ணெய்ப் பிசுக்கில் பூட்ஸ் கால் வழுக்கி விட... சக்கரம் ஒன்றில் ஒரு கால் அகப்பட்டுக் கொண்டுவிட்டது. மறு கால் உதைத்துக் கொள்ளப் போய் அதுவும் ஊனமாகி விட்டது.

கோவிந்தன் சட்டென்று மின் சாரத்தை நிறுத்திவிட்டு ஓடி வந்தானோ, அவன் உயிர் பிழைத்தானோ? இல்லா விட்டால்!

அவன் நல்லது செய்தானா, தீமை செய்தானா?

இந்தமாதிரி நிலையில் அவன் உயிர் பிழைத்திருந்து என்ன பயன்? இப்படி எல்லாரும் வந்து வேடிக்கை பார்த்து விட்டுப் போகவா அவன் பிழைத்துக் கொண்டான்? எல்லாரும் பார்வதியைப் பார்த்து பரிதாபப்படவா அவன் தன் உயிரைக் காப்பாற்றினான்?

இன்று அவன் மனத்தில் நன்றி சுரப்பதற்குப் பதில் கோவிந்தனிடம் கொள்ளைக் கோபம்தான் வெறுப்பாக வந்தது.

ஆனால் அதே சமயத்தில் பார்வதியின் நெஞ்சில் நன்றியுணர்வு பெருகி வழிந்தது.

வேலை நேரத்தில் உடல் ஊனமாகி விட்டதற்காக ஒரு பெரிய நஷ்ட ஈட்டுத் தொகை வாங்க அந்தக் கோவிந்தனே காரணமாக இருந்தான். திடமாக இருந்து ஆயுசு முழுக்க உழைத்தாலும் அத்தனை பெரிய தொகை கிடைத்திராது. நியாயமாகக் கிடைக்க வேண்டியதைப் போல் கிட்டத்தட்ட இரண்டு மடங்குத் தொகை, லட்சக் கணக்கில்.

பார்வதி இதை நன்றிப் பெருக்கோடு அவனிடம் குறிப்பிட்டபோது, குமரேசனால் அதைக் கொண்டாட முடியவில்லை. காரணம் கோவிந்தன் மன்றாடி வாங்கிக் கொடுத்தது, அவனைப் பார்த்துவிட்டுப் போக வந்தவர்களின் மனசில் ஒரு பொறாமையை ஏற்படுத்தியிருப்பதை அவனால் உணர முடிந்ததால்தான்.

"கவலைப்படாதே, குமரேசா! பணத்தை வாங்கிக் கொடுத்த மாதிரி, கால்களுக்கும் கோவிந்தன் ஏதாவது ஏற்பாடு செய்துவிடுவான்!"

"கோவிந்தன் வந்து கவனிச்சுக்கிறப்ப என்ன கவலை உனக்கு?"

இதையெல்லாம் கேட்கும்போது அவனுக்கு, தான் ஒரு வேடிக்கைப் பொருளாகி விட்டதுடன், பரிதாபத்துக்குரிய பாத்திரமாகவும் ஆகிவிட்டது போல் அவமானமாக இருந்தது.

திருவிழாக் கூட்டத்தில் அருவருப்பைத் தரும் விநோதப் பிறவி ஒன்றைப் போட்டுக் கொண்டு துணியை விரித்தால் எத்தனை காசு வந்துவிழும்? இந்த நஷ்டஈட்டுப் பணம் அந்தக் காசுகளைப் போலத்தான் அவனுக்குத் தோன்றியது.

அதற்கு நேர் மாறாக, பார்வதியின் மதிப்பில் கோவிந்தன் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டிருந்தான். நோயாளியை வைத்துக் கொண்டு எந்த நேரமும் பாடுபட வேண்டியிருந்த அவளுக்கு எந்தப் பிரச்னையையும் கண்ணில் காட்டாமல் அவன் உதவிய அருமையை அவள் தன் கணவனிடம் சொல்லிச் சொல்லி மாய்ந்து போனாள்.

கோவிந்தன் வேளை தவறாமல் வந்து போவதையும், நடக்க வேண்டியதையெல்லாம் அக்கறையோடு கவனிப்பதையும், பார்க்கிறவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதைப்பற்றி அவள் சிறிதும் கவலைப்படவேயில்லை. கோவிந்தன் எந்தவிதக் களங்கமும் இல்லாமல் நடந்து கொள்வதாகவே அவளுக்குப் பட்டது.

"பாவம், உங்க ஃபிரெண்டு, அவர் மட்டும் இல்லைன்னா என் கதி என்ன ஆயிருக்கும்னு கொஞ்சம் நினைச்சுப் பாருங்க. உங்களுக்காக அவர் உசிரைத்தான் விடறார்!" என்றாள் பார்வதி, குமரேசனிடம் இரவு படுக்கப் போகும்போது.

"இதோபாரு. அவன் பாடுபட்டு உதவி பண்றதெல்லாம் எனக்கும் தெரியும். ஆனா அதுக்குப் பதில் என்னாலே அவனுக்கு என்ன செய்ய முடியும்? இதை நினைக்கிற போதுதான் யாருக்கும் எதுவும் செய்ய முடியாத இந்த உசிரை வச்சிட்டிருக்கணுமான்னு எனக்கு வேதனையா இருக்கு!"

"அப்படியெல்லாம் ஏன் நினைக்கிறீங்க? நீங்க எப்படியிருந்தாலும் உசிரோடிருக்கிறதே எனக்குச் செய்யிற பெரிய உபகாரம் இல்லையா?"

பார்வதி அவன் மார்பில் இலேசாகச் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தாள், களைப்பு மிகுதியால் அப்படியே கண்ணயர்ந்து விட்டாள். ஆனால் குமரேசனுக்குத் தூக்கமே வரவில்லை, கண்களை மூடியவாறே படுத்திருந்தான்.

வாசற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டு, பார்வதி சட்டென்று விழித்துக் கொண்டு மெல்ல எழுந்து போவது தெரிந்தது. சற்றைக்கெல்லாம் பேச்சுக் குரல் கேட்டது. நெஞ்சு படபடக்க அவன் காதைக் கூர்மையாக்கிக் கொண்டான். கோவிந்தன் குரல்தான் அது. அவர்கள் முன்கட்டைத் தாண்டி வரவில்லை.

"என்னங்க, இன்னிக்கு வரவே மாட்டீங்களோன்னு பாத்தேன்!"




## இனி வருகிற யுகத்திலே......

இயற்கை என்னும் சக்திக்கு மேலே
எதுவும் இல்லை ஜெகத்திலே...
இயக்கி வைக்கும் மனித ஆற்றல்
இனி வருகிற யுகத்திலே (மனித நேயம்)

கடலும் வானும் காற்றும் கூட
மனிதன் ஆணை ஏற்குமே...
மடமை பேசும் பழைய கதைகள்
மண்ணில் நாளை தோற்குமே (மனித நேயம்)

அடுத்த மனிதன் இதயம் நோகும்
அழுக்கு எண்ணம் போக்குவோம்....
தொடுக்கும் வண்ணச் சரத்தின் பூவாய்
மனித குலத்தை ஆக்குவோம் (மனிதநேயம்)

இனமும் மதமும் மொழியும் சாதி
வேறுபாட்டை நீக்குவோம்....
மனிதர் மகிழ மனிதம் வாழ
மனத்தில் அன்பைத் தேக்குவோம்
(மனிதநேயம்)

மனித நேயம் வாழ்க வென்று
இதய கீதம் பாடுவோம்
மனிதம் காக்கும் புனிதப் பணியில்
இதயம் என்றும் நாடுவோம் (மனிதநேயம்)

"இப்பக்கூட வரமுடியாதுன்னுதான் நினைச்சேன். நல்ல வேளையாகப் பாக்க வந்தவங்க சட்டுனு பேசிட்டுப் போயிட்டாங்க! சரி; பாத்துட்டுப் போயிடலாம்னு வந்தேன்!"

"அதான், நீங்க வரலையேன்னு என்னவோ கவலையா இருந்தது!"

"குமரேசன் என்னைக் கேட்டானா?"

"ஊகும்; நான்தான் காணமேன்னு பார்த்தேன்!"

சிறிது நேரம் பேச்சைக் காணோம். குமரேசன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு படுத்திருந்தான்.

"என்ன செய்யறான்? தூங்கறானோ?"

"ஆமா; எழுப்பட்டுமா?"

"எதுக்கு? வேணாம், வேணாம்!"

மறுபடியும் மௌனம்.

"எந்நேரமானாலும் பாத்துட்டுப் போகனும்னு வந்ததே மனசுக்குத் தெம்பா இருக்கு!" - பார்வதி.

"நான் வராமெ இருப்பேனா?" கோவிந்தன்.

குமரேசனுக்கு நெஞ்சத் துடிப்புக் கூடத் தெளிவாகக் கேட்டது.

"சரி; நான் வரட்டுமா?"

மௌனம் ஒரு விநாடி.. இரண்டு...

"போறேங்கிறீங்களா? சரி..."

குமரேசன் ஒவ்வொரு நொடியையும் கணக்குப் போட்டுக் கொண்டிருந்தான்.

மறுபடியும் கோவிந்தன் குரல் கேட்டது.

"நேரமாயிட்டுது; வரேன்."

"ம்.."

ஒரு முறை தான் போகச் சொல்லியாச்சே. அப்புறம் எதனால் தயக்கம்! கோவிந்தன் போகிற காலடி ஓசையும், பார்வதி கதவைச் சாத்தும் சத்தமும் கேட்டன. குமரேசன் தூங்குவது போலவே படுத்திருந்தான். பார்வதி அவன் கால் பக்கத்தைச் சரியாகப் போர்த்திவிட்டு, தரையில் தன் படுக்கையை விரித்துக் கொண்டாள். விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டாள்.

மறுநாள் கோவிந்தன் வந்துவிட்டுப் போனதைப் பற்றி அவள் சொல்வாள் என்று குமரேசன் எதிர்பார்த்தான். பார்வதி வாயைத் திறக்கவில்லை. இரவில் படுக்கையில் படுத்துக் கொண்ட பிறகு பார்வதியிடம் கோவிந்தன் பேச்சை எடுக்கலாமா என்று கேட்க நினைத்தான். அவன் கண்கள் என்னவோ தூங்குவதுபோல் மூடியிருந்தன.

பார்வதி கட்டிலுக்குப் பக்கத்தில் தான் கீழே படுத்திருந்தாள். வெகு நேரம் குருட்டு யோசனை செய்தவன், கண்களை மெல்லத்திறந்து பார்த்தான். ஒரே இருட்டு. வழக்கமாக வெள்ளிக்கிழமை வாங்குகிற பூ, அந்த இருளில் கம்மென்று மணந்து கொண்டிருந்தது. அவனுக்குப் பார்வதியேதான் அப்படி மணந்து கொண்டிருக்கிறாளோ என்றிருந்தது.

தன்னைப் பற்றி அவன் கொஞ்சம் நினைத்துப் பார்த்தான். அவனுக்கே ஒரு கூச்சமாகவும், மகா அருவருப்பாகவும் இருந்தது. அப்படியிருக்க பார்வதி மட்டும் எப்படிச் சகித்துக் கொள்வாள்? தன்னைப் போலவே பார்வதி தூங்காமல் மனம் புழுங்கியபடி படுத்திருக்கிறாளோ - அல்லது சலனமில்லாமல் தூங்குகிறாளோ? அவளை மெல்ல அழைத்துப் பார்க்கலாமா என்று அவன் நினைத்த போது, முதல் நாளைப் போலவே கதவு மெல்லத் தட்டப்படும் ஓசை கேட்டது.

பார்வதி சட்டென்று எழுந்து விளக்கைப் போடாமலே, முன் ஹால் பக்கம் போவது தெரிந்தது.

"நீங்களாத்தான் இருக்கும்னு தெரியும்"

"அப்படியா?"

"ஆமா; எப்படியும் ஒரு தடவை யாச்சும் வராமெ இருக்கமாட்டீங்க. அதனாலேதான் சொல்றேன்."

"விசேஷம் ஒண்ணும் இல்லையே!"

"ஊகும்."

"தூங்கறானாக்கும்?"

"ஆமா."

மௌனம். கடிகாரத்தின் டிக்-டிக் ஒலி மட்டுமே கேட்டது. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து..."

"என்னைக் காணோமேன்னு அவன் கேட்டானா?"

"ஊகும்... கேக்கலை..."

"நான் வந்ததும் தெரியாதோ?"

"ஊகும்.."

"தெரியாமெ இருக்கிறதேகூட ஒரு விதத்துலே நல்லதுதான்!"

"......"

"சரி; நான் வரேன்!"

"ஏதாவது வேணுமா சாப்பிட? கொண்டு வரட்டுமா!"

"சேசே, அதெல்லாம் எதுவும் வேணாம். நான் வரேன்!"

"நாளைக்கு நீங்க வருவீங்களா இல்லையா?"

"தினம் வந்துட்டுத்தானே இருக்கேன்? என்ன சந்தேகம் திடீர்ன்னு?"

"சந்தேகமில்லை... சும்மாத்தான் கேட்டேன்!"

"ஒரு முறையாவது வந்து பாத்துட்டுப் போனாத்தான்- ஒரு திருப்தி... மனசுக்கு!"

பார்வதி பேசாமல் அவன் முகத்தையே பார்த்தபடி நின்றாள்.

அவனும் அந்தக் கண்களைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"அப்ப நான் வரேன்... நாளைக்குப் பாக்கலாம்."

அவள் தலையசைப்பதற்குள் அவன் போய்விட்டான்.

கோவிந்தன் தன்னைப் பார்க்க வருகிறவனாய் இருந்தால் உள்ளே வந்து எட்டிப் பார்த்துவிட்டாவது போக வேண்டாமா? 'என்னவோ நேரம் கெட்ட நேரம் வர்றான். வந்துட்டு அப்படியே போறானே!' என்று புரண்டு படுத்தான், குமரேசன்.

பார்வதி விளக்கைப் போட்டாள். ஒரு தடவை வழக்கம்போல் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துவிட்டு விளக்கை அணைப்பதற்குள், அவன் ஒரு நொடி கண்ணைத் திறந்து பார்த்தான். வாங்கியிருந்த பூ அவள் தலையில் மணக்கவில்லை. அது எதிரேயிருந்த படத்திலிருந்து மணந்து கொண் டிருந்தது.

மறுநாளும் பார்வதி அவன் வந்ததைப் பற்றித் தெரிவிக்கவில்லை. 'ஏன், ஏன்?' என்று குமரேசன் மனம் குடைந்து கொண்டிருந்தது.

அவன் மன உளைச்சலைப்பற்றி ஒன்றும் அறியாமலே பார்வதி ஏதோ வேலையாக இருந்தாள். வரட்டும்; கேட்டு விடலாம் என்று அவன் காத்துக் கொண்டேயிருந்தான்.

"ஏன் என்னமோ போல இருக்கீங்க?" என்று விளக்குகளை எரியவிட்ட பிறகு கேட்டாள் பார்வதி.

"நெஞ்சை வலிக்கிறது."

பார்வதி சட்டென்று அவனருகில் அமர்ந்து அவனுடைய மார்பைத் தடவி விட்டாள். மூன்றாம் முறையாக அவள் தடவிவிட்டபோது அவள் கையைப் பிடித்துக் கொண்டான்.

இருவர் கண்களும் கலந்து நின்றன - கணநேரம்.

"பார்வதி."

"உம்..."

குரல் தழுதழுக்க, அவளுடைய கையைத் தன் நெஞ்சோடு அணைத்த வாறு, கண்ணை மூடிக்கொண்டு, "பார்வதி!" என்றவனுக்கு மூச்சுத் திணறியது.

"பார்வதி! விதி உன்னை வஞ்சித்து விட்டது. பார்வதி! என்னை உயிரோடு பாரமாக உன் தலையில் சுமத்திக் கொடுமை செய்துட்டுது!"

குமரேசன் அடி பட்ட செய்தி கேட்டபோதுகூட, அழாமல் தைரியமாக அதுவரையில் இருந்த பார்வதிக்கு, இப்போது அணை உடைந்ததுபோல அழுகை பீரிட்டுக்கொண்டு வந்தது.

"பார்வதி! நான் ஒண்ணு சொல்றேன் - கேப்பியா?"

"சொல்லுங்க!"

"கோபிச்சுக்கக் கூடாது. சொல்றபடி கேக்கறேன்னு கையிலே அடிச்சுக் கொடு!"

பார்வதி விழித்துக் கொண்டு விட்டாள். அவன் என்ன சொல்ல வருகிறான் என்று தெரிந்துவிட்டது. சட்டென்று அவன் உதடுகளைப் பொத்தியவாறு அடிக்குரலில் பேசினாள்.

"வேணாம். நீங்க எதுவும் சொல்லவும் வேணாம். நான் கையிலே அடிச்சுக் கொடுக்கவும் வேணாம்."

அவள் விசுக்கென்று எழுந்து ஹாலுக்குப் போய்விட்டாள். வெகு நேரம் அவள் என்ன செய்தாளோ, உள்ளே வரவேயில்லை.

வழக்கம்போல் விளக்கையெல்லாம் அணைக்கப் போகும்போது கதவை மெல்லத் தட்டுவது கேட்டது. பார்வதி கட்டிலைப் பார்த்தாள். குமரேசன் தூங்குகிற மாதிரி இருந்தது.

ஓசைப் படாமல் நடந்து சென்று கதவைத் திறந்துவிட்டாள். கோவிந்தன் தயங்கிக் கொண்டே நிலையைத் தாண்டி ஹாலுக்குள் வந்தான்.

"கதவைத் தட்டினதுமே யாருன்னு தெரிஞ்சிருக்குமே!"

"ஆமா, எதிர்பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேன்!"

"அப்படியா! எதுக்கு?"

பார்வதி உள்கட்டுப் பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு, அவன் முன்னால் வந்தாள்.

"உங்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். இதுதான்!" மடியிலிருந்து ஒரு கடிதத் துண்டை எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

"என்ன விஷயம்?"

"படிச்சுப் பாருங்க."

"பாக்கறேன். இப்ப ஒண்ணு சொல்லலாம்னுதான் வந்தேன். அதைச் சொல்லிடறேன். என்னைத் தவறா நினைக்கப்படாது."

பார்வதி திகைத்துப் போய், "என்ன சொல்லுங்க!" என்றாள்.

அவனும் தயங்கினான்.

"நான் வேலையை விட்டுட்டேன். வடக்கே போயிடலாம்னு இருக்கேன்.

"ஏன் அப்படி? எதுக்காக?" - அடுத்து என்ன சொல்லிவிடுவானோ என்று திணறினாள்.

"எனக்கென்னவோ திடீர்னு எங்கிட்டேயே நம்பிக்கையில்லாமே போயிட்டுது. ஒரு பயம் வந்துட்டுது. அருமையான ஒரு சிநேகம் கறைபட்டுப் போயிடுமோன்னு - அதுக்கு நான் காரணமாயிடுவேனோன்னு தான் ஊரை விட்டே போயிடப்போறேன்"

பார்வதி பேசாமல் அவன் என்ன சொல்ல வருகிறான் என்பதைப் புரிந்து கொண்டு அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

அவன் அவள் கொடுத்த துண்டுக் கடிதத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான்.

"எனக்கே எங்கிட்டே நம்பிக்கை போயிட்டுது. என்னாலே நீங்க இருக்கிற உயர்ந்த இடத்திலேயிருந்து விழுந்திடப் போறீங்களோன்னு பயமா இருக்கு. அதனாலே நீங்க அடிக்கடி இந்தப் பக்கம் வராம இருந்தா, இரண்டு பேருக்குமே நல்லது - பார்வதி."

கோவிந்தன் பெருமூச்சு விட்டான்.

அவளும் பெருமையோடு பெருமூச்சு விட்டபடி அவன் வெளியேறிச் செல்வதைப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

## யார் குற்றவாளி?

**பட்டுக்கோட்டை இராசேந்திரன்**



திரைப்படங்கள் என்றாலும்
செவிகேட்கக் கூசும்
தன்மையிலே தரங்கெட்ட
வார்த்தைகளைப் போட்டு
வரைமுறையே இல்லாமல்
பாட்டெழுதும் போக்கும்
விகல்பமாக அதற்கேற்ப
நடிக்கின்ற பாங்கும்
சரஞ்சரமாய்த் தொடர்ந்து வரப்
பார்க்கின்றோம்; பார்க்கும்
சின்னவய துடையவர்கள்
மனங்களில் அதனாலே
நரைவிழுந்து தொலைப்பதையும்
அதைப்போல் பாடி
நடித்ததனால் தண்டனைக்குள்
ளாவதையும் கண்டோம்!

கேவலமாய் எழுதுவோரும்
நடிப்போரும் இங்கே
குளுகுளு வாசம் செய்வார்;
பண ம் குவித்துக் கொள்வார்!
ஆவலுடன் பின்பற்றி
அதன்படியே செய்தால்
அதுதவறாம், தண்டனையாம்;
என்னையா நியாயம்?
தேவையின்றித் திரையுலகில்
அதைப் போல மண்டும்
தீய களை அகற்றுங்கள்
முதலில், பிற்பாடு
காவலரால் மங்கையரைக்
கேலிசெய்த தாகக்
கைதாவோர் எண்ணிக்கை
குறையும் காண்பீரே!

# படப் பாடல்களில் மனித ஆற்றல்

'சேயோன்'

"**கா**ட்டினிலும் காட்டினிலும்
நாளெல்லாம் நன்றொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப்
பறிகொடுத்த பாவியேன்"

— எனப் பாடுவார் பாட்டுக்கொரு புலவர், மகாகவி சுப்பிரமணிய பாரதியார்.

மக்களின் கவனத்தை ஈர்த்து இசைவிக்கும் ஆற்றலைக் கொண்டவை திரைப்படப் பாடல்கள். நாள்தோறும் நேயர்கள் விரும்பிக் கேட்கும் பாடல்களை அனைத்து வானொலி நிலையங்களும் ஒலிபரப்பக் கேட்கலாம். பாடல்களைத் தொலைக்காட்சி நிலையங்கள் பல பல்வேறு நேரங்களில் ஒளிபரப்புவதைப் பார்த்தும் ரசிக்கலாம். எத்தனை முறை கேட்டாலும் அலுப்புத் தட்டாமல் தெவிட்டாத இன்பத்தைத் தர வல்ல திரைப்படப் பாடல்கள் பல உள்ளன. 'எந்த வொரு நூலைத் திரும்பத் திரும்பப் படிக்க விரும்பு கிறோமோ, அது சிறந்த இலக்கியத் தரம் மிக்கது' என்பர் இலக்கிய வல்லுநர்கள். அதேபோல் திரும்பத் திரும்பக் கேட்டு ரசிக்க விரும்பும் பாடல்களை இலக்கியத்தரம் மிக்கன எனக் கூறலாம்.

திரைப்படங்களில் தாலாட்டு, தூது, தத்துவம், வரலாற்றுக் கதைகள், புராணக் கதைகள், சமுதாய விழிப்புணர்வுக் கருத்துகள், மகளிர் நிலை, தொழிலாளர் நிலை, காதல், இயற்கை, நகைச்சுவை முதலான பல கருத்துகளைக் கருவாகக் கொண்ட பாடல்கள் பாடப்படுகின்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கன 'மனித ஆற்றலை வளர்க்கும் பாடல்கள்'.

பொருள் வளம், இயற்கை வளம், மனித வளம் ஆகிய மூன்றில் மனித வளம் மிகவும் இன்றியமையாதது. பொருள் வளம், இயற்கை வளம் ஆகிய இரண்டினையும் மேம்படுத்துவதற்கு மனிதவளம் வித்தாகவும் வேராகவும் விளங்கும் திறத்தது.

உயர்ந்த எண்ணம், தெளிந்த நல்லறிவு, திண்ணிய நெஞ்சம் வளர்வதற்கு அடிப்படையாக அமைவது கல்வி. கல்வியறிவும், உழைக்கும் மனப்பக்குவமும், உரிமைக்குப் போராடும் விழிப்புணர்வும் மக்களிடையே வளர்வதற்கேற்ற திரைப்பாடல்கள் பல உள்ளன. அவை மனித ஆற்றலை வளர்க்கும் சிந்தனைப் பெட்டகங்களாக மிளிர்கின்றன. எண்ணத்தை வளப்படுத்தும் வண்ண ஓவியங்களாக ஒளிர்கின்றன.

மனிதவளத்தை மேம்படுத்தும் வகையில் பல திரைப்படப் பாடல்கள் உள்ளன. அவற்றில் சிலவற்றை இங்கே காணலாம்.

**வ**ளர்ச்சி அடைந்த நாடு என்னும் பெருமையை அடைய வேண்டுமெனில், ஆங்குள்ள மக்கள் வாழ்க்கைத் தரத்தில் வளர்ந்திருக்க வேண்டும்; மக்களின் கல்வியறிவு மேம்பட்டிருக்க வேண்டும்; அதோடு பட்டறிவும் உயர்ந்திருக்க வேண்டும். மனிதன் உடலளவில் வளர்ந்தால் மட்டும் போதாது. அவன் உள்ளத்திலும், உணர்விலும், அறிவிலும் வளர்ச்சி ஏற்படுதல் வேண்டும். அத்தகைய மனிதனையே அவன் தாய் விரும்புவாள். நாள்தோறும் தொடர்ந்து படிக்க வேண்டும். அது ஒரு பழக்கமாகவே ஆகவேண்டும். அதேபோல் ஒழுக்கத்தைப் பேணுவதிலும், மானத்தைக் காப்பதிலும் உயிர்மூச்சாய் இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் முழு மனிதனாக வாழ்ந்திட முடியும். அது தனி மனித வளர்ச்சிக்குத் துணைபுரிவதோடு நாட்டு வளர்ச்சிக்கும் வழிகோலும். அதன்வழி வளர்ந்து வரும் உலகத்திற்கு வலக் கையாக விளங்கலாம்.

தனியுடைமைக் கொடுமைகள் நீங்குவதற்கு உத்வேகத்துடன் சமுதாயத் தொண்டு செய்ய முனைய வேண்டும். அவ்வாறாயின் நாட்டில் புதிய மறுமலர்ச்சி தோன்ற வாய்ப்பு ஏற்படும். இவற்றையெல்லாம் மனத்தில் எண்ணி மனிதனாக வாழ்ந்திட உறுதி கொள்வாயாக!



மாறாக, 'வேப்பமர உச்சியில் நின்று பேயாடும். எனவே அதன்கீழ் சென்று விளையாடாதே!' எனப் பெரியவர்கள் உன்னிடம் கூறிப் பயத்தை ஏற்படுத்தலாம். இயல்பாக உன்னிடமுள்ள வீர உணர்வை முளையிலேயே கிள்ளிவிடும் வார்த்தைகளைக் கூறலாம். அப்படிச் சொல்பவர்களின் கருத்துகளுக்கு உன் மனத்தில் சிறிதளவும் இடம் கொடுக்காதே! வீட்டுக்குள்ளேயே, பயந்து கிடந்து வெம்பி விடாதே!" இப்படி எச்சரிக்கிறார் சமுதாய சீர்திருத்தக் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

சின்னப்பயலே சின்னப்பயலே
சேதி கேளடா
நான் சொல்லப் போற வார்த்தையை நல்லா
எண்ணிப் பாரடா! - நீ
எண்ணிப் பாரடா!

ஆளும் வளரணும் அறிவும் வளரணும்
அதுதாண்டா வளர்ச்சி!
ஆசையோடு ஈன்றவருக்கு அதுவே - நீ
தரும் மகிழ்ச்சி.

நாளும் ஒவ்வொரு பாடம் கூறும்
காலம்தரும் பயிற்சி! - உன்
நரம்போடுதான் பின்னி வளரணும்
தன்மான உணர்ச்சி!

மனிதனாக வாழ்ந்திட வேணும்
மனதில் வையடா! - தம்பி
மனதில் வையடா!
வளர்ந்து வரும் உலகத்துக்கே
வலது கையடா! - நீ
வலது கையடா!

தனியுடைமைக் கொடுமைகள்தீரத்
தொண்டு செய்யடா! - நீ
தொண்டு செய்யடா!
தானாயெல்லாம் மாறும் என்பது
பழைய பொய்யடா! - எல்லாம்
பழைய பொய்யடா!

வேப்ப மர உச்சியில் நின்னு
பேயொன்னு ஆடுதுன்னு
விளையாடப் போகும்போது
சொல்லி வைப்பாங்க! - உன்
வீரத்தைக் கொழுந்திலேயே
கிள்ளி வைப்பாங்க!

வேலையற்ற வீணர்களின்
மூளையற்ற வார்த்தைகளை
வேடிக்கையாகக் கூட
நம்பி விடாதே! - நீ
வீட்டுக்குள்ளே பயந்து கிடந்து
வெம்பி விடாதே! - நீ
வெம்பி விடாதே!

இந்தப் பாடல் சிறுவர்களுக்கு நல்ல நெறிமுறைகளை உணர்த்தும் நல்வழிப்படுத்தும் (Motivating Song) பாடலாக விளங்குகிறது. அதிலும் கவிஞர் பட்டுக்கோட்டையார், மிக எச்சரிக்கையாகத் தான் கூறும் கருத்துகளை எண்ணிப் பார்த்துச் செயல்படும்படி வேண்டுவது சிறப்புக்குரியது.



குழந்தைகளைத் தாலாட்டித் தூங்க வைப்பார்கள் தாய்மார்கள். குழந்தைகள் அதிக நேரம் தூங்கினால் தான் அவர்களின் மூளையில் சீரான வளர்ச்சி ஏற்படும் என்பர், மருத்துவர். தாலாட்டுப் பாடும்போது, 'கண் வளராய்!' எனப் பாடும் பெற்றோரைக் காணலாம். அந்தக் குழந்தை நன்கு வளர்ந்து பள்ளிப் படிப்பை முடித்துப் பின் கட்டிளங் காளையாகக் கல்லூரிக்குச் செல்லும்போது பல மணி நேரம் விழித்திருந்து படிக்க வேண்டும் என வற்புறுத்துவர் பெற்றோர். அப்போது அதிக நேரம் தூங்கக் கூடாது என அறிவுறுத்துவர். குறிப்பிட்ட கால அளவு தூங்கினால் போதும். அளவுக்கு அதிகமாகத் தூங்கிச் சோம்பேறியாகி விடக்கூடாது.

சோம்பல் சோர்வைத் தரும்; ஆற்றலைக் குறைக்கும்; வளர்ச்சியைத் தடுக்கும்; துன்பத்தை அளிக்கும். சோம்பலின் கேடுகளைப் பத்துக் குறட்பாக்களில் பாங்குடன் விரித்துரைத்துள்ளார் தெய்வப் புலவர் திருவள்ளுவர்: அதே கருத்தை இளஞ் சிறார்களின் நெஞ்சில் பதியும்படி, எளிமையாகத் திரைப்பாடலில் கூறியுள்ளார் பாட்டுக் கோட்டையின் வேந்தர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்!

தூங்காதே தம்பி
தூங்காதே! - நீயும்
சோம்பேறி என்ற பெயர்
வாங்காதே!

நீ தாங்கிய உடையும்
ஆயுதமும் - பல
சரித்திரக்கதை சொல்லும்
சிறைக் கதவும்
சக்தியிருந்தால்
உன்னைக் கண்டு சிரிக்கும்
சத்திரந்தான் உனக்கு
இடம் கொடுக்கும்

நல்ல பொழுதையெல்லாம்
தூங்கிக் கெடுத்தவர்கள்
நாட்டைக் கெடுத்ததுடன்
தானுங் கெட்டார். சிலர்

அல்லும் பகலும்
தெருக் கல்லாய் இருந்துவிட்டு
அதிர்ஷ்ட மில்லையென்று
அலட்டிக் கொண்டார்

விழித்துக் கொண்டோ ரெல்லாம்
பிழைத்துக் கொண்டார் - உன்போல்
குறட்டை விட்டோரெல்லாம்
கோட்டை விட்டார்!

போர்ப் படைதனில் தூங்கியவன்
வெற்றி இழந்தான் - உயர்
பள்ளியில் தூங்கியவன்
கல்வி இழந்தான்!

கடைதனில் தூங்கியவன்
முதல் இழந்தான் - கொண்ட
கடமையில் தூங்கியவன்
புகழ் இழந்தான்! - இன்னும்
பொறுப்புள்ள மனிதரின்
தூக்கத்தினால் - பல
பொன்னான வேலையெல்லாம்
தூங்குதப்பா

கடமையே கண்கண்ட தெய்வம் என்பதை மறந்து தன் கடமையில் தவறியவன் புகழை இழப்பான் என உறுதிபடக் கூறியுள்ளார் பட்டுக்கோட்டையார். கவிஞர் 'தூக்கம்' எனும் சொல்லை, கண்ணை மூடித் தூங்குவதற்கு மட்டுமின்றி, அந்தந்தக் கடமைகளை, உரிய காலத்தில் செய்யத் தவறிய நிலைக்கும் பயன்படுத்தியுள்ள திறன் பெரிதும் பாராட்டிற்குரியதாகும்.

---

"பாடுபடுவர்க்கே இந்தப் பாருலகம் சொந்தம்!
காடுதிருத்தி நல்ல கழனியெல்லாம் செய்பவர் அவரலவோ?"

என்பார் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை. தொழிலாளர்கள் ஒரு நாட்டின் முதுகெலும்பாய்த் திகழ்பவர்கள். தொழிலாளர்களின் உழைப்பினால்தான் எண்ணற்ற பொருள்கள் உற்பத்தியாகின்றன; உருவாக்கப்படுகின்றன. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு ஊன்றுகோலாய் விளங்குபவர்கள் தொழிலாளர்கள்.

தொழிலாளர்களில் ஆண், பெண் இருபாலாரும் உண்டு. அவர்களின் உழைக்கும் கைகளால் உருவானவற்றைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார் கவியரசர் கண்ணதாசன்.

உழைக்கும் கைகளே
உருவாக்கும் கைகளே!
உலகைப் புதுமுறையில்
உண்டாக்கும் கைகளே!

ஆற்று நீரைத் தேக்கி வைத்து
அணைகள் கட்டும் கைகளே!
ஆண்கள் பெண்கள் மானம் காக்க
ஆடை தந்த கைகளே!

சேற்றில் ஓடி நாற்றுநட்டு
களை எடுக்கும் கைகளே!
செக்கர் வானம்போல என்றும்
சிவந்து நிற்கும் கைகள் எங்கள் கைகளே! (உழைக்கும்)



பலன்மிகுந்த யந்திரங்கள்
படைத்து விட்ட கைகளே!
பாதை போட்டு உலகை ஒன்றாய்
இணைத்து வைத்த கைகளே!

பாரிலுள்ள பெருமை யாவும்
படைத்த தெங்கள் கைகளே!
பச்சை ரத்தம் வியர்வையாகப்
படிந்து நிற்கும் கைகள் எங்கள் கைகளே! (உழைக்கும்)

உலகம் எங்கும் தொழில் வளர்க்கும்
மக்கள் ஒன்றாய்க் கூடுவோம்!
ஒன்று எங்கள் ஜாதியென்று
ஓங்கி நின்று பாடுவோம்!

தர்ம நீதி மக்களாட்சி
வாழ்கவென்றே
ஆடுவோம்! — நாம்
வாழ்க வென்றே ஆடுவோம்!

இந்தப் பாடலைக் கேட்கும் ஒவ்வொரு தொழிலாளியும் தத்தமது திறமைகளை எண்ணிப் பெருமிதம் கொள்வதோடு, தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று படவேண்டும். நாட்டின் வளர்ச்சிக்குப் பாடுபட வேண்டும்; மக்களாட்சி மாண்புடன் செழித்தோங்குவதற்கு உறுதுணைபுரிய வேண்டும் என்ற உத்வேகத்தையும் பெறுவர்.

இப்படித் தொழிலாளர்களுடைய கரங்களின் அருமை பெருமைகளை விரித்துரைத்த பண்ணரசர் கண்ணதாசன், 'பச்சை ரத்தம் வியர்வையாகப் படிந்து நிற்கும் கைகள் எங்கள் கைகளே!' எனப் பாடியுள்ளாரே? என நினைக்கலாம். அனைவரின் ரத்தமும் சிவப்பு நிறம் கொண்டது. பச்சை எனக் கூறுவதன் காரணம் என்ன? பச்சை என்பது இளமைத் துடிப்பையும், வலுவையும், வளத்தையும் உணர்த்துவதற்குத்தான்.

---

போதைப் பொருள்களுக்கு அடிமையாகியுள்ள இளைஞர்களுக்கு புனர்வாழ்வு கொடுக்க எத்தனையோ தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் முன்வந்துள்ளன. பல இளைஞர்களைத் திருத்தி அவர்களுக்குப் புதுவாழ்வு கொடுத்துள்ளன.

போதைப் பொருள்களுக்கு அடிமையான இளைஞர்களுக்குப் புத்துயிரூட்டும் வண்ணம் பாடியுள்ளார் சிந்தனைக் கவிஞர் வைரமுத்து.



ஒரு பண்பாடு இல்லையென்றால்
பாரதம் இல்லை!
நாம் பண்போடு வாழ்ந்திருந்தால்
பாவமும் இல்லை!
சிறகில்லாமல் தள்ளாடும் செல்லக்கிளிகள்
என் கண்ணோரம் இப்போது கண்ணீர்த் துளிகள்!

வளர்ந்து வராத பிறையில்லை
வழிந்து விடாத நுரையில்லை
திரும்பி வராத பகலில்லை
திருந்தி விடாத மனமில்லை

ஒருநாள் சுவைப்போம் என்று நினைத்தால்
உயிரைச் சுவைக்கும் — பொய்யில்லை!
இதை இன்பம் என்பது இழுக்காகும்
நீ குளித்தால் கங்கை அழுக்காகும்!

மயக்கம் என்பது மாத்திரையா?
மரணம் போகும் யாத்திரையா?
விளக்கு இருந்தும் இருட்டறையா?
வரம்பு கடந்து, நரம்பு தளர்ந்து
வயதைத் தொலைத்து வாழ்வதா?
இந்த உலகம் உன்னை அழைக்கிறது!
அட! இன்னும் வாழ்க்கை இருக்கிறது!

போதைப் பழக்கத்திற்கு அடிமையான இளைஞர்களைப் பார்த்துக் கவிஞர் வைரமுத்து 'இன்னும் வாழ்க்கை இருக்கிறது. அதற்காக இந்த உலகம், உன்னை அழைக்கிறது. திருந்தி வா!' என விரும்பி அழைக்கிறார். அவர்கள் மனத்தில் பதியும்படி, பிஞ்சிலே பழுத்து வெம்பிப் போகாதீர் என எச்சரித்துள்ளார்.

## இன்று புதிதாய்ப் பிறந்தோம்

இனியவற்றைச் செய்வதற்கு
இனி காலங் கடத்துதல்
இங்கே யில்லை...
அதை இன்றே நினைத்து
இன்றே செய்வோம்!

இருப்பது சில காலமே...
இருப்பதற்குள் நன்றே செய்து
அல்லனவற்றை ஒதுக்கி
இல்லாததை அகற்றி
இன்பம் பெற்று மகிழ்வோம்!

இரக்கமற்ற பாட்டையின்மேல்
இரத்த வெறித் தேரேறி
இருட் குகைக்குள் பூட்டிவைத்த நல்
இதயச் சிம்மாசனங்களை
இனியாவது வெற்றிகொள்ள வைப்போம்!

இந்தியத்தின் எண்ணற்ற தியாகிகளின்
இதயக் குமுறல்களின்
இளகிய ஒலிகளுக்குள்ளே
இப்படியும் ஓர் ஒலி கேட்டது...
'இன்று புதிதாய்ப் பிறந்தோம்!'

கருவை வேணு



## பாரதிக் கவிஞன்

சின்ன இதயங்கள்
பாழ்பட்டுப் போகாமல்
மண்ணின் மகிமை
எதுவும் கெட்டுவிடாமல்...

கண்கள் விரும்பிப் படிக்க
காவியங்கள் வாழ்ந்து நிற்க
மொழியின் வளம் சிறக்க

சாதிக்கத் துடிக்கும்
சத்திய வார்த்தைகளை
உணர்ச்சி கூட்டி
எழுச்சி ததும்ப...

அமுதத் தமிழில்
அள்ளி அள்ளி அளக்க
இறைவன் மண்ணுக்கு அனுப்பிய
தமிழ்க் கழனி
பெற்றெடுத்த விவசாமி!

நெல்லை மணிபாரதி

## இதமாய் ஓரிறை இதயத்திருக்கும்

ஒருவனே இறைவன்
என்றிடும் உண்மை
திருவின் நிறைந்த
தெய்வத் தன்மை
மருவில் ஆறுகள்
மாக்கடல் சேர்தலின்
கருதிடும் நெறிகளின்
கருப்பொருள் விளங்கும்.

அல்லா, இயேசு
அன்னை சக்தி,
கல்லா லிறைவன்,
கண்ணன், குமரன்
எல்லாம் ஒன்று
என்றே இருந்தால்
சொல்லா தோடும்
சூழ்ந்திடும் பேதம்.

நல்லோர் பலரால்
நாட்டிடும் கொள்கை
எல்லா ராலும்
ஏற்கப் பட்டால்
தொல்லைகள் யாவும்
தொடர்ந்தே வாரா.
சொல்லும் மானுடம்
சொகுசாய் வாழும்.

இராம. வேம்பு

## அன்னபூரணி



இங்கில்லாவிடினும்
அங்கெங்காவது
வீசிக்கொண்டேயிருக்கும் காற்று,
இந்நாட்டில்
பொய்த்திருந்தாலும் வேறெங்காவது
பெய்து கொண்டிருக்கும் காலமழை,
இவ்வடுப்புகள்
இன்றெரியாது போயினும்
எங்கெங்கோ அடுப்புகளில் எரியும் தீ,
இவ்வயல்கள் இப்போது தீய்வு கண்டிருந்தாலும்
வரையாது வகைதொகையாய் வழங்கும் பூமி,
சூரியசந்திரர்கள்
வளைய வளைய
வந்தபடியே இருக்கும் வானம்,
அன்றுமின்றும் இனியும் என்றென்றும்
இப்பூதங்களின் தயவில்தான்
ஆதிநாதன் ஸ்வரூபங்கள்.

விக்கிரமாதித்யன்

## திரும்பும் திசைதோறும்...

தானென்ற அகந்தை தவிர்த்தாரை ஆட்கொள்ளும்
தடையில்லா சக்தியென காட்டும் புதுமெருகும்
தேனொழுகும் அமுதமெனத் திவ்யமாய் விளங்கும்
தேவனுக்கும் தேவனுந்தன் மாயம்தான் என்னே!

என்னே உன்னருள் எந்தை, தாய்நீயன்றோ?
எவர்க்கும் துணைநிற்கும் கருணையுளம் உனதன்றோ?
பொன்னே வார்த்ததொரு புதுப்பொலிவு மேனியினை
பண்ணில் வார்த்துநிதம் புகழ்வதுதான் எளிதோ?

ஈரேழு உலகெங்கும் திரும்பும்திசை தோறும்
இருக்கின்றோர் கவலை தீர்ப்பது உன்வேலை
பாராள வந்திருக்கும் பகவானே உனக்கிணை
பார்த்ததுண்டோ பார்க்காதார் கூற்றம்தான் ஏற்பதுண்டோ?

பால சாண்டில்யன்



அமர்நாத் குகை

# அமர்நாத் யாத்திரை

மாலதி ஹரிஹரன்

கடவுளைக் கண்ணாரக் கண்டோம் அமர்நாத் குகைக்குள்ளே. இந்த விஞ்ஞான உலகில் நமது கண்ணுக்குப் புலப்படும் சூரியனையும் சந்திரனையும் நாம் வழிபடுகிறோம். காலக்ரமப்படி அவை இயங்கி, நமக்கு அப்பாற்பட்ட சக்தியை' நமக்கு உணர்த்துகின்றன அல்லவா? அந்தகைய சக்தியைத்தான் நாங்கள் அமரலிங்க வடிவில் கண்டோம். அநாதிகாலமாக ஒவ்வொரு வருடமும் ஆவணிமாத பௌர்ணமி தினத்தன்று, தென் இந்தியாவில் ஆவணி அவிட்டம் என்றும், வடக்கில் ராகி பூர்ணிமா என்றும் கொண்டாடும் நாளன்று, இயற்கையின் மாபெரும் அதிசயம், இமயமலையின் 13000 அடி உயரத்தில் உள்ள குகைக் கோயிலில் நிகழ்ந்து வருகிறது. சுற்றியிருக்கும் இடங்களில் பனி உருகி, திரவ நிலையில் இருக்கும் போது அமரலிங்கம் மட்டும் கெட்டியான பனிப்பாறையாக மிகப் பெரிய வடிவில் திகழ்கிறது. இந்தக் குகையினுள் கயிலாயநாதர் உமையவளுக்கு அமரதத் துவத்தை விளக்கியதாகச் சொல்லப்படுகிறது. இந்தப் புனிதத்தலத்தைத் தரிசிக்க மிகக் கடினமான யாத்திரை, கால் நடையாகவே மேற்கொண்டு கடும் குளிர், மற்றும் வழியில் ஏற்படும் இன்னல்களையும் துன்பங்களையும் இறைவனை அடையும் ஒரு விரதமாகவே எண்ணி, பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் வருகின்றனர். தற்காலத்தில் தீவிரவாதிகளின் அச்சுறுத்தலை ஒரு சவாலாக ஏற்று, மத்திய அரசு மிக விரிவான பாதுகாப்பு வசதிகளை, வருடத்தில் 15 நாளுக்கு, பயணிகளுக்காகச் செய்து தருகிறது, ஜம்முகாஷ்மீர் போலீஸ், இராணுவம், விமானப்படை, சி.ஆர்.பி.எஃப் (C.R.P.F) யாவும் ஒருங்கிணைந்து செய்யும் சேவை மிகமிகப் பாராட்டுக்குரியது.

முன்காலத்தில் இந்த யாத்திரை ஸ்ரீநகரிலிருந்து விதிப்படி விக்னேச்வரர் பூஜை செய்து தொடங்கினர். ஆயினும் தற்காலத்தில் பாதுகாப்பு வசதிகளுக்காக மக்களுக்கு இங்கு அனுமதியில்லை. 'சடிமுபாரக்' என்று சிவபெருமானின் சூலத்தை ஜம்முவிலிருந்து ஊர்வலமாக எடுத்துவரும் சிவ பக்தர்களை மட்டும் தக்க பாதுகாப்போடு ஸ்ரீநகர் செல்ல அனுமதிக்கின்றனர். ஏனையோர் ஜம்முவிலிருந்து நேராக பஹல்காம் என்ற இடத்திற்குத்தான் பலத்த பாதுகாப்போடு அழைத்துச் செல்லப்படுகின்றனர். ஜம்முவில் பதிவு செய்து கொண்டு வரும் பயணிகளின் யாத்திரையின் இரண்டாவது கட்டமாய் பஹல்காமில் ஒவ்வொரு பயணிக்கும் குறிப்பு அட்டை கொடுக்கப்படுகிறது. அதன் மூலம் அவர்கள் தக்க இடவசதி, குடிநீர், உணவு, கம்பளம் யாவும் இலவசமாகக் கிடைக்கின்றன. மலையேறித்திரும்பும் வரை, மற்ற சாமான்களைப் பாதுகாப்பாக வைக்க வசதியும் இங்குண்டு. லிட்டர் (Lidder) நதிக்கரையில் ஆயிரக்கணக்கான கூடாரங்களை அமைக்கின்றனர். இவ்வாறே வழி நெடுக அமர்நாத் குகைசெல்லும் வரை பல இடங்களில், அமானுஷ்யமான இமயமலைச் சாரலில், மிக விரிவான பந்தோபஸ்து வசதிகளுடன், முகாம்கள் அமைக்கின்றனர். அவற்றில் முக்கியமாக சந்தன்வாடி, சேஷநாக், பஞ்சதரணி என்பவை முக்கியமானவை. குகைக்குச் செல்ல, குறைந்தது 3 நாள்களும் திரும்பி வர 2 நாள்களும் ஆகும். பௌர்ணமி நெருங்க நெருங்க மிகுந்த நெரிசலைத் தவிர்க்க, முதல் வாரமே செல்வது நல்லது. எல்லா முகாம்களிலும், அமர்நாத் குகைக் குள்ளும் மின் வசதி உண்டு. குழாய் வசதி, நவீனக் கழிவறைகள், குடிநீர் யாவும் உண்டு. காஸ் சிலிண்டர்களைக் கொணர்ந்து பயணிகளுக்கு, சுடச் சுட சப்பாத்தி, பூரி, சாதம், வெங்காயம், பூண்டு மசாலா ஏதும் சேர்க்காத உணவு, ரவா கேசரி, பதநீர் என்று சமைத்து வாரி வாரி வழங்குகின்றனர். சேவை மனப்பான்மை கொண்ட பல நிறுவனங்கள் டெல்லி, பஞ்சாப், ஹரியானா, குஜராத், ராஜஸ்தான், மகாராஷ்ட்ரம் போன்ற இடங்களிலிருந்து வந்து 'வாருங்கள், இங்கே வாருங்கள்' என்று போட்டியிட்டபடிக்

பஞ்சதரணியிலிருந்து குகைக்குச் செல்லும் பாதை



மருந்துகள், உணவு முதலியன வழங்கி உதவுகின்றனர். மொழி, இனப் பிராந்திய, பிரச்னைகள் அங்கில்லை. இறை உணர்வும் நாம் யாவரும் ஒரு தாயின் மக்கள் என்ற உணர்வும் தான் மேலோங்கி நிற்கின்றன.

பஹல்காமிலிருந்து நாம் செல்ல வேண்டிய அடுத்த முகாம் சந்தன்வாடி 16கி.மீ தூரத்தில் உள்ளது. பஸ் செல்ல மலைப்பாதை அமைக்கப்பட்டுள்ளது. லிட்டர் நதியோரம் இமயமலையின் அழகிய இயற்கைக் காட்சிகளை நாம் காண முடிகிறது. ஆங்காங்கே வழியோரம் மூலிகை மணம் கமழும் அருவி நீரையும், இதமான தூய காற்றையும் அனுபவித்தபடி நமது புனிதப் பயணம் தொடங்கியது. அங்கு ஒரு பாலம் இயற்கையாகவே அமைந்துள்ளது. மற்ற இடங்களில் பனி இல்லாத போதும் இப்பாலத்தின் மீது மட்டும் பனி போர்த்தியபடி இருப்பது குறிப்பிடத்தக்கது.



குகைக்குச் செல்லும் வழியில்

சந்தன்வாடியை ஸ்தாணு ஆசரம் என்று முன்னோர் கூறி வந்தனர். இங்கு பாயும் நதியை நிலகங்கா என்றும் சொல்லுகின்றனர். புராணக்கதையின்படி சிவபெருமானும் அம்பிகையும் தனித்திருந்த ஒரு சமயம் ஈசனின் கன்னத்தில் தேவியின் கண்மை படிந்ததாம். கங்கை கன்னத்தில் வழிந்து மையுடன் கரைந்து கரிய நிறமாக இங்கு பாயத் தொடங்கியதால், அப்பெயர் ஏற்பட்டிருக்கிறதாம்.

சேஷநாக் : சந்தன்வாடியிலிருந்து 12 கி.மீட்டர் தொலைவில் உள்ளது. இங்கு செல்லும் வழியில்தான் பிஸ்ஸூடாப், (Pissootop) ஜோஜிபால் (Zozipal)/நாகாகோடி என்ற சிகரங்களை நாம் கடக்கிறோம். இங்கு சிறுசிறு முகாம்களில் தேநீர், பிஸ்கட், தேவையான மருந்து, முதலுதவி தந்து பயணிகளை ஊக்குவிக்கின்றனர்.

சேஷநாகில்தான் உலகிலேயே மிக உயரமான இடத்தில் அமைந்துள்ள மிகப் பெரிய ஏரி உள்ளது. இங்கு, ஏழு சிகரங்கள் ஒன்றோடொன்று பிணைந்து பாம்பு படம் எடுத்தாற்போல, காணப்படும் காட்சி, ஆதிசேஷனே வெண்பனி போர்த்தி நமக்கு தரிசனம் அளிப்பது போன்று தோன்றுகிறது.

பௌர்ணமி நிலவில், பக்தர்கள் பலர் இந்த ஏரியின் நடுவில் படம் எடுத்தபடி ஆதிசேஷனைத் தரிசித்ததாகவும், பாம்பின் தலைமேல் மிக ஒளிவீசும் மணியையும் பார்த்ததாகவும் கூறி, தங்கள் பேற்றினைச் சொல்லிச் சொல்லி மகிழ்கின்றனர்.

இந்த நீலப் பச்சை நிற ஏரியில் பலர் குளித்து பூஜை செய்கின்றனர்.

பஞ்சதரணி : சேஷநாகிலிருந்து 12 கி.மீ தொலைவில் உள்ளது இது. இங்கு வரும் வழியில்தான் இந்த யாத்திரையின் மிக உயரமான சிகரம் சுமார் 15,000 அடி. 'மகாகுனஸ்பர்வதத்'தை நாம் தாண்ட வேண்டும். பல உயரமான மலைத் தொடர்களைத் தாண்டி சமவெளிக்கு வந்து அடைய வேண்டும். மிக உயரே செல்லும்போது பிராண வாயு குறைவால் சிலருக்குச் சிரமங்கள் ஏற்படுவதுண்டு. அதனால்தான் இதய நோய் உள்ளவர்களை இந்தப் பயணத்தை மேற்கொள்ள அனுமதிப்பதில்லை. க்ளுகோஸ், அவரவர்களுக்கு வேண்டிய மருந்து கட்டாயம் கைவசம் இருக்கவேண்டும். பயணிகள் தங்கி இளைப்பாற முகாம்கள் இவ்வழியில் இல்லை என்றே சொல்லலாம். பயணிகள் மிகுந்த சிரமத்துடன் இந்தத் தூரத்தைக் கடந்து செல்ல வேண்டியிருக்கிறது. பனிக்கட்டி உறைந்த ஆறு (Glacier) ஒன்றைக் கடக்கும் போது அடி சறுக்காமல் இருக்க, பனியினால் பாதங்கள் புண்ணாகாமல் இருக்க Snow Boots அல்லது கான்வாஸ் காலணிகள் (Canvas Shoes) அணிய வேண்டும். பயணம் தொடங்கும்போதே கைத்தடி ஒன்றினையும் கண்டிப்பாக வாங்கி வர வேண்டும். பஞ்சதரணி முகாமில்தான் குகைக்குச் செல்லும் முதல் நாள் இளைப்பாறி மறுநாள் காலை புறப்பட ஆயத்தம் செய்து கொள்ளவேண்டும்.

குளிர்ந்த நிலையில் அமராவதி நதி



பஞ்சதரணி என்பது ஐந்து ஆறுகள். அதிக ஆழம் இல்லாத, கூழாங்கற்கள் நிறைந்த நதி இது. சிவபெருமான் ஆனந்த தாண்டவம் செய்தபோது அவருடைய





**சந்தன்வாடி செல்லும் வழியில் இயற்கையாக அமைந்த பாலம் மேலே பனிமூடிக் காணப்படுகிறது.**

ஜடாமுடி தளர்ந்து கங்கை பஞ்சதரணியாகப் பாய்கிறதாம். பக்தர்கள் இங்கு பவித்ர ஸ்நானம் செய்து உணவு, உடை, சந்தனம், கேஸர், அகர், கஸ்தூரி போன்ற வஸ்துகளைத் தானம் செய்கின்றனர்.

மறுநாள் காலை எங்கள் பயணத்தின் இறுதிக் கட்டமான அமராவதி நதிக்கரையில் உள்ள குகைக் கோயிலுக்குப் புறப்பட்டோம். மிகக் குறுகிய பாதை, மிக உயர்ந்த மலைத் தொடர்கள், கிடுகிடு பாதாளம், அச்சம் விளைவிப்பதாக இருக்கிறது. குதிரைக் காரர்கள் பலர் பஞ்சதரணிக்கு மேல் தங்கள் குதிரைகளை அழைத்து வர மறுக்கின்றனர். இந்த 6 கிமீ தூரத்தை மிகுந்த ஆயாசத்துடன், நெரிசலின் காரணத்தால் அடிமேல் அடி வைத்து ஒருவர் பின் ஒருவராய், காத்துக் காத்துச் செல்ல வேண்டியிருக்கிறது. குகையின் முதல் தரிசனம் கிட்டும்போது புல்லரிப்பு ஏற்படுகிறது. எங்கள் நீண்ட பயணத்தின், பொறுமையான சாதனையின் வெற்றியே, நமக்குள்ளே ஒரு புதுத்தெம்பை அளிக்கிறது. மலைகளைக் கடந்து சமவெளிக் கரைக்கு வரும் வழியை கர்ப்பயோனி என்றே அழைக்கின்றனர். இதைக் கடந்த பின் இனி மறுஜென்மம் இல்லை என்கின்றனர்!

அமராவதி நதியில் பனிக்கட்டி உருகிவரும் நீரில் குளிப்பது ஓர் அதீத அனுபவம்தான். நதியின் மேலே சில இடங்களில் சிலேட்டுப் பாறையாக மிதக்க, அடித்தளத்தில் கைபட்டாலே உணர்வற்றுப் போகும். சில்லிட்ட தன்மையுடைய அமரகங்கா சிவபெருமானின் மேனியில் பட்ட அமிருத பஸ்மம் கரைத்த வெண்மை நிற நீர் அல்லவா? ஒரே ஒரு நிமிட நேரம் நீருக்குள் இறங்கி மூழ்கி எழும்போது, நம் உடலில் ஒரு புத்துணர்ச்சி, நாம் பட்ட துன்பங்கள் எல்லாம் மறைய, பிறவிப் பயனை நாம் அடைந்து விட்டோம் என்ற ஆனந்தம் - அந்த அனுபவத்தை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. நீருக்கடியில் உள்ள களிம்பு போன்ற நிற மண்ணை வெண்ணீறாக மேனியில் பூசி சிவனடியார்கள் குகையை நோக்கிச் செல்கின்றனர்.

**சேஷநாக்கிலுள்ள பனிமூடிய 7 சிகரங்கள்**







சந்தன்வாடி காம்ப்

← லிட்டர் ஆறு



90 அடி நீளம், 30 அடி அகலம் 15 அடி உயரமான குகை இயற்கையிலேயே உண்டானது. குகைக்குள், மேலே செல்ல படிகள் அமைத்திருக்கின்றனர். வழி நெடுக இரு பக்கத்திலும் இறைவனுக்குப் படைத்த மீதியைப் பிரசாதமாய் எடுத்துச் செல்ல கொப்பரைத் தேங்காய், உலர்ந்த பழவகைகள், சிவப்பு சாடுகள், இனிப்புகள், படங்கள் விற்கின்றனர். மிகுந்த பாதுகாப்பு வசதிகள். Metal Detectors வைக்கப் பட்டுள்ளன. 50, 50 பேராக உள்ளே அனுப்புகின்றனர். மேலே லிங்கத்திற்கு அருகே விஸ்தாரமான மேடை. அங்கு ஸ்ரீ கணேச பீடம், பார்வதி பீடம் என்றும் பனிக்கட்டியால் ஏற்படுகிறது. அவற்றுக்கு தனித்தனி சந்நிதிகள் உள்ளன. ஆனந்த பரவசத்தால் பக்தர்கள் கூத்தாடுகின்றனர். உடுக்கை, டமாரம் போன்றவற்றுடன் வந்து "பம் பம் போலே பாபா அமர்நாத்ஜிகி ஜெய்" என்று கோஷம் இட்டுப் பக்திப் பரவசமடைகின்றனர். குகையினுள் காணப்படும் சிறுசிறு பொந்துகளில் அமரபக்ஷிகள் என்று சொல்லப்படும் புறாக்களைத் தரிசிக்க சிலருக்கு பாக்கியம் கிட்டுகிறது.

இந்தப் புனிதயாத்திரை என் கணவருக்கும் எனக்கும் மறக்கமுடியாத ஓர் இனிய அனுபவம். அன்றாடக் குடும்ப, அலுவலகப் பிரச்னைகளை மறந்து சுமார் 15 நாள்கள் நேரம் போனதே தெரியவில்லை. அதிலும் ஜம்முவிலிருந்து புறப்பட்டு, திரும்பும் வரை, அந்த 7 நாள்கள் சரியான அஞ்ஞாத வாசம்தான். வேறு உலகில்தான் சஞ்சரித்தோம். டி.வி. செய்தித்தாள், ரேடியோ, தொலைபேசி என்ற எந்தத் தொடர்புமே இல்லாத அமைதியான நாள்கள்!

புடைவையல்லாது வேறேதும் அணிந்து பழகாத நான், என் அண்ணன் மகள் காயத்ரியின் ஸல்வார், கமீஸ், கான்வாஸ் ஷூ



முதலியன அணிந்து கொண்டு, முதுகில் பள்ளி மாணவர்கள் தூக்கிச் செல்வது போன்ற பையில் சுமார் 5கிலோ சாமான் வைத்துக் கொண்டு, தினம் அரைமணி நேரம் இருட்டிய பிறகு, என் கணவரோடு, எங்கள் காலனியைச் சுற்றிச் சுற்றி வந்தோம். மலையேறும் பயிற்சி, குதிரைச்சவாரி பயிற்சி ஆகியவற்றுக்கு திருவான்மியூரில் வசதியில்லை.

காஷ்மீர் மாநில வரைபடம், பிரயாண விவரங்கள், சந்திக்க வேண்டிய நபர்களின் விலாசங்கள், தொலைபேசி எண்கள், தூர திருஷ்டிக்கான பைனாகுலர் (Binocular), காமேரா பிலிம் சுருள்கள், டார்ச்லைட், மருந்துகள், கம்பளி ஆடைகள், ரெயின் கோட்கள் என்று சாமான்களைச் சேகரித்துத் தந்தார்கள் எங்கள் நண்பர் சாம்பசிவம் தம்பதி.

"தீவிரவாதிகள் வந்து உங்க முன்னாடி நிக்கப் போறாங்க" என்று என்கடைக்குட்டி ஆனந்த் கலாட்டா செய்தான்.

தற்காப்புக்காக என்ன எடுத்துச் செல்வது என்று யோசனை செய்து, ஒரு கவரில் மிளகாய்ப் பொடியை எடுத்து, நொறுக்குத்தீனிப் பைக்குள் ஒளித்து வைத்திருந்தேன்!

ஐந்து நாள்கள் சுமார் 10 மணி நேரம் குதிரைச் சவாரி 20 அடிக்கு20அடி கூடாரத்தில் 150 பேர் குறுகிக் குறுகி இரவைக் கழிப்பது, காலைக் காப்பி கிடைக்காததால் ஏற்பட்ட தலைவலி, நல்ல குளியலறை, கழிவறை வசதிகள் இல்லாததால் ஏற்பட்ட சிரமங்கள் என்று தவிர்க்க முடியாத கஷ்டங்கள் இருக்கத்தான் செய்தன.

ஆயினும் எங்களுக்குக் கிடைத்த புதிய நண்பர்கள், ஜாதி, மத, இன, மொழி என்ற வேறுபாடுகளைக் கடந்த மனித நேயம், பரிசுத்தமான காற்று, 'சில்'லென்ற மலையருவி நீர், அருமையான சீதோஷ்ண நிலை ஆகியவை இந்த யாத்திரையால் நாங்கள் அடைந்த நன்மைகள்.

நம் நாட்டு வீரர்களின் தேசபக்தி, சேவை மனப்பான்மை கண்டு நாங்கள் அடைந்த பெருமை சொல்லி முடியாது. எங்கள் மகனும் இராணுவத்தில் பணியாற்றுகிறான் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

சகிப்புத்தன்மை, எல்லாரிடமும் அன்பு காட்டுதல், சுக துக்கங்களைச் சமமாக பாவிப்பது, இருப்பதை வைத்து திருப்தி அடைதல், பொறுமை, கருணை, அடக்கம் போன்ற பல அரிய குணங்களை நாங்கள் எளிதில் அங்கு பயின்றோம். எல்லாவற்றிற்கும் மேல், பக்தி, அமரலிங்க தரிசனம் ஆகியவற்றால் எங்களுக்கு மோட்சமும் கிட்டுமானால் அது எங்களுக்கு சூப்பர் பம்பர் போனஸ்தான்.' ●

பகல்காமிலிருந்து செல்லும் ஒரு பாதை

# ஆரூர் திருக்கோயிலின் அரிய இசைக்கருவிகள்

தமிழகத்தின் தொன்மையானதும் சப்தவிடங்கத் தலங்களில் ஒன்றானது மான திருவாரூர் தியாகேசப்பெருமான் திருக்கோயில் ஆடலும், பாடலும், தாளமும் இசையுமாக இலங்கியுள்ளது என்பதை ஏராள இலக்கியங்களும் கல்வெட்டுகளும் சிற்பங்களும் ஓவியங்களும் எடுத்தியம்பு கின்றன.

"ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு 49 – வது கேயமாணிக்க வளநாட்டு திருவாரூர் கூற்றத்து திருவாரூருடையார் வீதி விடங்குதேவர் தேவாசிரியனில் எழுந்தருளியிருந்து புக்கத்துறை வல்லவத் தலைக்கோலியை ஆட்டங் கண்டருளா நிற்க..." என்பன போன்ற பல கல்வெட்டுகளின் மூலம், ஆரூர் திருக்கோயிலின் கீர்த்திபெற்ற தேவாசிரிய மண்டபத்தில் வீதிவிடங்கத் தேவர் எழுந்தருளியிருந்து நடனமும், நாடகமும் கண்டு வியத்தகு தாளமும் இன்னோரன்ன இசையும் கேட்டு இன்புற்றதாக அறிய முடிகிறது.

இறைவனின் அற்புத ஆனந்தத் தாண்டவத்தை,

"குடமுழவம் வீணை தாளங்குறு
நடைய சிறு பூதம் முழங்க"

கூத்தாடுவதாகவும்,

"குழலோடு கொக்கரை கைத்தாளம் மொந்தை
குறட்பூதம் முன்பாட"

தான் ஆடுவதாகவும்,

அப்பர் பெருமான் திருவதிகையில் குறிப்பிட்டுள்ளார். அவ்விறைவன் ஆரூர் தேவாசிரிய மண்டபத்தில் தானே அமர்ந்து ஆடல்கண்டு, பாடலும், தாளமும், இசையும் கேட்டு இன்புற்றதாக ஏராள இலக்கியங்கள் செப்புகின்றன.

"தாட உடுக்கையன் தாமரைப்பூஞ் சேவடியன்
கோடலா வேடத்தில் கொண்டதோர்
வீணையினான்
ஆடரவக் கிண் கிணிக்கா லன்னனோர் சேடனை
ஆடுந்தீக் கூத்தனை நான் கண்டது ஆரூரே"

எனக் கூறிய அப்பர் அடிகள் –

அந்தக் கூத்தனின் ஆடலுக்கேற்ப ஒலித்த தாளங்களை,



ஐம்முகக் குடமுழவம்

"விட்டிசைப் பன கொக்கரைக் கோடு
கோட்டி தத்தனகம்
கொட்டி பாடுமித் துந்துபி யொடு
குடமுழா நீர் மகிழ்வீர்"

என தாளம் கேட்டு உவகையுற்றதைக் குறிப்பிடுகிறார்.

தமிழகத்தின் எண்ணிலடங்கா இசைக்கருவிகளில், இலக்கியங்களிலும், காப்பியங்களிலும், குடமுழா என்றும், முழவம் என்றும் கூறப்பட்டுள்ள 'குடமுழவம்' என்றதாளக் கருவியின் ஐந்து முகங்களைக் கொண்டமைந்ததான

சுத்த மத்தளம்



ராஜகுரு

'பஞ்சமுகவாத்தியம்' எனும் உன்னதமான 'ஐம்முக முழவம்' நம் திருவாரூர் திருக்கோயிலில் போற்றிப் பாதுகாக்கப் பட்டு வருவது பெருஞ்சிறப்புக்குரியது.

பானை போன்ற அடிப்பகுதியை உலோகத்தால் செய்து, அதன் மேற்புறம் ஐந்து வாய்ப்பகுதிகள் அமைத்து, அவற்றின்மேல் மான் தோலைப் பொருத்தி, நிர்ணயிக்கப்பட்ட வரையறைகளோடு தாள ஓசை எழுப்புவது தனிச் சிறப்பான ஒன்று.

சோழ மன்னன் இராஜராஜ சோழன் காலத்துக்கு முந்தைய காலத்தில் இந்த 'ஐம்முக முழவம்' இருந்ததற்கான சான்றுகள் இல்லை. ஒற்றைக் குடமுழா, இரட்டைக் குடமுழா, மூன்று மற்றும் நான்கு முழவங்களை இணைத்து இசைத்த தற்கான சான்றாக, தமிழகத்தின் பல திருக்கோயில்களில் சிற்பங்களும் ஓவியங்களும் உள்ளன.

ஆனால் 'ஐம்முக முழவம்' ஈசனின் ஐந்து முகங்களிலிருந்து வந்ததாகக் கூறுவர். இதனை ஐந்து விதமாகவும், ஏழு விதமாகவும் வாசிக்கலாம் என்றும் கூறுவர். நந்திதேவர் வாசிப்பதாக ஐதீகம்.

இந்த ஐம்முக முழவத்தை வாசிப்பதற்கென்று பல நூற்றாண்டு காலமாக திருவாரூரில் பாரசைவர் என்ற சாக்தர்கள் சிவதீட்சை பெற்றும், குறித்த தாள, லய முறைகளைப் பயின்றும் கடைப்பிடித்து வந்துள்ளனர்.

"பாரசைவ உற்பத்தி; பஞ்சமுக வாத்திய லட்சணம்" என்ற பழஞ்சுவடி நூல், பாரசைவம் சிவபெருமானின் நிருத்தத் திற்காகவும், ஆடல் மகளிர் ஆடும் ஆடலுக்காகவும் தோற்றுவிக்கப்பட்டதா கக்குறிப்பிடுகிறது. பாரசைவர்களை முட்டுக்காரர்கள் என்றழைக்கப்படுகிறது. அண்மைக் காலம் வரை இந்த ஐம்முக முழவத்தை வாசித்துவந்தவர் முட்டுக்காரர் திரு. சங்கரமூர்த்தி அவர்கள். தற்போது அவர் குமாரர் திரு. செல்வராஜ் இந்தப் பெருமைமிக்க பஞ்சமுக வாத்தியத்தை இசைக்கிறார். அவரிடம் தாளங்கள் பற்றி அரிய குறிப்புகளைக் கொண்ட ஏராளமான ஓலைச்சுவடிகள் உள்ளன. இக்காலத்தில் கணிப்பொறி இசைக்கான மூலக்கூறுகள் போல், பல அரிய குறிப்புகள் அச்சுவடியில் இருப்பனபோல்·தெரிகிறது.

தமிழகத்து இலக்கியங்களில் முதன் முறையாக 'ஐம்முக முழவம்' பற்றி கல்லாடனாரின் கல்லாடத்தில்,

"தடா வுடலும்பர்த் தலைபெறு முழவம்
நான்முகம் தட்டி நடுமுகம் உரப்ப
நாடிரு முனிவர்க்கு ஆடிய பெருமான்"

என்றும் "முகனைந்து மணந்த முழவந்துவைக்க" என்றும் சான்றாகக் கூறியுள்ளார்.

இறைவனின் பல்வேறு வகைத் தாண்டவங்களுக்கும் ஏற்ற தனித்தனி தாள முறைகள் இசைக்கப்படுகின்றன. ஆரூர் இறைவனின் "அஜபா" நடனத்திற்கு குடமுழவம், சுத்தமத்தளம் இசைக்க, இறைவன் திருமேனியைத் தோளில் சுமந்தவண்ணம் ஆடுவதே இங்கு போற்றப்படும் நெறி. பூஜைகளுக்கும், பங்குனி உத்திரப் பெருவிழாக்களுக்கும் பஞ்சமுக வாத்தியம் இசைக்கப்படுகிறது.

தற்போதும் சோமவார நாள்களில் மட்டும் இக்கருவி இசைக்கப்படுகிறது. குடமுழவத்தின் சிறப்பான அம்சம் தியாகப்பெருமானின் முன்பு மட்டும் முழங்குதல் ஆகும். மாலை பூஜையான 'சாயரட்சை'யின் போது தொடக்கத்தில் "தொம்", "தாம்", "தொம்", "தாம்" என்ற தாள இசையான "சதகரஜதி" தாளத்துடன் இசைக்கப்படுகிறது. முப்பத்தைந்து விதமான தாளங்களை இதில் இசைக்க இயலும்.

வீதிவிடங்கப் பெருமானின் (தியாகேசப்பெருமான்) 'அஜபா நடனம்' தவிர 'ஆனந்தத்தாண்டவம்', 'ஊர்த்துவதாண்டவம்', 'ருத்திர தாண்டவம்' ஆகியவற்றுக்கும் இப்பஞ்ச முக வாத்தியத்தில் இசைக்கப்படுவது இதன் தனிச்சிறப்பு. ஆரூர்



ஐமுகக் குடமுழவம்

திருக்கோயிலின் அரிய அணிகலன் இந்தப் 'பஞ்சமுகக் குடமுழவம்'.

தமிழர்களின் கலை ஆர்வத்தின் உச்சக்கண்டுபிடிப்பே இந்த 'ஐம்முக முழவம்'.

'பாரி நாயனம்' என்ற நாதசுரக்கருவி ஆரூர் திருக்கோயிலன்றி வேறெங்கும் இல்லை. இந்த நாயனத்தில் சீவாளி என்ற ஊதும் பகுதி மூன்று அங்குல நீளத்திற்கு மேல் இருக்கும். இறைவன் வீதியுலா வரும்போது, இன்ன இன்ன வீதிகளில் குறிப்பிட்ட சில இராகங்கள்தான் வாசிக்கலாம் என்ற துளியும் தளராத கட்டுப்பாடு உண்டு. இவ்வரிய நாயனத்தால் தேவாரப்பண்களும், தீட்சிதர் கிருதிகளும் இசைக்கப்படுகின்றன. இன்னும் இக்கருவி போற்றிப் பாதுகாக்கப்பட்டு ஆரூர் இறைவனின் பூசனை வேளைகளிலும் இசைக்கப்படுகிறது.

நாதசுரத்திலிருந்து பாரிநாயனம் சற்று வேறுபட்டது. இதன் ஒலி அமைப்பும் நாதசுரத்திலிருந்து சற்று மாறுபட்டு ஒலிக்கும். தற்போது நாடெங்கும் நாதசுரக் கலைஞர்களால் வாசிக்கப் பயன்படுத்தும் நாதசுரம் என்ற குழல் வாத்தியக்கருவி 200 அல்லது 300 ஆண்டுகளுக்குள் தான் தோன்றியிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளரின் கருத்து. ஏனெனில் சோழர் காலச் சிற்பங்களில் நாதசுரம் காணப்படவில்லை. ஆனால் "முகவீணை" என்ற குறுகிய குழல் வாத்தியத்தை விட அளவில் நீண்டதாகவும், நாதசுரத்தைவிட சற்றே சிறியதாகவும் பாரி நாயனம் திகழ்கிறது. இது சோழர் காலச் சிற்பங்களில் காணப்பெறும் தமிழர்கள் போற்றிய, இனிய இசைநயம் வாய்க்கப்பெற்ற கருவி. இக்கருவியை, திருவாரூரில் திரு. செல்வகணபதி என்பவரே மரபு அழியாமல் போற்றிப் பாதுகாத்துப் பயன்படுத்திப் பெருமை சேர்த்து வருகிறார்.

'சுத்தமத்தளம்' என்ற தாளக்கருவி மற்ற மத்தளங்களை விட நீண்டதாகப் பருத்துக் காணப்படுகிறது. இதையும் பாரசைவர்களே போற்றிப் பயன்படுத்தி வருகின்றனர். திருவந்திக்காப்பு, மற்ற தீபாராதனைக் காலங்களிலும், குடமுழவம் வாசிக்கப்படாத காலங்களிலும் இக்கருவி இசைக்கப் படுகிறது.

சந்திரசேகரர் திருவிழாவின்போது, இறைவன் திருமேனி திருக்கோயிலுக்குள் உலாவரும்போது, ஒவ்வொரு திசையும் அத்திசைக்குரிய கடவுளின் திக்மந்திரம் பிரயோகம் செய்யப்பெறும். இறுதியாக ஈசானதிசைக்கு இறைவன் திருமேனி எழுந்தருளும்போதும். ஆரூர், திருக் கோயிலின் முட்டுக்காரர் சுத்தமத் தளத்தைத் தலையில் கட்டியுள்ள பரிவட்டத்தின் மேல் வைத்துக்கொண்டு இரு கரங்களையும், உயர்த்திய வண்ணமே மத்தளத்தை இசைப்பார். இவ்வாறு இசைக்கப்பெறும் சுத்தமத்தளத்தின் தாளங்களும், முறைகளும் குறிப்பிட்ட முறைப்படியே நிகழும். இதற்கு 'பூத நிருத்தம்' என்று பெயர்.

இப்படி இசைக்கும்போது பூதகணங்கள் கூடி சந்திரசேகரர் முன்பு நிருத்தம் (ஆடல்) புரிவதாகவும், அதற்கென்றே முட்டுக்காரர் தலைக்கு மேலாக மத்தளம் இசைப்பதாகவும் ஐதிகம். இந்த 'பூத நிருத்தம்' தற்போதும் நடைபெறும் விழா நிகழ்ச்சியாகும்.

'கொடுகட்டி' என்ற தாள இசைக்கருவியும், கூத்துக்கடவுளுக்குப் பிடித்தமானதென அறியப்படுகிறது. இது ஆரூர் ஆழித்தேரோட்டத்தின் போது மட்டும் இசைக்கப்படுகிறது.

இவை தவிர இத்திருக்கோயிலில் பதினெட்டு வகையான இசைக்கருவிகள் இருந்ததாகக் கூறுகின்றனர்.



முதன்முதலில் ஏற்படுத்தப்பட்ட 'பிரமிட்'டின் அமைப்பு

# நான் கண்ட நாகரிகத் தொட்டில்

## வை. தியாகராஜன்

அலுவலக நிமித்தம் கெய்ரோ செல்லவேண்டும் என அறிந்ததும், பள்ளிக் காலங்களில் நாகரிகத் தொட்டில் எனப் படித்த நாட்டிற்குச் செல்கிறோம் என்ற மகிழ்ச்சி, நண்பர் டி.ஆர். கணேசன் "சென்று வந்து படங்களுடன் ஒரு கட்டுரை எழுதித் தரவேண்டும்" என்றதும் - இரட்டிப்பானது.

சுமார் 5000 ஆண்டுகளுக்கு முன்னால் நாகரிகத்தில் திளைத்து வந்த நைல் நதிக் கரையில் அமைந்த கெய்ரோவின் பொருளாதாரம் முக்கியமாக சுற்றுலாப் பயணிகளின் வருகையினாலேயே வளர்ந்து வருகிறது எனலாம். இரவில் கூட உறங்காத ஊர். பயணிகள் பல நாடுகளிலிருந்து வந்த வண்ணம் இருக்கின்றனர். சென்னை ஜார்ஜ் டவுன் பகுதி போன்றோ, பழைய தில்லி போன்றோ நாம் உணர்கிறோம். குறுகலான தெருக்களும் உயர்ந்த கட்டடங்களும், நெரிசலான மக்கள் நடமாட்டமும் நம்முள் ஓர் ஒற்றுமை உணர்வை ஏற்படுத்துகிறது. பல நாடுகளின் வழியாகப் பாயும் நைல் நதி, நதிநீர் பங்கீட்டுப் பிரச்னையின்றி கெய்ரோவை அடைவது ஆச்சரியமாயிருக்கிறது. நல்ல ஆழமும், அகலமும் உள்ள நைல் நதியில் சுமார் 300க்கும் மேற்பட்ட உல்லாசப் படகுகள் சுற்றுலாப் பயணிகளுக்காக, இரவு ஏழு மணியிலிருந்து ஒவ்வோர் இரண்டு மணி நேரத்திற்கு ஒருமுறை என நதியில் சொகுசுப் பயணம் செல்கிறது. துருக்கி நடனம், தொப்புள் நடனம் என பல கலை நிகழ்ச்சிகளும், அங்கு அளிக்கப்படும் பானம், உணவு வகைகளும் உள்ளத்தையும், நாவையும் மகிழ்ச்சிக்குள்ளாக்குகின்றன.

பிரமிக்க வைக்கும் 'பிரமிட்' அமைக்கப்பட்டுள்ள விதத்தைப் பார்த்தால் அக்காலக் கட்டடக் கலை நிபுணர்களின் திறமையைப் பாராட்டாமல் இருக்க முடியாது. முதன்முதலில் படிப்படியாக இருக்கும் 'பிரமிட்'டையே நிர்மாணித்தனர். பிறகு வல்லுநர்களின் திறமையால் ஒரே சீரான சரிவில் அமைந்த 'பிரமிட்கள்' அமைக்கப்பட்டன என அறிகிறோம்.

இதன் நடுப்பகுதியில் அமைந்துள்ள நுழைவாயிலும் கண்டறிய முடியா வண்ணம் இதன் மேல் இடப்பட்ட மேற்பூச்சு, கால ஓட்டத்தில் பலராலும் சிதைக்கப்பட்டுள்ளது.



பின்பு ஏற்படுத்தப்பட்ட 'பிரமிட்'

நுழைவாயிலிலிருந்து 'மம்மி' என்றழைக்கப்படும் இறந்தவரின் உடல் இருக்கும் இடம் வரை செல்லும் வழி, குகைக்குள் செல்வது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. சுற்றுலாப் பயணிகள் வசதிக்காக தற்போது வழிகளில் மின் விளக்குகள் அமைக்கப்பட்டுள்ளன. 'மம்மி' என்றழைக்கப்படும் இறந்தவர்களின் உடல் இன்றும் அடையாளம் கண்டு கொள்ளும் வகையில் பாதுகாக்கப்பட்டு வருவது, அக்காலத்திலேயே அவர்கள் மருத்துவத் துறையில் அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பாராட்டவைக்கிறது. உடலில் அழுகக்கூடிய பகுதிகளான குடல், நுரையீரல், மூளைபோன்றவற்றை வெளியில் எடுத்து ஒரு ஜாடியிலிட்டு பதப்படுத்தப் பட்ட உடலுடன் ஒரு மரப்பெட்டியில் இட்டு மூடிவிடுகிறார்கள். மோட்சம், நரகம் போன்றவற்றில் நம்பிக்கை வைத்திருந்த அவர்கள் இதயத்தை எடுப்பதில்லை. ஏனெனில் உயிர் மேலுலகம் சென்றவுடன் அங்கு இதயத்தை இலேசான இறகுகள் கொண்டு நிறுக்கப்படுவதாயும், கனமான இதயம் உடையவர்கள் பாவம் செய்தவர்களாயும், இலேசான இதயம் உடையவர்கள் புண்ணியம் செய்தவர்களாயும், அவர்கள் செய்த பாவ புண்ணியத்திற்கேற்ப தண்டனையோ, அல்லது பரிசோ அளிக்கப்படுவதாகவும் நம்பி வந்திருக்கின்றனர். ஆரியர்களின் வழக்கம்போலவே இவர்களும் கிரகங்களைப் பூசை செய்து வந்ததற்கான சான்றுகள் உள்ளன. சூரியன், சந்திரன், புதன், இராகு போன்ற எட்டு கிரகங்களை எட்டுதிக்கு நோக்கி வைத்து வழிபட்டு வந்ததாகத் தெரிகின்றது.

கடைசியாக ஆண்ட அரசன் இளம்வயதிலேயே இறந்துவிட்டதாகவும் அவருடைய கல்லறை பலகாலம் கண்டுபிடிக்கப்படாமலேயே இருந்ததாகவும், பல ஆண்டுகள் இடைவிடா முயற்சியினால் 'ஹோவர்டுகார்டர்' என்கிற ஆங்கிலேயர் இதைக் கண்டு பிடித்ததாகவும் கூறப்படுகின்றது. அவர் கண்டபோது கல்லறை உள்வாயில் தங்கத் தகட்டால் மூடப்பட்டிருந்ததாகவும், பிறகு சவப்பெட்டிக்கு மேலும் 450 பவுண்டு எடை சொக்கத் தங்கத்தில் அரசரின் முகம் வடிவமைத்து வைத்திருந்ததாகவும் தெரிகிறது. அவர் அணிந்த ஆடை, ஆபரணங்கள், அவர் மேல் வைக்கப்பட்ட மலர் வளையம் முதற்கொண்டு இன்று வரை அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்படுகின்றன. இந்தக் கல்லறையில் சுமார் 200 கிலோ தங்க ஆபரணங்கள் இருந்ததாகவும் கூறப்படுகிறது.

நைல் நதியில் படகு விடுதிகள்



ஒவ்வொரு பிரமிட்டின் முன்னாலும் சிங்க உடலுடன் அரசன் முகம் செதுக்கப்பட்ட காவல் தெய்வம் பெரும்பாலும் 'அலபாஸ்டர்' என்ற கற்களால் செதுக்கப்பட்டுள்ளன. பீரங்கியாலும் தகர்க்கப்பட முடியாத கற்களால் ஆன இவை, ஒளியை மட்டும் தன்னுள் இழுத்து வெளிவிடுகின்றன.

எகிப்து என்றவுடன் முதன் முதலில், ஒருவகைப் புல்லிலிருந்து எழுதுவதற்காகத் தயாரிக்கப்பட்ட 'பேபரஸ்' நினைவிற்கு வரும். இன்னும் அதே செயல்முறைப்படி செய்யப்படும் 'பேபரஸ்' தொழிற்கூடங்கள், உல்லாசப் பயணிகளின் விருப்பப்படி வண்ணங்கள் பூசி, அல்லது அவர்கள் பெயரை எகிப்திய முறைப்படி 'ஹீரோகிளைபிக்' எழுத்தில் எழுதித் தருகிறார்கள். நகைக் கடைகளில் வாங்கும் நகைகளில் கூட இவ்வித எழுத்தில் தேவைக்கு ஏற்றாற் போல் அச்சிட்டுத் தருகிறார்கள். பல காலம் இந்த 'ஹீரோகிளைபிக்' எழுத்தைப் படிக்க முடியாமலேயே இருந்தது. பலரின் ஆராய்ச்சியின் பயனாய் இன்று எல்லா மொழியைப் படிப்பது போன்று படிப்பவர்கள் இருக்கிறார்கள். இதன் பயனாய் அக்காலக் கலாசாரம், நாகரிகம் முதலியவற்றை நன்கு அறிந்து கொள்ள உதவுகின்றது.



கெய்ரோ நாட்டு மெட்ரோ ரயில்முன் கட்டுரையாளர்

எல்லாச் செயல்களுமே காலப் போக்கில், மறக்கப்பட்டு மாறி, மறைந்துவிடும் என எண்ணிக் கொண்டிருக்கும் நாம், காலமே வெட்கித்தலை குனியும் வண்ணம் எகிப்திய பிரமிட்களும் அதனால் அவர்கள் கலாசாரமும் இன்னும் அழியாப் பெட்டகமாய்த் திகழ்கின்றன என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

பித்தளை, தாமிரம் போன்ற உலோகங்களாலான கைவினைப் பொருள்கள் தயாரிப்பதில் தற்போது உள்ளவர்கள் திறமைசாலிகளாயிருக்கின்றனர். பகுதிநேரப் பயிற்சியாக, சிறுவயது முதற் கொண்டே கம்பளம் நெய்வதை ஒரு கட்டாயக் கல்வியாக அரசே ஊக்குவித்து வருவதால், இங்கு வாழும் மக்கள் சுமார் 15 வயதிலேயே தேர்ந்த கைவினைஞர்களாகப் பரிமளிக்கிறார்கள்.

கடைத்தெருவில் ஆங்காங்கே 'சர்பத்' போன்ற பானத்தை இடுப்பில் கட்டி வைத்துள்ள குடுவையிலிருந்து விற்பவர் முதல், டாக்ஸி ஓட்டுநர்கள், கடைக்காரர்கள் அனைவருமே வரும் உல்லாசப் பயணிகளிடம் 'கெய்ரோவிற்குத் தங்கள் வரவு நல்வரவாகட்டும்' என்று கூறி மகிழ்விப்பதுடன், அவர்கள் கெய்ரோவைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிய ஆவலுள்ளவர்களாக இருக்கிறார்கள்.



கெய்ரோவில் ரயில் பயணம் என்பது ஒரு முக்கியமான அனுபவம். துப்புரவாக உள்ள பிளாட்பாரத்திற்குள் பயணச்சீட்டு இன்றி வெளிவரவோ, நுழையவோ முடியாத வகையில் எல்லாமே தானியங்கி இயந்திரங்களின் உதவியால் அமைந்துள்ள பாங்கை, ஏன் நம் ஊரில் இன்னும் பின்பற்றாமல் இருக்கிறார்கள் என்று தெரியவில்லை.

கிளியோபாத்ரா, அலெக்ஸாண்டர், சீசர் போன்ற சரித்திர நாயகர்களைக் கண்டுகளித்த மனிதர்களால் படைக்கப்பட்ட அதே எகிப்து பிரமிடுகளை நாமும் இன்றும் அதே வடிவில் காண்கிறோம் என்கிற நிறைவு நம்மை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகிறது. ●

# மறையக் காத்திருக்கும் மகோன்னத வரலாறு

பண்ருட்டி தமிழரசன்


தட்சிணாமூர்த்தி

தமிழகத்தில் சைவசமயம் மறுமலர்ச்சியைப் பெறுவதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்த ஊர்.

'தருமசேனர்' என்பவர் திருநாவுக்கரசர் எனும் பெயர் பெற்று முதன்முதலில் தேவாரம் பாடிய ஊர். சிவபெருமானுக்குரிய அட்ட வீரட்டானத் தலங்களுள் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் உறையும் திருத்தலத்தைக் கொண்ட ஊர்.

'அதிராஜ மங்கலபுரம்' எனப் பெயர் பெற்றிருந்து, பின்னர் 'திருவதிகை' என்று வழங்கப்பெறும் எழில்மிக்க மூதூர்... இன்று தன் வரலாற்றுப் புகழ் மறைந்து ஒரு சிற்றூராகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது.

இவ்வூர் தெ.ஆ. வள்ளலார் மாவட்டத்தில் பண்ணுருட்டிக்குக் கிழக்கே இரண்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இங்குதான் புகழ்பெற்ற வீரட்டானேசுவரர் திருக்கோயில் உள்ளது.இக்கோயிலுக்கு வடகிழக்கில் அரை கி.மீ. தொலைவில் உள்ள மிகப் பெருமை வாய்ந்த வரலாற்றுச் சின்னம் தான் இன்று அழிவின் விளிம்பிற்கே சென்று மறையக் காத்துக் கொண்டிருக்கிறது.

'குணபராஈச்சுரம்' என்ற இந்த வரலாற்றுச் சின்னத்தின் பின்னணி அதிசயிக்கத்தக்கதாகும்.

'சித்திரகாரப்புலி', 'விசித்திரச் சித்தன்', 'சைத்தியகாரி' என்பனபோன்ற விருதுப் பெயர்கள் பல பூண்ட பல்லவ மாமன்னன் மகேந்திரவர்மனுக்குக் 'குணபரன்' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இச்சிறப்புப் பெயராலேயே 'குணபராஈச்சுரம்' என்ற சிவன் கோயிலைத் தனியே எடுப்பித்தான். இந்த உண்மையைக் கூறுவதற்கு இக்கோயிலில் தற்போது கல்வெட்டுச் சான்றுகள் இல்லையென்றாலும், அவன் படைத்துச் சென்ற சிலைகள் சான்றுகளாக உள்ளன.

மேலும் இரண்டு சான்றுகள் அழியாமல் இன்றும் உள்ளன. ஒன்று... மகேந்திரவர்மன் திருச்சிராப்பள்ளி கோயிலில் பொறித்துள்ள சமஸ்கிருதக் கல்வெட்டு.

இரண்டாவது, இலக்கியச்சான்று...

"வீடறியாச் சமணர் மொழி
பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை
நகரின் கண் கண்ணுதற்குப்
பாடலிபுத்திரத்தில் அமண்
பள்ளியொடு பாழிகளும்
கூட இடித்துக் கொணர்ந்து
குணபரவீச்சரம் எடுத்தான்."

என்று, மகேந்திரவர்மன் குணபராஈச்சுரம் எடுத்த செய்தியைச் சேக்கிழார் பாடியுள்ளார். இவ்விரு சான்றுகளும் மறைந்து போயிருப்பின், திருவதிகையில் அவன் இப்படியொரு கோயிலைக் கட்டியதற்கான வரலாறும் மறைந்து போயிருக்கும்.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் (கி.பி. 600 - 630) காஞ்சிபுரத்தைத் தலைநகராகக்



குணவர ஈச்சுரம் (கருவறையுடன் கூடிய வெளிப்புறத் தோற்றம்)

கொண்டு நாடாண்ட மகேந்திரவர்ம பல்லவன், சமண சமயத்தைச் சார்ந்திருந்தான். இம்மன்னன் காலத்தில் வாழ்ந்த சமணப் பெரியாரான திருவாமூர் தருமசேனர், திருப்பாதிரிப்புலியூர் (கடலூர்) பாடலிபுத்திரத்தில் தங்கி சமணமதச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வந்தார்.

தருமசேனரின் தமக்கையான திலகவதியார் துறவறம் பூண்டு, திருவதிகை வீரட்டானத்தில் தங்கியிருந்து சிவத்தொண்டாற்றி வரும் வேளையில், "தான் சிவத் தொண்டு புரிய, உடன் பிறந்த தம்பி மாற்று மதம் சேர்ந்து சைவமதத்தை வெறுக்கிறானே" என்று திலகவதியார் சிவபெருமானிடம் வேண்டி நிற்க, "விரைவில் உன் சகோதரனுக்குச் சூலைநோய் தந்து ஆட்கொள்வோம் யாம்" என்று சிவபெருமான் திலகவதியாரின் கனவில் கூறியருளினார். அதன்படியே தருமசேனருக்குச் சூலைநோய் ஏற்பட்டது.

குணபர ஈச்சுரம் (நுழைவு வாயில்)



அந்நோயைப் போக்குவதற்குச் சமணர்கள் செய்த ஏற்பாடுகளனைத்தும் பயனற்றுப் போயின. தமக்கையின் அறிவுரையால் மனம் மாறிய தருமசேனர், திருவதிகை வந்து சிவ பெருமானைப் போற்றிப்பாடி ('கூற்றாயினவாறு விலக்ககிலீர்' எனத் தொடங்கும் தேவார முதல் பாடல்) சூலைநோய் நீங்கப் பெற்றது மட்டுமின்றி 'திருநாவுக்கரசர்' என்ற சிறப்புப்பெயரையும் பெற்றார். அதன் காரணமாகச் சமணமதத்தை விட்டு விலகிச் சைவ மதத்தை ஏற்றார்.

இச்செய்தியைக் கேள்வியுற்ற மகேந்திரவர்மன் திருநாவுக்கரசருக்குச் செய்தியனுப்பி, 'சைவமதம் விடுத்து மறுபடியும் சமண மதத்திற்கே வரவேண்டும்' என்று ஆணையிட்டான். 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்' என மறுமொழியனுப்பிப் பணிய மறுக்கவே, சமண முனிவர்களின் மறைமுகத் தூண்டுதலினால் பல்வேறு விதமான தண்டனைகளும், இன்னல் களும் நாவுக்கரசருக்கு வழங்கப்பட்டன. இறையருளால் அவற்றையெல்லாம் வென்றார் அவர்.

திருநாவுக்கரசரின் பெருமைகளை யும், சைவ சமயத்தின் மேன்மைகளை யும் உணர்ந்த மகேந்திரவர்மன், நாவுக்கரசரைப் பின்பற்றிச் சைவ சமயத்தில் தன்னையே இணைத்துக் கொண்டான். நாவுக்கரசர் மீது அவதூறான சொற்கள் கூறித் தன்னைக் கொடுமைகள் இழைக்க வைத்த சமணர்களை வெறுத்தான். அதன் விளைவு?

திருப்பாதிரிப்புலியூர்ப் பாடலி புத்திரத்திலிருந்த சமணர்பாழிகளையும், பள்ளிகளையும் இடித்து நொறுக்கினான். இடிபட்டு விழுந்த கற்களைக் கொண்டு வந்து, தான் மதம்மாறியதன் நினைவுச் சின்னமாகத் திருவதிகையில் சிவ பெருமானுக்குக் கோயில் ஒன்றைக் கட்டுவித்துக் 'குணபராச்சுரம்' என்று, தன் விருதுப் பெயரைச் சூட்டி மகிழ்ந்தான் என்பது வரலாறு.



பல்லவர்கால தாரா லிங்கம்

குணபரனான மகேந்திரவர்மன் கட்டிய இக்கோயில், காலமாற்றங்களால் சிதைவு பெற்று, பின்னர் சோழர்கள் காலத்தில் திருப்பணி செய்யப்பெற்று, அதன் பிறகு விஜயநகர மன்னர் காலத்திலும் திருப்பணி செய்யப் பெற்றுள்ளது. தற்போது அனைத்துமே சிதைந்து கவனிப்பாரின்றிப் புதர் மண்டியும், சுற்றுப்புறச் சுவர்களில் விரிசல்கள் ஏற்பட்டும், இடிந்து விழும் நிலையிலுள்ளது.

இக்கோயில் கருவறையில் கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த தாராலிங்கம் (குணபராஈச்சுரர்) மகா மண்டபத்தில் அமர்ந்த நிலையிலுள்ள திருமாலின் சிலை, விநாயகர், சண்டிகேசுவரர், நந்தி போன்ற சிலைகள் மகேந்திரவர்மன் காலப் படைப்பாகவும், தென்முகக்கடவுள், (தட்சிணாமூர்த்தி) சூரியன் சிலைகள் சோழர் காலப் படைப்பாகவும், அம்மன் உள்ளிட்ட மற்ற சிலைகள் விஜயநகர மன்னர் காலத்தவையாகவும் காணப்படுகின்றன.

தற்போது கோயிலுக்குக் கதவுகள் இல்லாததால் இங்கிருந்த பூசைத்தட்டு, மணியும், வேறு சில பொருள்களும் களவாடப்பட்டுவிட்டன. சந்தனம் அரைக்கும் கல் மட்டுமே எஞ்சியுள்ளது. மின் கட்டணம் கூட கட்ட இயலாத சூழ்நிலையிலிருந்த இக்கோயிலுக்கு இப்பகுதியிலுள்ளோர் குழு அமைத்து, முடிந்த வரை கோயில் பணிகளைச் செய்து வருகின்றனர். அரசும் அற நிலையத் துறையும் மனம் வைத்தால் தான், இக்கோயிலுக்கு விடிவு காலம் பிறக்கும் என்பது இவ்வூர் மக்களின் எதிர்பார்ப்பாக இருக்கிறது. ●

## உயிரணு வரிகள்



வரிகள்
உயிரணுக்களாய்
என்னில்
ஜனிக்கவேணும்;
பின் பல
விதைகளாய்ப்
பெருக வேணும்...

தத்தெடுக்காத
மழலைகளாய்,
கவரப்படாத
கலைகளாய்,
புதுமழை
நீர்வீச்சாய்,
மனமலையில்
பீரிட்டு
வரவேணும்...

தகிக்கின்ற
சூரியனாய்,
தண்ணென்ற
சந்திரனாய்,
பசுமைப்பயிர்
நிறைநிலமாய்,
என்றுமுளதாய்,
தமிழாய்,
வாழவேணும்...



சாலி வாகனன்



## உன்னைப் பார்

மதிஒளி

உன்னைப் பார்! உனக்குள் பார்!
உணர்ந்து கொள்நீ யார்?
உற்றுப் பார்! உழைத்துப் பார்!
உயர்ந்து செல்நீ நேர்!
விண்ணைப் பார்! விரும்பிப்பார்!
விளங்கிக் கொள்நீ யார்?
வேகம் பார்! விளைவைப் பார்!
மேலே செல்நீ நேர்!
எண்ணிப் பார்! எதையும் பார்!
இணைந்து கொள்நீ யார்?
ஏற்றுப் பார்! எடுத்துப் பார்!
எழுந்து நில் நீ நேர்!
பொன்னைப்பார்! பொருளைப்பார்!
புரிந்து கொள்நீ யார்?
புகழைப் பார்! புகலைப்பார்!
புகுந்து செல்நீ நேர்!
மண்ணைப்பார்! மனத்தைப்பார்!
வரைந்து கொள் நீ யார்?
மதிப்பைப்பார்! வளத்தைப்பார்!
வளர்ந்து செல்நீ நேர்!
கண்ணைப்பார்! கருத்தைப்பார்!
கற்றுக் கொள்நீ யார்?
கனிவைப்பார்! கரைந்துபார்!
கடுகிச் செல்நீ நேர்!
முன்னைப்பார்! பின்னைப்பார்!
முடிவைக் கொள்நீ யார்?
முதுமைபார்! உதவிப்பார்!
முயன்று செல்நீ நேர்!
பின்னிப்பார்! பிணைந்துபார்!
பெருமை கொள்நீ யார்?
பிடித்துப்பார்! தடுத்துப்பார்!
பிரிந்து செல்நீ நேர்!

ஆழ்ந்துபார்! அகழ்ந்து பார்!
அறிந்து கொள்நீ யார்?
அடைந்துபார்! கிடந்துபார்!
அளந்து செல்நீ நேர்!
சூழ்ந்துபார்! தொடர்ந்து பார்!
துலங்கிக் கொள்நீ யார்?
சுருக்கிப்பார்! பெருக்கிப்பார்!
துணிந்து செல்நீ நேர்!
பாய்ந்து பார்! பதுங்கிப் பார்!
படித்துக் கொள்நீ யார்?
பணிந்து பார்! குனிந்தும் பார்!
பறந்து செல்நீ நேர்!
ஓய்ந்துபார்! ஒதுங்கிப் பார்!
ஊன்றிக் கொள்நீ யார்?
உறைந்துபார்! உருகிப்பார்!
ஒன்றிச் செல்நீ நேர்! ●



கெய்ரோவில் நாரிக் போயாட்ஜியன், எகிப்து கவிஞர் முகமது இப்ராகிம் ஆகியோருடன் கட்டுரையாளர்.

# எனது எகிப்து பயணம்

எம்.கே. கோபிநாதன்

பம்பாயிலிருந்து சுமார் 6 மணிநேரம் நேரடி விமானப் பயணம். எனக்கு முதன் முதல் விமானப் பயணமும் அதுதான். விமானம் தாழப் பறந்து கெய்ரோவை வலம் வந்து கொண்டிருந்தது. வாடகை சைக்கிள் கடையில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் சைக்கிள்களைப் போல வரிசையாக தூசி படிந்த 'குவைத் ஏர்லைன்ஸ்' விமானங்கள் கெய்ரோ விமான நிலையத்தில் தஞ்சம் புகுந்திருந்தன.

ஓடு தளத்தில் சற்று நேரம் ஓடிவிட்டு விமானம் நின்றதும் 'பாஸ்போர்ட்'டை எடுத்து பத்திரமாய் சட்டை மேல் 'பாக்கெட்'டில் வைத்துக் கொண்டேன். விமான தளம் பரபரப்பாகக் காணப் பட்டது. ஈராக்-குவைத் ஆகிய நாடுகளுக் கிடையே நட்புறவு பாழ்பட்டிருந்த நேரம் அது. குவைத் அரசு வாரிசுகள் கெய்ரோவில் தஞ்சம் அடைந்திருந்தனர்.

'டிப்டாப்பாக' உடையணிந்திருந்த ஒருவரும், அவருடன் நாலைந்து பேரும் என்னையே நோக்கி வருவதுபோல் இருந்தது. என்னருகே வந்ததும் 'எக்ஸ்க்யூஸ் மீ, ஆர் யூ சோபிநாசா?' என்று கேட்டனர். நான் 'நோ' என்று கூறிவிட்டு என் நடையைத் தொடர்ந் தேன்.

வரிசையில் நின்று பயணிகள் 'பாஸ்போர்ட்டை' அதிகாரிகளிடம் ஒவ்வொருவராய்க் காட்டிக் கொண்டிருந் தனர். அதே கூட்டம் மீண்டும் என்னருகே வந்து எனது 'பாஸ்போர்ட்டை' அதிகாரிகளிடம் வாங்கிப் பார்த்து 'ஒ சோபிநாசா' என்றனர். எகிப்தியர் என் பெயரை அழைத்த விதம் அது. அதன் பின் ராஜமரியாதை தான்.

நைல் நதிக்கரையில் 'ஷெப்பர்ட்ஸ்' நட்சத்திர ஓட்டலில் எனக்கு அறை ஒதுக்கியிருந்தார்கள். நான் தங்கியிருந்த ஹோட்டலில் மேல் மாடியில் 'நெப்ராட்டி' ஹாலில் காலை விழா. பின்னர் மாலையில் 'ஒபேரா ஹவுஸி'ல் விழா. பிறகு இரவு 'ஜீபோ' என்ற இடத்தில் கவிஞர்கள் கவிதை பாடினார்கள். காலையில் இலக்கியக் கட்டுரையும், மாலையும், இரவும் கவிதையும் படித்தார்கள். முதல்நாள் 'சர்வதேசப் பேச்சரங்கில்' அறிமுகம் நடந்தது. இந்தியக் கவிஞர் குழு சார்பாக நீதிபதி மோகன் மேடையில் தோன்றினார்.

இரண்டாவது நாள் காலையில் நடைபெற்ற கருத்தரங்கில் வந்திருந்த அனைத்துக் கவிஞர்களுக்கும் பார்வை யாளர்களுக்கும் என்னுடைய இரண்டு ஆங்கிலக் கவிதைத் தொகுப்புகளையும் இலவசமாக வழங்க ஏற்பாடு செய்தேன்.

பார்வையாளர்களில் பெரும் பகுதி யினர் கெய்ரோ பல்கலைக்கழக மாணவர்கள். என்னுடைய புத்தகங்கள் கிடைக்கப் பெறாத மாணவர்கள் எங்களுக்கும் புத்தகம் வேண்டும் என்று நான் தங்கியிருந்த அறைக்கே நேரில் வந்து கேட்டார்கள். புத்தகங்கள் சிலவற்றை அவர்களுக்கு வழங்கினேன். இந்தியாவைப் பற்றியும், இந்தியக் கலாசாரங்களையும் தங்களுக்கு ஏற்கெனவே தெரிந்த விவரங்களோடு என்னிடமும் கேட்டு ஒப்பிட்டுப் பார்த்தார்கள். ''எங்கள் பல்கலைக்கழக மாணவர்கள் முன்னிலையில் நீங்கள் கவிதை பற்றிப் பேச வேண்டும்'' என்றார்கள். அவர்கள் இது குறித்து துணைப் பிரதமர் டிட்ரோஸ் புட்ரோஸ் கலியிடம் அனுமதி வாங்கியுள்ளதாகக் கூறினார்கள்.

கலாசார அமைச்சர் சமீர்சர்கான் அவர்களும் என்னை 'ஜீபோ' கட்டடத் தில் சந்தித்து மாணவர்களின் விருப் பத்தை நிறைவேற்றுமாறு கூறினார்கள்.

'ஒபேரா' ஹவுஸ் என்பது மிகப் பெரிய விழா மண்டபம். ஒரே நேரத்தில் பல்லாயிரக்கணக்கானவர்கள் அமரலாம். 4.12.90 அன்று மாலை ஒவ்வொருவராக அழைக்கவிட்டு மேடைக்கு வந்தனர். முதலாவதாக குவைத் நாட்டு இளவரசி சோவத் எல்சபா "Who killed Kuwait" என்ற கவிதையை அராபிய மொழியில் பாடினார். மொழி தெரியாவிட்டாலும் கூட அவரது வாசிப்பு முறை அனைவரின் கண்களிலிருந்தும் கண்ணீரை வர வழைத்துவிட்டது. இரண்டாவதாக, ஆஸ்மான் டுர்கே என்பவர் துருக்கி மொழியில் கவிதை பாடினார். இவர் நோபல் பரிசு பெறத்தகுதியுடையவராகக் (Nominee) கருதப்பட்டவர். நான் ஐந்தாவது நபராக மேடைக்கு வந்தேன். மேடையில் ஏறியதும் ''நீங்கள் அனைவரும் அவரவர் தாய் மொழியில் கவிதை பாடுவதைக் கேட்டபோது நானும் தாய்மொழியில் கவிதை பாடத் துடிக்கின்றேன்'' என்று கூறிவிட்டு

## இன்றைய தினத்தை நம்புங்கள்

**வெ. சாகேதராமன்**

இந்தக் கணம்... இந்த நேரம்.. இந்த நிமிடம்
இன்று மலர்ந்த மலர் இதோ வீசும் தென்றல்
இவை தரும் இனிமைக்கு இணையேது?

இந்தக் கணத்தை அனுபவியுங்கள் - இப்பொழுது வாழ
இப்போதே முயற்சி செய்யுங்கள்
நேற்றை மறக்க போதை நாளையை நினைத்து சுகம்
கூற்றுவன் நிழலில் ஒதுங்குவது ஏன்?
வருங்கால ஆசைகள் கழுத்தை நெறிக்க
இன்று சுகமாக மூச்சுவிடத் தடையா?
இறந்தகால, வருங்கால எண்ண முட்டைகள் இனி வேண்டாம்
இந்த கணத்து சிறகில் பறவையாய்ப் பறப்போம்
குழந்தை வளரும்போது வாலிபத்தை அடைவான்
வாழ்க்கையின் வசந்தம் தானே வந்தடையும்
அரும்பும் மலராகும் மலரும் கனியாகும்
நதியும் கடலில் முடியும் - இருந்தும்
எதிர்காலத்திற்கு முன்பதிவு எதற்கு?
இந்தக் கணத்திற்கு இறந்தகாலமோ
வருங்காலமோ இல்லை
இன்றைய தினத்தை நம்புங்கள், நாளைக்கு
மோட்சமோ நரகமோ வந்தால் வரட்டும்
இன்று... பருக வேண்டிய பானம்
இன்று... அணைக்கவேண்டிய அழகு மயில்
இன்று... அமரவேண்டிய அரியாசனம்
நேற்றுக்காக - நாளைக்காக இழக்கக் கூடாத
பொன்னான நேரம் இன்றே! இப்பொழுதே!



போட்டோ : யோகா

## அகிலாண்ட நாயகியே உமையே!

(திருவானைக்கா அகிலாண்ட நாயகி
மீது ஒரு விருத்தம்)

அண்டினவர்க் கபயமளிக்கும் அபயவரதே
அருட்சுரந்துமே துயர் துடைக்கும் அருட்சுடரே
அண்டம் உய்ய ஆலம் உண்ட
அரன் உயிர்காத்த ஆதிபராசக்தியே
அகண்ட காவேரி நதிக்கரைவாழ் ஆரணங்கே என
பாடிப்பரவிநின்ற பக்தனாம் எளியேன் தன்னைப்
பாலித்தருள்வது உனக்கொரு பாரமல்லவே?
பாடவல்லான் காளமேகனுக் கருள் செய்திட்ட
பார்புகழ் அகிலாண்ட நாயகியே, உமையே!

**த.ரா. ராஜகோபாலன்**

'காக்கைபோல ஒருவராய்க்
கூடி வாழுவோம்.
கருமையிலும், கரைவதிலும்
காதல் கொள்ளுவோம்.
விண்ணிலேகி மேகங்களை
உரசிக் காட்டுவோம்.
ஒரு விடியலுக்கு வேப்ப மரப்
பேயை ஓட்டுவோம்.

என்று ஒரு கவிதையினைப் பாடிவிட்டு, பின்னர் அதன் ஆங்கில மொழி பெயர்ப்பையும் கூறிவிட்டு ஆங்கிலக் கவிதைகள் இரண்டையும் மேடையில் பாடினேன். மேடையில் பாடப்பெற்ற எனது ஆங்கிலக் கவிதைகள் அனைவருக்கும் பிடித் திருந்தன. கவிதை பாடிவிட்டுக் கீழிறங்கி என் இருக்கையில் வந்து அமர்ந்தபோது, ஒவ்வொரு நாட்டுக் கவிஞர்களும் தனித்தனியே என் இருக்கைக்கு வந்து கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டுப் போனார்கள். தமிழன் ஒருவனுக்குக் கிடைத்த வெற்றியாக அதைக் கருதினேன்.

நைல் நதியில் 'பேரோ' கப்பலில் ஒரு நாள் பயணமாக அழைத்துச் சென்றனர். அங்கேயே எங்களுக்கு உணவும் பரிமாறப்பட்டது. பின்னர் ஒருநாள் அங்குள்ள பழங்கால அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள். மறக்க முடியாத அனுபவங்கள்!

பிரமிடுகளைச் சென்று பார்த்த அனுபவத்தை என் வாழ்க்கையில் மிகப் பெரிய அதிர்ஷ்டமாகக் கருதுகின்றேன். ஒவ்வொரு கல்லும் 4 டன் எடையோடு பல்லாயிரம் பேர் சேர்ந்து பல ஆண்டுகள் கட்டியவையாகும். பிரமிடுகள் கட்டும் போது எத்தனையோ பேர் இறந்து விட்டார்கள் என்ற செய்தியைக் கேட்டபோது, இறந்தவர்களுக்காக என் மனம் மிகவும் வேதனைப்பட்டது. என்னால் பின்னர் எழுதப்பட்ட பிரமிட்ஸ் என்ற ஆங்கிலக் கவிதை மிகவும் உருக்கமான ஒன்றாக அமைந்தது.

இந்தக் கவிஞர்கள் மாநாட்டில் போஸ்னியா நாட்டைச் சேர்ந்த அஜாஸ், இல்லினாய்ஸைச் சேர்ந்த ஆரோன் வெஸ்ஸப், டென்மார்க்கைச் சேர்ந்த என்துர்கிரஸ், அமெரிக்காவைச் சேர்ந்த ரோஸ்மேரி, கெய்ரோ பல்கலைக்கழக மாணவர்கள் பலரும் எனக்கு நண்பர் களாய் ஆகி இன்றுவரை எங்களது நட்பு கடிதம் வாயிலாக தொடர்ந்து முன்னேறி வருகின்றது என்பதை இப்பயணத்தின் விளைவாகக் கிடைத்த பெரும் பேறாகக் கருதி மகிழ்கிறேன்.

# பெயர் நிலைத்து நிற்க

## பி.வி.ஆர்

நாற்பத்தேழில் ஆங்கிலேயன் எப்படியோ போ' என்று பாரதத்திடம் சொல்லிவிட்டு வெளியேறியதில், தேசமே லாபமடைந்தாலும் கோடீசுவரனுக்கு மட்டும் ஒரு பெரும் நஷ்டம் ஏற்பட்டது. மூன்று நான்கு ஆண்டுகளாக, அவருடைய பெயர் 'திவான் பகதூர்' பட்டத்துக்கு கவர்னரால் சிபாரிசு செய்யப்பட்டு வந்தது. அவருடைய போதாத காலம் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு உள்நாட்டிலும் பல வெளிநாடுகளிலும் 'திவான் பகதூர்' பட்டம் அளிப்பை விட பல முக்கிய வேலைகள் இருந்தன. நாற்பத்தாறில் காங்கிரஸ் முஸ்லிம் லீக் இணைந்து தோற்றுவித்த தற்காலிக அரசு பிரிட்டிஷ்காரனுடைய அரசு அள்ளி வீசும் பட்டம் பதவிகளைப் பற்றிக் கவலைப்படவில்லை. அதன் பிறகு அவ்வளவுதான். கோடீசுவரன் வெறும் கோடீசுவரனாகவே வாழ்ந்து அறுபதில் காலமானார். அப்போது அவருடைய வயது அறுபத்திரண்டு.

மௌரிய சாம்ராஜ்யம் போல பல இடங்களில் கோடீசுவரனுடைய சொத்து பரந்து கிடந்தது. மாயவரம் அருகே காவிரிப் பாசனத்தில் சுமார் ஐம்பது வேலி நிலம்.

திருச்சிக்கு அருகேயுள்ள ஜீயபுரத்தில் முப்பது ஏக்கருக்கும் மேலாக கரும்புத் தோப்புகளுக்கும் குறைவில்லை. மா, தென்னை, வாழை என்று விதம்விதமாக, எல்லாம் கோடீசுவரன் ஒரு காலால் நின்று ஒரு கையால், வெள்ளைக்காரனுக்கு சலாம் போட்டு சம்பாதித்தது. ஒரு பெரிய பெட்ரோல் கம்பெனியின் ஏஜெண்ட். தஞ்சாவூர் மற்றும் திருச்சி ஜில்லாக்களில் அவருடைய மண்ணெண்ணெயும் பெட்ரோலும்தான் விற்றன. யுத்த காலத்தில் கறுப்பு மார்க்கெட்டின் அவதாரத்துக்கு அவர் பெரும் உதவியாக இருந்தார் என்று பலர் வெளிப்படையாகவே கூறுவார்கள். இவை தவிர, சென்னையில் மாபெரும் இரும்பு மற்றும் சிமெண்ட் மொத்த வியாபார நிறுவனம்.

அவருக்கு நாராயணன், சுந்தரேசன், இராமநாதன் என மூன்றே மூன்று பிள்ளைகள். அவருக்கு ஐம்பத்தெட்டு வயது நடக்கும் போது படுக்கையில் விழுந்த மனைவி பட்டம்மாள், உடனடியாக சிவலோகப் பிராப்தியோ வைகுண்ட பதவியோ அடைந்திருக்கலாம். ஆனால், அடையவில்லை. சிவனுக்கும், விஷ்ணுவுக்கும் அவளை யார் வீட்டில் வைத்துக் கொள்ளுவது என்று தகராறு. இரண்டாண்டுகள் வாதப் பிரதிவாதங்கள் செய்த பிறகு விஷ்ணு சிவனுக்கு விட்டுக் கொடுத்தார்.

சஷ்டியப்த பூர்த்திக்கு சில நாள்கள் இருக்கும்போது மனைவி ஒரே அடியாகக் கண் அயர்ந்ததில் கோடீசுவரனுக்கு ஏற்பட்ட துக்கம் கொஞ்ச நஞ்சம் அன்று. இடிந்து போய்விட்டார். எதிலும் மனம் லயிக்கவில்லை. இனிமேல் யாருக்காக இருக்க வேண்டும், பிள்ளைகளுக்காக மேலும் சம்பாதிப்பானேன் என்ற கேள்விகளெல்லாம் தோன்றின. இரும்பு - சிமெண்ட் மொத்த வியாபாரத்துக்கு முற்றுப் புள்ளி வைத்தார். மூத்த பிள்ளை நாராயணன் வசம் பெட்ரோல் ஏஜென்ஸியை ஒப்படைத்தார். இரண்டாவது பிள்ளை சுந்தரேசன் என்ஜினியராகி வெளிவந்து, தந்தையின் வியாபாரத்தில் நாட்டமில்லாத காரணத்தால் டெல்லி சர்க்காரில் வேலைக்குப் போனான். மூன்றாமவன் டாக்டர் பட்டம் பெற இன்னும் இரண்டாண்டுகள் இருந்தன.

மெல்ல மெல்ல கோடீசுவரன் தளர்ந்து போகலானார். பல பெரிய டாக்டர்கள் தினசரி வந்து போனார்கள். சரியான ஓய்வுதான் தேவை என்று சொல்லிவிட்டால் தங்களுடைய வரும்படி நின்றுவிடும் என்ற பயத்தில், தினசரி ஊசி போட்டு உற்சாகப்படுத்திக் கொண்டு வந்தார்கள்.

நாராயணன் சென்னை-தஞ்சை-திருச்சி என்று அலைந்து கொண்டிருக்க, மாபெரும் பங்களாவில் அவனுடைய மனைவி சாரதாவும், டிரைவர், தோட்டக்காரன் காவலாளி போன்ற சிப்பந்திகளும் மட்டுமே இருந்தார்கள். ஏற்கெனவே மாமியாருக்கு அயராது பணிவிடை செய்து வந்த சாரதா இப்போது மாமனாருக்கு பணிவிடை செய்யலானாள். முகம் கோணாமல் நந்தா விளக்கு போல புன்னகை ஒளியை வீசிக்கொண்டு சாரதா தமக்குப் பணி புரிவதைக் கண்டபோது கோடீசுவரனுக்கு மெய் சிலிர்த்தது. இப்படிப்பட்ட ஒருத்தி எந்தப் பிரதிபலனையும் எதிர்பாராமல் பணிவிடை செய்கிறாளே, இவள் அவருடைய மருமகளாக இல்லாமல் மகளாக இருந்திருக்கக்கூடாதா என்ற ஆதங்கம் அடிக்கடி ஏற்பட்டது. ஆனால் மறுநிமிடமே பெண்ணாக இருந்திருந்தால், நிச்சயமாக இந்த அளவுக்குப் பணி விடை செய்திருக்கமாட்டாள் என்ற எண்ணம் தோன்றும்.

அவர் ஒருநாள் கேட்டார்:

"ஏம்மா, எனக்காக இப்படி முகம் சுளிக்காம உழைக்கிறாயே, நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்மா?"

"என்ன மாமா பேத்தறேள்?" நீங்க யாரு? அவருடைய அப்பா, அப்ப எனக்கும் அப்பாதானே?"

"உனக்கு ஏதேனும் பிரத்யேகமாக, வேணும்னா, கூசாமக் கேளும்மா."

"நீங்க உடம்பு தேறி பழையபடி உங்க அதிகாரத்தை நிலைநாட்டணும். இந்தக் குடும்பம் உங்க பெயரைப் பாழடிக்காம இருக்க உங்க பிள்ளைகளை ஆசீர்வாதம் செய்யணும்."

கோடீசுவரன் சிலிர்த்துப் போனார். இருபத்திரண்டு வயதான ஒரு பெண்ணா இப்படிப் பேசுவது?

"நாளைக்கு அட்வகேட்டை வரச் சொல்லு, சாரதா."

"சரி, மாமா..."

"எதுக்குன்னு நீ கேட்கலையே?..."

"அது அதிகப்பிரசங்கித்தனம் இல்லையா மாமா?"

மறுநாள் அட்வகேட் ராகவாச்சாரி வந்தார். அவருடன் இரண்டு மணி நேரம் கோடீசுவரன் பேசினார்.

இதன் பிறகு ஒருநாள்—

"சாரதா இது உனக்கும்மா."

அவர் நீட்டிய உறையை சாரதா வாங்கிக் கொண்டாள்.

"உறையிலிருந்து காகிதத்தை எடுத்துப் பாரேன்."

"நீங்களே சொல்லுங்க மாமா."

"நான் ஏற்கெனவே உயில் எழுதி சாசனமும் செய்துட்டேன். சாரதா!... அம்மாவின் இருநூறு சவரன் நகைகள், வைர நெக்லஸ், தோடு எல்லாம் உனக்கும், வரப் போகிற மருமகள்களுக்கும், ஆனா இந்தப் பத்திரம் ஸ்பெஷல், உனக்கு மட்டும்..."

"சரி மாமா."

"என்னன்னு கூடக் கேட்கமாட்டியா?"

"நீங்க சொல்லாம இருப்பேளா?"

"இரும்பு-சிமெண்ட் கடையை விற்றதிலே எட்டு லட்சம் ரூபா கிடைச்சுதும்மா. அதைக் கொண்டு அப்படியே லாயிட்ஸ் ரோட்டில உள்ள ஒரு பங்களாவை வாங்கினேன். உன் பெயரில்."

"என் பெயரிலா? இது நாளைக்கு அநாவசிய சச்சரவுகளுக்கு இடம் கொடுக்காதா மாமா?..."

"வராது. ஏன்னா நான் உசிரோட இருக்கும்போதே உன் பெயரில் கிரயம் செய்தது. அதுவுமில்லாம சுந்துவும் நாதனும் தங்கக் கம்பிகள்..."

"இது சரின்னு படலை மாமா."

"நான் எது செய்தாலும் அது சரியாத்தான் இருக்கும், சாரதா! இதை பத்திரமா வைச்சுக்கோ."

சாரதா வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

✦✣✦

## 2

**1996 ஆம் ஆண்டு.**

ஜனவரி மாதம்.

முதல் வெள்ளிக் கிழமை.

அமெரிக்காவில் மூன்று ஆண்டு படித்து கம்ப்யூட்டரில் மேதாவி என்ற பெயருடன் சென்ற மாதம் திரும்பிய ராம்ஜி அம்மா சாரதாவிடம் வந்தான்.

"அம்மா!..."

"என்னடா கண்ணா?"

"நம்ம நாட்டிலே என் தகுதிக்கு எந்த வேலையும் இல்லை. சம்பளமும் இல்லை. அமெரிக்காவானால் மாசம் நாலாயிரம் டாலர் சம்பாதிப்பேன். கிட்டத்தட்ட லட்சத்து நாற்பதாயிரம் ரூபாய்."

"அப்போ மறுபடியும் என்னை விட்டுட்டுப் போகப் போறேன்னு சொல்லு, ராம்ஜி."

"அதான் இல்லை."

"அப்போ?"

"சொந்தமாத் தொழில் தொடங்கிறதுன்னு முடிவுக்கு வந்துட்டேன். பாங்குக்கு பிராஜக்ட் ரிபோர்ட்டும் கொடுத்தாச்சு."

"அப்படியா?..."

"ஆனா பாங்க் எனக்குத் தேவையானதைக் கடனாக் கொடுக்காதும்மா. மிஞ்சி மிஞ்சிப் போனா ஏழெட்டு லட்சம் தான் கிடைக்கும். அதற்கும் நான் ஏதாவது விலையுயர்ந்த சொத்தை காரண்ட்டியாகக் கொடுக்கணும்."

"எவ்வளவு தேவைப்படும்டா?..."

"இருபது இருபத்திரண்டு இருந்தா ஒரு மாதிரி ஒப்பேத்தலாம்."

"அப்பாவைக் கேளு."

"எல்லாம் கேட்டாச்சும்மா. கையை விரிச்சுட்டார்."

"ஏனாம்?..."

"பிஸினஸ்லேந்து அவ்வளவு பணம் புரட்ட முடியாதாம். இந்த பங்களா தாத்தா கட்டினதாம். மூணு பிள்ளைகளுக்கும் உரிமை இருக்காம்."

"அது உண்மைதான்டா. உன் சித்தப்பாக்கள் மும்பை, டெல்லின்னு காலை ஊணினாங்க. நிலம், தோப்பு எல்லாத்தையும் விற்றுப் பணமாக்கி மும்பை, டெல்லி வீடுகளிலே போட்டாச்சு. இந்த பங்களாவிலே இப்ப உரிமை கொண்டாடி வரலேன்னாலும் பாத்தியதை இருக்கறப்ப எதுவும் செய்ய முடியாதுடா, ராம்ஜி!"

"உனக்கு லாயிட்ஸ்ரோடு பங்களாவிலேர்ந்து மாசா மாசம் முப்பதாயிரம் வாடகையா வர்றது."

"அதிலிருந்து இதுநாள் வரை நான் எனக்குன்னு ஒரு ரவிக்கைத் துண்டுகூட வாங்கிண்டதில்லை."

"இப்போ உன் அகௌண்ட்ல எவ்வளவு இருக்கு?"

"எதுக்குக் கேட்கிறேடா?"

"சொல்லக் கூடாதாம்மா?"

"இந்த முப்பத்தாறு வருஷமா, கிடைக்கற வாடகை வரும்படி செலவுகள் போக- முப்பது லட்சம் இருக்கு. இது ஃபிக்ஸ்ட் டெபாசிட்ல. இது தவிர, இரண்டு, மூணு மாச வாடகை சேவிங்ஸ் பாங்க்ல இருக்கு."

"அப்போ நான் பாங்க்லே கடன் வாங்கத் தேவையில்லைன்னு சொல்லு."

"நான் ஏண்டா சொல்லணும்?"

"அம்மா, இந்த லாயிட்ஸ் ரோடு பங்களா உன்னுடையது. தாத்தா உன் பெயரில வாங்கினது. அப்பாவுக்குக் கூட இதிலே உரிமை இல்லை."

"அவருக்கே இல்லாதபோது உனக்கு எப்படிடா உரிமை வந்தது?..."

"நான் உரிமையிலே கேட்கலைம்மா, நான் உன் ஒரே புள்ளை, என் பேர்ல நீ பாச மழை பொழியறே?..."

"பாசமழை சீசன்னு பார்க்காம எல்லாத் தாயார்களிடமிருந்தும் பொழியும் படா. ஏழைத் தாயார், பணக்காரத் தாயார்ங்கற பேதம் ஏதுமில்லை, ராம்ஜி!"

"நான் என் தொழிலில் கொடி கட்டிப் பறக்க வேண்டாமா அம்மா?..."

"சந்தேமில்லாம."

"அப்போ நீ தான் உதவி செய்யணும்."

"வேளா வேளைக்கு சமைச்சுப் போடறேன். பிடிச்ச டிபன் செய்து தரேன். உன் துணிகளுக்கு இஸ்திரி போட்டு வைக்கிறேன்."

"என்னம்மா நீ? நான். ஏதோ கேட்கிறேன். நீ ஏதோ..."

"இந்தப் பணத்திலே நான் கை வைக்க மாட்டேண்டா."

"ரொம்ப சரி. உன் ஒரே புள்ளை அமெரிக்கா போறான்."

"பயமுறுத்தாதே. மூணு வருஷம் பிரிஞ்சு இருந்தே. இனிமேலும் இரு..."

"ஓர் அமெரிக்கப் பெண்ணையே காதலிச்சுக் கல்யாணம் செய்து கொள்வேன்."

"ஜமாய்! நானும் உன் அப்பாவும் வந்து உங்க இரண்டு பேரையும் ஆசீர்வாதம் செய்றோம். அவளுக்கு பட்டுப் புடைவை கட்டி, மஞ்சள் பூசி குங்குமம் இட்டு அழகு பார்க்கிறேன்."

"அவள் நீக்ரோ பெண்ணா இருப்பா."

"கறுப்புன்னா ஒரு தனி அழகும் கவர்ச்சியும் உண்டுடா, ராம்ஜி! அவள் நிறத்துக்கு ஏத்த கலர்ல புடைவை எடுத்துட்டாப் போச்சு."

"அம்மா!"

"கத்தாதேடா. உன் படிப்புக்காக உன் அப்பா எத்தனை லட்சம்

செலவு செய்திருக்கிறார் தெரியுமாடா?..."

"அதுக்காக..."

"உன்னைக் கடைசி வரை கொண்டு போக எங்க கையை எதிர்பார்க்கிறது உனக்கு அவமான மாப் படலையா?..."

"நீ சும்மா தர வேணாம் அம்மா! கடனாத் தான் கேட்கிறேன்."

"பாங்க்ல கேட்கற மாதிரி நானும் காரண்ட்டி கேட்டா?"

"நான் அமெரிக்கா போமிடறேன். அம்மா!"

"சும்மா சும்மா பூச்சி காட்டாதேடா. செய்யறவன் சொல்லிட்டிருக்க மாட்டான்."

"அப்போ உன்னால முடியாது. நீ உன் பெற்ற பிள்ளைக்கு உதவி செய்யமாட்டே."

"இப்ப முடியாது."

"அப்போ எப்ப முடியும்?"

"அதை இப்பச் சொல்ல மாட்டேன்."

"சே, நீயும் ஓர் அம்மாவா?"



## 3

"ஒரு சின்ன ஆசை!" என்றாள் சாரதா, கணவர் நாராயணனிடம்.

"சொல்லு."

"உங்க இரண்டு தம்பி பெண்டாட்டிகளும் போன்ல பேசறப்பவெல்லாம் ஒரு நடை வரப்படாதான்னு கெஞ்சறா..."

"அதுக்கு என்ன?..."

"நான் மும்பை, டெல்லி இரண்டுமே பார்த்ததில்லை."

"நான் எப்படி சாரதா எஸ் பிசினஸை அம்போன்னு விட்டுட்டு வர முடியும்?"

"நான் மட்டும் போறேனே."

"திவ்யமா. பிளேன் டிக்கட்டுக்கு ஏற்பாடு செய்யறேன்."

"ரயில்தான். அதுவும் செகண்ட் கிளாஸ் ஸ்லீப்பர். நாலு பேரோட பேசிண்டே போகலாம்."

"உன் இஷ்டம்."

பம்பாயில் டாக்டர் இராமநாதனுடைய மனைவி ராஜிக்குத் தலை கால் புரியவில்லை. "மன்னி, மன்னி" என்று ஆசார உபசாரம் செய்தாள். பெண் நர்மதா, "பெரியம்மா பெரியம்மா" என்று கட்டிக் கொண்டாள்.

நான்கு நாள்களுக்குப் பிறகு, "ராஜி! நீயும் என் கூட டெல்லி வரணும்னு ஏற்கெனவே சொல்லி

யிருந்தேன். என்னைக்குப் புறப்படலாம்?" என்று கேட்டாள்.

"நான் எதுக்கு மன்னி?"

"கமலி, நீ, நான் மூணு பேரும் ஒரு முக்கியமான விஷயம் பேசணும். உடனே பேசியாகணும்."

"அப்பமன்னா வரேன் மன்னி."

இருவரும் டெல்லி வந்தார்கள். இரண்டு ஓர்ப்படிகளும் ஒரே சமயத்தில் ஒன்றாக வந்ததில் சுந்தரேசனுடைய மனைவி கமலி வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தாள்.

இரண்டு நாள்கள் ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு, சாரதா அந்த முக்கிய விஷயத்தைப் பற்றிப் பேசத் தொடங்கினாள்.

"இதோ பாருங்க. மன்னி! லாயிட்ஸ் ரோடு பங்களாவை நம்ம மாமனார், அவர் உசிரோட இருக்கிறப்பவே உங்க பேர்ல இருந்த நல்ல எண்ணம் காரணமாக உங்களுக்கு வாங்கிக் கொடுத்தார். சொத்துகளையும் மூணு பிள்ளைகளுக்கு எழுதி வைத்தார். இப்ப என்ன பிரச்னை?" என்று கமலி கேட்டாள்.

"நான் இந்தக் குடும்பத்தில் மூத்த மருமகள். உங்க இரண்டு பேர்களிலே யாரு மூத்தவளா இருந்திருந்தாலும் நான் செய்ததைப் போலவே நீங்களும் மாமியார் மாமனாருக்குப் பணிவிடை செய்திருப்பீங்க. விடும் உங்க பேருக்கு அவர் வாங்கியிருப்பார். மாமியாரோட நகைகளை மூணு பங்காக வைச்சவர், ஏன் இந்த விட்டை எனக்கு மட்டும் வைச்சார்? என் கடமைக்கு அவர் தந்த பரிசு இது. சட்டப்படி உங்களுக்கு உரிமை இல்லாம இருக்கலாம். ஆனா தார்மிக அடிப்படையில் நம்ம மூணு பேருக்குமே சொந்தம்" என்றாள் சாரதா.

"இதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது" கமலி.

"நான் சம்மதிக்கவே மாட்டேன்' என்றாள் ராஜி.

"நீங்க சம்மதிச்சுத் தான் ஆகணும். மாமனார் சம்பாதிச்சு விட்டுட்டுப் போனது எல்லாருக்கும் சேர வேண்டியது" என்றாள் சாரதா.

"அது கரெக்ட். ஆனா இந்த வீட்டை அவர் விட்டுப் போகலையே? அதுக்கு முன்னாடியே உனக்குன்னு வாங்கித் தந்துட்டாரே?" என்றாள் ராஜி.

"இன்னைய தேதியிலிலே லாயிட்ஸ் ரோட்ல ஒரு கிரவுண்டு அம்பது லட்சம் ரூபா. நாலு கிரவுண்டு நிலமும் வீடும் இருக்கு. இரண்டு கோடிக்கு மேலான மதிப்பு."

"இருநூறு கோடியானாலும் எங்களுக்கு நீ பங்கு போட்டுத் தரக்கூடாது மன்னி."

"அப்ப இப்படிச் செய்யறேன்."

"எப்படி?.."

"கமலி! உனக்கு ஒரு பெண். ஒரு பிள்ளை. ராஜிக்கு ஒரே பெண். எனக்கு ராம்ஜி மட்டுந்தான். பழைய விட்டை இடிச்சு நாலு கிரவுண்டு நிலத்தில பத்து அல்லது பன்னிரண்டு ஃப்ளாட் கட்டுவோம். ஒவ்வொரு குடும்பத்துக்கும் நாலு..."

"முடியாது, மன்னி."

"கூடாது மன்னி. மாமனார் அன்பும் அபிமானமுமா வாங்கித் தந்த பங்களா, இடிக்கக் கூடாது."

"இது நாள் வரை வாடகைப் பணமா, முப்பது லட்சத்துக்கு மேலே சேர்ந்திருக்கு. ஒரு பைசா கூட நான் எனக்குன்னு செலவு செய்ததில்லை. இந்தப் பணத்திலிருந்து நாம ஆளுக்கு பத்து லட்சம்..."

கமலி குறுக்கிட்டாள்.

"சுத்திச் சுத்தி நீங்க எங்களுக்கு பங்கு கொடுக்கறதிலேயே பிடிவாதமா இருக்கீங்க, மன்னி."

"அதானே?" ராஜி.

"கடைசியா ஒரே ஒரு வழிதான் தெரியறது" என்றாள் சாரதா.

"என்ன அது?"

"நான் ஊருக்குப் போய் விவரமா எழுதறேன்."

"எங்களுக்கும் எந்த வழியிலாவது பங்கு கொடுத்தே தீரணும்னு நீங்க நினைக்கிறதானா, இது பத்தி லெட்டரே எழுத வேண்டாம், மன்னி" என்றாள் கமலி.

✦ ✣ ✦

## 4

அம்மா ஊரில் இல்லாத பத்து நாள்களில் ராம்ஜி பொறுமையின் எல்லையைக் கடந்திருந்தான். அவள் திரும்பியதும் ஆத்திரத்தைக் கொட்டினான்.



"பெத்த பிள்ளையின் கஷ்டம்கூடத் தெரியாமல் நீ மும்பை, டெல்லின்னு உறவு கொண்டாடப் போயிட்டே. எனக்கு ஒரு முடிவான பதில் வேணும், அம்மா!"

"பதில்தானே? தரேன். ஆனா அதுக்கு முன்னாடி ஒன்று இரண்டு கேள்விகளுக்கு பதில் சொல்லு."

"கேளு."

"அமெரிக்காவிலே கிடைக்கிற சம்பளம் இங்கே உனக்குக் கிடைக்கா துன்னு சொன்னே. நம்ப இந்தியா வானால் உனக்கு அதிக பட்சமா எவ்வளவு கிடைக்கும்?"

"முட்டி முட்டிப் போனா இந்த மெட்ராஸிலே இருபதாயிரம்; மும்பைன்னா முப்பதாயிரம் கூட வரலாம். ஏன் கேட்கறே?"

"அமெரிக்காவானால் பாதிக்கு மேல் வீடு, கார், டிரஸ் சாப்பாடுன்னு செலவாயிடும் இல்லையா?..."

"ஆமாம்."

"நீ தொடங்கணும்ன்னு ஆசைப் படற கம்ப்யூட்டர் கம்பெனிக்கு எத்தனை ரூபாய் மூலதனமா தேவைப்படும், ராம்ஜி?"

"குறைஞ்சது இருபது, இருபத் திரண்டு லட்சம்."

"வருஷத்துக்கு நிகர லாபம் எவ்வளவு வரக்கூடும்?"

"முதல் வருஷம் இரண்டு இல்லாமல் போனா மூணு. அப்புறம் நிச்சயமா ஏறிட்டே போகும். பெங் களூர், கோயமுத்தூர், ஹைதராபாத், கொச்சின்னு பல ஊர்களுக்குப் போய் பல கம்பெனிகளோட தொடர்பு வைச்சுக்கணும். எப்படி யும் இரண்டு மூணு வருஷத்தில் ஓகோன்னு வளர்ந்துடும். ஆமாம் இதெல்லாம் ஏன் திடீர்னு கேட்கிறே' அம்மா!"

"நீ தொடங்குகிற கம்பெனியோட பேரு, 'கோடீஸ்வரன் ஸாஃப்ட் வேர்ஸ்'னு இருக்கணும். அதை இதே பெயரில உருவாகப் போற அறக் கட்டளை நடத்தும். நான், உன் சித்திகள் ராஜி, கமலி மூணு பேரும் டிரஸ்டிகள். நான்தான் மானேஜிங் டைரக்டராகவும் இருப்பேன். நீ ஜாயின்ட் மானேஜிங் டைரக்டர். சம்பளம்னு எதுவுமில்லை. வருஷ லாபத்திலே ஐம்பது சதவீதம், அல்லது அதிகப்படி ஐந்து லட்சம் உனக்கு. மீதி அறக்கட்டளை- நல்ல காரியங்களுக்காக - முதியோருக்கு- ஏழைகளுக்கு தர்மஸ்தாபனங் களுக்குன்னெல்லாம் கொடுக்கும்.' என்ன சொல்றே, ராம்ஜி!" என்றாள் சாரதா.

"புரியறதும்மா. நான் தொழி லைத் தொடங்கலாம். ஆனா அது உன் மேற்பார்வையிலும் அதிகாரத் திலும் இருக்கும். தாத்தாவின் பெயரும் என்றைக்கும் உசிரோடு இருக்கும்."

"கடைசியா சொன்னாயே அது தான் என் நோக்கம், ராம்ஜி! நீ உடனடியா வேலைகளைத் தொடங் கலாம். இப்பவே இருபது லட்சம் தரேன்."

"சரிம்மா... ஆனா கோடீசு வரன்னு பெயர் கர்நாடகமாப் படறது."

"உன் பெயர் என்ன, ராம்ஜி! அது ஸ்கூல்ல சேர்ந்தப்ப கொடுத்த பெயர். உன் நாமகரணத்தின் போது என்ன பெயர் எழுதினாங்க தெரியுமாடா? கோடீசுவரன்!"

"சரிம்மா!"

அன்றே ராஜி, கமலி இரு வருக்கும் விஷயத்தை டெலிபோனில் கூறினாள், சாரதா.

இருவருமே பாராட்டினார்கள். சாரதாவின் மனத்திலும் திருப்தி பிறந்தது. ●



## விடியலைக் காண்போம்!

வடிவத்தில் வார்த்தைகளில் வேத நாலின்
வசனத்தில் கடவுள்களைத் தேடித் தேடி
முடிவற்ற குழப்பத்தில் இன்றும் கூட
மூழ்கித்தான் கிடக்கின்றோம்; ஆனால் அந்த
முடிவற்ற பரம்பொருளை, பிரபஞ் சத்தில்
மூலமெனப் பொதுவாகக் கொள்ளும் ஆன்ம
முடிவுக்கு வந்தவர்க்குச் சாதி இல்லை
மதமில்லை மதபேத மோதல் இல்லை!

தன்னைப்போல் மற்றவரைத் தனதுள் ளத்தில்
தானென்னி நேசிக்கும் நெஞ்சு வேண்டும்
பொன்தேடி, பொருள்தேடி எவரும் மண்ணில்
பேரின்பம் கண்டவர்கள் இல்லை; ஆனால்
அன்புக்குள் காண்கின்ற இன்பம் மட்டும்
என்றைக்கும் பிழையின்றி நிலைத்தே நிற்கும்.
துன்பங்கள் கலவாத தூய அன்புத்
துலக்கத்தில் மனித நேய மார்க்கம் காண்போம்!

ஒற்றுமையை, ஒழுக்கத்தை மனித நேய
ஒப்புரவை, பொய்கலவாப் பேச்சை – மூச்சு
இற்றுவிழும் என்கின்ற நிலையில் கூட
இலட்சியத்தை, கொள்கைகளை, தன்மா னத்தை
விற்றுவிடாப் பண்பாடு மக்க ளுக்குள்
வேரூன்றி விழுதூன்ற வேண்டும் – கல்வி
கற்றுத்தலை நிமிருவதால் மட்டும் இந்தக்
கட்டமைப்பை ஒருநாட்டில் காணல் கூடும்!

**சி. உதியன்**





## புதிய சித்தன் பாட்டு

புத்தன் இயேசுவும் நபிகள் காந்தியும்
போதித்த தென்ன என் தோழா?
சித்தம் தெளிந்திடும் அன்பு மார்க்கமே
நித்திய பூரணம் என்தோழா!

கெடுவதும் நிலைப்பதும் பிறராலன்று
தொடுப்பது யாவும் உன் நாக்கே!
உடலை வளர்த்திடு! உயிரை ஓம்பிடு!
உள்ளமும் வெளுத்திடும் என் தோழா!

மலர்களும் காய்கனி யாகிய பின்னே
மரத்தினில் மீண்டும் புகுவதில்லை!
உலகினில் வழிவழி இயற்கையின் நீதி
உருண்டிடும் சக்கரம் இது தோழா!

ஆத்திகம் என்பதும் நாத்திகம் என்பதும்
அவரவர் வழிகள் என்தோழா!
ஆத்திரம் இதில்ஏன்? அவை ஒன்றாகும்
சூத்திரம் படைப்போம் என் தோழா!

உண்மை கண்டிடு! அன்பு கொண்டிடு!
கண்கள் திறந்திடு என் தோழா!
தூய மானுடம் ஓங்கி வளர்ந்திட
தொண்டு புரிந்திடு என் தோழா!

**கருமலைப்பழம் நீ**

## துளி துளியாய்...

'துளி துளியாய் பெய்தூறல்
மாமழையாய் மாறும் - நீண்ட
தொலைதூரம் ஓடுகின்ற
மாநதியாய் நீளும்!
களிப்புடனே புவிகாக்கும்
நீர்நிலையாய்த் தேங்கும்! - எந்தக்
காலமுமே வறுமைவரா
உறுதுணையாய்த் தாங்கும்!

சிறுதொகையாய்ச் சேர்ப்பதுவே
சேமித்த லாகும் - அந்தச்
சேமிப்பால் தொழிலோங்கி
உற்பத்தி கூடும்!
பொறுப்புடனே சேமித்தால்
தேசவளம் கூடும்! - நாடும்
பொழுதினிலே துணைபுரிய
பெருநிதியாய்ச் சேரும்!

ஆதலினால் நாம்இன்றே
சேமிக்க வேண்டும்! - வீண்
ஆசைமிகு செலவினங்கள்
நீக்கிடவே வேண்டும்
சாதனைகள் பலபுரிய
முயன்றிடவே வேண்டும் - நாளை
சரித்திரத்தில் புகழ்பதிய
உழைத்திடவே வேண்டும்!

**இமயபாரதி**



# அறிவியல் தமிழ் உதயம் "பாடமொழியாகத் தமிழ்"

டாக்டர் கி.வேங்கட சுப்பிரமணியன்

முன்னுரை :

அமெரிக்கா, ரஷ்யா, ஜப்பான், ஜெர்மனி போன்ற வளர்ந்த நாடுகளில் எல்லாம் ஒன்றாவது வகுப்பு முதல் கல்லூரிக் கல்வி வரையில் தாய்மொழி மட்டுமே ஒரே பயிற்சி மொழியாக உள்ளது.

அண்மையில், நான் நோபல் பரிசு பெற்ற ஒரு பேரறிஞரைச் சந்தித்தேன். மாஸ்கோ நகரில், அவருக்கு ஆங்கிலம் தெரியவே இல்லை. ஒரு வார்த்தைகூட அவருக்குப் பரிச்சயமில்லை.

தாய்மொழிக் கல்வியால் முன்னேற்றம்:

சமீப ஆண்டுகளில் வடநாட்டுப் பல்கலைக்கழக மாணவர்கள் தமிழகம், ஆந்திரா போன்ற மாநில மாணவர்களைவிட, இந்திய அரசு நடத்தும், ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்ற தேர்வுகளில் அதிக விழுக்காட்டில் வெற்றி பெறுகிறார்கள் என்ற உண்மை அறியப்பட்டிருக்கிறது. அதற்குரிய முக்கியக் காரணங்களில் ஒன்று, அவர்கள் தங்களுடைய தாய்மொழி வழி, இந்தி வழி கல்வி கற்பதாகும். தாய்மொழியிலேயே கல்லூரிப் பட்டப் படிப்பு வரையிலும் இவர்கள் பாடங்களில் உட்பொருளைக் கிரகிக்கிறார்கள்.



மொழிப் பயிற்சி என்ற பொருள் குறித்து, நான் நீண்ட காலமாக ஆராய்ச்சி செய்து வருகின்றேன். ஆராய்ச்சி விளைவுகளை விழிப்புடன் கவனித்துப் பார்த்து வருகிறேன். மருத்துவக் கல்லூரிகளிலும் பொறியியல் கல்லூரிகளிலும் கூடி தாய்மொழி வழிக் கல்வி கற்ற மாணவர்களே சிறந்து விளங்குகின்றனர். அவர்கள் சிறிது கூடுதலான காலத்தை எடுத்துக் கொண்டாலும், உறுதியாகச் சிறப்படைகின்றனர். இதன் ரகசியம் அவர்கள் தாய்மொழி மூலம் படிக்கும்போது நன்கு புரிந்து கொள்கிறார்கள் என்பதே. உதாரணமாக, ஒரு பெரிய பால்காரக் குடும்பத்துப் பையனை எடுத்துக் கொள்வோம். அவர்கள் வீட்டில் இருபது பசுக்கள் இருக்கின்றன. காலமெல்லாம் பசுவுடனும், பாலுடனும் பழகி வருகிறான், இப்பையன். இவனை ஆங்கிலத்தில் பசுவைப் பற்றி எழுதச் சொன்னால் 'The Cow' என்று தொடங்கி மேலே நகர முடியாமல் திணறுகிறான். ஏனென்றால், இது ஆங்கிலப் பசு. தமிழ்ப் பசுவைக் கொண்டு வந்தால் ஒரு காவியமே எழுதிவிடுவான் இவன்.

இன்னும், சில சந்தேகப் பிராணிகள் நம்மிடையே இருக்கின்றனர். அவர்கள் 'தாய்மொழியினால் முடியுமா' என்று வினவுகிறார்கள். இப்படிக் கேட்பதை அறிவீனம் எனலாம். பயிற்சி கொடுத்தால் - பயன்படுத்தத் தொடங்கினால் - எந்த மொழியும் தகுதியைப் பெற முடியும். நாகரிக முதிர்ச்சியற்ற (திருந்தாத) சமுதாயங்கள் உள்ளனவே தவிர, திருந்தாத மொழிகள் என்பவை இல்லை. மனிதத் தொடர்பைப் பயன்படுத்துவதற்கு, வேண்டிய எல்லாத் தேவையான அமைப்புகளையும், ஏறக்குறைய எல்லா மொழிகளும் பெற்றுள்ளன. பயன்படுத்தத் தொடங்கி முறையாக வளர்க்கப்படுமானால், நம் தமிழும், நம் தெலுங்கும், நம் மலையாளமும், நம் கன்னடமும் தகுதியில் ஜப்பானிய மொழியை

யும், ரஷ்ய மொழியையும், வெற்றி கொள்ளும் என்னும் நம்பிக்கை எனக்குண்டு. அதுவும் உயர் தனிச் செம்மொழியாகிய நம் தீந்தமிழ் முதன்மை பெற்று விளங்கும் என்பது திண்ணம்.

மொழி என்பது கருத்துகளை ஏற்றிச் செல்லும் வாகனம் மட்டுமன்று; மொழியைப் பேசுகின்றவர் களுடைய சமூகம், உணர்ச்சி, அறிவு ஆகியவற்றுடன் ஒன்றிய பண்பாட்டுக் கலவையாகும் அது. மொழிப் பயன்பாடும், மொழி வளர்ச்சியும் ஒன்றை ஒன்று சார்ந்தே உள்ளன; ஒன்றை ஒன்று, தொடருவதோ முந்துவதோ இல்லை. பயன்பாடு திருந்துகின்ற அளவைப் பொறுத்து, ஒரு மொழி நல்ல மொழியாகவோ, கெட்ட மொழி யாகவோ இருக்கிறது. அளவான கல்வி முன்னேற்றத் திற்கு மொழி வளர்ச்சி மையமாகும். இதை அறியாமல் நாம் புகுத்தும் கல்வி முறைகள் விளைவுகளை உண்டாக்கு வதேயில்லை. பொருளியல், பண்பாடு, அரசியல் வளர்ச்சிக்குக் கல்வி வளர்ச்சி ஊன்றுகோல். அதுவும் மொழிக்கல்வி வளர்ச்சி அச்சாணி. தேசிய வளர்ச்சிக்கு மொழி வளர்ச்சியும் துணையாகின்றது. அந்நிய மொழியை மட்டும் பயிற்று மொழியாகக் கொண்டு தொழில் துறையில் முன்னேறிய நாடு என்று உலகத்தில் எந்த நாடும் இல்லை. பேராசிரியர் வோகல் ''ஏன் ஜப்பான் முதலில் உள்ளது?'' என்னும் புகழ்மிக்க நூலில், ஜப்பானின் வெற்றிக்குரிய காரணங்களில் பிரதான மானது 'ஜப்பானில் தொடக்கம் முதல் எல்லா நிலை களிலும் கொடுக்கப்படும் தாய்மொழி வழிக்கல்வியே'' என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

இத்தகைய காரணங்களுக்குத்தான் பாரதியார் நம் நாட்டின் தேசியக் கல்வியில் எல்லா நிலைகளிலும் தமிழே பயன்படுத்தப்பட வேண்டும் என்று வலியுறுத்தினார். அந்த உணர்ச்சிமிக்க தேசியக் கவிஞர் புதுச்சேரியிலிருந்து கனல் குரல் கொடுத்தார். பாரதி வாக்கைப் பார்ப்போம்.

தமிழ்நாட்டில் தேசியக்கல்வி நடைபெற வேண்டுமாயின் அதற்கு ''அகர முதல் னகரப் புள்ளி இறுதியாக'' எல்லா விவரங்களும் தமிழ் பாஷையில் நடத்தவேண்டும் என்பது பொருள். ஆரம்ப விளம்பரம், தமிழில் பிரசுரம் செய்யவேண்டும். பாடசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டால், அங்கு நூல்கள் எல்லாம் தமிழ்மொழி வாயிலாகக் கற்பிக்கப்படுவதுமின்றிப் பலகை, குச்சி எல்லாவற்றிற்கும், தமிழிலேயே பெயர் சொல்ல வேண்டும்.

''தமிழ்நாட்டில் தேசியக் கல்வி என்பதாக ஒன்று தொடங்கி அதில் தமிழ் பாஷையும், பிரதானமாக நாட்டாமல் பெரும்பான்மைக் கல்வி இங்கிலீஷ் மூல மாகவும், தமிழ் ஒருவித உபபாஷையாகவும், ஏற்படுத்தினால், அது தேசியம் என்ற பதத்தின் பொருளுக்கு முழுதும் விரோதமாக முடியும் என்பதில் ஐயமில்லை. இந்த முயற்சிக்கு தமிழ் பாஷையே முதற்கருவியாக ஏற்படுத்தப்படும் என்பதைத் தம்பட்டம் அறிவிக்க வேண்டும்'' பாரதி. - (பாரதி வசனம்)

தற்காலத்தில் மேல்நாட்டு மொழியியல் அறிஞர்களும் பாடமொழி குறித்து, இதே கருத்தை வலியுறுத்துகின்றனர்.

அறிவியலும், தமிழும்:

விஞ்ஞானத்திலும், தொழில் நுட்பத்திலும் முன்னேற்றமடைந்த எல்லா நாடுகளின் கல்வி நிறுவனங்களிலும், ஆய்வு மையங்களிலும் எல்லா நடவடிக்கைகளும், கண்டு பிடிப்புகளும் அவர்களுடைய தாய்மொழியிலேயே வெளியிடப்படுகின்றன. ஆனால் நம்முடைய நாட்டில், நம் விஞ்ஞானிகளின் கண்டு பிடிப்புகளெல்லாம் ஆங்கிலத்தில் மட்டுமே வெளி யாகின்றன. அதன் விளைவாக நம்முடைய தாய்மொழி நம்மைவிட ஏழையாக உள்ளது. நமது மக்களுக்கு அறிவியல் மனப்பான்மையும் வளரவில்லை. ஏதோ பழம்பெருமைகளைப் பேசிப் பேசி நாம் காலத்தைக் கழித்துக் கொண்டு வருகிறோம்.

தற்காலத்தில் அறிவு வளர்ச்சியில் வேகம் முன்பு எப்போதும் இருந்ததை விடப், பன்மடங்காகியுள்ளது.

ஏழாண்டுகளுக்கு ஒரு முறை அறிவுப் பெருக்கம் உண்டாகின்றது என்று ஆய்வியல் நிலை நிறுத்துகின்றது.

பத்திரிகை, வானொலி, தொலைக்காட்சி, ஒலி மற்றும் ஒளிநாடா போன்ற பல புதிய சாதனங்கள் செய்தியை வேகமாகப் பரப்புகின்றன.

பெரும்பான்மையான மக்களின் மனத்தை ஒரு மாயை மறைத்துள்ளது. அறிவியல் கருத்துகளை ஆங் கிலத்தின் மூலம் மட்டுமே பெற முடியும் என்னும், தவறான கொள்கையை நாம் நீக்கியாக வேண்டும். தொழில்துறை உட்பட எல்லாப் பாடங்களிலும் தாய் மொழியைப் பயிற்று மொழியாக்கும் திட்டத்தை நம்பிக்கையோடு நாம் விரிவுபடுத்தலாம். 1932-ஆம் ஆண்டிலே பாதிரியார் ஒருவர் 'பூமி சாஸ்திரம்' என்னும் பெயரில் பூகோள நூலினையும், இலங்கையைச் சேர்ந்த அறிஞர் ஒருவர் 'பாதாதிகேச இயல்' என்னும் பெயரில் எலும்பு நூலினையும் தமிழில் எழுதியுள்ளார் என்பதை நினைவில் கொள்ளவேண்டும். நாற்பது ஆண்டுகட்கு முன்பு வித்வான் இ.மு.சுப்பிரமணிய பிள்ளை என்னும் பெருந்தமிழ்த் தொண்டர் ஆட்சிமொழிக் குழுவொன்றை அமைத்து ''தமிழால் முடியும்'' என்ற கருத்தை நிறுவினார். அக்குழுவில் நானும் ஓர் உறுப்பினன்.

தமிழுக்கான எனது வலுவான முறையீட்டை, ஆங்கில ஒழிப்புக்கான குரல் என்று தவறாகக் கொள்ளக் கூடாது, ஒரு போதும் இல்லை. ஆங்கிலத்தை நாம் விடுவது நவீன அறிவுச் சாளரங்களை மூடிவிடுவது போன்றது. ஆங்கில அறிவு தேவை. ஆனால், ஆங்கிலம் பயிற்றுமொழியாக இருக்கத் தேவையில்லை. எனவே, ஆங்கிலத்தை நாம் கட்டாயம் கற்கவேண்டும். ஆனால் பாடமொழியாகத் தாய்மொழி மட்டுமே இருக்க வேண்டும். (No English medium - English language only)

கலைச் சொல் ஆக்கம் :

அறிவியலையும் தமிழையும் திரும்ப நோக்குவோம். தமிழில் அறிவியல் கலைச் சொற்களை உருவாக்குவதில் தேவையற்ற சர்ச்சைகள் உள்ளன. ஆங்கிலச்

சொற்களையோ, பிறமொழிச் சொற்களையோ கடன் வாங்கக் கூடாது எனத் தூய்மைவாதிகள் கோருகின்றனர். இந்தக் கடுமையான மனநிலை நமக்கு எந்தவிதத்திலும், பயனளிப்பதில்லை. பல்வேறு அறிவியல் பாட நூல்களைத் தயாரித்து, வெளியிடும் பொறுப்பை, பல அறிஞர்கள் சேர்ந்து உருவாக்க வேண்டும். பலதுறை அறிஞர் பெருமக்களும் சேர்ந்து, செய்ய வேண்டிய கூட்டு முயற்சியாகும் இது. பொறியியலார், மருத்துவர், வழக்கறிஞர், அறிஞர், விஞ்ஞானிகள் ஆகிய எல்லாரும் உருவாக்க வேண்டும். அறிவியல் துறைகளான கணிதம், வேதியியல், இயற்பியல் போன்றவற்றில் சமன்பாடு களும், குறியீடுகளும் மிகுதியாக இருக்கும். உலகம் முழுவதும் அவை உணரப்படுவதால் அவற்றை நாம் சிதைக்கக் கூடாது. அவற்றை உள்ளவாறே ஏற்றுக் கொள்ளவேண்டும். வகுப்பறைகளில் இவற்றுக்கான விளக்கங்களைத் தமிழில் தரலாம். கணித இயலில் உள்ள எல்லாக் குறியீடுகளையும் அப்படியே வைத்துக் கொள்ளலாம். ஏனெனில் அவை அறிவு உலகத்திற்குச் சொந்தமான பொதுச் சொத்துகளாகும்.

எல்லாக் கணிதவியல் வாய்பாடுகளையும் அவற்றின் வடிவத்திலேயே எழுத வேண்டும். உதாரணமாக, வட்டத்தின் பரப்பளவுக்குரிய வாய்பாடு, வட்டத்தின் சுற்றளவு, வேதியியலிலுள்ள $KMNO_4$ ; $H_2O$; $CO_2$ போன்ற குறியீடுகளை மொழி பெயர்க்கவோ, மாற்றவோ, முனைதல் கூடாது. ஒவ்வொரு குறியீட்டுக்குரிய விளக்கத்தைத் தமிழில் தரவேண்டும். இதைப் போலவே கண்டுபிடிப்பாளரின் பெயரிலுள்ள பொருள்களின் பெயர்களையும், மாற்றவோ, மொழி பெயர்க்கவோ செய்வது பயனற்ற வீண் வேலையாகும். ஷேக்ஸ்பியர் என எழுதலாம். ஆனால் செகப்பிரியர் என் எழுதுதல் இம்மகாகவிக்கு நாம் செய்யும் துரோகமாகும்.

அறிவியல் கலைச் சொற்களைத் தமிழில் மொழி பெயர்க்கும்போது ஏற்கெனவே, எழுத்து வழக்கிலும், பேச்சு வழக்கிலும் உள்ள சொற்களையே பெரும் பான்மையும் பயன்படுத்த வேண்டும். அண்டம், அண்டவெளி, அணு, எரிகொள்ளி, வளி போன்ற சொற்கள் ஏற்கெனவே வழக்கிலுள்ளன. இப்படிப்பட்ட சொற்களின் களஞ்சியமாக நம்முடைய நிகண்டுகள் காணப்படுகின்றன. அவை மிகுதியும் நமக்குப் பயன் படும். மருத்துவ இயலிலும், நோய்க்கான பல சொற்கள் - தட்டம்மை, மணல்வாரி, சிச்சிலுப்பை, சன்னி, குட்டம் - வழங்கப்படுகின்றன. இவற்றைப் பயன்படுத்துவதில், எந்தத் தவறும் இல்லை. இதைப் போலவே சித்தர் பாடல்களில் உள்ள பல்வேறு சொற்களையும், பயன் படுத்திக் கொள்ளலாம். கட்டடக் கலை, சிற்பக் கலைத் துறைகளிலும், நூற்றுக் கணக்கான கலைச் சொற்கள் உள்ளன. ஏனெனில், இந்தக் கலைகள் பழங்காலந் தொட்டுத் தமிழகத்தில் ஆதரிக்கப் பெற்றுப் பாதுகாக்கப் பட்டு வந்துள்ளன.

நாம் புதிய கலைச் சொற்களைப் படைக்கும்போது, தமிழிலக்கணத்திலுள்ள விதிமுறைகளைப் பயன் படுத்தலாம். உதாரணமாக 'அம்' என்னும் சாரியை நமக்கு உதவலாம்.

எ-டு:

| | | |
|---|---|---|
| வளி | ..... | வளியம் |
| எரி | ..... | எரியம் |
| தனி | ..... | தனிமம் |

'ஆன்' விகுதியும், புதிய சொல்லாக்கத்தில் உதவியாக இருக்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| கணி | ..... | கணிப்பு | ..... | கணிப்பான் |
| அடை | ..... | அடைப்பு | ..... | அடைப்பான் |

தமிழில் பின்னொட்டைப் பயன்படுத்துகின்றோம். அதைப் போலவே முன்னொட்டைப் பயன்படுத்தவும் முயலுகின்றோம்.

எ-டு:

| | | |
|---|---|---|
| காந்தம் | ..... | மின்காந்தம் |
| கடத்தி | ..... | மினகடத்தி |
| அணு | ..... | மின்அணு |
| வேகம் | ..... | திசைவேகம் |
| உண்ணி | ..... | ஒட்டுண்ணி |

மேல்காட்டு மொழிகளில் சில சொற்களில் முதலெழுத்துகளையெல்லாம், ஒன்று சேர்த்துச் சில புதிய சொற்களைப் படைக்கின்றார்கள். தமிழில், அவற்றை அப்படியே மொழி மாற்றம் செய்து கொள்வதோடு அடைப்புக் குறிகளுக்குள் ஆங்கிலச் சொற்களை எழுதலாம்.

| | | |
|---|---|---|
| RADAR | ..... | ராடார் |
| VIBGYOR | ..... | விப்ஜியார் |
| NASA | ..... | நாசா |
| AIDS | ..... | எய்ட்ஸ் |

தமிழில் ஆங்கில அறிவியல் நூல்களை மொழி பெயர்ப்புச் செய்வதோடு, (அப்பொருளைப் பற்றிய) மூல நூல்களையும் தமிழில் எழுதத் தொடங்க வேண்டும். இப்படிப்பட்ட திட்டங்களை நம் பல்கலைக்கழகத்தில் பணியாற்றும், அறிவியல் ஆசிரியர்கள் ஏற்றுக்கொள்ள முன்வரவேண்டும். அவர்கள் ஆங்கிலத்தில், முதலில் சிந்தித்து, பிறகு, அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்தல் கூடாது.

இலங்கையில் மருத்துவம், பொறியியல் படிப்பிற் குரிய பாட நூல்கள் ஏற்கெனவே தமிழில் வெளி வந்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

பிற்போக்குத்தனமான, பிடிவாதத்துடன் கூடிய சில தமிழ் உணர்ச்சியாளர்களுக்காகத் தமிழில் புதிய அறிவியல் கலைச் சொற்களை உருவாக்குவது தடைப்படக் கூடாது. வழக்கத்திற்கு வந்துவிட்ட சில ஆங்கில, சம்ஸ்கிருதச் சொற்களை மொழிமாற்றம் செய்து கொள்வதை எதிர்ப்பதில், பொருளில்லை. தமிழ்த் தன்மைக்கு இடையூறு ஏற்படாத வகையில் சம்ஸ்கிருதச் சொற்களைத்

தமிழில் ஏற்றுக் கொள்வதற்கு தொல்காப்பியர், பவணந்தி முனிவர் போன்றவர்களே விதி செய்துள்ளனர். இந்த இரண்டு இலக்கண ஆசிரியர்கள் காலத்தில் மொழிக்கு முதலில் வருவதை ஏற்றுக் கொண்டுள்ளோம். அவை சங்கு, யவனர், டம்பம், மகிர், ரப்பர் போன்றவை. இந்த மரபு மீறல் நமக்குப் பயன்பல தருமானால், அதை ஏன் நாம் தள்ளவேண்டும்?

நான் சங்கரன் கோவிலில் படித்தபோது, தமிழ் அறிஞர் வித்வான் ஈ.எம்.சுப்பிரமணிய பிள்ளை அவர்களிடம், தமிழ் படித்தேன். பல செயல்களுக்கு இவர் முன்னோடி யாயிருந்தார். முன்பே சொன்னபடி, முதல் தமிழ் ஆட்சிச் சொற்களை உருவாக்கும் குழுவை அமைத்தவர் இவர்தான். இது ஒரு முன்னோடி முயற்சியாகும். அந்தக் குழுவின் நியமான உறுப்பினர்களில் நானும் ஒருவனாயிருந்தேன். அந்தக் குழு தயாரித்தளித்த பல சொற்கள் இன்று ஏற்றுக் கொள்ளப்பட்டு பலருக்கும், அறிவிக்கப்பட்டுள்ளதைக் காணுந்தோறும், மகிழ்ச்சி ஏற்படுகிறது.

கலெக்டர் என்னும் சொல், கிராமத்திலுள்ள படிக்காத பாமரப் பெண்ணுக்கும், தெரிந்த சொல்லாயிருப்பதால், இதைத் தமிழிலும், கலெக்டர் என்றே வைத்துக் கொள்ளலாம். அதற்குப் பதிலாக எவருக்கும் புரியாத, குழப்பத்தைத் தரக்கூடிய, தண்டல் நாயகர் என்னும் சொல்லைத் தவிர்க்கலாம். தங்களுடைய மொழியில்லாத சில சம்ஸ்கிருத ஒலிகளுக்குத் தமிழர்கள் கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்தினர். சிறந்த தமிழ்ப் பற்றாளர்களான நம்முடைய மன்னர்களுடையவும் முடியுடை மூவேந்தர்களுடையவும், கல்வெட்டுகளில் ஜ, ஸ, ஷ, ஹ போன்ற கிரந்த எழுத்துகளைக் காண்கிறோம். எந்த விருப்பு வெறுப்புமில்லாமல், சில அறிவியல் கலைச் சொற்களைக் குறிப்பிடுவதற்கு இந்த எழுத்துகள் தேவைப்படுகின்றன. தமிழர்களாலேயே அறிமுகப் படுத்தப்பட்டதாக நம்பப்பெறும் இந்தக் கிரந்த எழுத்துகளைத் தமிழில் பயன்படுத்துவதை, நாம் ஏன் தடை செய்யவேண்டும்?

வரிவடிவ மாற்றம்:-

தட்டச்சு, சுருக்கெழுத்து, தொலையெழுதி, தந்தி போன்றவற்றிலும், இன்றைய கணிப்பானிலும், தமிழ் எழுத்துகளைப் பெருவாரியாகப் பயன்படுத்த வேண்டுமெனில், சில குறிப்பிடத் தகுந்த மாற்றங்கள் இன்றியமையாதவை. ஐ.ஔ.ங.ஞ., போன்ற எழுத்துகள் சில சிக்கல்களையுடையவை. இவை போன்ற தமிழ்ச் சொற்களில் அதிகம் பயிலாத எழுத்துகளையும், தேவையின்றிப் பயில வேண்டியுள்ளது. இப்போது நடைமுறையிலுள்ள - தந்தை பெரியார்கூறிய - சீர்திருத்த எழுத்து வடிவம்கூட இன்னும், மேம்படுத்தப்பெற வேண்டும்.

அண்ணா பல்கலைக் கழகமும், இந்துஸ்தான் தொலையெழுதி நிலையமும், இணைந்து, கூட்டு முயற்சியில் கணிப்பானுக்காக தமிழ் வடிவை முயற்சியில் கணிப்பானுக்கான தமிழ் வடிவை வெளிக் கொணர்ந்துள்ளன. இ.ஈ.உ.ஊ. போன்ற எழுத்து வடிவங்களில் போதிய மாற்றங்களைக் கொணர்ந்துள்ள முறைமை ஏற்கக் கூடியதாக உள்ளது.

பல நூற்றாண்டுகளாகத் தமிழின் எழுத்துமுறை வெளிப்பாட்டிற்கு, உரியதாய் அமைந்தமை பற்றி விவாதிக்கின்றனர், சிலர். தொல்காப்பியர் சில எழுத்துகளுக்கு மட்டுமே வடிவு கூறுகிறார். பிறவற்றைப் பிராமி எழுத்து முறைகளிலிருந்தே பெற்றிருக்கிறோம். இவை யாவும், பல்லவர் காலத்தில் உறுதி பெற்று நிறுவப்பட்டன. அதன் பிறகு சோழர் காலத்தில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. செப்பேடுகளிலும், பனை யோலைச் சுவடிகளிலும், ஏற்கத்தக்க சில மாற்றங்கள் உருவாயின. அச்சுக்கூடங்கள், வந்த பிறகே, ஒரு நிலை யான தகுதியை அடைந்தோம். ஆயினும், இப்போதைய கணிப்பான் போன்ற புதிய கருவிகளுக்கேற்ப மொழிகளில் சில மாற்றங்களைக் கொணரச் சிந்திக்க வேண்டியவர் களாயிருக்கிறோம்.

மிகுந்த எச்சரிக்கையுணர்வுடன் இப்பகுதியை அணுகுதல் வேண்டும். மிகவும் கடினமாயிருந்த சீன மொழி எழுத்துகளை மாற்றம் செய்ய நேரிட்டபோது, சீனாவைச் சார்ந்த மாசேதுங் குறிப்பிட்டதாவது; ''ஒரு பழைய வீட்டைப் புதுப்பிப்பது போன்றதன்று இது. வீட்டை முழுவதுமாக அழிக்கலாம். ஆனால், மக்களின் குருதியில் கலந்த மொழியின் எக்கூற்றையும், ஓர் அலகைக் கூட சுலபமாக மாற்ற இயலாது. இது கடினமான காரியம். சஸ்திர சிகிச்சை போன்றது இது'' என்றார். இதனால், தடுமாற்றங்கள் நிறைந்த மொழிமாற்றப் பகுதியை மிக மிகக் கவனத்துடன் அணுகுதல் தேவை.

அறிஞர் பெருமக்கள் சிலர் ''தமிழைப் பயில ரோமன் எழுத்து வடிவைப் பயன்படுத்தலாம்'' என்கின்றனர். இது பலராலும், ஏற்றுக் கொள்ளப்படவில்லை. தொன்மை முறையைக் கைவிடுதல் என்பது எளிதன்று, ஆயினும், உலகத்தின் பல பகுதிகளில், தமிழ் மட்டுமே பேசத் தெரிந்த தமிழர்களை, ரோமன் எழுத்து மூலமாகத் தமிழைப் பேசவும், எழுதவும், கற்கச் செய்யலாம். தென்னாப்பிரிக்கா, மொரீசியசு, பிஜி, கரிபியன் தீவுகள் போன்ற இடங்களில் வசிக்கும் தமிழர்கள் இம்முறையில் எளிதாகத் தமிழ் கற்க முடியும். தமிழின் மீது பற்றுக் கொண்ட அவர்கட்குப் போதிய ஊட்டங்கள் தேவை. இந்தியாவிற்குப் பிறகு, விடுதலை பெற்ற மலேசியா, இந்தோனேசியா போன்ற நாடுகள் இதனையே நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. அவர்கள் அங்குள்ள மொழிகளை ரோமன், எழுத்துகளின் மூலமாகவே எளிமையாகக் கற்கின்றனர். எழுத்து மாற்றங்களைச் சீனாவும், சப்பானும் கூட ஏற்றுக் கொண்டிருக்கின்றன. ஆனால், அவை படிப்படியாகவே இம்மாற்றங்களுக்கான பணியில் இறங்கியுள்ளன.

எவ்வாறாயினும், தமிழ் எழுத்து அப்படியே முழுமை யாக ரோமன் வரி வடிவிற்கு மாற்றுவது, பொருளற்றது; நினைக்கத் தகுவதுமன்று. ஆனால், தொலைதூர நாடுகளிலுள்ள தமிழ் மழலைகள் தமிழ் கற்க வேறு வழியின்மையால் ரோமன் வரிவடிவின் வாயிலாகக் கற்கலாம்.

ஒரு மொழி, அடிப்படையில் ஒலிகளைக் கொண்டது தானே தவிர, எழுத்துகளைக் (வரி வடிவங்களை) கொண்டதன்று. இதை நினைவிற்கொள்ள வேண்டும். இதற்குரிய வழிகளை நாம் நல்காவிடில் தமிழை முழுமையாக ஒதுக்கிவிட்டு, அந்தந்த நாட்டு மொழிகளைத் தொலைதூர நாடுகளில் தேர்ந்தெடுத்துக் கற்கத் தொடங்கும் அபாயமும் உண்டு. அதன் பின்னர், நாம் யாரையும் குறைகூறவோ, ஓங்கி முழக்கவோ இயலாது.

பன்னெடுங்காலமாக ஒரு மொழியின் இலக்கணம் இறுக்கமாகவே தொடருமானால் அம்மொழி சிதைவுபடும். செவ்விய மொழிகளுக்கு இதுவேதான் நேர்ந்தது. நல்லவேளையாக, திறமையும், அறிவும் மிக்க நம்முடைய இலக்கணக்காரர்கள், மொழி பேசுவோரால் அவ்வப் போது, ஏற்படும் சூழலுக்கேற்ப பழைய விதிகளை மாற்றிப் புதியவற்றை, அறிமுகப்படுத்தினர்.

இங்கிலாந்தின் பல பகுதிகளில் பல்வேறுவகை மொழி வழக்காறுகள் காணப்படினும், அவர்கள் பேசுவது எல்லா நாடுகளிலும் உள்ளோர் புரிந்து கொள்ளக்கூடிய தரமான ஆங்கிலத்தையே. பழைமையான மற்றும் இடைக்கால ஆங்கிலத்திலிருந்து உருவாக்கிய அவ்வாங்கிலமே அவர்கள் விழைந்தது. அமெரிக்க நாட்டில், கூட அமெரிக்கர்கள் நான்கைந்து மொழி வழக்காறுகளை அந் நாட்டின் பல பகுதிகளில் பயன்படுத்துகின்றனர். ஆயினும், பரிணாம வளர்ச்சியில் உருவான பொது அமெரிக்க மொழியினையே பொது நன்மை கருதிப் பேசு கின்றனர். தமிழின் வழக்காறுகளுக்கிடையே மிகப் பெரிய மாறுபாடுகளின்மையால், தரமான தமிழை இனங்காணு வதில் தாங்கவொண்ணா இடர்ப்பாடுகள் முன் நிற்க இயலா.

உலகிலுள்ள பல நாடுகள் இன்றைக்கு ஆங்கிலத்தை முதலாவது அல்லது, இரண்டாவது அல்லது மூன்றாவது மொழியாகப் பயன்படுத்துகின்றன. இதனால், பல்வேறு அமைவுகளைப் பெற்றிருப்பதால், பென்சில்வேனியாப் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த பேராசிரியர் ஒருவர் 'உலக ஆங்கிலம்' என்ற கொள்கையின் தேவை பற்றிப் பேசுகிறார். தமிழ், தெலுங்கு, இந்தி போன்ற இந்திய மொழிகளும், இதே போக்குக் குறித்து, ஒருவேளை சிந்திக்கலாம்.

ஏனெனில், இம்மொழிகள் பேசும் வட்டாரங்கள் பல நாடுகளில், காணப்படுகின்றன. உலகம், முழுவதற்கு மான ஒரு தரமான பொதுத் தமிழைக் கண்டறிய ஒரு குழு உருவாதல் தேவை. தமிழ்நாடு, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் மற்றும் பிற நாடுகளில் வழங்கப்பெறும், தமிழ் வழக்கு, வடிவுகளைக் கவனித்து அக்குழு ஒரு முடிவுக்கு வரவேண்டும். பிரெஞ்சு அகாதமியை மாதிரியாகக் கொண்டு ஒரு குழு வரவமைக்கப்பட்டு, தொலை நோக் கோடு செயல்படுமானால், பயன்கிட்டும். அது பல்வேறு நிலைகளில் தமிழ் கற்றோருக்காக வேலை வாய்ப்புகள், பற்றிய தெளிவான கருத்துகளை வெளிக் கொணர வியலும்.

பதினோராம், பன்னிரண்டாம் நூற்றாண்டுகளில் எழுதப்பெற்ற இலக்கணப் பகுதிகளை ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய தேவையை நாம் உணர வேண்டும். இதனை



போட்டோ : யோகா

## மழை

எஸ். முத்துக்குமரன்

படுத்திருந்த நான் கண் விழித்தே
என்ன சத்தம் என்றே நினைத்து
அடுக்குமாடி வீட்டின் சன்னல்
கதவை மெல்லத் திறந்தேன்.
இன்னும் பலமாய் மழை பெய்ய
வீதியில் எல்லாம் மழைநீர் வெள்ளம்
மின்னும் மின்னல் கண்ணைப் பறிக்க
மின்சக்திதானும் தடைபட்டுப்போக
எங்கும் சூழ்ந்தது பேரிருள் - இம்மழை
எல்லா நீர்நிலைகளை நிறைத்திடும்
தங்கு தடையின்றி இனிவரும்
குடிநீர் நித்தம் என்றே மகிழ்ந்தேன்
எதிரில் நடைபாதையோரக் குடிசை
குழந்தையின் அழுகை மெல்ல
அதிரும் இடியோசையினை மீறி எந்தன்
செவியினில் வீழ்ந்து நெஞ்சை நெருட
பசியால் அழுததோ இன்றி குளிர்வாடை
தாக்கியதால் அழுததோ
இடைவிடா மழையால் நடைபாதை
விற்பனையாளர் விற்பனை இன்றி
அடைபட்டுக் கிடந்தனர் வருவாய் இன்றி
உணவிற்கு ஏது வழி அவர்க்கே?

நவீனப்படுத்தும் முயற்சியில்லையாயின், வளரும் தமிழுடன் நாம் தொடர்பற்றுப் போய்விடுவோம். இன்றைக்கு நடைமுறையில் உள்ள தமிழின் பேச்சு வடிவுகளை ஏற்கவில்லையாயின், பழம் மரபுப்படி தமிழ் கற்றவர்களால், படைப்பிலக்கியங்களை உருவாக்க இயலாது. ஆங்கில எழுத்தாளர்களும் அமெரிக்க எழுத் தாளர்களும், உரைநடை வடிவுகள், புதினங்கள், நாடகங்கள், பாக்கள், யாவற்றிலும், பரந்துபட்ட பல்வகை நடைநயங்களை மேற்கொள்ளுவதை நாம் நினைவுகூர வேண்டும். நாமும் அத்தகைய ஒரு கட்டத்தை எய்த வேண்டுமாயின், நம் மொழியை நாம் நடத்துகின்ற, கற்கின்ற முறைகளில் மாபெரும் மாற்றங்களைக் கொணரவேண்டும்.

நம்முடைய இலக்கியம் பயிற்றுவித்தல், பிறருடைய இலக்கியங்களுடன், தொடர்புடையதாகவோ, தேவை யான பிற அறிவுத் துறைகளுடன் தொடர்புடைய தாகவோ இல்லை. நம் இலக்கியங்களை முழுமையாக உணர இத்தகு தொடர்பு தேவை. இராபின்சன் குருசோ ஒரு தீவினில் இருந்ததைப் போல, நம் மாணவன் தனிமையில் இருக்கும், தனிமைப்பாடு நிகழ்கிறது. தமிழ் முதுகலை பயிலும் ஒரு மாணவன், இதழியல் கணிப்பொறி, அறிவியல், உளவியல், சமூகவியல், மொழியியல் சார்ந்த அடிப்படைகளை அறிந்து கொள்ள இதுவே சமயமாகும். இந்திய இலக்கியம் பற்றி ஒரு பறவைப் பார்வையாவது அவனுக்குத் தேவை. தனிமைப் பகுதியிலிருந்து முன்னேற இது போதுமானது.

இவை யாவும் நடக்க நம் பாடத் திட்டம், முழுமை யாக மாற்றம் பெறவேண்டும் என்பதையும், பாடம் பயிற்றுவிக்கும் முறையிலும் மாறுதல் தேவை என்பதையும், தெரிவிக்கின்றோம். ஐந்தாண்டுத் தமிழ்ப் படிப்பொன்றை அமைத்து, தமிழ் இலக்கியங்களுடன், ஒரு திராவிட மொழி, வடமொழி, பிராகிருதம், ஆகிய வற்றில் ஒன்றையும், ஐரோப்பிய மொழி, ஒன்றையும், உலக மொழிகள் பற்றிய பொதுப்பார்வைப் பகுதியையும், வழங்குதல் பற்றிச் சிந்திக்கலாம். இவ்வழியில் ஐந்தாண்டுகள் பயின்று, பொறியாளராக, மருத்துவராக, வழக்கறிஞனாக ஒரு துறை வல்லவனாக வருவதைப் போலத் தமிழ் மாணவனும், தமிழ் பற்றிய முழுமையான படிப்புக் கொண்டு வெளிவர முடியும். (PURE LANGUAGE DEGREE Specialising in Tamil, Languages of the world etc.,).

மேலைநாட்டுப் பல்கலைக் கழகங்களில் இப்போது படைப்பிலக்கியம் தொடர்பாக படிப்புகள் தொடங்கப் பெற்றுள்ளன. படைப்பாளர்கள், பிறக்கின்றனர்; உரு வாக்கப்படுவதில்லையென்றாலும், சிறுகதை, நாடகம், கவிதை போன்றவற்றை முறையான பயிற்சிமூலம் பெறுதலென்பது 'பிறப்பால் எழுத்தாளர்' ஆனவர்களுக் கும் பயன்தரும். படைப்புக் கலைஞர்கள், திறனாய் வாளர்கள் போன்றோரின் உதவியுடன் நமது பல்கலைக் கழகங்களும், அதுபோன்ற படைப்புகளைத் தொடங்க லாம். மேலும், ஆர்வமுள்ள மாணவர்களுக்கு அவ்வப் போது பணிக்களங்கள் அமைத்து, முறையான செய் முறைப் பயிற்சிகளை நல்கலாம். நோபல் பரிசு பெற்ற சால்பெல்லோ, புகழ்பெற்ற திறனாய்வாளர் லீன் ஈடல் போன்றோர் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் படைப்பிலக்கியம் பயிற்றும் பணியில் ஈடுபட்டமை நம் கவனத்திற்குரியது.

இலக்கியம் பயிற்றுவிப்போர், நவீன உத்திமுறைகள், வசதிகள், இருப்பதால், புதிய வழிமுறைகளை அறிமுகஞ் செய்யச் சிந்தனை செய்தல் வேண்டும். மரபு வழி விரிவுரைகள், ஒலி, ஒளி இழைகளையும், தொலைக்காட்சி யையும், கூடுதலாகப் பயன்படுத்த வேண்டும். சங்க இலக்கியம், பல மரங்கள், செடிகள், பறவைகள், மிருகங்கள் பற்றிக் குறிப்பிடுவதற்கு, குறிஞ்சி மலர், நொச்சி இலை போன்ற இன்ன பிறவற்றைப் படம் வாயிலாக மாணவர்களுக்குக் காட்டினாலன்றி, அவற்றை அவர்கள் இனங்காண இயலாது. மாணவர்கள்மோப்பக் குழையும் அனிச்சம்' என்பதை அம்மலர் பற்றிய எவ்வித எண்ணமுமின்றி வெறும், கருவியைப் போலத் திருப்பித் திருப்பிச் சொல்கின்றனர்.

நவீன உத்திகளின் உதவிகளைக் கொண்டு கட்டடக் கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, கோயிற்கலை போன்றவற்றைச் சிறப்பாகக் கற்றுத்தர முடியும். கங்கைகொண்ட சோழபுரம், தஞ்சாவூர், மதுரை, திருவரங்கம், திருப்பதி போன்ற இடங்கட்கும், மாணவர் களை அழைத்துக் கொண்டு, கல்விச் சுற்றுலா சென்று வருதல் வேண்டும். தமிழ் எழுத்துகளைக் கற்றுத் தருங்கால் பிராமி, வட்டெழுத்து, கிரந்த எழுத்து, பல்லவர்கால எழுத்து, சோழர் கால எழுத்து, விசயநகர மன்னர்கள் எழுத்து போன்ற பழைய எழுத்து முறைகளையும், கற்றுத் தந்தால் அம்மாணவர்கள் அவற்றை நேரடியாகக் கண்டுணர்ந்து, எளிதாகக் கற்கவியலும், பல்வேறு எழுத்துக்களையும் தந்த கல் வெட்டுகள், அமைந்துள்ள இடங்களுக்கு மாணவர் களை அழைத்துப் போதல் வேண்டும். கல்வெட்டுப் படிப்பு என்பது இலக்கியப் படிப்பில் ஒரு பகுதியாக அமையவேண்டும்.

உடனடியாகவும், உன்னிப்பாகவும், நம் கவனத்தை ஈர்க்கும், பிறிதொரு பகுதி தமிழிலிருந்து பிற முக்கிய மொழிகளில் முடிந்தவரையில் மொழி பெயர்ப்புச் செய்யும் பகுதியாகும். சங்கப்பாக்கள், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்பராமாயணம் போன்றவை பல நாடுகளில் செல்வாக்குப் பெற்ற தரமான இலக்கியங்கள். சீனா உட்பட பல மேலை நாட்டு மொழிகளிலும், பல இந்திய மொழிகளிலும் திருக்குறள் ஏற்கெனவே மொழி பெயர்ப்புச் செய்யப் பெற்றுள்ளது. சங்கப்பாக்கள் தனி மனிதர்களின் தனிப்பட்ட ஈடுபாட்டாலோ, நிறுவனங்களின் துணை கொண்டோ ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்றன. சிலப்பதிகாரம், ஆங்கிலம், பிரஞ்சு, கிரேக்க, மொழிகளில் ஒலிக்கப் பெறுகின்றது. ஒரிரு இந்திய மொழிகளிலும், ஆங்கிலத்திலும், கம்பராமாயணத்தின் சில பகுதிகள் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. சிகாகோ நகரிலிருந்து, பேராசிரியர், அமரர் எ.கே.இராமானுஜத்தின் மொழி பெயர்ப்புப் பணி, குறிக்கத்தக்கது. குறுந்தொகையின் சில பகுதிகளும், நம்மாழ்வாரின் சில பாடல்களும் அவரால்

மொழி பெயர்க்கப் பெற்று, புகழ் வாய்ந்தவை. ஆனால், இதுவரை தமிழர்கள், மொழிபெயர்ப்பில் மேற்கொண்ட பணிகள் குறைவென்பதால், போதிய நிறைவு பெறவில்லை.

நம் சைவ, வைணவத் துறவிகளாயிருந்த பாவலர்கள் தந்துள்ள பக்தி இலக்கியங்கள் தமிழில் குறிப்பிட்ட இடத்தைப் பெற்றுள்ளன. தமிழில், குறிக்கத் தகுந்த பணியாற்றி மறைந்த மதிப்பிற்குரிய சேவியர் தினநாயகம், தமிழைப் 'பக்திமொழி' எனப் புகழுவார். பக்தியியக்கம் என்பது, தமிழகத்திலிருந்து, பிறபகுதிகளுக்குப் பரவியது என்பதில் ஆய்வாளர்களும் இன்று, பொதுவாக உடன்படுகின்றனர்.

புதுமை எழுத்தாளர்களில், புகழ்பெற்ற டி.எஸ். எலியட், இலக்கியப் பெரும்பணி என்பதை கவிதை, இசை, சமயம், ஆகியவற்றின் முறையான கலப்பால், எய்தப்பெறும் என்று கருத்துக் கொண்டுள்ளார். பாடல்களிலும், இத்தகு அரிய கலப்பை நாம் காணலாம். இப்படைப்புகளை முடிந்த அளவு பிற மொழிகளில் மொழி பெயர்த்து அறிவுலகிற்கு வழங்கும், புனிதப் பணியை நமக்குள்ளே தொடங்க வேண்டும்.

நம் இலக்கியங்களை ஆங்கிலத்திற்கு மொழி பெயர்ப்பதுடன், பிற மொழிகளிலுள்ள நல்ல படைப்பு களைத் தமிழுக்கு மொழியாக்கம் செய்தல் வேண்டும். அப்பணிக்குரிய மதிப்பு மிகைப்படுத்துவதற்குரியதன்று. பிறருடைய இலக்கியங்களில் கிடைக்கும் கருத்து வளர்ச்சி, புதிய சொல்லாட்சி, வளங்கள் பிற மொழிகளுடன் தொடர்பு கொள்ளக்கூடிய வண்ணம் மனம் விரிதல் போன்றவை கிட்டும். நம்மிடையே இருபது நூற்றாண்டு களாக இருக்கும் வடமொழி இலக்கியங்கள் யாவும் முழுமையாக மொழி பெயர்க்கப்படவில்லை என்பது குறித்தற்குரியது. தெலுங்கு, மலையாளம், போன்ற மொழிகளின் சிறப்பிலக்கியங்களும், தமிழில், வரப் பெறவில்லை.

பேராசிரியர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரியாரின் சிறந்த பணியாக அமைந்த 'தென்னிந்தியாவைப் பற்றிய வெளிநாட்டார் குறிப்புகள்' என்ற நூல் வெளிநாட்டுப் பயணிகளின் குறிப்புகளை வரிசைப்படுத்தித் தருகிறது. அந்நூலும், இன்னும் மொழி பெயர்க்கப் பெறவில்லை. தமிழ்ச் சமுதாயம், வளம் பொருந்தியதாக அமைந்திருந்த போது, பல்வேறு நிலைகளில் அது பெற்ற சாதனைகள் குறிக்கத் தக்கவை. இன்றும், தமிழகத்தின் பல பகுதிகளில் காணப்பெறும் பழங்கோயில்கள், ஓவியங்கள், சிலைகள் பழந்தமிழரின் கலை நுணுக்கத்தையும் படைப்பாற்றலையும், தாங்கியுள்ளன. பழந்தமிழரின் பண்பாடு, கலைத் திறன்கள் தமிழகத்துக்குள் மட்டுமே நின்றுவிடவில்லை. அவர்கள் கடல்கடந்து, தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்குச் சென்று அங்கு நிறுவிய பண்பாட்டு நிலையங்கள் இன்னும் அவர்களுடைய கலை, மாண்பைப் பேசிக் கொண்டிருக்கிறது. தமிழகத்தின் நாங்கூர் என்ற இடத்திலிருந்து தமிழர்கள் மலேசியா நாட்டிற்குச் சென்று அங்குள்ள தாங்பா என்ற இடத்தில் அமைந்துள்ள விட்டுணு கோயில் அவனி நாரணம் என்றழைக்கப் படுகிறது. பர்மாவில் அரிமத்தானபுரம் என்ற ஊரில் கட்டப்பெற்றுள்ள அச்சுதன் கோயிலும், இங்கிருந்து சென்ற தமிழர்கள், கட்டியதே. தென்கிழக்காசிய மொழிகளில் உள்ள சில எழுத்துகளின் மூலங்கள் பல்வை காலத்துக் கிரந்த எழுத்தாக அமைந்தவை.

காஞ்சியிலிருந்த அரச மரபினான போதிவர்மன், சீனா, சப்பான் நாடுகட்குச் சென்று பரப்பிய புத்தமதம், இப்போது, சென் புத்தமதம் என்றழைக்கப்படுகின்றது. நம் பாண்டிய மன்னர் பெயராகவே அமைந்த ஸ்ரீராமன் என்ற பெயருடையவர் சம்மா அரசனால் ஆளப்பட்ட பகுதியே இன்று வியட்நாம் என்பதாகும். தென்கிழக்கு ஆசிய மன்னர்கள் பெயர்களின் பின்னொட்டாகக் காணப்பெறும் வர்மன் என்பது நம் பல்லவ ஆட்சி யாளர்களை நினைவூட்டும். தமிழ்நாட்டில் உதித்த தேவராச வழிபாடு கம்போடியா வரை சென்றுள்ளது. தென்கிழக்கு ஆசியாவில் காணப்பெறும் இராமாயணத் திலும், ஜாவாவில் உள்ள பிரம்பன்னான் கோயிலில் செதுக்கப் பெற்றுள்ள இராமாயணக் கதைச் சிற்பங்களிலும் தமிழின் தாக்கங்களைக் காணலாம். தாய்லாந்தின் வழிபாட்டுச் சடங்குகளில் திருப்பாவை, திருவெம்பாவை போன்ற பாடல்கள் பாடப்பெறுகின்றன. 'ஏலோர் எம்பாவாய்' என்பது 'லோரம்பாய்' என்று, திரித்துப் பாடப்படுகிறது.

இத்தகு பழம் பெருமை நம்மை முழுமையாக்காது. பழம்பெருமைகள் பேசுவதைத் தவிர்ப்பது இன்று நலந்தரும். பாரதியார் வரிகள் நமக்கு, எச்சரிக்கை தருவன:

பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்,
　　தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்:
இறவாத புகழுடைய புதுநூல்கள்,
　　தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்
மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
　　சொல்வதிலோர் மகிமைஇல்லை:
திறமான புலமையெனில், வெளிநாட்டார்,
　　அதை வணக்கம் செய்தல் வேண்டும்.

நாம் பாரதியின் பாடலை மேடை தோறும், முழங்குகிறோம். செயல்முறையில் இறங்கும் காலம் வந்தாகிவிட்டது.

தமிழ் பாடமொழியாகமாற, அறிவியல் தமிழ் வளம் வேண்டும். எல்கேஜி முதல் பிஎச்.டி வரை தமிழால் முடியும். அதற்கேற்ப, தமிழைச் செம்மைப்படுத்தி, சங்க காலத்திலிருந்து 21ஆம் நூற்றாண்டுக்கு நாம் கொண்டு வரவேண்டும். நம்மால் முடியுமா? நம்மால் முடியும்: ஆனால் செயலில் இறங்குவோமா? தெரியவில்லை.

□ □ □



# "சங்கீத ஞானாம்ருத மாருதி"

பகவந்நாம ஸங்கீர்த்தனம், கலியில் எளிதாக இறைவனை உணர்ந்து அனுபவிக்கும் உபாயமாகச் சொல்லப்படுவதால், எம்பெருமானின் கல்யாண குணங்களைப் போற்றிப் பாடி ஆடவேண்டும்.

'ஸங்கீத ஞானமுனு, பக்திவிநா ஸந்மார்கமு கலதேமனஸா' என்று தியாகராஜ ஸ்வாமிகள் கூறுவதில், 'பக்தியில்லாத சங்கீத ஞானத்தினால் ஒரு நல்வழியும் ஏற்படாது' என்கிறார்.

இராமபிரானின் பக்தி எனும் சாம்ராஜ்யம் யாருக்குக் கிடைக்கிறதோ, அவருடைய தரிசனமே, மிகுந்த பரவசத்தைக் கொடுப்பதாக தியாகையர் "ராமபக்தி சாம்ராஜ்யமே மானவுல கப்பெனோ மனஸா; ஆமானவுல ஸந்தர்சனம் அத்யந்த ப்ரஹ்மானந்தமே" என்று வருணித்தபடியாக ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமி ஸ்ரீராமபக்தி சாம்ராஜ்யமெனும் இராமநாம ஸங்கீர்த்தனாம்ருதத்தில் மூழ்கி, நமக்குத் தரிசனமளிப்பது நாம் செய்த பாக்கியமாகும்.

'நாத தனுமனிசம் சங்கரம் நமாமி மே மனஸா, சிரஸா' என்பதில் 'நாதத்தையே உடலாகக் கொண்ட சங்கரனை மனத்தாலும், தலையாலும் வணங்குகிறேன்' என்றார். நாதரூபமானவன் ஆஞ்சநேயன், வேணுகானலோலன். அவனை நாம் நாம சங்கீர்த்தனத்தால் உபாசிக்க வேண்டும் என்பதை உணர்த்தவே, இவ்வோவியத்தில் மாருதி ஸ்ரீராம பஜனம் செய்வதாகக் காட்டப்பட்டுள்ளது.

அமைதியும், அழகானதுமான சூழ்நிலையில், பாரிஜாத மரத்தடியில் ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் செய்கையில் இசைபாடும் பறவைகளும் செவிமடுத்துக் கேட்கின்றன. பாட்டைக் கேட்ட அணிலும், தன் ஓட்டத்தை நிறுத்தியது. ரீங்காரமிடும் வண்டினங்களும் கானத்தில் மயங்கின.

"மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடியதும், ஸாமவேதசாரமுமாகிய இராமகானத்தைப் பாடும் மாருதியை வணங்குகின்றேன். அனுமன், சிவசொரூபி, வாயுபுத்திரன், விஷ்ணு அம்சமான இராமபக்தன்.

ஈசனின் ஸத்யோஜாதம், அகோரம், தத்புருஷம், ஈசானம், வாமதேவம் ஆகிய ஐந்து முகங்களிலிருந்தும் பிறந்த ஸ,ரி, க,ம,ப,த,நி எனும் ஏழு ஸ்வரங்களின் சாத்திரத்தை விரும்புபவனும், காலனை வென்றவனுமாய் என்னைக் காக்கும் தூய உள்ளம் படைத்த மகாபலம் பொருந்திய ஸ்ரீராமபக்தனை வணங்குவோம்.

கோயில் என்பது கோவிந்தனின் குடியிருப்பு. பஜனையில்லாத கோயிலுண்டா? இராமபஜனையால் நாம் உய்யும் வழியைக் காட்டுபவனன்றோ அனுமன்!

அகாரம் அனைத்தையும் அசைவிக்கும்.

உகாரம் உள்நின்று ஓதும் நாதம்.

மகாரம் அகம் அடங்கும் நாதம். ஓங்காரம் ஓங்கிய நாதப் பிரம்மமே!

ஒருமுறை துவாரகையில் அனுமன் விரும்பியபடி கண்ணன் அவனுக்கு இராமனாகக் காட்சியளித்தான். அவன் சென்றபின் ருக்மணி தேவியார், தன் சேலைத் தலைப்பால் அவன் அமர்ந்த மண்டபத்தைச் சுத்தி செய்ய வந்தபோது, 'இராமகானம்' மெல்லியதாகக் கேட்டுக் கொண்டே இருந்தது. இவ்வதிசயத்தைத் தன் நாதனிடம் சொல்ல, இருவருமாக 'இராம நாமம்' ஒலிக்கும் இடத்தை உற்று நோக்கினார்கள். அங்கு அனுமனின் ஒரு முடி விழுந்திருந்தது. அம்முடியிலிருந்து இந்த 'இராம நாம ஜபம்' வந்த வண்ணமிருந்தது. இதிலிருந்து நாம் அனுமனின் தேகத்தில் ஒவ்வோர் உயிரணுவும் இராம கானத்தைப் பருகிக்கொண்டே வளர்கின்றன என்பதையும், அனுமனின் முழுமையான தூய இராம பக்தியினையும் உணரலாம்.

இவ்வைபவ விசேடம் இங்கே எழில் கொஞ்சும் ஓவியமாக மலர்ந்துள்ளது.



ஓவியமும் கட்டுரையும்:
ஸி.ஏ. இராமச்சந்திரன்

## ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!

**பூவை. எஸ். ஆறுமுகம்**

*பல்லவி:*

ஒன்றே குலம்! ஒருவனே தேவன்!
ஒன்றென்று இரு; தெய்வம் உண்டென்றிரு!

*அநுபல்லவி:*

தெய்வங்கள் நடமாடும் புவியினிலே - மெய்த்
தெய்வமாய் ஒருவனை - ஒருத்தியை வழிபடுவோம்!

*சரணம்:*

பாருக்குள்ளே நல்லநாடாம் சுதந்திரப் பாரதத்தில்
பண்புசால் மதநல்லிணக்கம் அமைதியுடன் வாழ்ந்திடவே
பாருணர்ந்த தேசவிரோதிகட்கு ரத்தக்காணிக்கை வைத்த
மாறிந்த காந்தி மூவரையும் நாளும் வழிபடுவோம், ஐயனே!
காந்திகள் மூவரும் பாரதத்தில் அவதரித்திடவும்,
காலம்வென்ற பாரதி தமிழ் மண்ணில் பாட்டிசைக்கவும்,
சாந்திக்கு ஒருநேரு, இயேசுபிரான், நபிநாயகம்
சங்கரர் பெருகிடவும் ஆணையிடு, அம்மையப்பா!
ஒன்றே தெய்வம்! ஒருவனே தேவன்!
ஒருவனே ஐயன்! ஒருத்தியே அம்மை!



 சங்கீத ஞானாம்ருத மாருதி ஓவியர்: ஸி.ஏ. இராமச்சந்திரன்

நவீன கால (மாடர்ன் ஆர்ட்) ஓவியங்கள், ஃபைன் ஆர்ட்ஸ், ஆயில் பெயிண்ட்டிங், மினியேச்சர் மொகல் ஆர்ட்ஸ், தஞ்சாவூர் பெயிண்ட்டிங், பத்திரிகைகளுக்கு வரையும் ஓவியங்கள் என்று ஓவியங்கள் பல வகை.

பத்திரிகைத் துறையில் 1960 ஆம் ஆண்டு தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டவர் ஓவியர் ராமு. எஸ்.எஸ். ராமதாஸ் என்கிற இயற்பெயர் கொண்ட ஓவியர் ராமு, ஓவியக் கல்லூரியில் பயின்றவர். நடிகர் சிவகுமார், மறைந்த எழுத்தாளர் ராஜேந்திரகுமார், ஆகியோர் இவருடன் பயின்றவர்கள்.

கடந்த 36 ஆண்டுகளாக பத்திரிகை உலகில் தனக்கென ஒரு பாணியை அமைத்துக் கொண்டு, இன்னும் பல பத்திரிகைகளில் ஓவியங்கள் வரைந்து வருகிறார். ஓவியர் ராமுவின் 'கடல் கொண்ட தென்னாடு' என்கிற தொடரின் (கவிஞர் கண்ணதாசன் எழுதியது) ஓவியங்கள் வாசகர்களுக்கு மிகப் பிரசித்தமானவை.





# ஓவிய மகள்



ஓவியர் ராமுவின் ஓவிய வாரிசாக வளர்ந்து வருகிறார் ராமுவின் மகள் கீதா லட்சுமி. இவர் வரையும் தஞ்சாவூர் ஓவியங்கள், நல்ல வரவேற்பைப் பெற்று காதி கிராமோத்யோக் பவனில் விற்பனையாகின்றன.

19 வயது கீதா லட்சுமியைச் சந்திக்கிறோம்.

"அப்பா வரைகிற படங்களைப் பத்திரிகைகளில் பார்ப்பேன். கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு படிப்பை முடித்ததும் ஆயில் பெயிண்டிங் வரைய முயற்சி செய்தேன். நன்றாக வரைய முடிந்தது. தஞ்சாவூர் பெயிண்டிங்கில் திடீரென்று ஓர் ஆர்வம் பிறந்தது. முக்கியமாக எல்லா இடங்களிலும் தஞ்சாவூர் ஓவியங்களுக்கு வரவேற்பு இருப்பதை உணர்ந்தேன். திரு. சேகர், திருமதி சுமதி ஆகியோரிடம் தஞ்சாவூர் ஓவியப் பயிற்சியை மேற்கொண்டேன். கடந்த ஓராண்டிற்குள் நான் வரைந்த தஞ்சாவூர் ஓவியங்கள் ஐம்பத்திற்கும் மேல். இதற்கு நல்ல வரவேற்பு. தஞ்சாவூர் ஓவியங்கள் மட்டுமல்லாமல் நிப் பெயிண்டிங்ஸ், டைல்ஸ் பெயிண்டிங்ஸ் வரைந்து வருகிறேன். நான் வரைந்த முதல் தஞ்சாவூர் ஓவியம் இன்று சிங்கப்பூருக்குச் சென்றுள்ளது பெருமையாக இருக்கிறது" என்றார் கீதா லட்சுமி.



"உங்கள் மகள், உங்களின் ஓவியத் துறையிலேயே வாரிசாக வருவார் என்று நினைத்தீர்களா?" ஓவியர் ராமுவிடம் கேட்கிறோம்.



"இல்லை. மகள் ஓவியத்துறைக்கு வருவார் என்று நினைக்கவே இல்லை. மகன் சூர்யகுமார் படிக்கும் போதே ஏதாவது படங்கள் வரைவார். அவர் தான் இத்துறைக்கு வருவார் என்று எதிர்பார்த்தேன். மகள் ஓவியத் துறைக்கு வந்துள்ளது மகிழ்ச்சியாக இருக்கிறது" என்றார்.

ஓவியங்கள் வரைவதில் தஞ்சாவூர் ஓவியம் வரைவதற்குத் தனித் திறமை வேண்டும். ஓர் ஓவியம் முற்றுப் பெறக் குறைந்தது ஐந்தாறு நாள்களாகி விடும். ஓவியர் எடுத்துக் கொள்ளும் பொருள் (சப்ஜெக்ட்), வேலைப் பாடுகள், ஓவியத்தின் அளவிற்கு ஏற்ப திறமைகள் என்று வேலைப் பளு அதிகம்.



"தொன்று தொட்டு வரும் இந்த தஞ்சாவூர் பாணி ஓவியத்தில் நவீன மாறுதல்கள் செய்ய முடியுமா?" ஓவிய வாரிசு கீதா லட்சுமியிடம் கேட்கிறோம்.

"அப்படி மாறுதல் செய்து நம் விருப்பப்படி ஓவியத்தை மாற்றினால் அது தஞ்சாவூர் ஓவியமாக இருக்காது. வேண்டுமானால் ஸ்பிரே பெயின்டிங் முறையை அறிமுகப்படுத்தலாம். முயற்சி இருக்கிறது" என்ற கீதா லட்சுமிக்கு, தான் வரைகிற ஓவியங்கள் அனைத்தையும் கொஞ்ச நாள்களுக்கு விற்பனை செய்யாமல் மொத்தமாக பொருட்காட்சி வைக்க வேண்டும் என்கிற ஆசை இருக்கிறதாம்.

நாம் ஓவியர் ராமுவையும், ஓவிய வாரிசு கீதாலட்சுமியையும் சந்திக்கிற போது 'கீதா உபதேசக் காட்சி'யைத் தஞ்சாவூர் ஓவியமாக்கிக் கொண்டிருந்தார், ஓவியர் கீதாலட்சுமி.

வாரிசு வளர்ந்து, மேலும் பல ஓவியங்களைப் படைத்து புகழில் சிறந்தோங்க நெஞ்சார வாழ்த்துவோம்!

- மாலதி நாகராஜ்
படங்கள் : ஸ்ரீஹரி



பருத்தியூர் டாக்டர் கே. சந்தானராமன்

# சீதாலக்ஷ்மி ஜனனம்




மிதிலை மன்னர் ஜனகர் ஓர் இல்லற ஞானி. கல்வி கேள்விகளிற் சிறந்த சான்றோர். சைவ வைணவ பேதமில்லாத பக்தர். அன்றாடம் சிவபூஜை செய்து வந்த ஜனகருக்குத் திருமாலே மருமகனாக வாய்த்தார்.

ஜனகரின் குருநாதர் சதானந்த முனிவர். இவர் கௌதமரின் குமாரர். சதானந்தரின் ஆலோசனைப்படி வேள்வி செய்யத் தீர்மானித்த ஜனகர், அதற்கேற்ற நல்ல நிலத்தைத் தேர்ந்தெடுத்தார்.

வேள்வி தொடங்குவதற்கு முன்னால் அந்த நிலத்தை வேள்வி செய்வோர் தாமே உழுதுபண்படுத்த வேண்டுமென்பது நியதி.

இரும்பின் வலிமையுடைய கொம்புகளையுடைய இரண்டு காளைகளைப் பளிங்கினாற் செய்த நுகத்தடியில் பூட்டினார் ஜனகர்.

வைரக் கொழுமுகம் கொண்ட, ரத்தினக் கற்கள் பதித்த பொற்கலப்பையைக் கட்டி, அப்புனித பூமியைப் பலசால் உழுதார் ஜனகர்.

மாமன்னர் ஏன் மாடுகட்டி உழுதிட வேண்டும்?

"சீரைத் தேடின் ஏரைத் தேடு" என்பது பழமொழியாயிற்றே!

ஆம்! அனைவருக்கும் ஆதாரமான அவசியமான அன்னத்தை அளிக்கும் உழவுத்தொழிலை நம்பியே வளமும் வாழ்வும் அமைகிறது.

நல்ல பயிரை விளைவிக்கப் பல சால் உழுதிட வேண்டும்.

அதுபோல் ஞானப் பயிரை விளைவிக்க மனம் என்ற பூமியைப் பண்படுத்திடல் வேண்டும்.

தூய பக்திதான் பளிங்கு போன்ற நுகத்தடி. அதில் சத்தியம், தர்மம் என்ற காளைகளைப் பூட்டி, வைராக்கியம் என்ற கொழு பதித்த ஆத்ம சோதனை என்ற கலப்பையால் உழுது பண்படுத்த வேண்டும்.

இவ்வாறு பண்படுத்தப்பட்ட நிலத்தில் விளையும் ஞானப் பயிரின் கதிர்தான் கடவுள்!

ஜனகர் உழுது வரும்பொழுது கொழுமுகத்தில் கிடைத்தது தெய்வக் குழந்தை!

*"உழுகின்ற கொழுமுகத்தில் உதிக்கின்ற கதிரின் ஒளி*
*பொழிகின்ற புவிமடந்தை உருவெளிப் பட்டெனப்புணரி*
*எழுகின்ற தெள்ளமுதோடு எழுந்த வளும் இழிந்தொதுங்கித்*
*தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினாள்"*

–கம்பராமாயணம்

உதிக்கின்ற செங்கதிரின் ஒளியுடன் பூமாதேவி வெளிப்பட்டது போல, கடலில் அமுதுடன் தோன்றிய திருமகள் தன்னழகு குறைந்ததே என ஒதுங்கி நின்று, வழிபடத்தக்க பேரழகுடைய பெண்ணரசி ஜனகரின் கொழு முகத்தில் தோன்றினாள் என்கிறார் கம்பர்.

பூமியில் ஜனனமான குழந்தை சீதை, கையிலே தாமரை மலர் கொண்டவளாய், புதுப்புன்னகையுடன் நம்மைப் பரவசப்படுத்துகிறாள். யாக பூமியில் பரப்பப்பட்டுள்ள நவரத்தினங்களும், ஏரும், காளையும், கூப்பிய கரங்களுடன் அரச மகளிரும், கம்பீரமான ஜனகரும், மிதிலை மாளிகையும் இங்கே ஓவியர் கோபுலுவின் கரம்பட்டு மிளிர்வதைக் காண்கிறோம். சீதாலட்சுமி ஜனனமான நாளே தீபாவளித் திருநாள். கம்பரின் கவிதைக்கு நிகராக, ஓவியர் கோபுலுவின் சித்திரம் திகழ்கிறது.

கொழுமுகம் என்ற கலப்பையின் பகுதியை 'சீதம்' என்பர். அதன் அடியில் கண்டெடுக்கப்பட்ட அப்பெண் குழந்தைக்கு , 'சீதா' என்றே பெயர் சூட்டி மகிழ்ந்தார் ஜனகர். 'சீதையின் பெருமையிகு வரலாறு' (சீதாயாச் சரிதம் மஹத்) என்றுதான் வான்மீகியும் இராமாயணத்தைக் குறிப்பிட்டார்.

இந்த நிகழ்ச்சியையே இவ்வாண்டின் 'அமுதசுரபி' தீபாவளி மலரின் அட்டையில் வண்ண ஓவியமாக்கி வழங்கியுள்ளார் திரு. கோபுலு அவர்கள்.

# புல்லுக்கும் அங்கே பசியும்

## விமலா ரமணி

ராஜாராமனுக்குத் திடீரென்று விழிப்பு வந்தது... உடம்பெல்லாம் வியர்த்திருந்தது. இப்போது என்ன மணி? எங்கோ காகங்களின் கரைசல் கேட்டது... சுற்றிலும் 'அபார்ட் மெண்ட்கள்' வந்து விட்டாலும் இன்னமும் ஒரிரு மரங்கள் பாக்கி யிருந்தன. அவற்றில் கூடு கட்டி வாழும் பறவைகள் தம் கடமைகளைச் செய்து கொண்டிருந்தன... பால்காரரின் சைக்கிள் பெல் சப்தம்!

தன் அருகில் நிம்மதியாக உறங்கிக் கொண்டிருந்த தன் மனைவி தரங் கிணியைப் பார்க்கிறான் ராஜாராமன். இவளால் எப்படி இப்படி நிம்மதியாக உறங்க முடிகிறது?

அதுவும் அம்மா... இவன் அம்மா தர்மாம்பாள் வீட்டைவிட்டுப் போன பிறகு. தவறு... துரத்தி அடிக்கப்பட்ட பிறகு... இவனால் தான் தூங்க முடிவதில்லை. தரங்கிணி சுத்தமாய் நிம்மதியாய்த் தூங்குகிறாள்.

இவள் சுத்தத் தரங்கிணி அல்லள்!

அசுத்தத் தரங்கிணி...

''ராஜா... புடைவை ரொம்பவும் கிழிஞ்சு போயிடுத்துப்பா.. உன்னை வீணாச் சிரமப்படுத்த வேண்டாம்னு நினைச்சேன்.. கிழிசல் தைக்கத் தைக்க இன்னோர் இடத்துலே பிஞ்சுடறது.. அதனால வேற புதுப் புடைவை வாங்கணும்.. இப்போதைக்கு ஒரு புடைவை வாங்கித்தா. அப்புறமா இன்னொன்னு வாங்கிக்கலாம். ஏன்னா உடு புடைவை ரெண்டு இருந்தாத் தான் மாத்தி மாத்தி கட்டிக்க முடியும்...''

எதிரில் கிழிசல் புடைவையைத் தைத்துக் கட்டிக் கொண்டிருந்த தன் தாயைப் பார்க்கிறான் ராஜாராமன்..

புடைவைக் கிழிசலை மட்டுமன்றி.. இந்தக் குடும்பத்தின் கிழிசல்களை, ஓட்டைகளை ஒட்டுப் போட்டுத் தைத்தவள் இவள் தான்!

இவன் அப்பா ஏகச் செலவாளி... கடனாளி.. நிறைய சொத்து.. சுகம்.. வீடு, வாசல் என்று வசதியாய் ஒரு காலத்தில் வாழ்ந்தவர்கள் தாம் .

அம்மா பட்டுப்புடைவை தான் உடுத்துவாள் தினப்படிக்கே. அதிக ஜரிகை இல்லாத சன்னக் கரை போட்ட செல்ப் பார்டர் புடைவை தான். வாங் கும் போதே இரண்டு புடைவைகளாக வாங்கிவிடுவாள். அந்தக் காலத்தில் இருநூறு ரூபாய்க்கெல்லாம் சன்னக் கரை ஜரிகை போட்ட புடைவை 'மல்லம்மா பார்டர்' என்பார்கள்.. அது கிடைக்கும். அதுவும் ஒன்பது கஜம். பட்டுப்புடைவை மடிசார் கட்டிக் கொண்டு அம்மா நெற்றி நிறையக் குங்குமமும், உடம்பு நிறைய நகைகளும் போட்டுக் கொண்டிருந்த அந்தக் காலம் மலையேறிவிட்டது.

அப்பாவின் பழக்கவழக்கங்களால் குடி, ரேஸ்.. இன்னும் பல.. சொத்துகள் மெல்ல மெல்லக் கரைந்தன.

வீடு, வாசல் ஒவ்வொன்றாகப் பறி போனது.. இவர் வசதியாக வாழ்ந்த போது, நம்பிக்கையில் புரோ நோட்டில் கூட கையெழுத்து வாங்கிக் கொள் ளாமல் கொடுத்த லட்சக்கணக்கான பணத்தை கடன் வாங்கிய நண்பர்கள் காற்றில் கரைந்து விட்டார்கள்.

அந்த அதிர்ச்சியே அப்பாவைப் படுக்கையில் போட்டுவிட்டது. அதன் பிறகு வைத்தியச் செலவு, வேலூர், பாண்டிச்சேரி என்று ஆஸ்பத்திரி ஆஸ்பத்திரியாக அலைந்ததில் அம்மா வின் நகைகள் காணாமல் போயின. கடைசியில் அப்பாவே காணாமல் போய்விட்டார்.

சாவதற்கு முன் மனைவியின் கைகளைப் பிடித்தபடி அழுதார். பாவமன்னிப்பு!

''தர்மு! உனக்கு சொத்து சுகம் எதுவுமே நான் வைக்கல்லை.. இருந்த வீடும் கடன்காரன் பறிச்சுட்டுப் போயிட் டான்.. என்னையும் யமன் பறிச்சுடுவான் போலிருக்கு.. நான் வைச்சிருக்கிற சொத்தெல்லாம்... இதோ.. இந்த ராஜாராமன்தான்.. இவனை வளர்த்து ஆளாக்கு.. இவன் பெரியவன் ஆகி இழந்ததையெல்லாம் மீட்பான்.. உனக்கு நல்வாழ்வு தருவான்..''

தன்னால் செய்ய முடியாததைத் தன் பிள்ளைக்கு 'உயில்' எழுதி வைத்து விட்டு உயிரை விட்டு விட்டார் அவர்.

அப்போதும் அம்மா பட்டுப் புடைவையில்... நெற்றி நிறையக் குங்குமத்துடன் தந்தையின் கைபிடித்து அமர்ந்திருந்தாள்.. அருகில் ராஜாராமன் ஐந்து வயதுச் சிறுவனாக! சில விவ ரங்கள் இவன் பெரியவனாகப் போய் இவன் சேகரித்தவை!.

அதன்பின் தாயின் உழைப்பின் சக்தி ஆரம்பமானது.. மிச்சமிருந்த நகை களை விற்று சிறியதாக ஒரு 'மெஸ்' ஆரம்பித்தாள். ஒண்டியாய் உழைத்;ாள்.. அதன்பின் ஓரளவு வசதிவர ஆட்களை வைத்துக் கொண்டாள். 'மெஸ்' விரிவடைந்தது. முதலில் இரண்டு மூன்று பேர் சாப்பிட்டார்கள். அதன்பின் இருபது பேர் சாப்பிடத் தொடங்கி னார்கள். இடம் போதவில்லை.. பெரிய இடம் பெயர்ந்தார்கள்.

வாழ்க்கையின் ஓட்டத்தில் இரு பது வருடங்கள் போனதே தெரிய வில்லை. ராஜாராமன் டிகிரி முடித்து பிஸினஸ் மேனேஜ்மென்ட் முடித்து ஒரு தனியார் நிறுவனத்தில் உயர்ந்த பதவியில் இருந்தான்.

''அம்மா... நீ இழந்ததையெல்லாம் மீட்டுத் தரணும்... பழைய நகை.. பிறகு...''

சிறுபிள்ளை மாதிரி அம்மாவின் மடியில் படுத்துக் கொண்டு அழுவான்.. அந்த இருபத்தைந்து வயதுக் குழந்தை!

தர்மு சிரிப்பாள்.

''இதோ பார் ராஜா.. இழந்ததை யெல்லாம் எப்படி மீட்கப்போறே?''

''அம்மா! நீ கழுத்து நிறைய நகையோட இருந்தே, கை நிறைய

வளையல்.. இப்போ அபிஷேக நாச்சியார் மாதிரி இருக்கே!''

அம்மா சிரிப்பாள்.

''அதென்னவோ தெரியல்லை ராஜா.. எல்லாத்தையும் கழட்டிக் கொடுத்துட்டேன்.. ஆனா இந்தப் பட்டுப்புடைவையை மட்டும் விட முடியல்லை.. இதே போல ஜரிகை போட்ட ' புடைவை வருஷத்துக்கு இரண்டு... அதுமட்டும் நீ வாங்கித் தந்தாப்போதும்..''

இந்த வியர்வையிலும் அம்மா பட்டுப்புடைவை தான் உடுத்தி வந்தாள். பாலிஸ்டர் பட்டு அம்மாவிற்கு ஒத்துக் கொள்ளவில்லை..ஒருதடவை பாலிஸ்டர் பட்டு உடுத்தி உடம் பெல்லாம் 'ராஷஸ்' வந்துவிட்டது!

''இல்லைம்மா...நான் உனக்குப் பட்டுப்புடைவை வாங்கித் தரேன்.. ஆனா நகை.. அதெல்லாம் இழந் துட்டு இருக்கியேம்மா.. அதையும் வாங்கிக்கோ.. எனக்குத்தான் இப்போ நல்ல சம்பளம் வருதே...''

அம்மா சிரிப்பாள்.

''நெற்றிப் பொட்டைக் கூட இழந் துட்டேன் ராஜா! அதுக்கு என்ன பண்ணப் போறே?''

''அம்மா...''- ராஜா அதிர்ந்தான்.

''இதோ பார்.. வீணா மனசைப் போட்டுக் குழப்பிக்காதே.. எனக்கு நெற்றியிலே விபூதியும், மூளிக்கழுத்தும் தான் ஆண்டவன் தந்தவரம்.. ஆனா அதுக்குப் பரிகாரமா உன்னை மாதிரி ஓர் அன்பான, அழகான மகனைத் தந்திருக்கார். அது போதும்...''

அதன்பிறகு ராஜா அதிகம் பேசவில்லை.

''நாளைக்கே இரண்டு பட்டுப் புடைவை பெரிசா.. ஜரிகை போட்டு...''

''போடா பைத்தியம்.. அப்படி யெல்லாம் நான் கட்ட மாட்டேன்.. வழக்கம் போல இதே மாதிரி சன்ன ஜரிகை... டல் கலர்.. அவ்வளவுதான்.. பெரிசா ஜரிகை..பேஷன்..அதெல்லாம் உனக்கு வரப்போறவளுக்கு...''

கல்லையும் பிசைந்து கனியாக்கித் தருகிற தாய்மையின் அன்பில் நெகிழ்ந் தான் அவன்!

அதன் பிறகு...

வருடந்தோறும் இரண்டு பட்டுப் புடைவைகள் அம்மா சொன்னபடி தவறாமல் வாங்கிக் கொடுத்து விடுவான். அம்மா தீபாவளிக்கெல்லாம் புதிது கட்டிக் கொள்ளமாட்டாள். புதுப் புடைவை வாங்கினால் கூட அதை அப்பா படத்தின் முன் வைத்து நமஸ்காரம் செய்துவிட்டு அதை நனைத்து உலர்த்திய பின் தான் கட்டுவாள்.

இரண்டு வருடம் முன்வரை எல்லாம் சரியாகத் தான் இருந்தது.. அதாவது தரங்கிணி வரும்வரை.

அம்மா தான் ஆசைப்பட்டு, ஏழை வீட்டுப் பொண்ணுக்குத் தான் கஷ்டம் தெரியும் - என்று, சுமாரான ஒரு குடும்பத்தைச் சேர்ந்த தரங்கிணியைத் தேர்ந்தெடுத்தாள். ஜாதகம் பொருத்தம் பார்த்துத் திருமணம் நிச்சயம் செய்தாள்.

''கூடப் பொறந்தவா இருந்தாத்தான் பாசம் தெரியும்...நீ ஒண்டியாய்ப் பிறந்து வளர்ந்தவன்..மச்சினி..மச்சினன் என்று உன்னைச் சுற்றி ஒரு நாள் கிழமைன்னா நாலு பேர் நின்னாத் தான் பந்தல்லே பெருமையாய் இருக்கும்.. பந்தல் நிறைஞ்சு இருக்கணும்..'' - என்று சொல்லி அம்மா, உடன்பிறப்புகள் என்று அக்காவும், தங்கையும்.. அண்ணனுமாக நாலைந்து பேருடன் இருந்த தரங்கிணியைத் தேர்ந்தெடுத்தாள்.

எல்லாம் நன்றாகத் தான் இருந்தன.. கொஞ்ச நாள் வரை.. அதன்பின் ராஜாவின் வீட்டு வசதிகளைப் பார்த்து விட்டு ஒவ்வொருவராக வரத் தொடங்கினர்.

''அத்திம்பேர்.! எனக்கு எக்ஸாம்.. போஸ்டல்லே படிக்கறேன்.. மெட்ரா ஸிலே சென்டர் போட்டிருக்கான்..ஹால் டிக்கெட் வாங்க வந்தேன்...''

''மாப்பிள்ளை.! காஞ்சிபுரம் சின்ன ஊர்.. போரடிச்சுப் போச்சு.. அதான் இங்கேயே மெட்ராஸோட வந்துட லாம்னு பார்க்கறேன்..''

நாள், கிழமை என்றால் நாலு பேர் இல்லை.. தினமும் தரங்கிணியின் உறவினர்கள் பத்துப் பேர் என்று கூட வந்தார்கள்.

''என்ன? எங்க சித்தி வந்திருக்கா.. பாவம்.. கஷ்ட ஜீவனம்.. பத்து நாள் தங்கிட்டுப் போகட்டும்.. போகும்போது ரெயில் செலவுக்கு நூறோ இருநூறோ கொடுத்துட்டாப் போச்சு!''

தரங்கிணி சொல்லுவாள்.என்னவோ இவன் சொல்லி இவள் சித்தி வந்த மாதிரி...

அம்மா வாயே திறக்கவில்லை. வந்தவர்களுக்கு காபியும், டிபனுமாக சமையல் அறையிலேயே நேரம் சரியாக இருந்தது.

தீபாவளி வந்தது. அப்போதுதான் தொடங்கிற்று, அந்த வழக்கு.

வழக்கம் போல் அம்மாவிற்கு இரண்டுப் பட்டுப்புடைவை வாங்கிக் கொண்டு வந்தான் ராஜா.

தனக்கு வாங்கப்பட்ட அகல ஜரிகை பட்டுப்புடைவையைப் பார்த்து மகிழ்ந்த தரங்கிணி, அந்த இரண்டு புடைவை களைப் பார்த்துப் புருவத்தை உயர்த்தினாள்.

''அது...அது அம்மாவுக்கு...''

''ஓ! உங்க அம்மாவுக்கு ஒண்ணு... எங்க அம்மாவுக்கு ஒண்ணா?''

''இ...இல்லை தரங்கிணி... இரண்டுமே நம்ப அம்மாவுக்குத்தான்.. அம்மாவுக்குப் பட்டுப்புடைவை தான் உடுத்திப் பழக்கம்...''

தரங்கிணி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்...

அடுத்த முறை.---

''பட்டு விக்கிற விலையிலே இப்போ தினப்படி பட்டுப்புடைவை உடுத்திக் காட்டா என்ன? பெரிய ராஜ பரம்பரை தட்டுக் கெட்டுப் போறது.. எங்கம்மா எல்லாம் தினப்படிக்கு சுங்கடிதான் உடுத்தறா... தெரியுமோ?'' - என்றாள் தரங்கிணி.

''உங்கம்மா நூறுபவுன் நகையைக் குடும்பத்துக்காகக் கழட்டிக் கொடுத் தாளா? வீடு வாசலை விற்று கணவனுக்கு வைத்தியம் பார்த்தாளா? உழைத்து மகனைப் படிக்க வைத்தாளா? அம்மா ஆதி நாளிலே இருந்து பட்டுப்புடைவைதான் உடுத்துகிறாள்... அப்படி ஒரு வழக்கம்..'' - என்று இரைந்து நாலு வார்த்தை இவன் பேசி இருக்கலாம். ஆனால் ஏனோ தொண்டை அடைத்தது!

ஆசைப் பெண்டாட்டி, அழகான பெண்டாட்டி, அம்சமான பெண்டாட்டி, படுக்கை அறை சுகத்தைக் கூடை கூடையாகக் கொட்டித் தரும் சீமாட்டி...

ராஜாராமன் திணறியபடி பேசினான்..

''அதில்லை தரங்கிணி.! அம்மா வுக்குப் பட்டுப்புடைவை. கட்டித்தான் பழக்கம்..''

''ஆமாம்.. பெரிய பழக்கம்..இப்போ ஆச்சார்யாளே பட்டுப்புடைவை



கட்டிக்க வேண்டாம்னு சொல்றா தெரியுமோ? ஆயிரக் கணக்கான பட்டுப்பூச்சிகளைக் கொன்னு எதுக்குப் பட்டுப்புடைவை.. இந்த வயசான காலத்துல..''

''உனக்கும் இனிமே பட்டுப் புடைவை வேண்டாமா?''

''உம்..கேட்பேளே! இந்தக் கிண்டலுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லை. நானும் உங்கம்மாவும் ஒண்ணா?.. வயதானவாளுக்கு எதுக்கு இத்தனை ஆடம்பரம்? பேசாம இரண்டு சுங்கடிப் புடைவை வாங்கிட்டு வாங்கோ.. இந்த இரண்டு புடைவை யிலே ஒண்ணு எங்கம்மாவுக்கு தீபாவளி. இன்னொன்று என் சித்திக்குத் தந்துடறேன்..''

''அ... அது வந்து தரங்கிணி...''

''சும்மா இருங்கோ.. எனக்கு எல்லாம் தெரியும்.. பட்டுப்புடைவை என்ன விலை விக்கிறது? தினப்படிக்குப்போய் ஆயிரம் ரூபாய்க்கு மேலே போட்டு புடைவை வாங்குவாளா என்ன? இங்கே என்ன கல்யாணமா, கார்த்திகையா?''

ராஜா பேசாமல் இருந்து விட்டான்...

பேப்பரில் சமீபத்தில் ஒரு செய்தி வந்தது.. ஒரு பெட்டைக் கோழி சேவல் போல கூவுகிறதாம்.. ஊர் முழுக்க வேடிக்கை பார்க்க வந்தார்களாம்!

இவன் சேவலாக இருந்தும் கூவ முடியாத பெட்டையானான். கடைசியில் தர்மாம்பாளுக்குத்தான் விடியவே இல்லை.

தர்மாம்பாளுக்குப் புரியவில்லை.. வருஷம் தோறும் கேட்பதற்கு முன்பே புடைவை வாங்கித்தரும் மகன் இந்தத் தடவை ஏன் வாங்கித் தரவில்லை? கடைசியில் கிழிசலைத் தைத்துத் தைத்து உடுத்தியபின்... தாங்க முடியாமல் தான் மகன் ராஜாவிடம் கேட்டாள்...

''ராஜா... புடைவை ரொம்பவும் கிழிஞ்சு போயிடுத்துப்பா.. உன்னைச் சிரமப்படுத்த வேண்டாம்னுதான் பார்த்தேன்...''

அம்மா பேசப் பேச பக்கத்து அறையிலே இருந்து பத்ரகாளி மாதிரி வெளிப்பட்டாள் தரங்கிணி...

''இந்தாங்கோ சுங்கடிப்புடைவை... இதை வாங்கி வைச்சு ஒரு வருஷ மாறது... உங்க புள்ளை உங்ககிட்டே கொடுக்கப் பயப்படறார்.. பேசாம இதைக் கட்டிக்கோங்கோ...''

''வந்தும்மா...இது...இது...''

''ஏன் பட்டேதான் உடுத்திக்கணும்னு சபதமா? ஆம்படையான் போயாச்சு! ஆனா பட்டுப்புடைவை ஆசை போக லையாக்கும்? பட்டுப்புடைவை அந்தக் காலம் மாதிரி இல்லை இப்போ.. ஆயிரமும் இரண்டாயிரமும் விலை.. பேசாம பாலிஸ்டர் பட்டோ, சுங்கடியோ கட்டிக்கோங்கோ.. சும்மாவானாலும் கிழிசல் புடைவையைக் கட்டிண்டு ஏன் வீணா நாடகமாடறேள்? இவர் பெரிய ஆபீஸர்.. நீங்க இப்படி வேணும்னு நடிச்சா பாக்கறவா என்ன நினைச்சுப்பா? ஏன் இப்படி வேஷம் போடறேள்?''

எங்கோ நெஞ்சில் பட்ட அடி ஏகமாய் வலித்தது.

ஏழைமையிலிருந்த தரங்கிணிக்கு வாய்ப்புகள் வசதிகளாக வந்தபோது ஏற்றுக்கொள்ளப் பழகிவிட்டாள்.

ஆனால் வாழ்க்கைப் புத்தகத்தை வரிவிடாமல் வாசித்த இவளுக்கு, மனித நேயத்தை நேசித்த இவளுக்கு, இனி புதுப்புது சுவாசங்கள் தேவைதானா?

மருமகள் தந்த சங்கடிப் புடைவையை மறுபேச்சின்றி வாங்கிக் கொண்டாள் தர்மாம்பாள். அருகில் சாட்சியாய் நின்ற மகனை ஒரு கணம் ஏறிட்டுப்பார்த்தாள்.

இவள் வாங்கிக் கொண்டவற்றை அவன் இதுவரை பார்த்துக்கொண்டு தான் இருந்திருக்கிறான்.. ஒரு பார்வை யாளனாக.. அம்மா ஏற்றுக் கொண்ட கடனை. வைதவ்யத்தை... ஏழை மையை. .உழைப்பை...

அன்றும் அவன் ஏதும் பேசவில்லை.

இன்றும் அதே ஊமை நிலை.

''உனக்கு நகைகள் வாங்கிப் பூட்டுகிறேன்''- என்று சொன்னவன் இன்று, தன் மனைவி ஆடிய ருத்ரதாண்டவத்திற்குக் கூட பதில் பேசாமல் தன் வாய்க்குப் பூட்டுப்பூட்டிக் கொண்டிருக்கிறான்...

தர்மு பேசவில்லை... அந்தப் புடவைகளையும் கட்டவில்லை...

''ஆனாலும் உங்கம்மாவுக்குத் திமிர்.. கட்டினா பட்டுப்புடைவைதான் கட்டு வாளாம்... இல்லையானா கிழிசலைத் தான் கட்டிப்பாளாம்! என்ன திமிர்? நாளைக்கு எல்லாப் புடைவைகளும் கிழிஞ்சு போனா இவ வெற்றுடம்பாவா நிக்கப்போறா?'' - தரங்கிணி கேட்டாள்.

இமயத்தை இதயத்தில் சுமந்த வேதனை ராஜாவுக்கு. நெஞ்சுவலி வந்தால் பேசமுடியுமா? இவனும் பேசவில்லை.

மறுநாள்----

அம்மாவைக் காணவில்லை.. தரங்கிணி அதிர்ச்சியடையவில்லை...

''எங்கே போவா? இங்கே தான் எங்கேயாவது ப்ரண்ட்ஸ் வீட்டுக்குப் போயிருப்பா. பணத்துக்கு என்ன பண்றது? சாப்பாட்டுக்கு என்ன பண்றது? பசிச்சா தானா வருவா...''

ராஜாவுக்கு அழுகை வந்தது... அடிப்பாவி.. கடைசியில் சொல்லா லேயே அம்மாவை அடித்துத் துரத்திவிட்டாயே?

ஆனால் அம்மா அந்த இரண்டு சங்கடிப்புடைவைகளையும், தன் உடைமையான ஒரு பெட்டியை மட்டும் தான் எடுத்துக் கொண்டு போயிருக் கிறாள்.. தினம்தினம் ஜபம் செய்யும் ருத்ராக்ஷமாலை இருந்த இடம் காலியாக இருந்தது.. அவ்வளவுதான்!

இதன்பின் தான் இவனுக்கு அந்தக் கனவு அடிக்கடி வரத் தொடங்கியது.

அம்மா கனவில் கிழிந்த புடைவை யுடன் வருவாள்.

''ராஜாராமா...புடைவையெல்லாம் கிழிஞ்சுடுத்துப்பா.. நல்லதா ஒரு பட்டுப்புடைவை வாங்கித்தர்றியா?'' - என்று கேட்பாள்...

இந்தக் கனவு வந்ததும் 'சட்'டென்று விழிப்பு வரும்.. உடம்பெல்லாம் வியர்க்கும்.. நெஞ்சை அடைக்கும்.

இப்போதும் அப்படித்தான் நடந் திருக்கிறது...அம்மா எங்கே போய் விட்டாள்? எத்தனை நாள்கள் ஆகிவிட்டன? எங்கெல்லாமோ தேடிப் பார்த்துவிட்டான் ராஜாராமன். பத்திரிகை யில் கூட விளம்பரம் தந்து பார்த்து விட்டான். ஊஹூம்.. தகவலே தெரிய வில்லை.

அம்மா எங்கே போனாள்? ஒருவேளை.. தற்கொலை? சே.. எத்தனையோ துன்பங்கள் வந்த போதுகூட சோர்ந்து போகாதவள் அவள்.. இந்தச் சுண்டைக்காய் மருமகளுக் காகவா மனம் நொந்து போவாள்? இல்லை...அம்மா ரொம்ப நாள்களாகத் தனிமையை நாடி இருந்திருக்கிறாள்.. வேளை வந்தது.. போய்விட்டாள். இவனால் தான் இருக்கவும் முடிய வில்லை.. போகவும் முடியவில்லை.. இராமாயணத்தில் இராமனை நாட்டை விட்டு காட்டுக்கு துரத்தினான் தசரதன். இன்று பெற்ற தாயை வீட்டைவிட்டு வெளியே துரத்திவிட்டான் இந்த ராஜாராமன்! இரண்டிலுமே ஆண்கள் கையாலாகாதவர்கள்! ராஜாராமன் படுக்கையை விட்டு எழுந்தான்.

பம்பாய்.. ஏகக்கூட்டம்.. நெரிசலான பகுதி.. ஒரு கல்யாணத்திற்காக தரங்கிணியும் அவள் தாயும் பம்பாய் வந்திருந்தார்கள். ராஜாவுக்கு லீவு இல்லை.. அதனால் . தான் அவன் வரவில்லை.. பாஷை தெரியாத ஊர்.. இடமும் புதிது...

திருமண வீட்டுக்காரர்கள் இவர் களுக்கு உறவு.. கல்யாணத்திற்கு வந்தவர்கள் மஹாலட்சுமி கோயில் பார்க்கலாம் என்று ஆட்டோவில் கிளம்பினார்கள். கிளம்பும் போதே உறவுக்காரர்கள் சொன்னார்கள்.

பட்டுப்புடைவை.. நகையெல்லாம் வேண்டாம் என்று...

தரங்கிணிக்கு உடை மாற்ற நேரமில்லை.. நகைகளை மட்டும் ஹேண்ட் பேக்கில் போட்டுக்கொண்டு அரைஅடி அகல ஜரிகை போட்ட பட்டுப்புடைவையில் ஆட்டோவில் அம்மாவும், மகளும் புறப்பட்டனர்.

''மஹாலட்சுமி மந்திர்'' - என்றாள் தரங்கிணி...

ஆட்டோ போயிற்று.. போயிற்று.. போய்க் கொண்டே இருந்தது.. மனித நடமாட்டம் குறைந்த இடம்.. மாலை மங்கிய நேரம் மஹாலட்சுமி மந்திர் இவ்வளவு தூரத்திலா இருக்கிறது? தரங்கிணிக்குப் பயம் நெஞ்சை அடைத்தது. கேள்வி கேட்க மொழி தெரியவில்லை.. அம்மா பயந்தாள்...

''என்னடி இது? எங்கே ஓட்டிண்டு போறான்?''

''பேசாம இரும்மா.. ஆட்டோ... தவறு... தவறு... பம்பாயிலே எல்லாம் ஆட்டோவை டாக்ஸி என்கிறார்கள். டாக்ஸி.. மஹாலட்சுமி மந்திர் சலோ..'' - தெரிந்த அரைகுறை ஹிந்தியில் சொல்ல...

''சப்ரஹா மேடம்'' - என்ற ஆட்டோக்காரர், அதற்கு மேல் பேசவில்லை. புரிந்துபோயிற்று.. இடம் தெரியாமல் மாட்டிக் கொண்டாகி விட்டது... இனி?

எங்கெல்லாமோ சுற்றி ஓடிய ஆட்டோ கடைசியில் ஒரிடத்தில் நிற்க.. திடீரென்று எங்கிருந்தோ வந்த நாலைந்து பேர் இவர்கள் மீது பாய்ந்தனர்.

''வாஹ்ரே வா..போலி பாலி லட்கி'' - என்று பாடியபடி ஒருவன் ஹேண்ட் பேக்கைப் பிடுங்க.. இன்னொருவன் இவள் பட்டுப் புடைவையை அவிழ்க்க... அம்மாக்காரி ''ஐயோ.. ஐயோ.. ஜரிகைக்காக புடைவையை உருவறானே.. படுபாவி'' - என்று தமிழில் திட்ட. அவள் தலையில் ஓங்கி ஒரு போடு போட்டான் ஒருவன்..

''பூடி..சுப் ரஹ்'' - என்றான்.. அம்மாக்காரி அங்கேயே மயங்கிச் சாய்ந் தாள். தரங்கிணியை ஒருவன் துகிலுரிந் தான்.

'ஆடை குலைவுற்று நின்றாள். 'ஆ' வென்று துடித்தழுதாள்' - என்கிற பாஞ்சாலியாக இவள் வெறும் ரவிக்கை உள்பாவாடையுடன் நின்றாள்.

"நாளைக்கு எல்லாப் புடைவையும் கிழிஞ்சுபோனா வெற்றுடம்பாவா நிக்கப் போறா?"

என்றோ இவள் தர்மாம்பாளைப் பார்த்துக் கேட்ட கேள்வி! இன்று அதே 'தர்மம்' திரும்பக் கேட்கிறது!

தரங்கிணிக்குத் தலை சுற்றியது...

அவள் கண் விழித்த போது...

அவள் மீது ஒரு புடைவை.. சுங்கடிப் புடைவை போர்த்தப் பட்டிருந்தது. இது.. இந்தப் புடைவை இவள் அன்று தன் மாமியாருக்குக் கொடுத்த அதே புடைவைபோல் அல்லவா இருக்கிறது? அங்கிருந்தவர்கள் சைகையிலும் மாறி மாறி பாதி ஹிந்தியிலும் பேச இவள் புரிந்து கொண்டாள்.

இருவரும் மயங்கி வீழ்ந்து கிடக்க அந்த வழியாகப் போனசில நல்லவர்கள் இவர்களைப் பார்த்தால் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பது தெரிந்ததால் தமிழ் தெரிந்த ஒரு 'மயீ'க்கு தகவல் கொடுக்க அந்த அம்மாள் வந்தாளாம்! புரிகிறது... வந்தது தர்மாம்பாள் தான்! இங்குதான் வாழ்கிறாள்.. பழைய மாதிரியே ஒரு 'மெஸ்' வைத்து வாழ்கிறாள்.. அக்கம் பக்கம் 'மயீ' மயீ - 'தாயே தாயே' என்றழைக்கப்பட்டு பெருமையுடன் வாழ்கிறாள்! அங்கிருக்கும் ஏழைப் பெண்களுக்கெல்லாம் அவ்வப்போது புடைவை தானம் செய்தபடி.. தன் சம்பாத்தியத்தில்.. நிம்மதியாக வாழ்கிறாள்.. அனைவரும் போற்ற வாழ்கிறாள்..

இதோ இப்போதுகூட இவர்களைப் பத்திரமாக ஊருக்கு திருப்பியனுப்பச் சொல்லி இவர்களிடம் பணம் கூடக் கொடுத்திருக்கிறாள்! கலியுகத்தில் தெய்வம் கண்களுக்குத் தெரிவதில்லையோ?

இதோ இவள் உடம்பைப் போர்த்தி இருக்கும் இந்தப் புடைவைகூட இவள் கொடுத்த புடைவைதான்! தனக்குத் தரப்பட்ட புடைவையைக்கூட மருமகளின் மானத்தைக் காக்க தானம் தந்து, 'தர்மக்குடை' பிடித்து தாய்மை அன்புடன் அடை காத்திருக்கிறாள்.

செய்த தவறுகள் விஸ்வரூபம் எடுக்க முதன் முறையாகத் தன் தவறுகள் நெருஞ்சி முள்ளாக உறுத்த, புல்லினும் சிறிய தன் சிறுமையை நினைத்த தரங்கிணி அது புது இடம் என்பதையும் மறந்து பெரிதாக அழத் தொடங்கினாள்.

"அம்மா...ம...ஆ ...ஆ......"



## அடிகளார்

**பாவலர் சாரதிதாசன்**

இந்தியத் தாய் பெற்றெடுத்த
இதயம் எங்கள் அடிகளார்
வந்தனைக் குரிய நல்ல
வழி வகுத்த அடிகளார்.

சந்தனத் தமிழ் மணக்கும்
சரிதம் எங்கள் அடிகளார்
சிந்தையில் நிறைந்த நல்ல
சேவை செய்த அடிகளார்.

வெல்லும் தமிழ்ச் சொல்லெடுத்து
விளக்கம் சொன்ன அடிகளார்
நல்ல தமிழ் நூல்களையே
நமக்குத் தந்த அடிகளார்.

இலக்கியத் தரம் உயர்ந்த
ஏந்தல் எங்கள் அடிகளார்
நலம் கொடுக்க நாடி வந்த
நாடு போற்றும் அடிகளார்.

அடிகளார் அடிகளார்
குன்றக் குடி அடிகளார்
படிப்பினையாய் நமக் கமைந்த
பாங்கு மிக்க அடிகளார்.

## கண்டுபிடி!

**தமிழழகன்**

கூடார வானத்தைக்
குடையாக விரித்துவிட்டுக்
காடார நடந்தவளின்
கனவென்ன? கண்டுபிடி.

மேலாக்கு அருவியினை
மிதக்கமலைத் தோளில் விட்டுக்
காலாரத் தவழ்ந்தவளின்
கதை என்ன? கண்டுபிடி.

நீர்க் கோலம் கீழ்க்கடல் மேல்
நெளிநெளியாய்ப் புரளவிட்டுக்
கார்க்கோலம் திரண்டவளின்
கலை என்ன? கண்டுபிடி.

அந்திமஞ்சள் கரைத்துவந்து
ஆங்காங்கு தெளித்து விட்டு
முந்தி மஞ்சம் விரைத்தவளின்
முனைப்பென்ன? கண்டுபிடி.

துளித்துளியாய்ப் பனிச் சோளத்
தூற்றலினைப் போட்டுவிட்டும்
ஒளித்தொளிந்து நகர்ந்தவளின்
உண்மை என்ன? கண்டுபிடி.

